# தமிழ் இலக்கியப் போக்கு

**தேசியக் கருத்தரங்க ஆய்வுக் கோவை - 2007**



தொகுதி - II

பதிப்பாசிரியர்


**செ. ரவிசங்கர்**
**வெ. சங்கீதா**
**சு. சந்திரசேகர்**





**ஆய்வாளர் மன்றம்**

**தமிழியற்புலம்**

**மதுரை காமராசர் பல்கலைக்கழகம்**

**மதுரை–21.**

# நூல் விபரம்

நூலின் பெயர் : தமிழ் இலக்கியப் போக்கு

நூலின் தன்மை : தேசியக் கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்பு

மொழி : தமிழ், ஆங்கிலம்

முதல் பதிப்பு : நவம்பர் 2007

பதிப்புரிமை : ஆய்வாளர் மன்றம், தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை-21.

பதிப்பாசிரியர் : செ.ரவிசங்கர்
வெ.சங்கீதா
சு.சந்திரசேகர்

தாள் : வெள்ளைத்தாள்

அளவு : 1 X 8 டெம்மி

விலை : ரூ. 175

அச்சகம் : பாண்டி ஆப்செட் பிரிண்டர்
மதுரை - 10.
செல் : 92453 17096

# அணிந்துரை

பேராசிரியர். **சு.வேங்கடராமன்**
தலைவர், இக்கால இலக்கியத்துறை
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை-21.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற்புல முனைவர் பட்ட ஆய்வாளர்கள் ஆண்டுதோறும் ஒரு பொதுப் பொருளில் ஆய்வுக் கருத்தரங்கு நடத்தி வருகின்றனர். தமிழ் இலக்கியப் போக்குகள் குறித்து இவ்வாண்டு ஆய்வுக் கருத்தரங்கை நடத்துகின்றனர். கருத்தரங்கு அன்றே ஆய்வுக் கோவையை வெளியிடுகின்றனர். தமிழ் இலக்கியப் போக்குகள், செல்நெறி, புதிய போக்கை உருவாக்கியவர்கள் ஆகியவற்றை அடையாளம் காண்பதாக இந்த ஆய்வுக் கோவை அமைகிறது. கூர்மையான ஆய்வுத் திறமை, புதியத் திறமைகளில் நாட்டம் செலுத்துவது, எம். பல்கலைக்கழகத் தமிழியற்புலத்தின் அடையாளமாகும்.

இந்த ஆய்வுக் கோவை தமிழ் ஆய்வு வரலாற்றில் புதிய எண்ணங்களைத் தூண்டி தடம் பதிக்க மனமார வாழ்த்துகிறேன்.

தொடர்ந்த ஆய்வுச்சிந்தனையும், இடையாறாதா உழைப்பும் உடைய இந்த இளைஞர்கள், எல்லா வெற்றிகளையும் பெற வாழ்த்துகிறேன்.

மதுரை - 625 021 பேராசிரியர் சு. **வேங்கடராமன்**



பேராசிரியர் **மு. மணிவேல்**
புலத்தலைவர், தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021.

## வாழ்த்துரை

தாங்கரும் மரபின் தமிழ் மதுரை எனப் பழந்தமிழ் இலக்கியங்களில் ஒன்றான சிறுபாணாற்றுப்படை மதுரை மாநகரினைப் போற்றும். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே தமிழ்வளர் இடமாய், புலவர்கள் தம் புலமை போற்றிய களமாய் மதுரை மாநகர் விளங்கிய சிறப்பினைக் கலித்தொகை குறிக்கும். அந்நூலில், நீண்மாடக் கூடலார் புலனாவிற் பிறந்த சொல் புதிதுண்ணும் பொழுதாக மாலைப் பொழுது குறிக்கப் பெறும். தமிழ் வளர்த்த மன்னர்களும், புலவர்களும், சால்புடைய மக்களும் வாழ்ந்த மதுரையாம் பெரும்பதியில் தமிழாய்வில் கால் பதித்த ஓரிடமாய் மதுரை காமராசர் பல்கலைக்கழகம் விளங்குகின்றது. இப்பல்கலைக்கழகம் கல்விப் பணியிலும் ஆய்வுப் பணியிலும் முன்னின்று இன்று ஆற்றல்சால் பல்கலைக்கழகமாய்ப் போற்றப்படும் சிறப்பினைப் பெற்றுள்ளது.

மதுரை காமராசர் பல்கலைக்கழகம் 1966-இல் தொடங்கப்பெற்ற நாளிலிருந்தே தமிழ்க் கல்விக்கும் தமிழாய்வுக்கும் நல் வாய்ப்புகள் அமையப்பெற்றன. தமிழியற்புலத்தின் ஆசிரியர்களும் ஆய்வாளர்களும் தம் இருப்பினையும் தகுதியினையும் தம் ஆய்வுத் திறத்தால் புலப்படுத்தி வருகின்றனர். இப்புலப்படுத்துதலுக்காக ஆசிரியர்களும் ஆய்வாளர்களும் வாரந்தோறும் கருத்தரங்குகளை நடத்தி ஆய்வுச் செய்திகளை வழங்குவதோடு அவற்றை நூலாக்கி வெளியிட்டும் வருகின்றனர். இப்பல்கலைக்கழகத்தின் வெளியீடுகளாகவும், ஆய்வாளர்களின் வெளியீடுகளாகவும் வந்துள்ள 'வையை', பரல்கள் என்னும் பெயரிய நூற் தொகுதிகள் இம்முயற்சியின் விளைவுகள்.

எம் தமிழியற் புல ஆய்வாளர்கள் தம்முள்ளே கூடி ஆராய்ந்து ஆய்வுக்கட்டுரைகளை நூலாக்கம் செய்து தம் அறிவு நலத்தைப் பிறரும் பெறுமாறு செய்த நிலையினின்று அண்மைக்காலங்களில் தமிழ் கூறும் நல்லுலகு முழுதும் விளக்கமுற்றிருக்கும் ஆய்வாளர்கள் ஆசிரியப் பெருமக்கள் ஆகியோர் அனைவரின் தமிழ் அறிவு நலத்தினை தமிழுலகு

பயன்கொள்ளச் செய்யவேண்டும் என்ற விழைவோடு அதற்கான முயற்சிகளைப் போற்றும் வகையில் செய்து வருகின்றனர்.

எம்புல ஆய்வாளர்கள் சென்ற ஆண்டு ‘நெடும்புனல்’ என்னும் தலைப்பிலான இருநூறுக்கும் மேற்பட்ட சிறந்த ஆய்வுக் கட்டுரைகளைத் தாங்கிய இரண்டு தொகுதிகளை வெளியிட்டுக் கட்டுரையாளர்களை அழைத்துக் கருத்தரங்கு நடத்தி எம்புலத்திற்கும், பல்கலைக்கழகத்திற்கும் சிறப்புச் சேர்த்தனர். அவ்வாறே இவ்வாண்டும் ‘தமிழ் இலக்கியப் போக்கு’ என்னும் தலைப்பில் இரண்டு தொகுதிகளில் 196க்கும் மேற்பட்ட ஆய்வுக்கட்டுரைகளை வெளியிட்டு ஆய்வுக் கருத்தரங்கினை நடத்திச் சிறப்பெய்துகின்றனர்.

தமிழ் மொழி இலக்கியம், இலக்கணம், உரை, இதழியல், நாட்டுப்புறவியல், நுண்கலைகள் மேபால்வன குறித்த ஆய்வுக்கட்டுரைகள், பல்வகை அணுகுமுறைகளோடும், புலப்பாட்டுத் திறத்தோடும் அமைந்த ஆய்வுக்கட்டுரைகள் இத்தொகுதிகளில் இடம் பெறுகின்றன. தமிழறி வாளர்க்கும் தமிழாய்வாளர்களுக்கும் இவை மிக்கப் பயனளிக்கும். எம் புல ஆய்வாளர்களின் முயற்சி தொடர வேண்டும்.

ஆய்வாளர்களின் முயற்சிகளுக்கு எம்புல ஆசிரியர்கள் துணையிருக்கின்றனர். பல்கலைக்கழகத் துணைவேந்தர் உள்ளிட்ட பெருமக்களும் துணைநிற்கின்றனர். ஆக்கமும், ஊக்கமும், நிதியமும், தருகின்றனர். ஆய்வாளர்கள் சார்பாக இப்பெருமக்களுக்கு நன்றி கூறுவது என் கடமை.

எம் புல ஆய்வாளர்களின் ஆய்வுலகில் பெரும் பெயர் பெறும் சிறப்பெய்தவும், அதற்கான ஆக்கங்களைத் தரவும் வாழ்த்துகிறேன்.

**பேராசிரியர் மு. மணிவேல்**



# வாழ்த்துரை

பேராசிரியர் **இரா. மோகன்**
தலைவர், ஒப்பிலக்கியத்துறை, தமிழியற்புலம்
ஆட்சிக்குழு உறுப்பினர்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை -625 021

இந்தியப் பல்கலைக்கழகங்களின் வரிசையிலே 'ஆற்றல் சால் பல்கலைக்கழகம்' (Potential for Excellence) என்னும் பெயரும் பெருமையும் படைத்தது மதுரை காமராசர் பல்கலைக்கழகம். 1966ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பெற்ற இப்பல்கலைக்கழகத்திற்குத் தமிழ் கூறு நல்லுலகில் முடியுடை மூவேந்தர்களாக விளங்கிய தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், மு. வரதராசனார், வ.சுப. மாணிக்கனார் ஆகிய முப்பெரும் தமிழறிஞர்களும் துணைவேந்தர்களாக அமைந்தது ஒரு தனிச்சிறப்பாகும். இதே போல் தமிழாய்வில் தடம் பதித்த பேராசிரியர்களான மொ.அ.துரை அரங்கனார், அ.ச. ஞானசம்பந்தனார், முத்துச்சண்முகனார், தமிழண்ணல், கதிர் மகாதேவன் முதலானோர் இப்பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவர்களாக வீற்றிருந்து தொண்டாற்றியதும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கதாகும். துணை வேந்தர், பேராசிரியர் என உயரிய நிலையினர் மட்டுமின்றி மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தைப் பொறுத்த வரையில், ஆராய்ச்சி மாணவர்களும் தமிழியற்புல வளர்ச்சிக்கு ஒல்லும் வகை எல்லாம் அவ்வப்போது தம் பங்களிப்பினை நல்கியுள்ளனர். இது தமிழகத்தில் வேறு எந்தப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையிலும் காண முடியாத ஒரு சிறப்பு நிலை ஆகும்.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற் புலத்தைச் சார்ந்த ஆராய்ச்சி மாணவர்கள் 'பரல்கள்' என்ற பெயரில் இது வரை 16 தொகுதி களை வெளியிட்டுள்ளனர். தமிழியற் புலத்தைச் சார்ந்த ஆய்வாளர் மன்றம் தற்போது 'தமிழ் இலக்கியப் போக்கு' என்னும் தலைப்பில் தேசியக் கருத்தரங்கினை நடத்தத் திட்டமிட்டிருப்பது போற்றத்தக்கதாகும். இக்கருத் தரங்கின் ஆய்வுப் பொருளாக மூத்தோர்கள் பாடியருளிய சங்க இலக்கியம் முதல் அண்மைக்கால புத்திலக்கியம் வரை தெரிவு

செய்திருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். ஆய்வைப் பொறுத்த வரையில் முன்னைப் பழமைக்கும் பின்னைப் புதுமைக்கும் சரிநிகர் சமானமான இடத்தைத் தந்திருப்பதற்காக ஆய்வாள நண்பர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

இத்தொகை நூலில் மொத்தம் 196 கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. செல்வியல், அருளியல், ஒப்பியல், வாழ்வியல், மொழியியல், நாட்டுப்புறவியல், இதழியல், கவிதை இயல், புனை கதை இயல் முதலான பல்வேறு துறைகளைச் சார்ந்த ஆய்வுக்கட்டுரைகள் இத்தொகுப்பில் காணப்படுகின்றன. 'நடுகல் என்னும் வீரக்கல் - ஒரு மீள்பார்வை', 'பெருங்கதையில் மனித நேயம்', 'பள்ளியெழுச்சிப் பாடல்களில் மரபு மாற்றம்', 'திருக்குறளில் ஒருவனுக்கு ஒருத்தி கோட்பாடு', 'வள்ளுவர் காட்டும் நடத்தைக் கோட்பாடு', 'வள்ளுவரின் வன்சொற்கள்', 'அகநானூறு காட்டும் ஏவல் மரபினர்', 'சித்தர் இலக்கியங்களில் இறையுணர்வு' என்றாற் போல் இத்தொகுப்பில் இடம் பெற்றிருக்கும் கட்டுரைகள் தமிழ் ஆய்வாளர்கள் இன்றைய காலவளர்ச்சிக்கு ஏற்பப் புதிய புதிய திசைகளில் பயணம் மேற்கொள்ள ஆயத்தமாகிவிட்டனர் என்பதைப் பறைசாற்றும் விதத்தில் அமைந்துள்ளன.

அரிதின் முயன்று 'தமிழ் இலக்கியப் போக்கு' என்னும் இத்தொகை நூலை அழகிய முறையில் வெளியிட்டிருக்கும் ஆய்வாளர் மன்றப் பொறுப்பாளர்களான திரு செ. ரவிசங்கர், திரு. சு. சந்திரசேகர், செல்வி. வெ. சங்கீதா ஆகிய மூவர்க்கும் என் தனிப்பட்ட பாராட்டினை உரித்தாக்குகின்றேன். ஆய்வுலகில் அவர்கள் செல்லும் நெறியெல்லாம் சேம நெறியாக நெஞ்சார வாழ்த்துகின்றேன்.

மதுரை - 625 021.
29.10.2007

பேராசிரியர் **இரா. மோகன்**

# பதிப்புரை

சங்கம் வைத்து தமிழ் வளர்த்த மதுரையில், தமிழாய்வில் பல்வேறான பன் முக வளர்ச்சியைக் கண்டு வருகிற கல்வி நிறுவனமாக மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற்புலம் விளங்குகிறது. இப்பல்கலைக்கழக ஆய்வாளர்கள் ஆராய்ச்சி மனநிலையை விரிவுப்படுத்தவும், வளர்த்துக் கொள்ளவும், தமிழியற்புல பேராசிரியர்களின் உந்துதலாலும் ஆய்வாளர்களின் முயற்சியாலும், தமிழ் இலக்கியப் போக்கு எனும் தலைப்பில் தேசியக் கருத்தரங்கம் நடத்தப்பெறுகிறது.

ஆய்வு உலகில் பரந்த பார்வையை ஏற்படுத்தும் நோக்கத்திற்காகவும், இளம் ஆய்வாளர்களிடம் ஆய்வு மனப்பான்மையை உருவாக்கும் விதத்திலும், தமிழ் ஆய்வாளர்களிடம் விரிந்து கிடக்கும் அறிவுக் களஞ்சியங்களைத் தொகுத்து அதனை உலகிற்கு எடுத்துக்காட்டும் விதமாகவும் இக்கருத்தரங்க ஆய்வுக் கோவைகள் அமைகின்றன.

சங்க இலக்கியம், பக்தி இலக்கியம், சிற்றிலக்கியம், இலக்கணம் நவீன இலக்கியங்களான புதுக்கவிதை, சிறுகதை, புதினம் போன்ற பல்வேறு வகையான இலக்கியங்களையும் உள்ளடக்கிய ஆய்வுக் கோவைகளாக இரண்டு தொகுதிகள் அமைகின்றன. ஆய்வுக் கோவையில் வெளிவந்துள்ள கட்டுரைகளை மேலும் விரித்துச் சென்று தரமான ஆய்வுகளைத் தருவதற்கு இந்நூல்கள் முன் உதாரணமாக அமையும்.

தமிழ் இலக்கியப் போக்குத் தேசியக் கருத்தரங்கிற்கு வந்த 196 கட்டுரைகளில் பெரும்பாலான கட்டுரைகள் சங்க இலக்கியங்களை மையமிட்டதாக அமைகின்றன. தமிழ் இலக்கியப் போக்கு கருத்தரங்கின் நோக்கம், ஆய்வு மனப்பான்மையை ஆய்வாளர்களிடம் வளர்ப்பதே ஆகும். அந்த முயற்சியில் இக்கருத்தரங்கம் வெற்றி பெற்றுள்ளது.

கட்டுரைகள் ஆய்வுக் கோவையாக வடிவம் பெறுவதில் உறுதுணையாய் இருந்த அனைத்து நல் உள்ளங்களுக்கும் தமிழியற்புல ஆய்வாளர் மன்றம் தன் நன்றியை உரித்தாக்குகின்றது.

மதுரை
நாள் : 31.10.07

**செ. ரவிசங்கர்**
**செயலாளர்**
**ஆய்வாளர் மன்றம்**



# நன்றி

'வளர்கல்விக் குரிசில்' திரு.பேராசிரியர் **பி.மருதமுத்து**
துணைவேந்தர், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை-21.

பேராசிரியர் **மூ.மணிவேல்**
புலத்தலைவர். தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

பேராசிரியர் **இரா. மோகன்**
தலைவர், ஒப்பிலக்கியத்துறை, தமிழியற்புலம் &
ஆட்சிக்குழு உறுப்பினர், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

பேராசிரியர் **சு.வேங்கடராமன்**
தலைவர், இக்கால இலக்கியத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

Dr. P.**சரவணன்,** MBBS., MD., RT
Founder Chairman, Saravana Hospital Madurai

**திரு.சங்கர சீதாராமன்**
நிர்வாக அறங்காவலர்
விஸ்வாஸ் அறக்கட்டளை, அக்ரிணி, மதுரை

'தமிழ்ச்செம்மல்' திரு.**ந.மணிமொழியன்**
பொதுச்செயலாளர், உலகத் திருக்குறள் பேரவை, மதுரை

# பொருளடக்கம்

# சௌராஷ்டிரர்களின் வழிபாட்டு முறைகள்

எஸ்.ஆர். தேவிகா
தமிழ்த்துறையில் விரிவுரையாளர்
சௌராஷ்டிரா மகளிர் கல்லூரி, பசுமலை.

கடவுள் வழிபாடு, பலியிடுதல் முதலிய சமயச்சார்பான நிகழ்ச்சிகள் யாவும் மனிதனுடைய அச்ச உணர்ச்சியிலிருந்தும் குற்ற உணர்ச்சியிலிருந்தும் உண்டாகியிருப்பதாகப் ஃபிராய்டு கூறுகிறார். வழிபாடு என்னும் சொல் வழி, பாடு எனப் பிரியும். வழியென்பது இறைவன் உள்ள இடத்திற்குச் செல்லும் வழியையும், பாடு என்பது இறைவனை அடைவதற்காக மனிதன் மேற்கொள்ளும் முயற்சிகளில் வரும் இன்னல்களையும் உணர்த்துகின்றன. வழிபாடுகள் நோயற்ற வாழ்வு, குடும்பத்தில் மகிழ்ச்சி, நினைத்த காரியங்களில் வெற்றி போன்ற இம்மைப் பயன்களை வேண்டிப் பெறுவதற்காகச் செய்யப்படுகின்றன. அவ்வழிபாட்டு முறைகளுள் இயற்கை வழிபாடு, சூரிய வழிபாடு, திருமணத்திற்கு முதல் நாள் செய்யப்படும் குலதெய்வ வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு, பெருந்தெய்வ வழிபாட்டு முறைகளைப் பற்றிய செய்திகளை அறிமுகப்படுத்தும் நோக்கில் இக்கட்டுரை அமைகிறது.

## இயற்கை வழிபாடு

இயற்கை வழிபாடு இயற்கையின் தோற்றுவாய் ஆகும். பேரிடியையும், பெருமழையையும், பொங்கும் கடலையையும் பெருகும் ஆற்றலையும், சூறைக்காற்றையும் கண்டு அஞ்சிய அன்றைய மனிதர்கள் இயற்கையை வழிபட்டனர். இதனையே,

திங்களைப் போற்றும் திங்களைப் போற்றதும்
ஓங்கிப் பரந் தொழுகலான்!

என்ற சிலப்பதிகாரப் பாடல் சான்று பகர்கின்றது.

## சூரிய வழிபாடு

இயற்கையை வழிபட்ட இவர்கள் சௌர மதத்திலும் ஆர்வம் கொண்டிருந்தனர். இதற்குச் சான்றாகச் சுயமாக பொருளீட்டி அழகான வெண்சலவைக் கற்களால் சூரியனுக்குக் கோயில் கட்டி வழிபட்டனர் என்பதை மாண்டசோர் கல்வெட்டு1 கூறுகிறது.

## திருமணத்திற்கு முதல் நாள் செய்யப்படும் குல தெய்வ வழிபாடு

சௌராஷ்டிர இனத்தார் திருமணம் நிச்சயிக்கப்பட்ட பிறகு சம்பந்திகள் புரோகிதர்களின் உதவியோடு முகூர்த்த தினத்தை முடிவு செய்து பத்திரிக்கைகளை எழுதி வாழ்த்திக் கொடுக்கின்றனர். இவ்விதம் தீர்மானிக்கப்பட்ட முகூர்த்த தினத்திற்கு முதல் நாள் இக்குடும்பத்தினரும் மணமக்களின் ஜன்ம நட்சத்திரங்களுக்குரிய அதிதேவதைகளை உறவினர்களுடன் பூசை செய்து வருகிறார்கள். இந்த நன்னாள் தேவ அஹஸ் (குடும்ப தேவதைகளின் தினம்) என்று அழைக்கப்படுகிறது. 'தேவஅஹஸ்' என்னும் சொல் நாளடைவில் 'தேவ்காஸ்' என்று திரிந்து வழிக்கில் உள்ளது.

இந்நாளில் முகூர்த்த கால் நட்டுப் பூசை செய்வர். இது பெரும்பாலும் ஒற்றைப்படை நாளாக அமைய வேண்டும் என்பர்.2 அன்று குலதெய்வத்திற்குப் பூசை செய்வர். இதை மூதாதையர் வழிபாடு என்றும் கூறுவர்.3 'தேவ்' என்றால்

கடவுள் என்றும் 'காஸ்' என்றால் பணம் அல்லது தட்சிணை என்றும் பொருள். எனவே 'தேவ்காஸ்' என்பதற்கு கடவுளுக்கு காணிக்கை என்று பொருள். இதை குலதெய்வ வழிபாடு என்றும் கூறலாம்.

பெருந்தெய்வ வழிபாடு

குல ஆசாரத்திற்கும் வழக்கத்திற்கும் உட்பட்டுச் செய்யப்படும் சடங்கு முறைகளாக இருக்கக்கூடிய வழிபாடு பெருந்தெய்வ வழிபாடாகும். சௌராஷ்டிர சமூகத்தவர்களில் பெரும்பான்மையோர் திருமாலையே முழுமுதற்கடவுளாகப் பெருந்தெய்வமாகக் கொண்டு வழிபடுகின்றனர். "சௌராஷ்டிர தேசத்திலிருந்து சுமார் 600 ஆண்டுகளுக்கு முன்பு குடிபெயர்த்து தென் திசை நோக்கி வந்தவர்கள் சௌராஷ்டிரர்கள் தமிழ்நாட்டைத் தாயகமாகக் கொண்டு பல்வேறு நகரங்களிலும், கிராமங்களிலும் வாழ்ந்து வருகிறார்கள். இவர்கள் வசிக்கும் ஒவ்வொரு ஊர்களிலும் ஸ்ரீ கிருஷ்ண பகவானின் கோயிலை பக்தி சிரத்தையுடன் தீர்மானித்து உற்சவாதி விசேஷங்களுடன் நடத்தி வருகிறார்கள்.

வீட்டில் நடைபெறும் பெருந்தெய்வ வழிபாடு

திருப்பதியில் முடி இறக்குதல்

இவ்வினத்தார் முடி இறக்குதலுக்கு முதல் நாள் தங்கள் குல தெய்வங்களுக்கு வழிபாடு நடத்துகின்றனர். அந்தணர்கள் இதை 'சௌனம்' என்று சொல்கிறார்கள். 'சௌனம்' என்பதற்கு 'குடுமி வைக்கும் சடங்கு' என்பர்.5 இவ்வினத்தைச் சேர்ந்த புரோகிதர்கள், பாகவதர்கள், கோயில் பட்டர்கள் குடுமி வைத்துக் கொண்டுள்ளதைக் காணலாம்.

கள ஆய்வின் மூலமாகத் திரட்டிய தகவலின் மூலம் மதுரையில் பெரும்பாலும் இவ்வினமக்களின் குலதெய்வம் திருப்பதி வேங்கடசலபதி என்று அறிய முடிகிறது. முடி பிறக்கும் சடங்கைத் திருப்பதிக்குச் சென்று செய்கிறார்கள். சிலர் திருப்பதி வேங்கடசலபதியைக் குல தெய்வமாகக் கொண்டிருந்தாலும் சித்திரை திருவிழாவின் போது, அழகர் ஆற்றில் இறங்கும் பொழுது வைகை ஆற்றில் முடி இறக்குகிறார்கள். திருப்பதி தொலைவாக இருப்பதாலும், பொருளாதார வசதி மிகவும் தேவைப்படுவதாலும் அழகர் கோயில் திருவிழாவின் போது, அழகர் ஆற்றில் இறங்கும் பொழுது வைகை ஆற்றில் முடி இறக்குகிறார்கள். திருப்பதி தொலைவாக இருப்பதாலும், பொருளாதார வசதி மிகவும் தேவைப்படுவதாலும் அழகர் கோயில் திருவிழாவின் போது இச்சடங்கை நடத்தி விடுகிறார்கள்.

ணுக்கு நடத்தப்படும் வழிபாடு

இவ்வின மக்கள் தங்கள் வீட்டில் திருமணமாகாத கன்னிப் பெண் இறந்தால் ஆண்டுதோறும் அவளுக்கு வழிபாடு நடத்துவதுண்டு. இதை சௌராஷ்டிர மொழியில் 'அம்மா புட்கி' வைத்தல் என்று சொல்வர்.8 இறந்த கன்னிப் பெண்ணின் ஆத்மா அவ்வீட்டிலேயே சுற்றிக் கொண்டிருக்கும் என்றும், அதை சாந்திப்படுத்துவதற்காக இவ்வழிபாட்டை மேற்கொள்கிறார்கள் என்றும் கூறுவர்.9 ஒவ்வொரு வருடமும் தீபாவளி அல்லது தைப்பொங்கல் அன்று இவ்வழிபாட்டை செய்கின்றனர்.

கல்யாணமான சுமங்கலிப் பெண் இறந்திருப்பின் மஞ்சள், குங்குமம் ஆகியவற்றை பெட்டியில் வைக்கின்றனர். இறந்தவர்களின் வயதை மூத்தவர்களை அழத்துக் கொடுப்பதால் அவர்களின் ஆத்மா சாந்தி அடைகிறது என்று எண்ணி இவ்வழிபாட்டை நடத்துகின்றனர்.

முடிவுரை

திருவேங்கடமுடையான் கோயிலுக்குச் சென்று முடியிறக்க வேண்டியவர்கள் அழகர் ஆற்றில் இறங்கும் போது முடி இறக்குகிறார்கள். இதிலிருந்து ஒரே பெருமாள் தான் எங்கம் நிறைந்திருக்கிறார் என்ற எண்ணத்தை இவ்வின மக்கள் கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிய முடிகிறது.

திருமணத்திற்கு முதல் நாள் இவர்கள் குடும்ப தேவைகளுக்கு வழிபாடு செலுத்துகின்றனர் என்பதை 'தெவ்காஸ்' என்பதன் மூலம் அறிய முடிகிறது. 'வெசனி' எனப்படும் பிச்சாடண மூர்த்தி வழிபாட்டை சௌராஷ்டிர மக்கள் மட்டுமே மேற்கொள்கிறார்கள் என்று அறிய முடிகிறது. இறந்த கன்னிப்பெண்ணுக்கு 'அம்மா புரட்சி' வைத்தல் என்னும் வழிபாடு முன்னாளில் இறந்தவர்களுக்கு நடுகல் வைத்து வழிபடுவதை ஒத்துள்ளது. பிறஇனங்களில் இல்லாத பல வழிபாடுகளை இவ்வின மக்கள் செய்கின்றனர்.

# நட்சத்திரங்களும் - சுரமும்

**தி. கல்பனாதேவி,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
ஸ்ரீ.சி.பா.சு. தமிழ்க்கல்லூரி
மயிலம்.

ஆயகலைகள் அறுபத்து நான்கனுள் ஒன்றான சோதிடத்தினுள் - பஞ்ச அங்கங்கள் - திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் ஆகிய ஐந்தனுள், நட்சத்திரங்கள் பற்றிய மருத்துவத்துடன், சோதிடத்துடன் தொடர்புடைய செய்திகளை பழம்நூலான அகத்தியர் இரண்டாயிரம் எனும் நூலினுள் குறிப்பிட்டுள்ளவற்றை இக்கட்டுரையில் காண்போம். சோதிடத்திற்கு இலக்கணமாக வகுக்கப்பெற்றவைகள் 27 நட்சத்திரங்கள், ஏன் எனில் இவைகள் என்றும் மாறாதது. இன்றியமையாதது.

நட்சத்திரங்கள் : சோதிடவியலில் மொத்த நட்சத்திரங்கள் 28 ஆகும். அவற்றுள் அபிஜித் எனும் நட்சத்திரம் தற்பொழுது வழக்கினில் இல்லை. தற்போது வான மண்டலத்தினில் 27 நட்சத்திரங்கள் காணப் பெறுகின்றன. அவைகள் அசுவதி முதல் ரேவதி முடிய உள்ளவைகள். 360 பாகைகள் கொண்ட இராசி மண்டலத்தில் ஒவ்வொரு நட்சத்திரமும் 13 பாகை 20 கலைகள் கொண்டதாகும். ஒரு நட்சத்திரத்திற்கு நான்கு பாதங்கள் ஆக 27 நட்சத்திரங்களும் 108 பாதங்கள் எனக் கொண்டு ஒவ்வொரு இராசியிலும் 2 □ நட்சத்திரம் ஆக ஒன்பது பாதமாக, இவைகள் மே'ம் முதல் மீனம் வரையிலான பன்னிரண்டு இராசியிலும் இடம் பெற்றுள்ளன. இவ்விதமாகவே நட்சத்திரங்கள் தினமும் சஞ்சரிக்கின்றன. இவற்றின் அடிப்படையில் சொல்லப்பெற்ற சுரம்பற்றிய செய்திகளை இங்குக் காண்போம்.

நட்சத்திரங்கள் - 27ன் பட்டியல்

நோய்களின் எண்ணிக்கை - சுரம் - முதல்நோய்

ரோகோற்பத்தி - 1. சுரரோகம் பெயர்க்காரணம்
2. உருத்ரன் கோபம் - சுரம்
3. சுரரோகத்தின் வேறுபெயர்கள்

சுரம் ஏற்படக் காரணம் - சுர நிதானம்

நட்சத்திர பாத அடிப்படையில் - சுரம் மருந்தில்லாமல் தீரும் முறை

நட்சத்திரங்கள் 27ன் பட்டியல் :

| | | | |
|---|---|---|---|
| 1. | அசுவணி | 2. | பரணி |
| 3. | கார்த்திகை | 4. | ரோகிணி |
| 5. | மிருகசீரிடம் | 6. | திருவாதிரை |
| 7. | புணர்பூசம் | 8. | பூசம் |
| 9. | ஆயில்யம் | 10. | மகம் |
| 11. | பூரம் | 12. | உத்ரம் |
| 13. | அஸ்தம் | 14. | சித்திரை |
| 15. | சுவாதி | 16. | விசாகம் |
| 17. | அனுடம் | 18. | கேட்டை |
| 19. | மூலம் | 20. | பூராடம் |
| 21. | உத்ராடம் | 22. | திருவேணம் |

| | | | |
|---|---|---|---|
| 23. | அவட்டம் | 24. | சதயம் |
| 25. | பூரட்டாதி | 26. | உத்ரட்டாதி |
| 27. | ரேவதி | | |

நோய்களின் எண்ணிக்கை - சுரம் - முதல் நோய்

நம் உடலில் தோன்றும் வியாதிகள் மொத்தம் 4448 என சித்த மருத்துவ நூல்கள் குறிப்பிடுகின்றன. அவற்றுள் முதலாவது சுரம் என்கின்றது. முனிவர்கள் வடநூலிலிருந்து திரட்டி எடுத்தெழுதிய சுரநோயின் நிதானம், உற்பத்தி இவைகளைத் தமிழ் தெரிந்தவர்கட்கு பயன்படுத்த, தமிழில் செய்ய வி'ணுவின் மபாதங்களைத் துதிக்கின்றேன் என்றும், ஆகாய வழியினில் சஞ்சரிக்கின்ற தேவர்கட்கு கணபதி எப்படியோ அப்படியே இம்மண்ணில் வாசம் செய்யும் மனிதர்கட்கு வரும் நோய்களில் சுரம் முதலாவதாகும் என்றும் இதனை,

"சீரான முனிவோர்கள் -------------------------- கணபதிக் காப்பதாமே."

என்று குறிப்பிடுவதால் முதல்நோய் சுரம் என அறியலாம்.

ரோகோற்பத்தி : ரோகம் உற்பத்தி நோய் உற்பத்தி. என்பது இதன் பொருள் ஆகும்.

சுரரோகம் : பெயர்க்காரணம் - தட்சன் யாகத்தை பரமசிவன் நெற்றிக் கண்ணால் அழித்தபோது ஏற்பட்ட கோப அக்னியே "சுரரோகம்" எனப்பெயர் பெற்றது என்றும், உருத்ரன்கோபம் : சுரம் என்றும், இதனை,

"உரமுறு தக்கன் யாகத் துருத்திர னெற்றிக் கண்ணாற்
சுரமுய ரோகம் பற்றி -------------------- பத்தே."

சுரசோகத்தின் வேறு பெயர்கள் : பாபம், மிருத்யு, சோசன், கோபம், மந்தன், மயன், தருதம், அபசாரம் என்ற வேறு பெயர்களும் உண்டு என்றும் குறிப்பிடுகின்றது.

சுரம் ஏற்படக் காரணம் - சுரநிதானம்

தேகத்தில் சாப்பிட்ட உணவு சீரணமாகாமல், வயிற்றிலுள்ள அதிக வெப்பத்தை வெளியே வீசச்செய்யும். அப்போது தொட்டால் சும் காயும். மேலும் கோபத்தினாலும், வெயிலில் நடப்பதாலும், படுத்திருப்பதாலும், பசித்தபோது, சாப்பிடாமலிருப்பதாலும், அதிகமாகத் தலையில் சுமையைத் தூக்குவதாலும், புகையிலையைப் போடுவதாலும், மலச்சிக்கலாலும், சுர நோய் உண்டாகும். நீடித்த மலச்சிக்கல், பழயமுது சாப்பிடுதல், ஆதாரம் சரியாக இல்லாமலிருந்து, அதிகமான வருத்தம் தூங்காமலிருப்பது, தண்ணீரில் அதிகமாகக் குளிப்பது, பாரத்தைச் சுமப்பது ஆகிய இவைகளினாலும் சுரம் ஏற்படும்.3

இச்செய்தியினை மூன்று பாடல்களையும் தெரிவிக்கின்றது.

நாழிகை : நட்சதிர பாதங்களை நான்காகப் பிரித்தல்.

ஒரு நட்சத்திரத்தின் மொத்த நாழிகையை 4 பாகங்களாகப் பிரித்து, ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பாதமாகக் கணக்கிடுகிறார்கள். நட்சத்திரத்தின் மொத்தநாழிகை 60 என்று வைத்துக் கொண்டால் ஒவ்வொரு பாதமும் 15 நாழிகை அதாவது 6 மணி நேரங்கள் ஆகும்.

1 நாழிகை 24 நிமிடம்

2 □ நாழிகை 1 மணிநேரம்

இவ்விதமாக அன்றைய நட்சத்திர பாதம் கணக்கிட்டு அதன் அடிப்படையில் சுரம் வரும் நாளையும் அது குணமாகும் நாளையும் அறிந்ததை குறிப்பிடுகின்றது.

நட்சத்திர பாத அடிப்படையில் - சுரம் - மருந்தில்லாமல் தீரும் முறை

அசுவினி நட்சத்திரம் முதல் ரேவதி முடிய உள்ள நட்சத்திரங்கள் (திருவாதிரை, விசாகம் கொடுக்கப் பெறவில்லை) எந்த எந்த பாதங்களில் சுரம் ஏற்பட்டால் அவை எவ்விதமருத்துவமும் இல்லாமல் எந்நாளில் எப்போது குணமடையும் என்று பழந்தமிழ் நூலான அகத்தியர் இரண்டாயிரம் எனும் நூலின் மூன்றாம் பாகத்தில் சுரகண்டிகை எனும்பகுதியினில் - நட்சத்திர பாதம் அடிப்படையினில் செய்திகள் கூறப்பெற்றுள்ளன.

அசுவினி :

இந்நட்சத்திரத்தின் ஒன்றாம் பாதத்தில் சுரம் ஏற்பட்டால் 9 நாட்கள் கழித்து குணமாகும். இரண்டாம் பாதத்தில் ஆரம்பித்தால் 10 நாட்களில் தீரும். மூன்றாம் பாதமாகில் 15 நாட்களில் குணமாகும். நாலாம் பாதத்தில் சுரம் ஆரம்பித்தால் நோயாளி இறப்பான் என்றும்,4

இவ்விதமாக அசுவதி முதல் ரேவதி முடிாய உள்ள (திருவாதிரை,விசாகம் தவிர) 25 நட்சத்திரங்கட்கும் - பாதங்களின் அடிப்படையில் நாம் ஒவ்வொருவருக்கும் சுரம் - ஏற்பட்டால் மருந்தில்லாமல் தானாகவே தீரும் முறை இந்நூலினுள் குறிப்பிடப் பெற்றுள்ளது. இவைகள் யாவும் இப்பகுதியினுள் பாடல்கள், பொருள்களாக இடம் பெற்றுள்ளன. சித்த மருத்துவ நூல்கள் பலவும் சோதிட நட்சத்திர அடிப்படையில் மருந்து கொடுத்துள்ள முறையினை பல நூல்களும் ஆதாரம் தெரிவிக்கின்றன.

சோதிடத்தில் நட்சத்திரம் பற்றியும், நம் உடலினுள் ஏற்படும் சுரம் பற்றியும் அதற்கான காரணம் முதலியனவும் இவைகள் மருத்துவ நூலினுள் மருந்தில்லா முறையில் சோதிடத்தின் நெருங்கிய முறையினுள் எவ்விதம் தொடர்பு கொண்டுள்ளன என்பதை பற்றியும் நாம் இக்கட்டுரையின் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

அடிக்குறிப்புகள்

1. எஸ். வெங்கடராஜன், அகத்தியர் இரண்டாயிரம் - முதல், இரண்டு பாகங்கள், பாடல்கள் 1,2, பக்கம் 48
2. மேலது, பாடல் 9, பக்கம் 50
3. மேலது, பக்கம் 68
4. எஸ். வெங்கடராஜன், அகத்தியர் இரண்டாயிரம் - மூன்றாம் பாகம், பக்கம் 507
5. மேலது, பக்கம் 508
6. மேலது, பக்கம் 509
7. மேலது, பக்கம் 510
8. மேலது, பக்கம் 511
9. மேலது, பக்கம் 512
10. மேலது, பக்கம் 513
11. மேலது, பக்கம் 514
12. மேலது, பக்கம் 515
13. மேலது, பக்கம் 516
14. மேலது, பக்கம் 517

# நாட்டுப்புறவியலும் பெண்களும்

சொ. கோதை ஈசுவரி
முனைவர் பட்ட ஆய்வாளர்
விரிவுரையாளர்
தமிழ்த்துறை நாடார் சரஸ்வதி கலை மற்றும்
அறிவியல் கல்லூரி,
தேனி.

முன்னுரை

பாமரமக்களின் பட்டறிவினால். உருவாகும் கீதங்களே இனிமையான நாட்டுப்புற பாட்டுக்களாகும். உலகில் மொழி எழுத்துபடிவம் பெறும் முன்னர் வாய்மொழி இலக்கியங்கள் வழக்கில் இருந்தன. மக்களின் மனதில் உயிர்கொண்டு, வாய்மொழி உடல் கொண்டு தோன்றியவையே நாட்டுப்புற இலக்கியங்கள். நாட்டுப்புற இயலை நாட்டுப்புற மக்களின் மரபுவழிப்பட்ட படைப்புக்கள் (வுசயனவைழையெட ஊசந-யவழைளெ) என்பர். இதனை சமுதாயத்தைக் காட்டும் கண்ணாடி எனலாம். நாட்டுப்புற மக்களின் வாழ்க்கை தாலாட்டுப்பாடலில் தொடங்கி, விளையாட்டு, காதல் பாடல்களில் வளர்ந்து திருமணப்பாடலில் நிறைவெய்தி ஒப்பாரிப் பாடலில் முடிவடைகின்றது. இன்பதுன்பங்களைப் பற்றி மக்களே பாடுவதால் இதனை "மக்கள் இலக்கியம்" என்றும் கூறுவர். இவற்றில் பெரும்பான்னையானவற்றிற்கு, கருவாகவும், உருவாகவும் அடிப்படையாக அமைபவர்கள் பெண்களே. எனவே, நாட்டுப்புறவியலில் பெண்கள் குறித்த நிலைகளைக் காணலாம்.

நாட்டுப்புறவியலில் பெண்கள்

நாட்டுப்புறப்பாடல்களில் 75 சதவிகிதம் பாடல்கள் பெண்கள் பாடும் பாடல்களாகவே உள்ளனஞ அவை ஒரு பெண் குழந்தையாகப் பிறந்தது முதல் படிப்படியாக அவளது வாழ்வில் நிகழும் வளர்ச்சி மாற்றங்கள் என்ற முறையில் விளக்கப்படுகின்றன. இந்நிலையில் பொதுப்படையாகத் தமிழக மகளிரது நாட்டுப்புறவியல் கூறுகளை நோக்கலாம். நாட்டுப்புறப் பாடல்களின் வழியாக தாலாட்டு, விளையாட்டு, தொழில், காதல், திருமணம், கலைகள், கதைகள், ஒப்பாரி போன்ற நிலைகளில் பெண்களின் பங்களப்பைக் காணலாம்.

தாலாட்டு

தால் ஆட்டு ஸ்ரீ தாலாட்டு. நாவை ஆட்டிப்பாடுவது தாலாட்டுஞ தொட்டிலை அசைத்துப் பாடுவது தாலாட்டு. "தாயும் சேயும் என்ற உறவுப்பிணைப்பிலே பிறந்த இயற்கைக்கலைதான் தாலாட்டு" (தமிழண்ணல் - தாலாட்டு - பக்கம் - 11) என்கிறார் தமிழண்ணல். தாலாட்டுப் பாடலில் பெண் தாய்வீட்டுப் பெருமை, மாமனார், மாமியார், கணவர் பெருமை மட்டுமல்லாது அவளது அறிவுத்திறன், கற்பனைவளம், உவமைநலம் பிறர் குற்றங்களை மறைமுகமாக சுட்டிக்காட்டும் சொல் விளையாட்டு போன்றவற்றை சிறப்பாக வெளிப்படுத்துகிறாள்ஞ குழந்தைப்பேறு பெறுவதற்கு தான்பட்ட துயரங்களை, வேண்டுதல்களை விரிவாக வெளிப்படுத்துகிறாள்ஞ தாய்மைப்பேறு பெறுவதையே தன்வாழ்வின் முழுமை நிலை என ஏற்றுக்கொள்கிறாள் பெண்.

"மாமன் அடிச்சாரோ? - என் கண்ணே! மல்லிகைப்பூச் செண்டாலே!
அத்தை அடிச்சாரோ? - என் கண்ணே! அரளிப்பூச் செண்டாலே!"

(கலைமாமணி புஷ்பவனம் குப்புசாமி -
மக்களிசைப் பாடல்கள் பக்கம்-20)

இப்பாடல் வரிகளில் தாய்மாமன் மல்லிகைப்பூக் கொண்டு அடித்ததாகவும் மாமியார் அரளிப்பூக் (நச்சுத்தன்மை) கொண்டு அடித்ததாகவும் கூறி உவமை வாயிலாக புகுந்த வீட்டில் மாமியாருடனா தன் மனக்கசப்பை வடித்துக் காட்டுகிறாள் பெண்ளூ வஞ்சப்புகழ்ச்சியாக சொற்கள் தோன்றியுள்ளன.

விளையாட்டு

சிறுமிகள் சிறுவர்களுடன் விளையாடுவது, சிறுமிகள் மட்டும் தனித்து விளையாடுவது என இருநிலைகளில் விளையாட்டுகள் உள்ளன. பெண் பருவமடையும்வரை, ஒரு குறிப்பிட்ட வயது வரை சிறுவர்களுடன் விளையாடுவாள். சடுகுடு, கண்ணாமூச்சி, ஓடிப்பிடித்து விளையாடுதல் போன்றவை இருபாலினரும் இணைந்து விளையாடுபவை ஆகும். கழங்காடுதல், ஊஞ்சலாடுதல், பல்லாங்குழி, தாயம் போன்றவை பெண்கள் மட்டும் பங்கு கொள்ளும் விளையாட்டுகள் ஆகும். சிறுவயது முதலே பெண் ஆணிற்குக்கீழ் என்ற மனநிலையில் வளர்க்கப்படுகிறாள் என்பதை நாட்டுப்புற விளையாட்டுப் பாடல்களே சுட்டிக்காட்டுகின்றன. இதனை மாற்ற வேண்டி "தித்திரிதி பொம்மக்கோ" எனத் தொடங்கும் விளையாட்டு பாடலில் கலைமாமணி பு்பவனம் குப்புசாமி அவர்கள்,

"ஆடிமாச அமாவாச! அம்மா சுட்டா சோளத்தோச!
தின்னத் தின்ன ரொம்ப ஆச!
இன்னும் கேட்டா கிடைக்கும் பூச!
அப்பாவுக்கு நாலு! அம்மாவுக்கு மூணு!"

என்ற பாடல்வரிகளின் கீழ் அட! நிறுத்தங்கப்பா! அப்பாவுக்கு அம்மா குறைச்சலா! அதென்ன? அப்பாவுக்கு நாலுதோச! அம்மாவுக்கு மூணு தோச! கதையமாத்து . . . . அப்பாவுக்கு நாலு! அம்மாவுக்கும் நாலு!" என்று பாடி ஆண் பெண் சமத்துவ நிலையை விளையாட்டுப் பருவத்திலேயே ஏற்படுத்த வேண்டும் என்பதை உணர்த்துகிறார். நாட்டுப்புறப்பெண் பருவவயதில் பணி செய்வதற்கு வெளியிடம் செல்கிறாள். அங்கு தொழில் நிலைகளைக் காணமுடிகிறது.

தொழில்

நாட்டுப்புறங்களில் பெண்களுக்குரியதாக விவசாயப் பணிகளே பெரும்பான்மையானவாக உள்ளன. மீனவர் பாடல்களில் பெண்களே பாடுபொருளாக உள்ளனளூ வண்டிக்காரன் பாடல்களிலும் பெண்களைத்தான் வர்ணித்து பாடல்கள் உள்ளன. நடவு நடுதல், களையெடுத்தல், ஏற்றம் இறைத்தல், அறுவடை செய்தல், கதிர் சுமத்தல் போன்ற தொழில் நிலைகளில் பெண்ணை முன்னிறுத்தி நாட்டுப்புறப்பாடல்கள் எழுந்துள்ளன. நெல்குத்தும் பாடல்களும் பெண்கள் பாடுபடுபவையாகவே அமைந்துள்ளன.

"பக்குவமா கதிர்றுத்து! ஏலேலங்கடி! ஏலேலோம்!
பாயப்போல காயப்போட்டு! ஏலேலங்கடி! ஏலேலோம்!
சக்கரம் போல கட்டவேணும்! ஏலேலங்கடி! ஏலேலோம்!
சாலவழி கடக்க வேணும்! ஏலேலங்கடி! ஏலேலோம்!"

(மக்களிசைப் பாடல் ப-46)

இப்பாடல் வரிகளில் பயிர்த்தொழில் குறித்த பாமரப் பெண்ணின் அறிவுத்திறன் வெளிப்படுகிறது.

"சிக்கிடும் மீனுக்கெல்லாம் செல்லம்மா - நாங்க
செந்தமிழில் பேருவைப்போம் செல்லம்மா"

(மக்களிசைப் பாடல் ப-57)

முடிவுரை

பெண்களின் வாழ்வியலோடு நாட்டுப்புறவியல், பின்னிப்பிணைந்துள்ளது என்பதை அறிய முடிகிறது. பெண்களின் வாழ்வியலில் ஏற்படும் பல நிலைகளை, பாமரப் பெண்ணாக இருப்பினும் பட்டறிவின் துணையோடு தம்நிலையைப்பாங்காக வெளிப்படுத்தியுள்ளாள் என்பதை உணரலாம். மேலும் "பிறந்தபோது தந்தைக்கும், திருமணமானபின் கணவனுக்கும், வயது முதிர்ந்த காலத்தில் மகனுக்கும் அடிமை" என்று வேதம் குறிப்பிடுவதைப்போல் சிறு வயது முதலே பெண் சார்புத்தன்மை மனநிலையோடு வளர்ந்துள்ளாள் என்பதையே நாட்டுப்புறப்பாடல்கள் சுட்டுகின்றன. நாட்டுப்புறப்பாடல்களை வாய்மொழியில் பாதுகாக்கும் பணியில் பெண்களே அதிகம் பங்கேற்கின்றனர் என்பது மறுக்க இயலாத உண்மையாகும்.

# இஸ்லாத்தில் இதர நம்பிக்கைகள்

ஹ. அல்தாஜ் பேகம்,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
யாதவர் கல்லூரி,
மதுரை.

இஸ்லாம் என்பது இன்றைக்கு உலகம் முழுவதும் பரவி இருக்கின்ற பல கோடி மக்களின் இதயத்திலே வாழ்கின்ற வழி முறையாக வாழ்க்கை நெறியாக உள்ள ஒரு மார்க்கமாகும். என்பது நாம் அறிந்ததே. என்றாலும் ஷஇஸ்லாமிய மதம்' என்று நான் சொல்ல விரும்பவில்லை. ஷமதம்' என்ற வார்த்தையை நான் தவிர்க்க விரும்புகிறேன். காரணம் ஷவெறி', பைத்தியம் போன்ற அர்த்தங்களும் ஷமதம்'என்ற சொல்லுக்கு உண்டு.

இஸ்லாம்

"இஸ்லாம்" என்ற அரபிச்சொல்லுக்கு இறைவனுக்கு அடி பணிதல் என்று பொருள் "இஸ்லாம்" என்றால் "சாந்தி" "அமைதி" எனப்பொருள். ஓர் இஸ்லாமியன் பின்வரும் ஐந்து வி'யங்களில் நம்பிக்கை கொண்டவனாக இருக்க வேண்டும்.

1. இறைவனின் ஒருமையை உரைக்கும் கலிமா
2. தொழுகை
3. நோன்பு
4. ஜகாத் என்றும் ஏழைவரி (ஜகாத் - தூய்மைப் படுத்துதல்)
5. புனித ஹஜ்

இவை யாவரும் அறிந்ததே. இது மட்டுமன்று இதர சில அடிப்படை நம்பிக்கைகளும் இஸ்லாத்தில் உண்டு.

இறைவனின் ஒருமையை இஸ்லாம் அறிவிக்கிற வரையில், தானே உருவாக்கிய உயிரற்ற சிலைகளில் காலடிகளில் வீழ்ந்து கிடந்தான் மனிதன். இதைப்பற்றிச் சொல்லும் போது "பொம்மைகளோடு வளர்ந்த மனிதக் குழந்தைகளுக்கு வளர்ந்த பிறகும் பொம்மைகள் தேவைப்பட்டன" என்கிறார் ஞானபாரதி (வலம்புரிஜான், ப.12) எல்லா மதங்களிலும் இறைவன் ஒருவன் தான் என்னும் கருத்து நிலவித்தான் வந்துள்ளது. எனினும் சிந்தனையின் உச்சகட்ட வெளிப்பாடாகத்தான் அவை இருந்தன. ஆனால் பரவலான பாமர நம்பிக்கையானது ஏக இறைவன் என்றில்லாமல் ஏகப்பட்ட இறைவன்கள் என்பதாகத்தான் உள்ளது.

(நபியே! மனிதர்களை நோக்கி) நீர் கூறும் அல்லாஹ் ஒருவன் தான் அல்லாஹ் எவருடைய தேவையுமற்றவன். (யாவும் அவன் ஒருவனையே எதிர்பார்த்திருக்கின்றன) அவன் (எவரையும்) பெறவுமில்லை (எவராலும்) பெறப்படவுமில்லை. (ஆகவே அவனுக்கு தகப்பனுமில்லை, சந்ததியுமில்லை) தவிர அவனுக்கு ஒப்பாகவும் ஒன்றுமில்லை. (அல்குர்ஆன் சூரா இஹ்லாஸ் 112.01,04).

வானவர்கள்

வானவர்களில் ஆண், பெண் என்ற பால் வேற்றுமை இல்லை. (அல்குர்ஆன் 17:40, 37:150) வானவர்கள் இறைக்கட்டளையை எதிர்க்கேள்வியின்றி ஏற்றுச்

செயல்படுபவர்கள் (7:206, 16:50, 21:19, 21:27) இவர்களுக்கு மறைவான ஞானம் இல்லை (2:30, 31, 32) வானவர்கள் தூதர்கள் என்றும் கூறப்பட்டுள்ளனர் (6:61. 7:38, 10:21) திருக்குர்ஆனை நபிகள் நாயகத்திற்குக் கொண்டு வந்த வானவர் ஜிப்ரில், (2:97, 16:102). மேலும் மீகாயில், மாலிக் எனும் வானவர்களும் உண்டு.

இப்லீஸ் (சைத்தான்)

இப்லீஸ் நெருப்பில் படைக்கப்பட்ட ஷஜின்' படைப்பைச் சேர்ந்தவன் (7:12, 18:50). இப்லீஸ் ஆதமுக்குப் பணிவது தனக்கு இழுக்கு எனக் கருதினான். மரியாதை செய்ய மறுத்தான் (2:34, 15:31) மனிதர்களை வழி கெடுக்க தனக்கு ஒரு வாய்ப்பு அளித்தால் வழி கெடுக்க முடியும் என இறைவனிடம் வேண்டினான் (7:16, 7:17). இவன் ஜின் இனத்தைச் சேர்ந்தவன் என்பதால் மற்ற ஜின்களைப் போல் இவனும பல்கிப் பெருகுவான். (18:50) இறைத்தூதர்கள் தவிர மனிதர்கள் கண்களுக்கு அவன் தென்பட மாட்டான். (7:27)

ஜின்கள்

ஜின்களிலும் தூதர்கள் அனுப்பப்பட்டனர் (6:130) கெட்ட ஜின்கள் நரகத்தை அடைவார்கள் (6:128) மனிதர்களைப் போலவே ஜின்களுக்கும் கட்டளைகள் உள்ளன. சுலைமான் நபிக்கு ஜின்களைக் கட்டுப்படுத்தும் திறனை அளித்து இறைவன் சுலைமானை சிறப்பித்திருந்தார். (21:182, 27:17) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஜின்களுக்கும் இறைத்தூதராக அனுப்பப்பட்டனர். (46:29-32, 72:1-4). ஜின்களில் நல்லோரும் தீயோரும் உள்ளனர் (72:7)

நபிமார்கள்

ஷநபி' என்ற சொல் அறிவிப்பவர் என்று பொருள்படும். நபி என்பவர் இறைவனிடமிருந்து பெற்ற செய்தியை மக்களுக்கு அறிவிப்பவர் என்று பொருள். ரஸீல், தூதர், நபி அனைத்தும் ஒன்றே. (7:157, 7:158) இவர்கள் ஒரு சமுதாயத்துக்கு ஒரு நபியாகவும் வந்துள்ளனர். (10:47, 16:36). நபிமார்களிடையே வித்தியாசம் உண்டு. பெண்களில் நபி இல்லை. நபிமார்கள் வருகையால் சில இஸ்லாமிய சட்டங்களும் மாற்றம் பெற்றன. (3:50) நபியாக நியமிப்பது தகுதியால் அல்ல. இறைவனின் நியமனமே. (3:81)

வானவர் தன்மை நபிமார்களுக்கு இல்லை. (6:50) ஏனெனில் நபிமார்களும் மனிதர்களே.

வேதங்கள்

வேதங்கள் நான்கு மட்டுமல்ல எல்லா நபிமார்களுக்கும் வேதங்கள் இறைவனால் வழங்கப்பட்டன. (2:136, 2:213) அவை அருளப்பட்ட வடிவில் பாதுகாக்கப்படவில்லை. வேதங்களை மறைக்கவோ, நிராகரிக்கவோ, கேலி செய்யவோ கூடாது. (2:176, 3:4)

தவ்ராத் : மூஸா நபிக்கும் ஏராளமான நபிமார்களுக்கும் வழங்கப்பட்ட வேதம் (3:48, 5:44).

இஞ்சீல் : ஈஸா நபிக்கு வழங்கப்பட்டது (4:163)

ஸபூர் : தாவூத் நாயகம் (ஸல்) அவர்களுக்கு ஷஜிப்ரீல்' எனும் வானவர் திருக்குர்ஆன் அருளப்படுவதற்கு முன் பாதுகாக்கப்பட்ட பதிவேட்டில் இருந்தது. (56:77,78) திருக்குர்ஆன் முஸ்லீம்களுக்கு மட்டும் உரியதல்ல. மனித குலத்துக்கு உரியது (2:159, 2:168).

மறுமை நாள்

வானம், பூமி, சூரியன், விண் கோள்கள் பூமியில் வாழும் மனிதர்கள் மற்றும் உயிரினங்கள் தாவரங்கள் உட்பட அனைத்தும் இறைவன் ஒரு நாள் அழிக்கப்படும். அந்நாளில் இறைவன் மட்டுமே நிலைத்திருப்பான். யுக முடிவு நாள், இறுதி நாள், ஷசூர்' ஓதப்படும் நாள் போன்ற பல்வேறு சொற்களால் இந்த நாள் குறிப்பிடப்படுகிறது. (2:27, 6:73, 2:148). பின்னர் மனிதர்கள் அனைவரும் மீண்டும் உயிர் கொடுக்கப்பட்டு விசாரிக்கப்பட்டு தீர்ப்பு வழங்கப்படுவர். நல்லவர்களுக்கு சொர்க்கமும், தீயவர்களுக்கு நரகமும் அளிக்கப்படும். எனவே இவ்வுலகில் மனிதன் நல்லவனாக வாழ இத்தகைய ஒரு நாளை நம்புவது பெரிதும் உதவும் என்பது கவனத்தில் கொள்ள வேண்டியதாகும்..

சூனியம்

ஷசூனியம்' என்பது மாயையும் ஏமாற்றுதலுமே, சூனியத்தால் ஒன்றும் செய்ய முடியாது. (2:102, 7:116)

வஸீலா (நல்லறம்)

நாம் நல்வழியில் நடக்கத் தேவையில்லை. நம் விருப்பம் போல் நடக்கலாம் (தீயவழியிலும்) ஏதாவது ஒரு மகானை பிடித்துக் கொண்டால் போதும். கடவுளை நெருங்கி விடலாம் என்ற நம்பிக்கை உலகில் உள்ள பல மதங்களிலும் இருக்கிறது. இஸ்லாம் இதை நிராகரிக்கின்றது. இறைவனை நெருங்க நினைப்பவர்கள் நல்லறங்கள் எனும் ஷவஸீலாவை' (சாதனம்) தேடிக் கொள்ள வேண்டும் என்று கட்டளையிடுகின்றது (17:57)

மிஹ்ராஜ்

இது உண்மை நிகழ்ச்சியாகும். இறந்து போனவரை உயிரோடு இருப்பவர்களால் பார்க்க முடியாது. ஆயினும் இறைவன் தன் ஆற்றலைக் காட்டுவதற்காக நபிகளாரை (ஸல்) ஷமிஹ்ராஜ்' என்ற விண்வெளிப்பயணனத்திற்கு அழைத்துச் சென்றான். அங்கே நபிகளார் (ஸல்) மூஸாவைச் சந்தித்தார்கள். மற்றவர்களை விட அவர்களிடம் அதிகமான நேரம் உரையாடினார்கள். இது நேரடியாகவே நடந்தது என்பதற்கான சான்றுகள் திருக்குர்ஆனில் காணப்படுகின்றன. (53:13-18)

புனிதமாக்குதல்

அல்லாஹ் எதையெல்லாம் புனித மாக்கியிருக்கின்றானோ (மக்கா - ஹஜ், புனிதமாதம் - ரமலான், நினைவுச் சின்னங்கள்) அதனையெல்லாம் பேண வேண்டும். (5:2)

ஒரு முஸ்லீம் என்று ஒருவர் தன்னை பிரக்ஞையுடன் சொல்லிக்கொண்டால், அவர் மேற்குறிப்பிட்ட வி'யங்களில் நம்பிக்கை கொண்டவராக இருக்க வேண்டும். கடமைகளை அதன்தன் நிபந்தனையின்படி நிறைவேற்றுபவராகவும் திகழ வேண்டும் என்பது தெளிவாகிறது.

எந்தக் கோணத்திலிருந்து இஸ்லாத்தின் கோட்பாடுகளை ஆராய்ந்தாலும் அவை இறை நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு பன்முகத்தன்மைகொண்டு மனிதனின் நல் ஒழுக்கத்தையும் ஒற்றுமையையுமே வலியுறுத்துவதாக உள்ளது.

# பாலின அடையாள அரசியல்

மா. புதியாசலம்
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 21.

முன்னுரை

இன்றைய சமூக அமைப்பில் மொழி, இனம், சாதி, குழுக்களுக்கு இளையேயான வேறுபாட்டைக் காட்டிலும் ஆண், பெண், இடையிலான வேறுபாடு ஒவ்வொரு குடும்பத்திலும், இனத்திலும், சாதியிலும், குழுவிலும், மொழி இனக் குடும்பத்திலும் தலைதூக்கி நிற்கிறது. பல்வேறு சமூக நிகழ்வுகளிலும் அல்லது பிரச்சினைகளிலும் ஆணுடன் பெண் இணைந்து போராடினாலும் அல்லது பங்கு பெற்றாலும் அவர்களுக்கு இடையிலான ஆண் பாலினம், பெண் பாலினம் என்ற வேறுபாடு மிகப்பெரிய பிரச்சினையாக வெளிப்படுகின்றது. இத்தகைய வேறுபாடுகள் கலை, இலக்கியங்களிலும் வெளிப்படுகின்றன. பெண் ஆணிடமிருந்து விடுதலை பெற நினைப்பது ஆண் எதிர்ப்பும் அல்ல. ஆண் பெண்ணிடமிருந்து விடுதலை பெற நினைப்பது பெண் எதிர்ப்பும் அல்ல. இந்த அடிப்படையில் பாலின அடையாள அரசியலை விவரிக்கிறது இக்கட்டுரை.

பால், பாலினம் வேறுபாடு

பால் (SEX) என்பது இயற்கையானது. உலகில் தோன்றும் அனைத்து உயிர்களும் ஆண் பால், பெண் பால் என்றுதான் கொள்ளப்படுகின்றன. இயற்கையான மனிதன், விலங்குகள் போன்றவற்றிடம் காணப்படும் பால் வேறுபாடே இயற்கைப் பால்பகுப்பு ஆகும்.

பாலினம் (Gender) என்பது பண்பாட்டுக் கட்டமைப்பு. இது சமூக அமைப்பில் குடும்பத்தின் கூறுகளை வைத்துக் கட்டப்படுகின்றது. மனிதனை மற்ற விலங்குகளிடமிருந்து பிரித்து, மனிதனின் ஒழுக்கம், கலை, அறிவு, சமூகம், குடும்பம் என்பதை உணரவைத்து பண்பாட்டு அடிப்படையில் பாலினம் கட்டமைக்கப்படுகின்றது.

பாலினம் பண்பாட்டுக் கட்டமைப்பு உருவாக்கம்

பாலினம் சில அடையாளங்கள் வழிக் கட்டமைக்கப்படுகின்றது. பெண்கள் தாழ்வு, ஆண்கள் உயர்வு என்ற நிலையில் "பால் அமைப்பு என்பது ஒரு பண்பாட்டுக் கருத்துருவாக்கம். ஒரு குறிப்பிட்ட பண்பாட்டுச் சூழலில் ஆணைப் பற்றியும், பெண்ணைப் பற்றியும் கருத்துக்கள் உருவாக்கப்பட்டன. இவ்வாறு உருவாக்கப்படுகின்ற கருத்துக்கள் நடைமுறை வாழ்க்கையில் செயல்பாடு உடையனவாக விளங்குகின்றன. ஆண் என்பவன் உடல் அளவில் வலிமையுடையவனாகவும், வீட்டிற்குப் புறத்தே சென்று பொருளீட்டும் திறமை பெற்றவனாகவும், பால் உறவு நிலையில் கட்டுப்பாடு இல்லாதவனாகவும் கருத்துக்களால் கட்டமைக்கப்படுகின்றான். இத்தகைய கட்டமைப்பே ஆண்பால் அமைப்பு எனப்படுகின்றது. ஆணைப் போன்றே பெண்ணும் ஒரு குறிப்பிட்ட பண்பாட்டுச் சூழலில் கருத்துக்களால் கட்டமைக்கப்படுகின்றாள். உடல் அளவில் பலவீனமானவ்ளாகவும், மென்மைத்தன்மையுடையவளாகவும், குழந்தையைப் பெற்றுத் தருபவளாகவும், போகப் பொருளாகவும் கட்டமைக்கப்படுகின்றாள். இத்தகைய கட்டமைப்பு பெண்பால் கட்டமைப்பு எனப்படுகின்றது".

மேலும் தகவல் தொடர்புச் சாதனங்களான பத்திரிகை, வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம் போன்றவை பெண்களை விளம்பரப் பொருளாகவும், கவர்ச்சிப் பொருளாகவும், போகப் பொருளாகவும் கொண்ட ஒரு பண்பாட்டுக் கட்டமைப்பை உருவாக்கியே வருகின்றன.

உடல்

"ஆண், பெண் வேறுபாடு என்பது உடலியல் ரீதியானதே தவிர உளவியல் ரீதியானது அல்ல. ஆனால் பெண்ணை அடிமையாக்க அவளுக்கு மனதளவிலான ஒரு இலக்கணம் வடிக்கப்பட்டு அது அவள் மீது திட்டமிட்டு திணிக்கப்பட்டுள்ளது". இது மகளிரின் தனித்தன்மையான உடல் அமைப்பின் காரணமாகச் சமூகத்தில் அவர்களின் சமூக உரிமையை மறுப்பதும், ஆதிக்கம் செலுத்த முனைவதுமான நடைமுறைகளையே சுட்டுகிறது.

குடும்பம்

"சமூக அமைப்பின் சிறு கூறே குடும்பம். இக்குடும்ப அமைப்பு சமூகத்தில் மிக இன்றியமையாததாகத் திகழ்கின்றது. இரத்த உறவினாலோ, மண உறவினாலோ, சுவீகாரத்தினாலோ பிணைப்புண்ட இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட மனிதர்கள் சேர்ந்து வாழும் அமைப்பு குடும்பம் என்று வரையறை செய்யப்படுகின்றது" என்று சேதுமணி மணியனும், "குடும்பம் என்ற அமைப்பு ஆணினத்தின் நலனுக்காக ஆண்களால் ஏற்படுத்தப்பட்டதேயல்லாது, பெண்ணினத்தின் நலனுக்காக அல்ல. அவ்வமைப்பின் மூலம் பெண்ணினத்தை அடிமையாகச் சிறை வைத்தனர்" என்று கணேசலிங்கனும் குடும்மபம் என்ற அமைப்பு பற்றிக் கூறுகின்றனர்.

ஓர் ஆணின் சொல், செயல்பாடு அனைத்துமே அவனுடைய மொழி அதிகாரத்திற்கு உட்பட்டதாக இருக்கிறது. குடும்பம் அனைத்துப் பொறுப்புக்கும் ஆணே தலைமை ஏற்கிறான். தனது தாய், மனைவி, சகோதரி என்பவர்கள் எவ்வாளவு அறிவு, திறமை, வலிமை உடையவராக இருந்தாலும் அவர்கள் ஆணிற்கு அடுத்த நிலையில் உள்ளவர்களே பெண் என்ற மனநிலை உடையவர்களாகவே இருக்கின்றாள். பெண் என்றால் அசுத்தம் என்ற கருத்தும், அதன் எதிர்நிலையில் புனிதம் என்ற ஒரு கருத்தும் நிலவுகின்றன.

ஒரு குடும்பத்தின் இரு கண்களான ஆணும், பெண்ணும் சமமாக மதிக்கப்பட வேண்டியவர்கள், ஆனால் பெண் என்பவள் மட்டும் இரண்டாம் நிலையில் வைக்கப்படுகிறாள். (1) பெண் ஆணைச் சார்ந்தே இருக்க வேண்டும் (2) குடும்பத்தில் கூலி பெறாத வேலைக்காரி (3) ஆணின் பாலியல் இன்பத்தைத் தீர்க்கும் ஓர் இயந்திரம் (4) குழந்தை உற்பத்தி செய்யும் ஓர் இயந்திரம் என குடும்ப அமைப்பில் பெண் பாலினம் கட்டமைக்கப்படுகின்றது.

சமயம்

மதங்களுக்குள் எழுகின்ற பிரச்சினைகள், போராட்டங்கள் வெறும் மதப் பிரச்சினை மட்டும் என்ற சொல்லிவிட முடியாது. அது ஒரு வர்க்கப் போராட்டம் எனக் கூறலாம். அனைத்துச் சமயங்களிலும் ஆண்களே முன்னிலைப் படுத்தப்படுகின்றார்கள். இந்துக் கோவில்களில் கருவறைக்குள் சென்று பூசை செய்ய முடியும் என வலியுறுத்தப்படுகின்றது. கிறித்துவ மதத்திலும் ஆண்களே முன்னிலைப் படுத்தப்படுகின்றனர். ஆண்களைப் போல பெண்களும் துறவறம் மேற்கொண்டாலும் ஆண்களுக்குக் கட்டுப்பட்டவர்களாகவே உள்ளனர். பங்குத் தந்தை (Father) என்ற ஆணின் அதிகாரத்திற்குக் கட்டுப்பட்டே பெண் துறவிகள் (Sisters) செயல்பட வேண்டும்.

இசுலாமிய மதத்திலும் ஆண்களே முன்னிலைப் படுத்தப்படுகின்றனர். ஆண்கள் பள்ளிவாசலில் (மசூதி) எங்கு வேண்டுமானாலும் செல்லலாம், தொழுகை நடத்தலாம். ஆனால் பெண்கள் ஒரு குறிப்பிட்ட வயதிற்குப் பின் பள்ளிவாசலுக்குச் செல்ல முடியாது. இவ்வாறாக மதம் என்பதும் ஆண்களுக்கே உள்ளது எனக் கொள்ள வேண்டும். மதம் ஆண் பாலினத்திற்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கின்றது. பெண் பாலினம் என்றால் இரண்டாம் நிலைதான் எனக் கொள்ளப்படுகிறது.

தொழில் பிரிவுகள்

ஆண்களைப் போன்று பெண்களும் வலிமையும், உறுதியும் உடையவர்கள் என்றாலும் ஆண்கள்தான் வலிமை, வீரம் மிக்கவர்கள், பெண்கள் மென்மைத் தன்மை கொண்டவர்கள் என்ற ஆணாதிக்க சிந்தனை கற்பிக்கின்றது.

தொழில் என்பது ஆண்களுக்கே உரியது எனக் கொள்ளப்படுகின்றது. காரணம் ஆண் என்பவான் தொழில் செய்ய எங்கு வேண்டுமானாலும் செல்லலாம். எவ்வளவு காலம் வேண்டுமானாலும் வீட்டை, குடும்பத்தை விட்டுப் பிரிந்து செல்லலாம். ஆனால் பெண் என்பவள் அவ்வாறு இல்லை. வீட்டில் இருக்க வேண்டும், தன் குழந்தை, பெற்றோர்களைப் பேண வேண்டும் எனக் கூறப்படுகிறது. இதனைச் சங்க இலக்கியத்தில் "வினையே ஆடவர்க்கு உயிரே, மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரே"5 என்று கூறப்படுகின்றது.

ஆனால் இன்றைய காலகட்டத்தில் பெண் என்பவள் 'ஆணுக்குப் பெண் இளைப்பில்லை, ஆண்கள போன்று பெண்களும் அனைத்து நிலைகளிலும், அனைத்து நிலைகளிலும், அனைத்துத் துறைகளிலும் பணியாற்றினாலும் பெண்பாலினம் உயர்த்தப்படவில்லை'. பெண் தன் ஊதியத்தைக் கொண்டுவந்து கணவன் என்ற அணிடம் அல்லது தந்தை என்ற ஆணிடம் ஒப்படைக்க வேண்டியுள்ளது. இவ்வாறு தொழில் என்பதிலும் ஆண் பாலினம் உயர்வாகவும், பெண் பாலினம் தாழ்வாகவும் கட்டமைக்கப்படுகின்றது.

அடையாளங்களுக்கு இடையே முரண்பாடு தோன்றல்

ஆண், பெண் என்ற அடையாளம் எப்போதும் சமமாகவும், சமத்துவமாகவும் இருப்பதில்லை. காரணம் உயர்வு, தாழ்வு என ஏற்படும் நேரங்களில் முரண்பாடுகள் தோன்றுகின்றன. அதாவது, வன்மை மென்மை, அதிகாரம் - அதிகாரமின்மை என வரும் சூழலில் முரண்பாடுகள், மோதல்கள் ஏற்படுகின்றன.

வன்மை - மென்மை

ஆண் பாலினம் என்றால் உண்மை: காரணம் ஆண் என்றாலே வீரம், தைரியம், வலிமை கொண்டவன் எனக் கொள்ளப்படுகின்றது. எனவே ஆண்களைப் பற்றிய கருத்துக்களை உருவாக்கும் பொழுதே "சாண் பிள்ளையானாலும் ஆண் பிள்ளை" எனவும், ஆண்களே குடும்பத்தின் தலைவன் என்று கொள்ளப்படுகின்றது. ஆனால் பெண்பாலினம் என்றால் மென்மை. பெண் மென்மைத் தன்மையும், மெல்லிய உடல்கட்டும், மென்மையான பேச்சும் உடையவன் என்ற கருத்து கொள்ளப்படுகின்றது. ஆனால் இந்தக் கருத்திற்கு மாறாக ஆண்கள் போன்று பெண்களும் செயல்பட முடியும் என வரும் சூழலில் முரண்பாடுகள் தோன்றுகின்றன.

உயர்வு - தாழ்வு

ஆண், பெண் சம வயதுடையவர்களாக இருந்தாலும் ஆண் பாலினம் உயர்வு, பெண் பாலினம் தாழ்வு எனவும் கொள்ளப்படுகின்றது. இன்றையச் சமூகச்

சூழலில் குடும்பத்தில் ஆண் சிறியவன் என்றாலும் ஆண் மகனே உயர்வாகக் கருதப்படுகிறான். பெண் வயதில் மூத்தவள் என்றாலும் இரண்டாம் நிலையில் வைக்கப்படுகின்றாள். உழைப்பு என்றாலும் ஆண்களுக்கே அதிகமான ஊதியம். பெண்களுக்கு ஊதியம் குறைவாகவே கொடுக்கப்படுகின்றது. இவ்வாறு சில முரண்பாடுகள் தோன்றுகின்றன.

அதிகாரம் - அதிகாரமின்மை

குடும்ப அமைப்பில் ஆண்தான் அனைத்து அதிகாரத்தையும் பெறுகிறான் குடும்ப பொறுப்புகளில் ஆண் முக்கியப் பங்கு பெறுகிறான். ஆண் என்பவன் வீட்டின் தலைவன். வீட்டின் நிர்வாகம் அனைத்தும் ஆணின் ஆணைப்படிதான் நிகழ வேண்டும். "அரசு குடும்பத்த தலைவனையே ஏற்கிறது. பிறப்பு பதிவு, வரிச்சலுகை, கடவுச்சீட்டு (பாஸ்போர்ட்) யாவற்றுக்கும் குடும்பத் தலைவனே மதிக்கப்படுகிறான்"6 என்று கணேசலிங்கன் கூறுகின்றார். இவ்வாறு பெண் என்பவள் இரண்டாம் நிலையிலேயே இருக்கிறாள். மேலும், 'வீட்டில் ஊதியம் இல்லாமல் உழைக்கும் வேலைக்காரி' என்ற நிலையில் கொள்ளப்படுகிறாள். இவ்வாறு பெண் என்பவளுக்குக் குடும்பத்தில் அதிகாரம் யாவும் மறுக்கப்படுகின்றது. அரசு நிலையிலும் ஆண்களே முதன்மைப்படுத்தப்படுகின்றனர். இவ்வாறாக அதிகாரம் ஓ அதிகாரமின்மை என்பதில் முரண்பாடு, மோதல் ஏற்படுகின்றது. இந்த முரண்பாடு, மோதல் வலுப்பெறுங்காலங்களில் அரசியல் பிறக்கின்றது.

முடிவுரை

குடும்பம் என்ற அமைப்பில் ஆண் - பெண் அடையாளம் பால், பாலின வேறுபாடு, பாலின பண்பாட்டுக் கட்டமைப்பு உருவாக்கம், உடல், சாதி, தொழில், சமயம், தொழில் பிரிவுகள் வழியும் இந்த அடையாளங்களிடையே தோன்றும் முரண், மோதல், உயர்வு, தாழ்வு, ஆண்-பெண் மதிப்புநிலை, சமயம், தொழில் அமைப்பில் பாலினம், உயர்வு, தாழ்வு என்பதனால் ஏற்படும் முரண், மோதல்கள், அடையாள அரசியலாக மாற்றம் கொள்கின்றன எனலாம்.

குறிப்புகள்

1. பெ. முருகன் - தலித் நாவல்களும் சமூகவியலும்
2. அருணன் - தலித் அரசியலும் இலக்கியமும்
3. சேதுமணி மணியம் - தமிழ் நாவல்களில் மதிப்புகள்
4. செ. கணேசலிங்கன் - பெண்ணடிமை தீர
5. - குறுந்தொகை பாடல் 13 (அடி 12)
6. செ. கணேசலிங்கன் - ஒரு குடும்பத்தின் கதை

# நாகராஜாகோவில் ஒரு சமணப்பள்ளி

**டாக்டர். எஸ். விவேகானந்தன்**
எழுத்தாளர்,
தமிழியற்புலம்,
ஸ்ரீ வெங்கடேஸ்வரா கல்லூரி,
டெல்லி பல்கலைக்கழகம்
புது டெல்லி 110 021

நாகராஜா என்பதற்கு நாகர்களுக்குத் தலைவன் என்பது பொருள். குமரி மாவட்டத் தலைநகரான நாகர்கோவிலில் அமைந்துள்ள நாகராஜாவுக்கு இராநநாகம் என்று பொருள். நாகர்கோவில் என்ற பெயர் பழங்காலத்தில் நாகராஜா கோவிலை மட்டுமே உணர்த்தியது. பின்னர் அது அக்கோயிலைக் சுற்றியுள்ள ஊர்ப்பெயராய் அமைந்து அம்மாவட்டத் தலைநகர்ப் பெயராகவும் ஆகயிருக்கிறது. கி.பி. 1800-க்குப் பின்னர் கிறித்தவத் திருத்தொண்டர்கள் நாஞ்சில் நாட்டிற்குள் புகுந்த பின்னரே நாகர்கோவில் என்ற பெயர் நிலைபெற்ற.து. கி.பி. 1800-க்கு முன்னர் நாகர்கோவில் கோட்டாறு என்றே அழைக்கப்பட்டது.

தமிழகத்தின் தென்பகுதியாக விளங்கும் நாகர்கோவில் 1956-க்கு முன்னர் திருவிதாங்கூர் மாநிலத்தின் ஒரு பகுதியாக விளங்கியது. ஏறத்தாழ 25 ஆண்டுகளுக்கு முன்னர் இக்கோயில் நெல்வயல்களாலும் நாகரளிப்பூ மரங்களாலும் சோலைகளாலும் சூழப்பட்டிருந்தது. தற்போது கோயிலைச் சுற்றிய பகுதிகள் அனைத்தும் கட்டிடங்களாக உருமாறி விட்டன. வயல்களாலும் மரங்களாலும் சூழ்ந்திருந்த காலகட்டத்தில்தான் நாகப்பாம்புகளும் கோயிலைச் சுற்றி வலம் வந்து கொண்டிருந்தன. தற்காலத்தில் நாகங்கள் அப்பகுதியில் இருப்பதாகவோ யாரும் பார்த்ததாகவே தெரியவில்லை.

பண்டைக்கால குமரிப் பகுதியில் நாகவழிபாடு இருந்ததற்கானச் சான்றுகள் கிடைக்கின்றன. அனுமன் இலங்கைக்குச் சென்ற கன்னியாகுமரி மகேந்திர மலையிலிருந்து தாவினான். அப்போது மலையிலிருந்து உருண்ட கற்களால் எழுந்த ஓசையால் நாகங்கள் வெளிவந்து பார்த்தன. அவை குடைகளை விரித்து வைத்தது போல் காட்சியளித்தன என்ற செய்தி வால்மீகி இராமயணம் கிட்கிந்தா காண்டத்தில் (அத்தியாயம் 67, சுலோகம் 46-49) காணக்கிடைக்கிறது. குமரிமாவட்டம் மகேந்திரகிரி அருகில் கிடைத்த ஒரு தெலுங்கு மொழிக் கல்வெட்டு அப்பகுதியில் நாகங்களுக்கான கோயில்கள் இருந்ததைக் குறிப்பிடுகிறது. மேலும் பண்டைக்காலம் முதல் மலைநாட்டு மக்கள் (கேரளத்து மக்கள்) நாகவழிபாட்டோடு தொடர்புடையவர்கள் ஆவர். குமரி மாவட்டம் மலைநாடாக இருப்பதால் இவ்வழிபாடு இருக்கும் பிரபலமானதாக இருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. மட்டுமின்றி நாகவழிபாடு சிறப்புற்று விளங்கியிருந்ததற்குச் சான்றாக நாகராஜா கோயில் விளங்குகிறது.

நாகராஜா கோவிலின் தோற்றம் குறித்து எந்த விதமான சான்றுகளும் இல்லை. இக்கோவிலுக்கெனத் தலபுராணமும் இல்லை. கோயிலின் தோற்றம் குறித்த கல்வெட்டுகளும் இல்லை. கன்னியாகுமரி மாவட்டத்தில் ஒரு காலத்தில் நாகர்கள் வாழ்ந்ததாகக் குறிப்பிடும் வால்மீகி இராமாயணக் காலம் முதலே இக்கோவில் இருந்திருக்க வேண்டும் என்ற கருத்து நிலவுகிறது. இக்கோவில் குறித்த ஒரு செவி வழிக் கதை பரம்பரை பரம்பரையாக நிலவுகிறது. புல்லும் புதரும் நிறைந்திருந்த கோவில் இருக்கும் இடத்தில் ஒரு இளம்பெண் புல் அறுத்துக் கொண்டிருந்தாள்.

அவ்விடத்தில் ஐந்து தலை நாகப்பாம்பு ஒன்று இருந்தது தெரியாமல் அப்பெண் புல் அறுக்க, அவளது அரிவாள் அப்பாம்பின் தலையில் பட்டு ஒரு தலை அறுந்து விழ, அதிலிருந்து கொட்டிய இரத்தத்தைக் கண்டு அவள் அஞ்சி ஓடி, அருகிலிருந்த கிராமத்திலுள்ள அவளது உறவினர்களை அழைத்துவந்தாள். ஐந்து தலை நாகத்தை அதிசயமாகக் கண்ட அக்கிராம மக்களின் உதவியால் அப்பெண் அவ்விடத்தில் கோயில் வைத்து வழிபட்டு வந்தாள். கிராம மக்களும்அவ்வழிபாட்டில் இணைந்தனர். இச்செய்தி நாலா திசைகளிலும் பரவியது.

பல ஆண்டுகளுக்குப் பின் தொழு நோயால் வரந்திய களக்காட்டு மன்னர் இக்கோவிலைப் பற்றிக் கேள்வியுற்று ஒரு ஞாயிற்றுக் கிழமையன்று அங்கு வருகை தந்து வழிபட்டார். இவ்வாறாகச் சில ஞாயிற்றுக் கிழமைகள் அங்கு வந்து வழிபடவே. அவரைப் பீடித்திருந்த தொழு நோய் பூரணமாக விலகி விட்டது. இந்தச் செய்தி காட்டுத் தீ போல எல்லா இடங்களுக்கும் பரவியது. இக்கோவிலுக்கு வந்து தன் நோய் தீராததால் மன்னர் இப்போது இருக்கும் இந்த ஆலயத்தைக் காட்டினார். பின்னர் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமைகளிலும் இக்கோவிலுக்கு வந்து வழிபட்டதோடு அங்குப் பல காணிக்கைகளும் செலுத்தி பூசை நடத்திச் சென்றார். அதன் பின்னர் இக்கோவிலில் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் புனித நாளாகக் கொள்ளப்படுகிறது. இச்செய்தியில் குறிப்பிடப்படும் களக்காட்டு மன்னர் கி.பி. 1516 முதல் 1535 வரை களக்காட்டைத் தலைநகராகக் கொண்டு திருவிதாங்கூர் மாநிலத்தை ஆண்ட பூதல வீர ஸ்ரீ வீர உதய மார்த்தாண்ட வர்மா ஆவார். இவர் சோழ குலத்து இளவரசியை மணமுடித்ததால் புலி மார்த்தாண்டவர்மா என அழைக்கப்பட்டார். இவர் பாண்டிய மன்னர்களுடன் போராடி நெல்லை மாவட்டத்திலுள்ள சில பகுதிகளைப் பிடித்து அடக்கினார். இவர் கொல்லம் 710-ஆம் ஆண்டு (பி.பி. 1535) ஆடி மாதம் 26 ஆம் தேதி களக்காட்டில் இறந்தார். இவர் தான் நாகராஜா கோவிலைப் புதுப்பித்தார் எனக் கல்வெட்டு சான்று பகர்கின்றது. இவரே கேரளத்து நம்பூதிரிகளைப் பூஜை செய்ய ஏற்பாடு செய்திருக்க வேண்டும். இக்கோவிலின் தந்திரியாக இருப்பவர் கேரளத்து பாம்பு மேக்கட்டு இல்லத்துக் குடும்பத்தைச் சார்ந்தவர். அவர்கள் பரம்பரையாகவே நாகத்தை வழிபடுபவர்கள் ஆவர்.

களக்காட்டு மன்னமர் உதய மார்த்தாண்ட வர்மா தொழு நோயால் வருந்தினார் என்றும்; நாகராஜா கோவிலுக்கு வந்து குணமடைந்தார் என்றும் கூறப்படுவதற்கானச் சான்றுகள் எதுவும் இல்லை. கி.பி. 1930-ஆம் ஆண்டு வரை கோவிலின் பின்புறம் கோடை இலை (ஓடவள்ளி) எனப்படும் பச்சிலைக் கொடி படர்ந்து புதராகக் காணப்பட்டது. அவ்விடத்தில் ஏராளமான நாகப்பாம்புகள் வகித்தன. பக்தர்கள் இவற்றைக் கண்டு பயந்து ஒதுங்கினர். கோவிலைப் புதுப்பிக்க எண்ணிய திருவிதாங்கூர் அறநிலையத் துறை ஆணையர் 1930ஆம் ஆண்டு அப்பச்சிலைக் கொடிகளை வெட்டி அகற்ற உத்தரவிட்டார். கொடியும் வெட்டி அகற்றப்பட்டது. இப்பச்சிலை முன்பு கோவிலின் பிரசாதமாக வழங்கப்பட்டது. இப்பச்சிலைச் செடியின் ஒவ்வொரு இலையும் ஒவ்வொரு சுவையுடன் இருக்கும். இப்பச்சிலைப் புதரில் நாகப் பாம்புகள் வசித்ததால் அவற்றின் விஷம், மலம், தோல் முதலியன அப்பச்சிலையோடு கலந்து இருந்திருக்க வேண்டும். அப்பச்சிலை பக்தர்களுக்குப் பிரசாதமாக வழங்கப்பட்ட போது அதை உண்டவர்களின் தோல் நோய் குணமாகியிருக்க வேண்டும். நாகப்பாம்பின் விஷம், மலம் முதலியன தொழு நோய் முதலிய தோல் நோய்களைத் தீர்க்கும் வல்லமை உடையன என்பது தற்கால அறிவியல் ஆராய்ச்சியின் முடிவு. இந்த

உண்மையின் அடிப்படையில் மன்னருக்கு இருந்த நோய் குணமாகியிருக்கும். இப்பச்சிலையின் மகத்துவம் அறிந்த கோவில் பணியாளர்கள் வெட்டி அகற்றப்பட்ட பச்சிலைக் கொடிகளைத் திரும்ப நட்டு வளர்க்க எவ்வளவோ முயன்றும் பயனில்லாமல் போய்விட்டது.

நாகராஜா கோவிலின் வெளித் திருச்சுற்றில் நாகரம்மன் சந்நிதி வாசலின் இருபுறமும் ஐந்து தலையுடன் கூடிய படமெடுத்த இரு நாகச் சிலைகள் 6 அடி உயரத்தில் காணப்படுகின்றன. அவற்றுள் தெற்குப்புறம் அமைந்துள்ள பாம்பின் படத்தின் உட்பக்கம் அடிப்பகுதியில் ஆழ்ந்த சிந்தனையுடன் அமர்ந்துள்ள சிலையில் பாம்பின் படம் பெரிதாகவும் காணப்படும். அறிவியல் அறிஞர்கள் அகலம் குறைந்த படம் உள்ள பாம்பு ஆண் மற்றும் அகலமான விரிந்த படமுள்ள பாம்பு பெண் என்றும் கூறுகின்றனர். அக்கோவிலில் காணக்கிடக்கும் கல்வெட்டுகள் நாகர்க்கும் நாகராஜாவுக்கும் என்று கூறுவதால் இப்பாம்புகளில் பெண்பாம்பு நாகர் என்றும் ஆண்பாம்பு நாகராஜா என்றும் கொள்ள முடிகிறது. இக்கல்வெட்டுச் சான்றுகளின் அடிப்படையில் ஓலைக்கூரைக் கருவறையில் இருப்பது நாகர் (நாகரம்மன்) என்றும் அனந்தகிருஷ்ணன் சந்நிதியில் இருப்பது நாகராஜா என்றும் கருத முடிகிறது.

நாகர் சந்நிதி வாயிலின் தெற்குப்புறம் உள்ள பாம்புப் படத்தினுள் அமர்ந்திருக்கும் ஆண் உருவம் சமண சமயத்து 23-வது தீர்த்தங்கரரான பார்சுவநாதர் என்று கூறப்படுகிறது. ஒரு காலத்தில் இணையாக வாழ்ந்த இரு பாம்புகள் மகிபாலன் என்ற கொடியவனால் கொல்லப்பட்டன. இறக்கும் தருவாயில் பார்சுவநாகரின் மந்திர ஒலிகளைக் கேட்டுக் கொண்டே கிடந்ததால் அவை கீழுலகில் பாம்புகளின் அரசனாகவும் அரசியாகவும் பிறந்தன. ஒரு நாள் பார்சுவநாதர் ஆழ்ந்த தியானத்தில் இருந்தபோது அவரது தியானத்தின் மூலம் வெளியான அலைகளின் சக்தி வானத்தில் சென்று கொண்டிருந்த சம்வரன் பெரு மழையைப் பெய்வித்து பார்சுவநாதரின் தவத்தைக் கலைக்க முற்பட்டான். தியானத்தில் அமர்ந்திருந்த பார்சுவநாதரைச் சுற்றிலும் வெள்ளம் பெருகியது. இவரைப் பாதுகாக்க வேண்டி பாம்பின் அரசன் தர்னேந்திரன் படமெடுத்து பார்சுவநாதரின் மேல் மழை நீர் படாமல் குடையாகி நின்றான். தண்ணீர் மேலும் மேலும் உயரவே பாம்புகளின் அரசி பத்மாவதி தாமரை மலர் ஒன்றை அவரது அடியில் தோன்றி மிதக்கச் செய்தாள். இவ்வாறு பார்சுவநாதரின் தவத்தை அழிக்க முயன்ற சம்வரன் தோல்வியுற்றான் என உத்தர புராணம் குறிப்பிடுகிறது. இக்கதையின் அடிப்படையில் நாகராஜா கோவிலில் காணப்படும் பாம்புச் சிலையில் தென்புறம் உள்ளது தர்னேந்திரன் என்னும் நாகராஜன் என்றும் வடப்புறம் உள்ளது. பத்மாவதி என்னும் நாகராணி என்றும் கருதப்படுகிறது. இதன் அடிப்படையில் ஓலைக் கூரைக் கருவறையில் இருக்கும் தெய்வம் நாகர் என்னும் நாகரம்மனாகவும் அனந்தகிருஷ்ணன் என்னும் பெயரில் தற்போதுள்ள கருவறையில் மாற்றப்பட்டிருக்கும் மூலவர் நாகராஜாவாகவும் கொள்ள வேண்டும்.

நாகராஜா கோவில் அர்த்த மண்டபத்திலும் (முன் மண்டபம்) கிருஷ்ணன் சந்நிதிச் சுவர்களிலும் வெளித்திருச்சுற்று கற்பலவகைகளிலுமாக மொத்தம் 12 கல்வெட்டுகள் காணப்படுகின்றன. வென்று மண்கொண்ட பூதலவீர ஸ்ரீ வீர உதய மார்த்தாண்ட வர்மா. நாராயணநயினான் குணவீரபண்டிதன், சீவகாருடையான் கமலவாகனபண்டிதன், மாளுவநம்பியார் மாளுவநம்பி, தம்பிரான்குட்டி சடையன், குலசேகரப்பெருமாள் கொன்றைமாலை, கருங்குள வளநாட்டுக் கும்பிகுளத்துத் திருக்குருகைப் பெருமாள ஆகியோர் நாகராஜா கோவிலுக்குச் செய்த திருப்பணிகளை அக்கல்வெட்டுகள் கூறுகின்றன.

அனந்தகிருஷ்ணன் சந்நிதியின் பின்பக்கச் சுவரில் காணப்படும் கொல்லம் ஆண்டு 64 (கி.பி. 1589)-இல் பொறிக்கப்பட்ட கல்வெட்டு நாகராஜாவை திருவனந்தாழ்வார் என்று குறிப்பிடுகிறது. அச்சந்நிதியன் முன்புறச் சுவரில் கொல்லம் ஆண்டு 819 (கி.பி. 1644)-இல் பொறிக்கப்பட்ட கல்வெட்டு மூலவரை ஸ்ரீ கிருஷ்ணன் என்று குறிப்பிடுகின்றது. அதாவது கி.பி. 1522 ஆம் அண்டு வரை நாகராஜா என அழைக்கப்பட்ட மூலவர் கி.பி. 1589-இல் திருவனந்தாழ்வாராகி கி.பி. 1644 ஆம் அண்டு ஸ்ரீ கிருஷ்ணனாகப் பெயர் மாற்றம் பெற்றுள்ளது தெரிய வருகின்றது. இக்கோவிலில் காணக் கிடைக்கும் எந்த கல்வெட்டும் மூலவரை அனந்தகிருஷ்ணன் எனக் குறிப்பிடவில்லை. நாகராஜாவாக இருந்த மூலவர் தற்போது அனந்தகிருஷ்ணன் என்னும் பெயரில் அழைக்கப்படுகிறார்.

கோவிலின் முன்பு வெளித்திருச்சுற்றில் ஐந்து கற்பலகைகளில் காணப்படும் எட்டு கல்வெட்டுகளுள் ஏழு கல்வெட்டுகள் மிகப் பழமையானவை. அவற்றுள் மிகப் பிந்திய காலக்கட்டத்தைச் சார்ந்த கல்வெட்டு கொல்லம் ஆண்டு 820 (கி.பி. 1645)-இல் பொறிக்கப்பட்டதாகும். இக்கல்வெட்டு நாகர்க்கு மகர தோரண விளக்கு ஒன்றை நன்கொடையாக அளித்த செய்தியைத் தருகிறது. பழமையான கல்வெட்டுகள் ஏழிலும் கோட்டாற்று நாகர்க்கும் நாகராசாவுக்கும் என்னும் தொடர் காணப்படுகிறது. இதன் மூலம் நாகர்கோவிலின் பழமையான பெயர் கோட்டாறு என அறியப்படுகிறது.

நாகராஜா கோவிலில் நாகர் (நாகரம்மன்) கருவறையின் மேற்கூரை தென்னை ஓலையால் வேயப்பட்டதாகும். களக்காட்டு மன்னர் உதயமார்த்தாண்டவர்மா இச்சந்நிதியைக் கல் கட்டிடமாக மாற்ற எண்ணியபோது நாகரம்மன் அவர் கனவில் தோன்றி தான் விரும்புவது ஓலைக் கூரைதான் என்றும் எனவே அக்கூரையை மாற்றக் கூடாது என்றும் கூறியதாகக் கூறப்படுகிறது. அக்கூரையில் எப்போதும் ஒரு நாகம் காவல் புரிகிறது என்றும்; வருடந்தோறும் கூரையை மாற்றி புது ஓலை வேயப்படும் போது அங்குப் பாம்பு இருப்பதைக் கண்டுள்ளனர் என்றும் கூறப்படுகின்றது. இக்கருவறையில் நாகத் தெய்வம் மண் தரையில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. அந்தத் தரையில் எப்போதும் நீர் ஊறிக் கொண்டே இருக்கும். அந்தத் தண்ணீர் ஊற்றிலிருந்து எடுக்கப்படும் மண் தான் இக்கோவிலில் பிரசாதமாக வழங்கப்படுகிறது. இம்மண் ஆறுமாதம் கருப்பு நிறமாகவும் ஆறு மாதம் வெள்ளை நிறமாகவும் இருப்பது கண்கூடு. எத்தனையோ காலமாக இங்கிருந்து மண் எடுத்துக் கொண்டே வருகின்றனர். இன்றும் அங்கு மண் எடுத்ததற்கான அடையாளமே இல்லாமல் அவ்விடம் நிறைந்து காணப்படுகிறது. நாகரம்மன் சந்நிதிக்குப் பீடமோ, விமானமோ இல்லை.

கொல்லம் ஆண்டு 697 (கி.பி. 1522) - இல் பொறிக்கப்பட்ட ஒரு கல்வெட்டு. களக்காடான சோழகுலவல்லிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு நாஞ்சில் நாட்டை ஆண்டு வந்த வேணாட்டு மன்னர் பூதல வீர ஸ்ரீ வீர உதயமர்த்தாண்ட வர்மா நாகராஜாவையும் நாகரம்மனையும் வழிபட ஞாயிற்றுக் கிழமை தோறும் வருகை தந்தார் என்ற தகவலைத் தருகிறது. 'கொல்லம் 697-ஆம் ஆண்டு சித்திரை மாதம் அமர பட்சத்து அமாவாசையில் ஞாயிறாட்சையும் பெற்ற அஸ்வதி நாள் களக்காடான சோழகுலவல்லிபுரத்து வீர மார்த்தாண்ட சதுர்வேதி மங்கலம் என்று நம் பேரால் வைத்த அரசு சீமையின் புதியவீட்டில் நாம் வீடயிருக்கக் கற்பித்தமைக்கு தாங்களும் இந்நாள் முதல் இத்தரவு பிடிப்பாகக் கையாண்டு கொள்ளும் படியும்' என்பது அக் கல்வெட்டு. இந்த அடிப்படையிலேயே அன்று முதல் இன்று வரை ஞாயிற்றுக் கிழமை இவ்வாலயத்தில் மிகவும் சிறப்பாகக் கொள்ளப்படுகிறது. மேலும் கேரளத்து

மக்களின் புத்தாண்டு ஆவணி மாதத்தில் தொடங்குவதால் ஆவணி மாத ஞாயிற்றுக் கிழமை இவ்வாலயத்தில் மிகவும் சிறப்பாக கொள்ளப் படுகிறது. மேலும் கேரளத்து மக்களின் புத்தாண்டு ஆவணி மாதத்தில் தொடங்குவதால் ஆவணி மாத ஞாயிற்றுக் கிழமைகள் மிகச் சிறப்பானவையாகக் கொள்ளப்படுகின்றன. இக்கோவிலில் ஆவணி மாதம் இறுதி ஞாயிற்றுக் கிழமைகளில் ஏற்றப்பட்டும் திருவிளக்கு அலங்காரம் கொங்கு நாட்டு விளக்கு என்று அழைக்கப்படுகிறது. கி.பி. 7,8 ஆம் நூற்றாண்டுகளில் நாஞ்சில் நாட்டிற்கும் கொங்கு நாட்டிற்குமிடையே இந்த நெருங்கிய தொடர்பை இது வலியுறுத்துகிறது. நாக வழிபாட்டில் ஈடுபாடு கொண்ட கொங்கு நாட்டு மக்கள் கி.பி. 7,8 ஆம் நூற்றாண்டுகளில் நாகர்கோவில் நாகராஜா கோவிலுக்க வந்து ஆவணி மாதக் கடைசி ஞாயிற்றுக் கிழமை திருவிளக்கு அலங்காரம் செய்து நாகராஜாவை வழிபட்டதால் அந்த விளக்கு கொங்கு நாட்டு விளக்கு எனப் பெயர் பெற்றது.

சமணப் பள்ளியாக இருந்த தற்போதைய நாகராஜா கோவில் கி.பி. 17 ஆம் நூற்றாண்டில் புதுப்பிக்கப்பட்ட போது அக்கோவிலோடு இந்துக்களும் இணைந்துள்ளனர். கோவில் மண்டபத்தில் சமண மதச் சறிப்ங்களான பார்சுவநாதர், மகாவீரர், பத்மாவதி, அம்பிகாவதி, நேமிநாதர் ஆகியவற்றுடன் முருகன், விநாயகன், விஷ்ணு, சிவன் சிலைகளும் காணப்படுகின்றன. 19 - ஆம் நூற்றாண்டில் முழுமையாக இந்துக்களுக்குச் சொந்தமான போது சாஸ்தா, இடும்பன், துர்க்கை, கிருஷ்ணன், நாகமணிபூதத்தான், விநாயகன் ஆகியோருக்குச் சந்நிதிகள் கட்டப்பட்டுள்ளன.

பழங்காலத்திலிருந்தே இயங்கி வந்த ஒரு சமணப்பள்ளி எவ்வாறு சைவம் வைணவம் இணைந்த ஒரு இந்துக் கோவிலாக மாற்றப்பட்டது என்பதற்கு நாகராஜா கோவில் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு ஆகும். தற்போது அக்கோவில் இந்துக் கோவிலாக இருந்தாலும் அக்கோவிலின் பெயர் சமணப்பள்ளியையே சுட்டி நிற்கிறது.

# நாட்டுப்புற இலக்கியத்தில் அகமரபுகள்

திருமதி இரா. பிரியதர்சினி, எம்.ஏ.,எம்.ஃ.பில்,,பி.எச்.டி.,
தமிழ்த்துறை விரிவுரையாளர்
பாத்தியா கல்லூரி (தன்னாட்சி),
மதுரை - 625 018.

முன்னுரை

தமிழர்கள் தங்கள் வாழ்வை அகம், புறம் என்று பிரித்துக்கொண்டனர். அவர்களுடைய இலக்கியங்களும் இத்தகையப் பிரிவுக்குள் அடங்குகின்றன. சங்க இலக்கியம் அகம், புறம் எனப்பகுக்கப்பட்டுள்ளது. அகமானது களவு, கற்பு என மேலும் இருவகையாப் பிரிக்கப்படுகின்றது. இதில் தலைமக்கள் சந்திப்பு, சந்திப்பதில் உள்ள இடர்ப்பாடுகள், உடன்போக்கு, இற்செறிப்பு, அலர் போன்றவையெல்லாம் களவிற்கு உரியன. சங்க இலக்கியங்களில் உள்ள காலதல் பாடல்களுக்கும், நாட்டுப்புற இலக்கியங்களில் உள்ள காதல் பாடல்களுக்கும், சில வேறுபாடுகள் உள்ளன. எனினும் சங்க இலக்கிய அகமரபின் தன்மை நாட்டுப்புற இலக்கியங்களிலும் பொதிந்துள்ளன. அவற்றைக் காணும் நோக்கில் இக்கட்டுரை அமைக்கப்படுகின்றது.

1. சந்திப்பில் உள்ள இடர்ப்பாடுகள்

காதலுக்கு உயிர் துச்சம், எத்துணை இடர்பாடுகள் இடைப்பட்ட போதும் உள்ளம் தளராது காதலன் காதலியைச் சந்திக்கச் செல்வான் வழியிடையில் உயிர்க்கு ஏற்படும் தீங்கினை ஒரு பொருட்டாக மதிப்பதில்லை, மழையோ, மையிருட்டோ, அரவமோ, அடுபுலியோ, பெருவெள்ளமோ, முதலையோ, எதுவாயினும் காதலியைக் காணும் கருத்து ஒன்றையே நெஞ்சில் ஏந்தித் தலைவன் வருவான். இடர்பாடுகளைக் கடந்து காதலியை காதலன் காண்பது தனி இன்பம் உடையது. குறிஞ்சித் திணையில் தலைவன் தலைவியர் சந்திப்பினைச் சுவைபடச் சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர். காதல்கள் இரவில் தனி இடத்தில் சந்தித்து அளவளாவப் பல தடைகள் ஏற்படுவது உண்டு. அகத்துறைப் பாடல்களிலும் இலக்கண நூல்களிலும் தடைகள் விவரிக்கப்பட்டுள்ளன. அகப்பொருள் விளக்க ஆசிரியர்,

“தாயும் நாயும் ஊரும் துஞ்சாமை
வருந்தொழிற்கு அருமை பொருந்துதல் உரிய”

எனக் கூறுவார். இவற்றுள் சிலவற்றிற்கு நாட்டுப்புறப்பாடல்கள் சான்றாக அமைகின்றன.

“வெள்ளை வெள்ளை நிலாவே - சாமி
வெளிச்சமாக பால்நிலாவே
கள்ள நிலாவேநீ - சாமி
கருக்கல் இட்டால் ஆகாதோ”

நிலா பால்போல்பொழிவதால், காதலன் வருகையைப் பிறர் அறியக் கூடும். எனவேளு நிலா கருக்கல் இடல் வேண்டுமெனக் காதலி வேண்டுகிறாள்.

2. இற்செறிப்பு

காதலர்கள் நாளும் நாளும் சந்தித்து மகிழ்வதை வீட்டார் அறிந்து விடுகின்றனர். காதலர் சந்திப்புக்குத் தடை விதிக்கின்றனர். காதலி வீட்டில் அடைக்கப்படுகிறாள். அவள் இயக்கம் கண்காணிக்கப்படுகிறது. வாழ்க்கை துன்பமாகிறது.

"பச்சைப் பரங்கிக் காயாம் - யம்மா
பாழா நல்ல கெடுத்தீங்களே"

3. கோழி குரல்காட்டுதல்

ஒரு பெண் தன் காதலரைனச் சந்திக்கத் தன்னைச் சீவிச்சிங்காரித்துக் கொள்கிறாள். அவள் சொன்ன அடையாளங்களின் படி அவன் வீட்டை அடைகிறான். இருவரும் சந்தித்து இரவு எல்லாம் பேசிக் களிக்கின்றனர். விடியற்காலை சேவல் குரலெடுத்து அனைவரையும் எழுப்பிவிடுகிறது. தன் காதல் சந்திப்பிற்கு இடையூறாக அமைந்த அந்தச் சேவலைக் கோவிலுக்குப் பலிகொடுத்து விடுவதாகக் கூறினாள். அதற்குச் சேவல் அவளுக்கபாகத் தான் கூவவில்லை என்றும் உலகுக்கபாகக் கூவியதாகவும் கூறிற்று.

"சீவிச் சிக்கெடுத்தனள்சிமுறுபோலக் கொண்டை இட்டாள்
வாரிமயிர் முடிஞ்சாள் வலதுபுறம் கொண்டை போட்டாள்
------------------------------------------------------------
ஆணும் பெண்ணும் சேரும்போது அலங்கரிச்சுக் கூவுதுங்க
ஒரு சிறியசெடி நாட்டி ஒருகல்லை தெய்வ நாட்டி
ஒரு குடுவைப் பொங்கலிட்டு சாவலைத்தான் அறுதிடலாம்
------------------------------------------------------------

4. ஊரார் பேச்சு

களவு கற்பு ஆவதற்கு ஊராரே காரணம். ஊராரின் பேச்சுக் காதலர் சந்திப்பிற்கு இடையூறு ஆகிறது. காதலியின் பெற்றோர் எச்சரிக்கை கொள்கின்றனர். காதலி ஒருத்தி தன் காதலனைச் சந்திக்க ஊரார் குறுக்கே நிற்பதைக் கண்டிக்கிறாள்.

"ஆல மரம் உறங்க
உலகம் பொருக்கலையே?"

5. உடன்போக்கு

ஊரரின் ஏசசுக்கும் பேச்சுக்கும் ஆளாகாமல் தப்பிக்க வழி என்ன என்று இளம் காதல் உள்ளங்கள் சிந்திக்கின்றன. பெற்றோரும் மற்றோரும் அறியாமல் ஊரைவிட்டே ஓடி விட்டால் அவர்களின் தொல்லையினின்றும் விடுபடலாம் காதல் இன்பத்தைத் தடையின்றித் துய்க்கலாம்.

சந்தைக்குச் சென்று சட்டிபானை வாங்குவதாகப் பாவித்து ஊரை விட்டு ஓடிவிடலாம் என்பது அவர்கள் திட்டம்.

"சந்தைக்குப் போவமடி
தப்பிடுவோம் ரெண்டு பேரும்"
"நீ கருப்பு நான் சிவப்பு
ஓடிடுவோம் ரெண்டு பேரும்"

6. சந்திக்கக் குறிகளை வைத்துக்கொள்ளுதல்

"சாமம் அறிஞ்சு
தலைவாசலிலே வந்து நின்று
விறசிடுகா நான் வருவேன்"

கோழிபோலக் கூவும் குரலிலும், மாட்டை விரட்டும் குரலிலும் தன் காதலனை அடையாளம் கண்டிடுவாள் அவள்.

7. குறியிடம் கூறல்

காதலுனுக்குக் காதலி தன்னைச் சந்திக்க காலமும் இடமும் கணித்துத் தருகிறாள்.

"வாய்பாவும் வயலில்தான் உம்மாவும் ஊர்ல இல்ல
(அப்பா) (அம்மா)
காக்கவும் கறையில்தான் கருக்கலோட வாங்க மச்சான்
(அண்ணன்)
முற்றத்திலே மாதாளை முன்னலே தென்னைமரம்
வேலிக்குள்ளே வேப்பமரம் விருப்பமெண்டால் வாகிளியார்
----------------------------------------------------------------
விளக்கேத்தி இருசாமம் வெள்ளி நிலா வேளையில்
குளத்தோரம் வந்திடுங்கோ கூடிக் கதைச்சிடலாம்"

ஏட்டிலிக்கயித்தில் குறியிடம் அமைத்துத் தருவது தோழியின் பணி. நாட்டுப்புற இலக்கியத்தில் தோழி என்ற பாத்திரம் இல்லை. காதலன் காதலி ஆகியோர் நேராகக் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்கின்றனர்.

முடிவுரை

உலக உயிர்கள் அனைத்திற்கும் பொதுவான காதல் உலக இயக்கத்திற்கும், நாகரிகம், பண்பாடு ஆகியவற்றின் சிறப்பிற்கும் உயர்விற்கும் அடிப்படையானது. காதல் பற்றிய பாடல்கள் ஏட்டிலக்கியத்தில் உள்ளது போலவே நாட்டுப்புற இலக்கியத்திலும் காணப்படுகின்றன என்பதையும் சங்கஇலக்கிய அகமரபுகள் போல நாட்டுப்புற இலக்கியத்திலும் அகமரபுகள் காணப்படுகின்றன என்பதையும் இக்கட்டுரையால் நன்கு அறியலாம்.

# பாரதியும் தேசியமும்

**முனைவர் கோ. கிருஷ்ணன்**
முதுநிலை விரிவுரையாளர்
தமிழ்த்துறை, மாநிலக் கல்லூரி,
சென்னை - 600 005.

இந்திய தேசம் ஏறக்குறை ஒன்றரை நூற்றாண்டு காலம் ஆங்கில ஏகாதிபத்தியத்திற்கு அடிமைப்பட்டிருந்தது. அந்நியர் ஆதிக்கத்தின் விளைவாய், அடிமைத்தனமான இருள் மக்கள் மனதில் ஆழமாகப் பதிந்துவிட்டது. அடிமைத்தனமும் ஆங்கிலத் திணிப்பும் வேகமாகப் பரவ, மொழி, இலக்கியம், கலை, சமூகம், பண்பாடு ஆகிய தளங்களில் ஏற்றம் குறைந்துவிட்டது. இதற்குக் காரணமாக அமைந்த பொதுப்பகைவனான ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போராடத் தலைவர்களும் கவிஞர்களும் போராட்ட களத்தில் இறங்கினர்.

தமிழகத்தில் நாடும் மொழியும் நமது இரு கண்கள் என்னும் உன்னத நிலையில் தமிழைத் தேசியத்தோடும், தேசியத்தைத் தமிழோடும் இணைத்துப் பார்த்துத் தம்மடைய எழுத்தாயுதங்களால் விடுதலை வேட்கையைத் தமிழ்க் கவிஞர்கள், மக்கள் மனங்களில் விதைத்தனர்.

மன்னர்களையும், மதங்களையும், மதக்கடவுள்களையும் மட்டுமே புகழ்ந்து பாடி வந்த தமிழகத்தில் தேசத்தையும், தேசிய இனங்களையும் பற்றிப் பாடவேண்டிய கவிஞர் பாரம்பரியம் தோன்றலாயிற்று.

1806-இல் வேலூர் சிப்பாய் புரட்சி முடிந்து 1906-இல் தூத்துக்குடி சுதேசியக் கிளர்ச்சி தோன்றிய காலக் கட்டத்தை இந்திய தேசிய ஒருமைப்பாடு மலர்ந்த காலம் எனலாம். அந்தக் காலக்கட்டத்தில் தான் தமிழ் உள்ளிட்ட பிரதேச மொழிகள் ஒவ்வொன்றும் மறுமலர்ச்சி அடைந்த காலம்ளூ விடுதலைப் புரட்சி நாட்டில் வேகமாகப் பரவியது. புதிய புதிய பத்திரிக்கைகளும், புதிய சிந்தனைகளும் முகிழ்த்தன. இதன் விளைவாக இந்தியாவின் அடிமைத்தனமானது, தமிழ்மொழியின் அடிமைத்தனமாகவும் விளங்குவதைக் கண்ட தமிழ்ப் பாவலர்கள் தேசபக்தியைப் பயன்படுத்தித் தேசபக்தியை வளர்க்கும்படிக் கவிதைகளைப் படைத்தளித்தனர். அப்படி வளர்த்தவர்களுள் மகாகவி பாரதி மிகவும் போற்றத்தக்கவர்.

சமூகத்தைப் பாடுபொருளாக்கிக் காட்டிய பாரதியிடம், பிரதேச ரீதியிலான தமிழ்ப் பண்பாட்டு உணர்வும், தேசிய ரீதியிலான இந்தியப் பண்பாட்டு உணர்வும் ஒருங்கே இருந்தன.

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற உயர்ந்த சித்தாந்தத்தையும், "யாதும் ஊரேளூ யாவரும் கேளிர்" என்ற சங்க கால ஒருமைப்பாட்டையும்ளூ "ஒன்று பரம்பொருள் நாமதன் மக்கள்" என்றுெ சங்க நாதமிட்டுத் தம்முடைய சொற்சாட்டைகளால் பிரிட்டி' பேரரசை சுழற்றியடித்தவர் பாரதியார்.

1905 முதல் பாரதியிடம் தேசிய விடுதலை உணர்வு வளரத் தொடங்கியமையால் சமயம், சாதிய ஆதிக்கம் காரணமாகச் சமூகம் உருவாக்கி வைத்திருந்த பல புனித மதிப்பீடுகளை மறுதலித்து அவற்றுக்கெதிரான மாற்று மதிப்பீடுகளை உருவாக்கினார் பாரதி. அதனைத் தாய்மொழி மூலமாகவே நிரூபித்துக் காட்டினார்.

தமிழ்ப்பற்று

மொழி தான் முகம்-முகவரி. மொழியை இழந்தால் எல்லாவற்றையும் நாம் இழப்போம் என்ற சிந்தனையுள்ள பாரதி, பண்டிதர்களிடம் சிக்கிக் கிடந்த தமிடைப் பாமரர் மொழியாக்கி, மன்னர்களிடத்தும், மடங்களிடத்தும் அடங்கிக் கிடந்த தமிழை மக்கள் மன்றங்களுக்கும் அழைத்து வந்தார். சமஸ்தானங்களிலும், சன்னிதானங்களிலும் பூசிக்கப்பட்டிருந்த தமிழை ஏழைக் குடிசைகளுக்குள் இறக்குமதி செய்தார் பாரதி.

"வாழிய செந்தமிழ்
வாழ்க நற்றமிழர்
வாழ்க பாரதமணித் திருநாடு"

என்று, மொழி வாழ்ந்தால் மொழியைப் பேசுபவர் வாழ்வர், மொழியைப் பேசும் தமிழர் வாழ்ந்தால் பாரத நாடும் செழிக்கும் என்று, தாய்மொழிப் பற்றும், தாய்நாட்டுப் பற்றும் இணைந்து செயல்படும்படித் தேசியத்தை வளர்த்தவர் பாரதி.

ஆங்கிலம், வடடிமாழி, பிரெஞ்சு, வங்கமொழி, இந்துஸ்தானி ஆகிய மொழிகளைத் தெரிந்து வைத்திருந்த பாரதி. ஆனாலும் "யாமறிந்த மொழிகளிலேஜு தமிழ்மொழிபோல், இனிதாவதெங்கும் காணோம்" என்றுதான் முழங்குகிறார், பிறிதொரு இடத்தில், "சொந்த பாஎ'யைக் கொள்ளாதவர்கள் குரங்குகளாக ஆகிவிடுவார்கள் எனச் சாபமே இடுகிறார்.

தேசிய இயக்கம் பெருமளவிற்கு வெற்றி கண்டதற்குப் பாரதியின் பாடல்கள் வழிவகுத்தளித்தன.

"பிறநாடட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்"

எனப் பாடிய பாரதியின் மொழிப்பற்று, பழமைவாதத்துக்கு இட்டுச் செல்லாதவாறு நவீனத்துக்கு வித்திட்டதாகக் காணமுடிகிறது.

தேசத்தையும் தெய்வத்தையும் விடத் தமிழ்கள் தங்களது தாய்மொழியாம் தமிழையே அதிகம் நேசிப்பவர்கள் என்று நினைத்த பாரதி, 1912-இல் எளிமையை ஒரு போட்பாடாக்கிக் கொண்டு, பாஞ்சாலி சபதத்தைப் படைத்தார். செய்யுள் வடிவங்களில் பல காப்பியங்களைக் கண்ட தமிழர்களுக்கு இந்தப் புதிய வடிவம் பெருத்த வரவேற்பைப் பெற்றது.

"தமிழை விட இன்னொரு பாஎ'சுகமாக இருப்பதைப் பார்க்கும்போது எனக்கு வருத்தமுண்டாகிறது" என்று குறிப்பிடுகிறார்.

1914ஆம் அண்டு வரையிலும் தேசத்தையும் தெய்வத்தையும் பற்றியே பாடி வந்த பாரதியார் 1914-க்குப் பிறகு தமிழ்மொழியையும், தமிடரையும், தமிழ்நாட்டினரையும் பற்றியே சிந்தித்து, தேசியத்தை மொழி மூலமாகவே காட்டியவர் பாரதியார்.

"தமிழ், தமிழர், தமிழ்நாடு" பற்றி ஆறே பாடல்கள் பாடினாலும், தமிழ்மணத்தோடும், தமிழன் என்ற உணர்வோடும் தமிழ் மண்ணோடும் கலவாத "தேசியம்" வளராது என்பதில் பாரதி உறுதியா நின்றவர்.

"தமிழை ஆதிசிவன் பெற்ற மொழி" என்றும்
"தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேபண்டும்" என்றும்
"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே"

என்றும், தமிழ்பேசும் மக்களைத் ஷதமிழ் சாதி' என்றும் அழைக்கிறார் பாரதி.

தமிழால் எல்லாம் முடியும் என்பதை உணர்ந்திருந்த பாரதி, ஆங்கில, ஆரிய ஆதிக்கத்திலிருந்து தமிழைக் காக்க, தேசியப் பாடலைத் தமிழ்கள் பாடிப்பாடி மகிழத் தமிழ்மொழியில் பெயர்த்தளித்தார். தமிழ்நாட்டில் உண்மையான கல்வி பரவ வேண்டுமானால் சகல சாஸ்திரங்களையும் தமிழ்மொழியிலேயே கற்றுக் கொடுக்க வேண்டும் என்று 1906-இல் பேசியவர் பாரதி.

"வானம் அளந்ததனைத்தும் வளர்ந்திடும் வண்மொழி" என்று பாரதி மொழியைச் சிறப்பிக்கிறார்.

"வந்தே மாதரம் என்போம் - எங்கள்
மாநிலத் தாயை வணங்குதும் என்போம்" என்று

தேசியநெறியோடு எதிர்கொள்ளும் வேறு நெறி எதனையும் ஏற்காத பாரதி, தமிழ்ப்பற்றினால் தேசப் பக்திக்கு அழிவு ஏற்படாது என்று உணர்ந்து,

"தமிழ்ப் பண்டிதர்களே! தமிழ் மகா ஜனங்களே! ஜாக்கிரதை�ளூ ஜாக்கிரதை! உங்களுடைய பாஷ'யைக் காப்பாற்றுங்கள். தமிழ்ப் பாஷ'யழிந்துவிட்டால்�ளூ தமிழர்களின் சிறப்பும் சீரும் அழிந்துவிடும்" என்றும், "உங்கள் நா தமிழே பேசுக, நீங்கள் கையிலேந்தும் இறகு தமிழே எழுதுக" என்றும் தனது பத்திரிக்கையில் எழுதினார் பாரதியார்.

தமிழர் பற்று

தான் வாழ்ந்த காலத்திய மக்களின் மனநிலையைப் பதிவு செய்து, அதற்கேற்ப வாழ்ந்தவராகவும், தம் வாழ்க்கையின் கணங்களாலேயே கருப்பொருளாக்கிக் கொண்டு தேசிய நீரோட்டத்தில் சஞ்சரித்தவராகப் பாரதியார் காணப்படுகிறார்.

"தமிழனைவிட மற்றொரு ஜாதியான் அறிவிலும் வலிமையிலும் உயர்ந்திருப்பது சாஸ்திரங்களை எல்லாம் தமிழில் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்" என்று தமிழருக்குக் கட்டளையிடுகிறார்.

"ஆப்பிரிக்கத்துக் காப்பிரி நாட்டிலும்
தென்முனையெடுத்த தீவுகள் பலவினும்
பூமிப்பந்தின் கீழ்புறத்துள்ள
பற்பல தீவினும் பரவியவ் வெளியயே
தமிழச் சாதி தடியுதை உண்டும்
வருந்திடும் செய்தியும் மாந்திடும் செய்தியும்"

எனும் பாடலில், தமிழ்கள் அந்தக் காலத்தில் வெளிநாட்டு மலைத் தோட்டங்களிலும், முதலாளித்துவ பண்ணை வீடுகளிலும், கொத்தடிமைகளாகச் சென்று குற்றுயிராகத் துடித்த சோக நிகழ்ச்சியினைக் கையறு நிலைப் பாடலாகவே பாரதியார் பாடியுள்ளார்.

"விதியே தமிழ்ச்சாதியை - எவ்வகை
விதித்தாய் என்பதன் மெய்யெனக் குணர்த்துவாய்"

என்று மனம் நொந்து கொண்ட பாரதியார்,

"தேசிய எழுச்சித் தளங்களில் தமிழர்கள் பிற மாநிலத்தவைரவிடக் குறைந்தவர்கள் அல்லர்" என்பதை உணர்த்த விரும்பிய பாரதியார், இந்தக் குறை அகலாவிடில் தமிழர்களே! சர்வ நாசமடைந்து போவீர்கள் என்று எச்சரிக்கிறார்.

பாரதம் முழுவதும் வாழும் மக்களை ஒரே சமுதாயத்தினராகக் கருதினாலும், தமிழர் தனித் தேசிய இனத்தவர் என்று கூறுகிறார். "தமிழ்ச் சாதி" என்னும் பெயராலேயே அவர்களை அழைக்கவும் செய்கிறார்.

நாட்டுப்பற்று

தாய்மொழிப் பற்றும் தாய்நாட்டுப் பற்றும் இணைந்து செயல்படுமபடித் தேசியத்தை வளர்த்தவர் பாரதியார். வரலாற்றில் 1906 முதல் 1920 வரையுள்ள கால கட்டத்தைத் "திலகர் சகாபத்தம்" என்பார்கள். இந்தக் காலகட்டத்தில் தான் விடுதலைப் புரட்சி வேகமாகப் பரவியது. பாரதியும் இணைப் பயன்படுத்தத் தொடங்கினார். பல பாடல்களைப் புனைந்தார்.

"ஸ்வேத கீதங்கள்" எனும் பெயரில் 1908-இல் வெளியிட்டார். வந்தே மாதரம், நாட்டு வணக்கம், எங்கள் நாடு, நடிப்புச் சகோதரிகள், சுதந்திரப் பெருமை என்றடங்கிய பல பாடல்களில் தேசத்தைப் பற்றியும் தேச விடுதலைக் கோருவதைப் பற்றியும் இயல்புடையது என்று எழுதினாால்.

" . . . . இந்த
வையத்து நாட்டிலெல்லாம்
தாழ்வற்று வறுமை மிஞ்சி
விடுதலை தவறிக் கட்டு
பாழ்பாட்டு நின்ற தாமோர்
பாரத தேசம் . . . என்று பாடினார்.

நாட்டைப் பற்றிப் பாடியபோது, "மண்ணும் இமயமலையும், பள்ளரும் உபநிடத நூலையும் சிங்க மராட்டியரையும் கேரளத்துக் கன்னியரையும் சேர்ந்து இந்தியத் திருநாடாகக் காணும் கேசியக் கவிஞர்களாகவே பாரதியார் காணப்படுகின்றார்.

"காக்கை குருவி எங்கள் ஜாதி"
"செப்புமொழி பதினெட்டுடையாள்
எனினும் சிந்தை ஒன்ளுடையாள்"
"வெள்ளிப் பனிமலை மீதுலாவுவோம்
மேலைக் கடல் முழுவதும் கப்பல் விடுவோம்".
"வங்கத்தில் ஓடிவரும் நீரின் மீசையால்
மையத்து நாடுகளில் பயிர் செய்குவோம்.

என்று தேசிய நீரோட்டத்தில் தம்மை இணைத்துக் கொண்டு பாடியதாகவே அதிகமான பாடல்கள் புனைந்துள்ளனர்.

இவ்வாறு, பாரதியார் தேசியத்தோடு தமிழ்மொழியையும், தமிழ்மொழியோடு தேசியத்தையும் கலந்து கொடுத்துத் தேசியக் கவிஞராக, தமிழயக் கவிஞராக, தெய்வீகக் கவிஞனாகத் திகழ்ந்தார்.

தமிழால் தேசியம் தழைத்ததுளு தேசியத்தால் தமிழ் செழித்தது. பாரதியால் நாடும் மொழியும் வளம் பெற்றது. மானுடம் பரந்த எழுச்சியைக் கண்டது.

# சௌராஷ்டிரா மக்களின் வாழ்க்கை முறை

பி.வி. சப்தரி
ஆய்வியல் நிறைஞர்,
நாட்டுப்புறவியல் துறை,
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 010.

இந்திய மக்களில் சௌராஷ்டிரா இனம் ஒற்றுமையின் சின்னமாக விளங்கி வருகின்றது. சௌராஷ்டிரா மக்களின் வாழ்க்கை முறை எனும் இவ்வியல் அம்மக்களின் தொழில், குடும்பம், உறவுமுறைகள், பெண்கள் நிலை, குழந்தை வளர்ப்பு, தாய் தந்தையர் நிலை இவற்றை விளக்கிச் செல்கிறது.

சௌராஷ்டிரர்களின் தொழில்

"மக்கள் நாகரிகம் பெற்றவுடன் ஏற்றுச் செய்த முதல் கைத்தொழில் நெசவுத்தொழில் ஆகும். வரலாற்றுப் பேராசிரியர்கள் நெசவுத் தொழில் தொன்மையானது என்பதை மொகஞ்சதாரோவில் கண்டெடுக்கப்பட்ட பொருள்களில் உள்ள நெசவுக் கதிர்கள் விளக்கியுள்ளன என்றும் அவை பளிங்கினாலும், சங்கினாலும், களிமண்ணாலும் ஆக்கப்பட்டிருக்கின்றன" என்று குறிப்பிடுகின்றனர்.

"பட்டு நெசவினை வாழ்வின் ஆதாரமாகக் கொண்ட இனம் தமிழகத்தில் பல உண்டு. சௌராஷ்டிரர், சேணியர், கைக்கோளர், தேவாங்கர், செங்குந்தர், பத்மசாலியர், சேடர் என்பார் குறிப்பிட்டு விளங்கும் பட்டு நெசவு இனத்தவராவர்" இவற்றுள்ளும் சிறப்பாகக் குறிக்கத்தக்கவர்கள் சௌராஷ்டிரர்களே என்பது போற்றுதற்குரியது. "சௌராஷ்டிரர்களை மட்டுமே "பட்டு நூலார்" என உலகு சிறப்பித்துக் கூறுகின்றது".

தஞ்சை மானப்புச்சாவடியில் பெரும்பாலான சௌராஷ்டிரா மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் பெரும்பாலும் நெசவுத் தொழிலும், பட்டு ஜவுளி வியாபாரம் செய்தும் வாழ்ந்து வருகின்றனர். சாயமேற்றும் தொழிலும் நடைபெறுகின்றது.

சிலர் முதலாளிகள் மூலமாக பட்டுநூல், ஜரிகை இவற்றை வாங்கி அவர்கள் விரும்பிய வண்ணம் பட்டுப்புடவையை நெய்து கொடுத்து கூலியை மட்டும் பெறுகின்றனர். சிலர் தம்மிடமுள்ள தொகையை வைத்து சொந்தமாக தறி அமைத்து புடவையினை உற்பத்தி செய்து கடைகளில் நேரடியாக கொண்டு சேர்க்கின்றனர்.

இன்றைய தலைமுறையினர் படித்து நல்ல பணிகளுக்கு செல்கின்றனர். பெரும்பாலான இளைஞர்கள் நெசவுத் தொழிலை விட பிற பணியில் அமரவே விரும்புகின்றனர். கூலித்தறி நெய்யும் நெசவாளிகள் தமது கூலி உயர்வுக்காக போராட்டங்கள் நடத்தி தமக்குரிய சலகையை பெறுகின்றனர்.

தொழிலாளர்கள் சங்கம், உற்பத்தியாளர் சங்கம் என்ற சங்கங்களை அமைத்துள்ளனர். தொழிலாளர்கள் அனைவரும் தொழிலாளர்கள் சங்கத்தில் இடம்பெறுவர். தமது முறையை உற்பத்தியாளர் சங்கத்தில் தெரிவிப்பர். கூலி உயர்வுக்காக இச்சங்கத்தில் முதலில் மனு கொடுத்து பின்பு இச்சங்கங்களின் வாயிலாக முடிவெடுப்பர்.

இவையல்லாமல் "சௌராஷ்டிரா சபை" என்ற ஒன்றும் செயல்பட்டு வருகிறது. தஞ்சையில் சௌராஷ்டிரா மக்களால் அமைக்கப்பட்ட கிருஷ்ணன் கோவில் இச்சபையில் பராமரிப்பில் உள்ளது. சௌராஷ்டிரா மக்கள் தம் குறையினை இச்சபையில்

அறிவிக்கலாம்.

60 மூ க்குக் குறையாமல் மக்கள் கைத்தறி நெசவுத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். வசதிக்குறைவான வீடுகளில் மனைவி, மக்களுடன் நெசவுத் தொழிலைச் செய்து வருகின்றனர். நூல் சுற்றுவோர், பாவோட்டுவோர் பெரும்பாலும் பெண்களாகவே இருக்கின்றனர்.

கூட்டுறவுக் கழகம் மூலம் பாவுகளை வாங்க பெரிய வண்ண வேலைப்பாட்டில் நெய்கின்றனர். இக்கூட்டுறவுக் கழகம் நெசவாளர் கூலியில் சிறுக சிறுகப் பிடித்தம் செய்து அவர்கள் குடும்ப தேவைகளுக்கு அல்லது, தீபாவளி, பொங்கல் பண்டிகைகளை காலங்களில் அல்லது வீட்டில் திருமணம் போன்ற நல்விழாக்களுக்கு அவர்களுக்கு உதவும் வகையில் பிடித்து வைத்துள்ள தொகையை அவர்களுக்குக் கொடுத்து உதவுகின்றனர்.

இவையல்லாது ஊக்கத் தொகை போன்றவைகளும் இப்பண்டிகை காலங்களில் வழங்குகின்றனர்.

குடும்பம்

சென்ற தலைமுறை வரை கூட்டுக் குடும்பமாக இருந்தே வந்த இச்சமூகத்தில், படித்த இளைஞர்களும், நெசவு தொழில் செய்து வாழும் இளைஞர்களும் தம் திருமணதிற்குப் பிறகு தனிக்குடும்பம் செல்வதையே விரும்புகின்றனர்.

தாய், தந்தையருக்கு ஒரே மகனாக இருப்பின் அவர்கள் பெரும்பாலும் தனிக்குடித்தனம் செல்வதில்லை. ஒன்றுக்கு மேற்பட்ட மகன்கள் இருப்பின் ஒரு மாதம் ஒருவர் வீட்டிலும், மற்றொரு மாதம் மற்றொரு மகன் வீட்டிலும் இருப்பர்.

உறவு முறைகள்

செளராஷ்டிரா சமூகத்தை சார்ந்த ஒருவர் மற்றொரு செளராஷ்டிரா நபரை சந்திக்கும் போது முதலில் "நீங்கள் எந்த வீட்டைச் சேர்ந்தவர்கள்" என்று கேட்பார். அதன் மூலம் எளிதில் உறவுமுறையே புலப்படுத்திக் கொள்வர்.

ஒரே பட்டப்பெயரைச் சார்ந்தவர்கள் குறிப்பிட்ட தலைமுறைக்குப் பின் அவர்களின் உறவுமுறையை விளக்க இப்பட்டப்பெயர்கள் உதவிபுரிகின்றன.

இப்பட்டப் பெயர்களை வைத்துக் கொண்டு தமக்குள் அண்ணன், தம்பி, மாமன், மாப்பிள்ளை என்று உறவுமுறையைக் கூறி அழைப்பர்.

செளராஷ்டிரா மக்கள் குறிப்பாக தஞ்சை வாழ் செளராஷ்டிரா மக்கள் உறவு முறைக்குள் திருமணம் செய்வதில்லை. அத்தை மகள், மாமன் மகள் இவர்களை அண்ணன், தங்கை என்ற முறையில் பழகவிடுகின்றனர். நூறு பேருக்கு ஒருவரே அரிதாக எவரேனும் ஒருவரே உறவு முறைக்குள் திருமணம் செய்கின்றனர்.

பெண்கள் நிலை

இச்சமூக பெண்கள் மாறிவரும் சமூகத்திற்கு ஏற்ப முன்னேறி வருகின்றனர்

கல்வி

இச்சமூகத்தில் உயர்மட்டத்தில், பொருளாதாரத்தில் உயர்ந்தவர்கள் தம் பெண்களை படிக்க வைக்க எண்ணுகின்றனர். நடுத்தர குடும்பத்தை சார்ந்தவர்கள் ஓரளவு படித்தால் போதும் என்றும், மிகவும் வறுமை நிலையில் உள்ளவர்கள் எழுத, படிக்க தெரிந்தால் போதும் என்ற நிலையில் உள்ளனர். இவர்கள் ஐந்தாம் வகுப்பு அல்லது ஆறாம் வகுப்பு வரை மட்டுமே கற்க அனுமதிக்கின்றனர்.

திருமணம்

உறவுமுறைகளில் இவர்கள் திருமணம் செய்வதில்லை என்றாலும், "தேஸ்" என்ற பெயரில் மாப்பிள்ளை வீட்டார் பெண்ணுக்கு நகை அணிவித்து திருமணம் செய்து கொள்வார்.

இன்று வரதட்சணையால் என்ற பெயரில் பெண் வீட்டாரிடமிருந்து நகையும், விசேஷநாட்களில் பலகாரமும் செய்து தருகின்றனர்.

பெண்ணை சிறப்பிக்கும் வகையில் திருமணம் முடிந்த பின்னர் பெண்ணுடன் மாப்பிள்ளையையும் விருந்துக்கு அழைப்பர்.

இச்சௌராஷ்டிரா மக்களால் அமைக்கப்பட்ட திருமண மண்டபத்தில் பிற சமூகத்தினர் திருமணம் செய்ய அனுமதிப்பதில்லை.

திருமணத்தில் முதல் மொய் மூத்த மாப்பிள்ளையுடையது. இது பெண்ணுக்கு சிறப்பு சேர்க்கும் வகையில் அமைகிறது. வீட்டின் மூத்த மருமகன் கைலாகு கொடுத்து மணமகனை வரவேற்கும் பாரம்பரியம் மூத்த மகளுக்கு பெருமை சேர்க்கிறது.

தொழில்

பெரும்பாலும் இம்மக்கள் நெசவு தொழில் செய்வதால், திருமணத்திற்கு முன்பும் பெண்கள் நெசவுத் தொழில் செய்கின்றனர். திருமணத்திற்கு பின்பு தமது கணவருடைய தொழிலுக்கு உதவியாக கைவேலைகளைச் செய்வது இச்சமூகத்தின் பெருமையைக் காட்டுகின்றது. இச்சமூக பெண்கள் நல்ல குடும்ப நிர்வாகிகளாக செயல்படுகின்றனர்.

படித்த பெண்கள் பட்டம் பெற்று வேலைக்கு செல்வத்தையும் அனுமதிக்கின்றனர். கல்வி கற்காத பெண்கள் வீட்டில் நெசவு செய்து பொருளாதாரத்திற்கு சிறிது உதவி புரிகின்றனர்.

சொத்து

சௌராஷ்டிரா சமூகம் பெண்களுக்கு சொத்தில் உரிமை வழங்குகிறது. வீட்டின் மகன்களுக்கு வீடு மற்றும் மனை போன்ற சொத்துக்கள் தரப்படுகிறது. அவற்றின் மதிப்பில் தத்தம் வசதிக்கேற்ப சிறு தொகையை சொத்தின் பங்காக அளிக்கின்றனர்.

தாயின் சொத்துக்களும், நகைகளும், பெண்களுக்கு உரியவை. அதில் மகள் உரிமை கொண்டாட முடியாது.

குழந்தை வளர்ப்பு

குழந்தைகளை நன்கு பராமரித்து இச்சமூக மக்கள் வளர்க்கின்றனர். குழந்தை பிறந்த மூன்று அல்லது ஐந்து மாதங்கள் வரை பிறந்த வீட்டில் (தாய் வீட்டில்) நன்கு கவனித்து பராமரிக்கின்றனர்.

தாயையும், சேயையும் மூன்று மாதங்களுக்குப் பிறகு அவர்கள் வீட்டில் கொண்டு போய் விடுகின்றனர். அவ்வாறு விடும்போது குழந்தைக்கு தேவையான துணிமணிகள், விளையாட்டு பொம்மைகள் இவற்றையும் கொண்டு சீர்வரிசையாக கொடுப்பர்.

நல்ல நாள் பார்த்து "பெயர் சூட்டு விழா" நடைபெறும்பொழுது குழந்தைக்கு தாய் மாமன்மார் தத்தம் வசதிக்கேற்ப ஆடை, அணிகலன்கள் விளையாட்டுப் பொருட்களை சீர்வரிசை செய்வர்.

தாய் தந்தையர் நிலை

எத்தகைய வறுமை நிலையில் வாழ்ந்தாலும் இச்சமூக மக்கள் தம் தாய், தந்தையரை முதியோர் இல்லங்களில் சேர்ப்பதில்லை. தாய் தந்தையரும் தம்மால் இயன்றவரை வேலை செய்கின்றனர்.

குழந்தைகளின் வளர்ப்பில் இம்முதியோர்கள் உதவியாக இருக்கின்றனர். தாய் தந்தையருடன் பிரச்சினை ஏற்படும்பொழுது அக்குடும்ப உறவினரை வைத்து "பஞ்சாயத்து" என்ற முறையில் நியாயமாக பேசி பிரச்சினையை தீர்த்து வைப்பர்.

நெசவு வேலை செய்து வாழும் மகன்களுக்கு உதவியாக இம்முதியோர்கள் நூல் சுற்றிக் கொடுப்பர். வேலைக்கு மகனாக இருந்தால் அவர்களின் குழந்தைகளை பராமரித்து வளர்ப்பதிலும், வீட்டு வேலைகளிலும் உதவி செய்தும் வருகின்றனர்.

அனைத்து பிள்ளைகளுக்கும் திருமணம் செய்த பின்னர், தனிக்குடித்தனம் அனைவரும் சென்றால் சிறிது வசதியுள்ளவர்கள் தமது பெயரில் வங்கியில் பணத்தை சேமித்து அதன் மூலம் வரும் வட்டி கொண்டு வாழ்கின்றனர். மற்றும் சிலர் ஒரு மாதம் ஒரு மகன் வீட்டில் மற்றொரு மாதம் வேறொரு மகன் வீட்டில் என வாழ்வர். தம்மால் உழைக்க முடியும் என்ற தைரியம் உள்ள பெற்றோர்கள் தனியே சம்பாதித்து வாழ்கின்றனர்.

60 வயது வந்தவுடன் தாய் தந்தையருக்கு மகன்கள் திருமணம் (அறுபதாம் கல்யாணம்) செய்து வைக்கின்றனர். சீர்வரிசையாக மகள்கள் அதாவது மருமகன்கள் சீர் செய்வார்கள்.

இத்திருமணதில் முதியோர் இருவரையும் அமரச் செய்வது சல்லடையில் நீர் ஊற்றி மருமகன் கொண்டு வந்திருக்கும் ஆடையை அணிந்து கொண்டு தம் வாரிசுகளுக்கு ஆசி வழங்குவர். இத்திருமணத்தை சிக்கனமாக செய்து கொள்பவர்களும் உண்டு.

முடிவுகள்

1. சௌராஷ்டிரா மக்களின் தொழிற் சிறப்பினை இவ்வியலில் அறிந்து கொள்ள முடிகிறது.

2. மன்னர் ஆட்சி காலம் முதலே அவர்கள் தம் தொழில் திறமையால் சிறப்புப் பெற்றிருப்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

3. சௌராஷ்டிரா மக்கள் பெண்களை போற்றும் விதமும், தாய் தந்தையர் நிலையையும் அறிந்து கொள்ள முடிகிறது.

# சோழவந்தானில் தகவல் தொடர்புச் சாதன நுகர்வு

ப. மகேஸ்வரி
இலக்கியத் திறனாய்வுத்துறை
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை - 21.

மதுரைக்கு மேற்கே 30 கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது சோழவந்தான். இது, தன்னகத்தே உட்கடை கிராமங்களைக் கொண்டுள்ளது. இத்தகைய கிராமங்களில் போக்குவரத்து மற்றும் மின்வசதி போன்ற அனைத்து வசதிகளும் இருக்கும். எனவே இத்தகைய கிராமங்களுக்குச் செய்திகளை உடனுக்குடன் தெரிவிப்பவை தகவல் தொடர்புச் சாதனங்கள் ஆகும்.

சாதன நுகர்வு

தனது ஊரில் நடக்கும் நிகழ்ச்சிகளைத் தெரிந்து கொள்வதோடு மட்டுமல்லாமல் அடுத்த ஊர், பக்கத்து மாவட்டம், மாநிலச் செய்திகள், தேசியச் செய்திகள், பிறநாட்டுச் செய்திகள் ஆகியவற்றைப் பற்றியும் ஒரு மனிதன் கட்டாயம் தெரிந்து கொள்வது அவசியமாகின்றது. இதற்குத் தொடர்பியல் மனிதனுக்கு இன்றியமையாததாக இருக்கிறது. பிற இடங்களில் நடக்கும் நிகழ்ச்சிகளையோ, செய்திகளையோ தெரிந்து கொள்ளத் தகவல் தொடர்புச் சாதனங்கள் இன்றியமையாதனவாகும். அத்தகைய தகவல் தொடர்புச் சாதனங்களைப் பயன்படுத்தும் பாங்கினைச் சாதன நுகர்வு (Media Consumption) எனலாம்.

கிராமங்களில் சாதன நுகர்வு

ஆரம்பத்தில் கிராமப்புறங்களில் கல்வி கற்றவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு, கல்வி கற்றவர்களில் ஒரு சிலர் பத்திரிகையைப் படித்து, தங்களுக்குத் தெரிந்த தகவல்களை மற்றவர்களிடம் கூறினர். இந்த முறையில் செய்தி பரவியது.

நாளடைவில் வானொலி மூலமும் மக்கள் செய்திகளை அறிந்து கொண்டனர். வானொலி நிகழ்ச்சிகளையோ, செய்திகளையோ கேட்பதற்குக் கல்வி கற்றவர்தான் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற அவசியம் இல்லைஜ கல்லாதவர்களும் புரிந்துக் கொள்ளலாம். இதனால் கிராமங்களுக்கு அரசே ஒன்று அல்லது இரண்டு வானொலிப் பெட்டிகளை வழங்கியது. இப்பொழுது தொலைக்காட்சி அதிகமாகிய பழக்கத்தில் வந்துவிட்ட நிலையில் அரசே தொலைக்காட்சிப் பெட்டிகளை இலவசமாக மக்களின் நலன் கருதி வழங்கி வருகிறது.

மரபு வழிச்சாதன நுகர்வு

மரபு வழிச்சாதனம் மிகவும் பழமையான ஒன்று. சங்கு, ஊதுகொம்பு, முரசு, பறை, மணி, ஒயிலாட்டம், கரகாட்டம், காவடியாட்டம், கும்மி, கோலாட்டம், தெருக்கூத்து பொம்மலாட்டம், வில்லுப்பாட்டு, நாட்டுப்புறப்பாடல்கள், கதைகள், நாடகங்கள் போன்றவை மரபுவழிச்சாதனங்கள் ஆகும்.

சோழவந்தான் கிராமப் பகுதியில் பறை, முரசு, கும்மி, கரகாட்டம் போன்றவை மூலம் தகவல்களை அறிந்து கொள்கின்றனர். அரசு நலத்திட்டங்கள், ஏலம் விடுதல், திருவிழாக்காலங்கள் போன்ற தகவல்களை ஷபறை' எனும் மரபு வழிச்சாதம் மூலம் அறிந்து கொள்கின்றனர். தகவலாளி மு. மகாலெட்சுமி "அரசின் நலத்திட்டங்கள் பற்றிய தகவல்களை பறை, முரசு, நாடகம் மற்றும் பிற மரபுவழிச் சாதனங்கள்

மூலம் அறிந்து கொள்கிறேன்" என்று கூறுவதை இதற்குச் சான்றாகக் கொள்ளலாம்.

பத்திரிகை நுகர்வு

தகவல் தொடர்புச் சாதனங்களில் பத்திரிகை ஒரு மிகச்சிறந்தச் சாதனமாகத் திகழ்கின்றது. முன்பெல்லாம் மன்னர்கள் துணிகளில் எழுதி, பிற மன்னர்களுக்குத் தகவலைத் தெரிவித்தனர். முனிவர்கள், ஞானிகள் போன்றவர்கள் ஓலைகளில் எழுதி வைத்திருந்தனர். மிகப்பழங்காலத்தில் செப்பேடுகளிலும், கல்வெட்டுகளிலும் தங்கள் கருத்துக்களைப் பொறித்து மக்கள் அறியும்படிச் செய்தனர். ஆனால் இன்று பத்திரிகைகள், நாளிதழ்கள், வாழ இதழ்கள், வணிகம், வேளாண்மைச் செய்திகளைத் தாங்கிய பத்திரிகைகள் என்றிவ்வாறு அதிகமாக வெளிவந்து கொண்டு இருக்கின்றன. சோழவந்தான் பகுதியில் உள்ள தகவலாளில் 30மூ பேர்களே சொந்தமாக இச்சாதனம் வைத்துள்ளனர். பிறர் பொது மன்றங்கள் மற்றும் பக்கத்து வீட்டிலிருந்து தெரிந்து கொள்கின்றனர்.

வானொலி நுகர்வு

வானொலி என்பது மக்களிடம் அதிக செல்வாக்கைப் பெற்ற ஒரு மிகச்சிறந்தச் சாதனம் என கூறலாம். வானொலி பயன்படுத்துவதற்குக் கற்றறிந்தவர்கள், கல்லாதவர்கள் என்ற வேறுபாடு கிடையாது. சிறியவர்கள் முதல் பெரியவர்கள் வரை இச்சாதனத்தைப் பயன்படுத்துகின்றனர். அனைத்துத்தர மக்களின் விருப்பத்திற்கு ஏற்ற வகையில் அமைந்தச் சாதனம் வானொலி.

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட பகுதியில் 66.7 விழுக்காட்டினர் வானொலிப் பெட்டியைச் சொந்தமாக வைத்துள்ளனர். இவ்வாய்வின் மூலம் அதிகமான பேர் வானொலியால் பயன் அடைகின்றனர் என்பது தெரிகின்றது.

தொலைக்காட்சி நுகர்வு

தொலைக்காட்சி இன்று ஒவ்வொரு வீடுகளிலும் பயன்படுத்தப்படுகின்றது. தகவல்களைக் காட்சியுடன் பார்த்தும் பயன் பெற முடிகின்ற காரணத்தால் இச்சாதனத்தை கிராமத்தினர் விரும்பிப் பயன்படுத்துகின்றனர். ஆனால் அவர்களுடைய பொருளாதாரத் தாழ்வு நிலை காரணமாக இச்சாதனத்தை 46.7 விழுக்காட்டினரே சொந்தமாக வைத்துள்ளனர். மற்றவர்கள் பொதுத் தொலைக்காட்சிகளிடமிருந்தும் தெரிந்து கொள்கின்றனர். அங்ஙனம் பார்க்கின்ற ஊர்மிளா, "பிற நாட்டு நடப்பைப் பார்த்து அறிந்து கொள்ளலாம். செய்தி அறிக்கைகளின் மூலம் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள முடிகிறது. வரலாற்று நாடகங்கள் மூலம் நமது பண்டைய கதைகளையும் வரலாற்று நிகழ்வுகளையும் எடுத்துக் கூறுகிறது" என்று தொலைக்காட்சியின் பயன்பாட்டினை எடுத்துரைக்கின்றார்.

திரைப்பட நுகர்வு

திரைப்படம் முதலில் பேசாத படமாக வெளிவந்தது. நாளடைவில் வளர்ச்சியின் காரணமாகப் பல்வேறு பரிமாற்றங்களைப் பெற்று மக்களிடமிருந்து பிரிக்க முடியாதச் சாதனமாகத் திகழ்கின்றது. திரைப்படம் மூலம் பிறநாட்டின் முக்கியமான இடம், பழக்கவழக்கம், கலாச்சாரம், பண்பாடு போன்றவற்றை அறிந்து

கொள்ள முடிகிறது. "தாமே நாடிவரும் துறை சினிமாத்துறையாகும். பல அரிய காட்சிகளை வெளிநாட்டில் படம்பிடிப்பதால், அதைக் காண்பது மனத்திற்கு சந்தோசமான நிலையை ஏற்படுத்துகிறது".4 எனுமிவை போன்ற தமது திரைப்பட நுகர்வு அமைவதாக வெங்கடேஷ் கூறுவது இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும்.

சோழவந்தானில் 33.3மூ மக்கள் மட்டுமே நேரடியாகத் திரையரங்கிற்குச் சென்று திரைப்படம் பார்த்து தகவல் பெறுகின்றனர். மற்றவர்கள் பத்திரிகை, தொலைக்காட்சி, திருட்டுக் குறுந்தகடு போன்றவற்றின் மூலம் திரைப்படம் தரும் தகவல்களை அறிந்து கொள்கின்றனர்.

முடிவுரை

சோழவந்தான் கிராமப் பகுதிகளில் 80 விழுக்காட்டினர் மரபுவழிச் சாதனங்களை நுகர்வோராக உள்ளனர். எனவே தகவல் தொடர்புச் சாதன நுகர்வில் மரபுவழிச் சாதனம்தான் முதலிடம் பெறுகின்றது. அடுத்து வானொலி நுகர்வு (66.7மூ).

பத்திரிகை (60மூ) தொலைக்காட்சி (46.7மூ) திரைப்படம் (33.3மூ) என்னும் இவை முறையே 2,3,4,5 ஆகிய இடங்களைப் பெறுகின்றன.

ஆய்வுக்குட்பட்ட சோழவந்தான் கிராமத்து மக்கள் தாமே சொந்தமாகத் தொடர்புச் சாதனங்களை வாங்கி நுகர்வது மட்டுமில்லாமல் அக்கம் பக்கத்திலுள்ளோர், நண்பர்கள், மற்றும் பொது மன்றங்களின் உதவியுடனும் தொடர்புச் சாதனங்களை நுகர்வதை ஆய்வின் மூலம் அறிய முடிகிறது. கிராமத்து மக்களிடையேயும் தகவல் அறியும் ஆர்வம் உள்ளது என்பதை இச்சாதன நுகர்வின் மூலம் அறிய முடிகிறது.

தகவலாளர்

1. மு. மகாலெட்சுமி, வயது 23, சோழவந்தான்
2. மு. ஊர்மிளா, வயது 18, சோழவந்தான்
3. எஸ். ஆறுமுகம், வயது 45, சோழவந்தான்
4. ப. வெங்கடேஷ், வயது 25, சோழவந்தான்

# இலக்கியத்தில் நேர்த்திக்கடன்

துு. ஜோதி,
முனைவர் பட்ட ஆய்வாளர்
கலை வரலாறு, அழகியல் மற்றும்
நுண்கலைத்துறை, நிகழ்த்துக்கலைப் பள்ளி,
மதுரை காமராசர் பல்கலைக்கழகமம்,
மதுரை - 21.

நேர்த்திக்கடன் என்பது வழிபாட்டுடன் கூடிய நிகழ்வாகும். நேர்த்திக்கடன் திருவிழா நாட்களிலும் திருவிழா அற்ற நாட்களிலும் திடீரெனவும். நீண்ட நாள் விரதம் இருந்தும் நேர்ந்துக்கொள்ளப்படுகிறது. இத்தகை நேர்த்திக்கடன் சம்பந்தமான செயல்பாடுகளை இலக்கியங்கள் பதிவு செய்திருக்கின்றன. இலக்கியங்களே காலத்தை மதிப்பிடும் காலக்கண்ணாடி என்பதால் இலக்கியங்களில் நேர்த்திக்கடன் பற்றிய செய்திகள் மக்களை இனங்காண உதவும்.

நேர்த்தி என்னும் சொல்

நேர்த்திக்கடன் என்பது கடன் என்பது திரும்பச் செலுத்தக்கூடிய ஒரு நிலுவை. இங்கு இறைவனுக்கு நாம் செலுத்தவேண்டிய காணிக்கையைக் குறிக்கிறது. பொருட்களை செலுத்தியபின் நேர்ந்துக்கொள்ளுதல் பலன் கிடைத்ததும் நேர்த்திக்கடன் செலுத்துதல் என வகைப்படுத்தலாம். நேர்த்திக்கடனுக்கு நேர்ச்சி, நேர்ச்சை என்ற சொற்கள் பயிலுகின்றன. இவை நேர்த்தி என்னும் சொல்லில் வல்லண்ண சாயல் பெற்ற திரிபாக இருக்கலாம்.1

நாச்சியார் திருமொழியில் நேர்ந்து என்னும் சொல் அழகர்கோயில் உள்ள திருமாலை நினைத்து நேர்த்திக்கடன் செய்துகொள்ளும் ஆண்டால் அடிசிலும் வெண்ணையும் வைத்து வழிபடுவதாக நேர்ந்துக்கொள்கிறார்.

"நாறு நறும் பொழில் சூழல் மாலிருஞ்சோலை நம்பிக்கு
நூறுதடா வெண்ணெய்வாய் நேர்ந்து பராவி வைத்தேன்"

முக்கூடற்பள்ளு இலக்கியத்தில் நேர்ந்து என்னும் சொல்

கனவு காணுதல் பல்லி சொன்க குறிகேட்ல், தும்மலின் நம்மை, வழிபடு தெய்வத்துக்கு நேர்ந்துகொள்ளுதல் முதலிய சமுதாய பழக்கவழக்கங்களை முக்கூடற்பள்ளில் காணலாம்.

"கிடையாத நற்கனவு கண்டேன் முருங்கையடிக்
உருமாலை நேர்ந்துருகிச் சொன்னேளன்

பெரியபுராணத்தில் காணிக்கை

சாமியை வேண்டிக்கொண்டு தனக்கு ஏதேனும் இடர் ஏற்பட்டால் மொட்டைப் போட்டு காணிக்கை செலுத்துவதாக நேர்ந்துக்கொள்வது மக்களின் நம்பிக்கை. இந்த வகை நேர்வில் முடியானது சடைசடையாக திரிபோன்று பின்னிக்கொண்டு இருக்கும். பாண்டி கோவிலில் மொட்டைப் போடுபவர்களிடம் காணலாம். பெரியபுராணத்தில் கலியநாயணார் இறைப்பக்தி அதிகம் உள்ளவர். அவர் "போரில் இறந்த ஒருவரின் தலைமுடியில் சடைமுடி இருக்கக்கண்டு அதனை கையில் ஏந்தி திருவைந்தெழுத்து ஓதித் தீக்குளித்தார்" என்ற கருத்து வருகிறது.

இலக்கியத்தில் காணிக்கை

பாதிக்கப்பட்ட உடல் உறுப்பு போல நேர்ந்துக்கொண்டு காணிக்கை செலுத்துவது மக்களின் நம்பிக்கை. உடலின் ஏதேனும் ஒரு நோயினால் பாதிக்கப்பட்ட உடல் உறுப்புகள் தெய்வத்தின் நேர்த்திக்கடனாய் தீர்ந்து என்றால் எந்த உறுப்பு நோய்வாய்ப் பட்டதோ அந்த உறுப்பை போல தங்கத்தினால் உருவம் செயது தெய்வ சன்னதியில் உண்டியலில் இட்டால் நோய் தீரும் என்பது நம்பிக்கை. ஜமீன்தார் அங்காளம்மனுக்கு வேண்டிக்கொண்டார். வைத்தியத்தால் சரியாயிற்று. பிறகு நேர்த்திக்கடனை நிறைவேற்ற தங்கத்தால் ஒரு நாக்கு செய்து உண்டியலில் இடவேண்டியதாயிற்று.

இலக்கியத்தில் நடுகல்

நீர் நிலைகளில் தண்ணீர் பெருக்கெடுத்து உடைய நேரும் தருவாயில் யாரேனும் கன்னிப்பெண் அல்லது மணமாகாத ஆண் தன் உயிரை பலியாக்கி மடை என்று சொல்லக்கூடிய உடைப்புப் பகுதியில் உயிரைவிட்டால் காவு (பலி) வாங்கிய கண்மாய் உடையாது ஊரும் காப்பாற்றப்படும் என்று நம்பப்படுகிறது.

அவ்வாறு உயிரை மாயத்தவர்களுக்கு நினைவுக்கல் ஊன்றி சமாதிகட்டி கோவில் எழுப்பி வருடந்தோறும் விழா எடுப்பதும் அவர்களின் தியாகத்தைப் போற்றி பறைசாற்றுவதாகும். சிறு தெய்வங்கள் வகையில் இவை அடங்கும்.

“முட்டு வரை களிமண் சகதி இறங்கியது தீவட்டியைக் குளக்கரையில் குத்தினான். குளத்திற்குள் மெதுவாக இறங்கினான் கைகள் இரண்டையும் உயர்த்தியவாறு அப்படியே நின்றுவிட்டான். குளக்கரையிலேயே கூட கையெடுப்பிற்கு மேலாக இருந்தது. மழை பெய்துகொண்டே இருந்தது பயங்கர இருட்டு, பக்கங்களில் தவளைகளின் அலறல். தூரப் பண்ணைகளில் ஆந்தைகளின் அலறல். குளத்துத் தண்ணீர் குடுகுடுவென்று ஒரு முழம் குறைந்தது. உடன் சென்ற மக்களில் ஒருவன் முத்துவீரன் என்று இரைந்தான். அவன் அப்படியே நின்று போனான்”.6

இக்கதையில் முத்துவீரனின் வீரம், தியாகம், ஆண்மை வெளிப்படுகிறது. முத்துவீரன் நின்றவாறே சமாதியானான். மறுநாள் ஊர்கூடி குளத்திற்கு வடக்கே அவனை சமாதி செய்தனர். கோயிலும் கட்டி கிணறும் வெட்டினர் அன்று முதல் முத்துவீரன் ஷநிறைகுளத்து ஐயா' என்ற பெயர் பெற்றான் என்று நிறைகிறது.

கலிங்கத்துப்பரணியில் பலியிடும் நிகழ்ச்சி

நவகண்ட சிற்பங்கள் பழங்காலத்தில் மன்னர்கள் போரில் வெற்றிபெறவும் அவர்களின் முக்கியக் காரியங்கள் எவ்வித தடங்களும் இன்றி நடந்தேறவும் போர் வீரர்கள் தங்களை கொற்றவை தெய்வத்தின் முன் பலியிட்டுக் கொள்வது வழக்கம். இவ்வாறு பலியிட்டுக் கொள்பவர்கள் உடலை ஒன்பது பாகங்களாக அறுத்துக்கொள்வர். இத்தகை சிற்பங்கள் நவகண்ட சிற்பங்கள் எனப்பட்டது. இதனை “சவான்சாமிகள்” என்ற பெயரில் வழிபாடு செய்து வருகிறார்கள். வீரர்கள் தங்கள் தலையை தானே அறுத்துகொள்வர்.

“அடிக்கழுத்தின் நெடுஞ்சிரத்தை அரிவராலோ
அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்பராலோ
கொடுத்தசிரம் கொன்றவையைப் பரவு மாலோ

குறையுடலம் கும்பிட்டு நிற்குமாமே"7

என்று கூறப்பட்டிருக்கின்றது.

கவிதையில் காணிக்கை

கவிஞர் சிற்பி அவர்கள் பாரதியின் மூடநம்பிக்கை சாடல் கவிதையை தனது படைப்பாற்றலில் வெளிப்படுத்தியுள்ளார்.

"காசிக்கு போகிறவர்கள்
விட்டுவிட வேண்டுமாம்
சிலவற்றை
நானும் விட்டுவிட்டேன்
குடுமியை
குறுகிய பார்வையை
குருட்டு நம்பிக்கைகளை"

முடிவுரை

இவ்வாறு நேர்த்திக்கடன் என்பது வெறும் அறியாமை என்று மட்டும் கருதுவது தவறாகும். மனிதனின் வாழ்க்கையில் மாறாத அங்கமாக திகழ்கின்றது. இன்றைய எழுத்தாளர்கள் சிலர் தலையில் தேங்காய் உடைத்தல், குழந்தையை புதை மண்ணில் இட்டு நேர்த்திக்கடன் செலுத்துதல் போன்ற வன்மையான நேர்த்திக் கடன்களை வன்மையா கண்டிக்கிறார்கள். இது அறிவியல் ரீதியாக ஏற்றுக்கொள்ளக்கூடியதாக உள்ளது. பாரதியும் "நோவு வேண்டேன் நூற்றாண்டு வேண்டினேன், அச்சம் வேண்டேன், அமைதி வேண்டினேன், உடைமை வேண்டேன், உன்துணை வேண்டினேன் வேண்டாத அனைத்தும் அருள்வதுன் கடனே"9 என்று நாம் ஒன்று நினைக்க தெய்வம் ஒன்று நினைக்கும் முரண்பாட்டைச் சுட்டிக்காட்டுகின்றார்.

குறிப்புகள்

1. ஞானமணி, செக்கானூரணியில் நேர்த்திக்கடன், எம்.ஃபில் ஆய்வேடு.
2. தொ. பரமசிவன், பண்பாட்டு அசைவுகள், ப. 169
3. எம்.ஏ. பாலமுருகன், இலக்கியக் களங்கள், ப. 37, 50
4. வ.த. இராமசுப்பிரமணியன், பெரியபுராணம், ப. 663
5. பொன்மணி வைரமுத்து ஒரு போர்க்களமும் இரண்டு பூக்களும், ப. 53
6. ஆர்.எஸ். ஜேக்கப், வாத்தியார், ப. 61
7. சந்தியூர் கோவிந்தன், கலச்சொல்லும் கதைகள், ப. 84
8. சிற்பி, சிற்பியின் படைப்புலகம், ப. 199
9. எம்.ஏ. பாலமுருகன், இலக்கியக் களங்கள், ப. 50

# கம்பனில் உளவியல்

**வே. தனுஜா,** எம்.ஏ.,எம்.பில்.,
விரிவுரையாளர், தமிழ்த்துறை,
எஸ்.ஆர்.என்.எம். கல்லூரி,
சாத்தூர்.

ஒரு மனிதன் சமுதாயத்தில் எப்படி நடந்து கொள்கிறான், எப்படிப்பட்டவனாக இருக்கிறான் என்பதை அவன் செயல்பாடுகளைக் கொண்டு மட்டுமின்றி, அவனது அறிதல் திறன், நினைவாற்றல், மறததி போன்ற மனத்திறனையும் கண்டு ஆராய்வதே உளவியல்.

மேலை நாடுகளில் வளர்ச்சி பெற்று வந்துள்ள உளவியல் துறையானது தமிழில் தற்போது வளர்ச்சி பெற்று வருகின்றது. உளவியல் துறை தமிழ் இலக்கியத்திற்கு புதியது என்றாலும் உளவியல் பற்றிய சிந்தனைகள் தமிழர்களிடம் தொடக்கத்தில் இருந்தே காணலாகிறது. காப்பியங்களில் ஒன்றாக விளங்குகின்ற கம்பராமாயணத்தில் கம்பர் வெளிப்படுத்தியுள்ள உளவியலில் தற்காப்பு முறைகள் குறித்து இக்கட்டுரையில் ஆராய்வோம்.

தற்காப்பு முறைகள்

தனித்தல் (Isolation) செய்யாமை (Undoing) புறத்தோற்றம் அல்லது தெளிவு (Projection) அகத்தோற்றம் (Infrojection) தன்னிலைக்குத் திரும்புதல் (Turning against Self) எதிர்நிலைக்கு மாற்றுல் (Reversal info opposite) உயர் வழிப்படுத்தல் (Sublimation) ஆகியவை ஈகோவின் தற்காப்புச் செயல்களாகும் அமுக்கம் மட்டும் உள்நிகழ்வாக (Mental Phenomenon) உள்ளது. மேற்கூறிய அனைத்தும் உள நிகழ்வுகளாக மட்டுமில்லாமல் உளவெளிப்பாடுகளாகவும் உள்ளன. அதாவது இவையனைத்தும் நடத்தை வழியில் வெளிப்படுகின்ற தற்காப்புச் செயல்களாகும்..

தனித்தல் (Isolation)

தனித்தல் என்பது மற்றவர்களிடமிருந்து விலகித் தனிமையாக இருத்தலைக் குறிக்கும். அதுமட்டுமில்லாமல் தம்மைப் பிறர் தொடுவதை எதிர்ப்பதும் தனித்தலின் முக்கியக் குணமாகும். உளநிகழ்விலும் இதே அடிப்படையில்தான் தனித்தல் நிகழ்கிறது. அதாவது ஓர் எண்ணம் மற்ற எண்ணங்களின் தொடர்பைத் துண்டித்துக் கொண்டு தனித்திருத்தலைக் குறிக்கும். இந்நிகழ்வை

"நின்று தொடர்ந்த நெடுங்கை தம்மைநீக்கி
மின்றுவள் கின்றது போல மன்னில் வீழ்ந்தாள்
ஒன்று மியம்பல னீடுயர்க லுற்றாள்
மன்ற லருந் தொடை மன்ன னாவி யன்னாள்"

இப்பாடல் கைகேயி சூழ்வினைப் படலத்தில் அரசனுக்கு ஆவிபோலச் சிறந்த கைகேயி தன்னைத் தழுவி எடுக்கலுற்ற தயரதனது கைகளைத் தள்ளி ஒரு மின்னற்கொடி போல் துவண்டு மண்ணில் வீழ்ந்தனள். மன்னனுக்கு மறுமாற்றம் ஒன்றும் சொல்லாமல் நெட்டுயிர்த்தாள் என்பதாகும். இராமனுக்கு முடிசூட இருப்பதை விரும்பாத கைகேயி தன் மக்கருத்தை இவ்விதம் தயரதனுக்கு வெளிப்படுத்துகிறாள்.

செய்யாமை (Undoing)

செய்யாமை என்கிற தற்காப்புச் செயல் பல பொருண்மைகளைக்

கொண்டதாகும். முன்காலத்தில் ஏதேனும் ஒரு தவறு செய்திருந்தால் அதை மீண்டும் செய்யாமல் கவனத்தோடு இருப்பது இதன் முதன்மைப் பொருளாகும். அதேசமயம் முன்பு செய்தவற்றை மறக்க முடியாமல் அல்லது மறுக்க முடியாமல் போகின்ற நிலை ஏற்படுமானால் அத்தவறுக்கு மாறாக வேறொரு செயலைச் செய்வதையும் குறிக்கும். இராமன் சூர்ப்பநகையோடு எள்ளி நகையாடியதை எண்ணி வருந்தி இனிமேல் அச்செயலைச் செய்யக்கூடாது என நினைத்தல் இக்கருத்திற்கு ஏற்றதாக அமைகிறது.

புறத்தோற்றம் (Projection)

உளப் பகுப்பாய்வில் முக்கியத் தற்காப்புச் செயலான புறத்தோற்றத்தின் குறிக்கோள் இன்பமற்ற உணர்வுகள், பொறுக்க முடியாக கருத்துக்கள் ஊறு விளைவிக்கின்ற எண்ணங்கள், அலைக்கழிய வைக்கின்ற உளநிகழ்வுகள் போன்றவற்றைப் புறம் தள்ளுவதாகும்.

பரதன் முடுசூட வேண்டும் இராமன் காடுசெல்ல வேண்டும் என்ற கருத்தை கைகேயி கூறியவுடன் தயரதன் அதை மறுக்கிறான்.

“வன்மாய்க்கை கேசி வரத்தானென்றன் னுயிரை
முன்மாய் விப்பத் துணிந்தா ளேனுங் கூனி மொழியால்
தன்மா மகனுந் தானுந் தரணி பெறுமா றன்றி
என்மா மகனைக் கானே கென்றா ளென்றா ளென்றான்□2

தன் கருத்திற்கு மாறுபாடாக வரங்கேட்பது பற்றி மன்னன் என்னுயிரை முன்மாய்விக்கத் துணிந்தாளென்றும், வெறுப்பினாற் பரதனை வேறுபடுத்தி தன்மாமகன் என்றும் கூறுகின்றான். தன் மனதில் இருக்கின்ற கைகேயியின் அன்பையும், பரதனுக்கு தன் மனதில் இருந்த இடத்தையும் வெறுத்து புறந்தள்ளுகின்றான் தயரதன்.

அகத்தோற்றம்

புறத்தோற்றத்தில் புறநிலைக்கு மறுப்பு நிகழ்வதால் இதில் அகத்தோற்றத்தின் எதிராக உளப்பகுப்பாய்வு நிகழ்கிறது. அகத்தோற்றத்தில் புறநிலையைத் தன்னிலை (ஞநடக) உள்வாங்கிக் கொண்டு பலன் அடைகிறது. சுருங்கச் சொன்னால் தனக்கு வேண்டியதைப் பெறுவதில் இன்பம் காண்பது அகத்தோற்றமாகும். தனக்கு ஒவ்வாததை புறந்தள்ளி இன்பம் காண்பது புறத்தோற்றமாகும் கைகேயி தசரதனிடம் வரம் கேட்பது இதற்குச் சான்றாக அமைகிறது.

“ஏய வரங்கள் ளிரண்டில் ஒன்றினால் என்
சேயுல காள்வது சீதை கேள்வ னென்றால்
போய் வனமாள்வ தெனப்பு கன்று நின்றாள்
தீயவை யாவை யினுங்சி றந்த தீயாள்”3

பகைவரும் சொல்ல வாய்கூசும் கடும் சொல்லைச் சொல்லியும் தன்மன

உறுதி சிறிதும் குறையாமல் தீயாளாகக் கைகேயி இருந்தாள். இராமனைப் புறந்தள்ளி பரதன் நாடு அடைய வேண்டிய இன்பத்தைக் காணுகிறாள் கைகேயி.

எதிர்நிலைக்கு மாற்றுதல்

புறத்தோற்றத்தில் எதிர்நிலைக்கு மாற்றுதல் என்கிற துணைச் செயலும் கலந்துள்ளது. இதைத் தனித்த தற்காப்புச் செயலாகவும் உளப்பகுப்பாய்வு பார்க்கிறது. இச்செயலில் உள்ளுணர்ச்சியின் குறிக்கோளே தனது இயல்புக்கு எதிராக மடைமாற்றம் பெறுகிறது. இதனால் உள்ளுணர்ச்சி வேற்றுமைகளுக்கு உட்படுகின்றது.

தன்னிலைக்குத் திரும்புதல் (வுரசநெைப யபயயைளெவ ளநடக)

அகநிலையில் முக்கிய நோக்கம் உள்ளுணர்ச்சிகளைப் புறநிலைமீது செலுத்திச் செயல்பட வேண்டும் என்பதுதான். இந்தச் செயலில் தடை ஏற்பட்டால் உள்ளுணர்ச்சியின் உந்தல்களை ஈகோ (அகநிலை) தன்னிலைக்குத் திருப்பிக் கொள்கிறது. நடைமுறை நடத்தைகளில் சுயநலப்போக்கு, கருமித்தனம், பணத்தாசை, புகைப்பழக்கம், மதுப்பழக்கம் போன்றவை தன்னிலைக்குத் திருப்பிய புறநிலை லிபிடோவின் எதிரொளிகளாகும். மந்தரையின் வார்த்தைகளால் கைகேயி மனம் மாறுபடுவது இத்தகைய நிலையேயாகும்.

"உரைத்த கூனியை யுவந்தன ளுயிருறத் தழுவி
நிரைத்த மாமணி யாரமு நிதியமு நீட்டி
இரைத்த வேலைசூ ழுலகமென் னொருமகற் கீந்தாய்
தரைக்கு நாயகன் றாயினி நீயென் தனியா".4

தன் மகனுக்குப் பட்டம் பெறுமாறு ஆலோசனை சொல்லித் தந்ததனால் கைகேயி மந்தரையை இறுகத் தழுவிக்கொண்டு அவளுக்கு ஆரமும், நிதியமும் கொடுத்துப் புகழ்ந்தாள் (தனக்கு நாயகன் தாய்) அரசன் தாய் நீ என்ற பொருள்படக் கூறினாள் கூனி. இதனால் கைகேயி இராமனிடத்துக் கொண்ட பற்று பரதனிடத்து மாறுகிறது.

உயர்வழிப்படுத்தல்

உள்ளுணர்ச்சிக் கோட்பாடான உயர் வழிப்படுத்தல் இரண்டு நிலைகளைக் கொண்டதாகும். முதலாவது உள்ளுணர்ச்சியின் குறிக்கோள் அடிப்படையிலானது. இதன்படி பாலுணர்ச்சி தன்னுடைய முக்கியக் குறிக்கோளாகிய மோகித்தலை விடுத்து மோகமற்ற செயலாகமாறி வெளிப்படுவதைக் குறிக்கும்.

கைகேயி கேட்ட வரங்களினால் அவளை வெறுத்த தயரதன், கணவன் இறந்தால் கணவனுடன் மாய்வர். ஆனால் இதுவரை தன் கணவனைக் கொன்று பேரெடுத்த மகளிர் இவ்வுலகிலில்லை. நீ அப்பேர் பெறுவாய் எனப் பழிக்கின்றான்.

இவ்வாறு நடத்தை வழியில் வெளிப்படுகின்ற தற்காப்புச் செயல்களை கம்பராமாயணக் காப்பிய பாத்திரங்களோடு ஒப்பிட்டு முறையில் விளக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

அடிக்குறிப்புகள்

1. கம்பராமாயணம் -அயோத்தியா காண்டம் : கைகேயி சூழ்வினைப் படலம், பா. 4
2.கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம் - நகர் நீங்கு படலம், பா. 73
3.கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம் : கைகேயி சூழ்வினைப் படலம், பா. 10
4.கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம் : மந்தரை சூழ்வினைப் படலம், பா. 83
5.கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம் : கைகேயி சூழ்வினைப் படலம், பா. 37

# தொல்காப்பியர் ஆராய்ச்சி முறை

ந. பாக்கியராஜ
இளநிலை ஆய்வாளர்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 21.

முன்னுரை

மனிதன் என்றைக்குச் சிந்திக்கத் தொடங்கினானோ அன்றே 'ஆராய்ச்சி' தொடங்கிவிட்டது. இவ்வாராய்ச்சி பல்வேறு துறைகளில் பல்வேறு பரிணாமங்களில் செயற்பட்டு வருகின்றது. இன்றைக்கு 'ஆராய்ச்சி' இல்லாத துறைகளே கிடையாது. 'ஆராய்ச்சி' தொடங்கிய நாளன்றே ஷஆராய்ச்சி முறை'களைக் கையாண்டுள்ளார். அதாவது நூலாக்கம், இயல்பகுப்பு, நூற்பா வைப்பு என எதையெடுத்துக் கொண்டாலும் அவற்றில் ஓர் 'ஆராய்ச்சி முறை'யைக் காணலாம் இங்கு எழுத்ததிகார நூற்பா வைப்பில் என்னென்ன 'ஆராய்ச்சி முறை'களைக் கையாண்டுள்ளார்? என்பதை அமைப்பயல் ரீதியாகக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

1. 'ஆராய்ச்சி முறை' - விளக்கம்

'ஆராய்ச்சி முறை' என்பது ஆய்வுப்பொருளின் தன்மைக்கேற்பவும், துறை சார்ந்த ஒழுங்கிற்கேற்பவும் அமையும். ஒருவர் தம்முடைய ஆய்வில் அனைத்து முறைகளையும் பயன்படுத்த வேண்டுமென்பதில்லை. ஆனால் 'ஆராய்ச்சி முறை'கள் பற்றிய அடிப்படை அறிவு இருத்தல் வேண்டும். ஓர் ஆய்வினை மேற்கொள்ள பல்வேறு படிநிலைகளைக் கடந்து செல்ல வேண்டும். அதாவது தகவல் திரட்டல், தொகுத்தல், பகுத்தல் போன்ற பல்வேறு படிநிலைகளைக் கடந்து செல்ல வேண்டும். இப்படிநிலைகளைக் கடக்காமல் திடிரென்று விடை காணமுடியாது. இப்படிநிலைகளைத்தான் 'ஆராய்ச்சி முறை' என்கிறோம்.

2. தமிழில் 'ஆராய்ச்சி முறை'த் தோற்றம்

'ஆராய்ச்சி' தொடங்கிய காலத்திலே 'ஆராய்ச்சி முறை'யும் தோன்றியமவிட்டது என்றாலும்கூட, தமிழல் 'ஆராய்ச்சி முறை' நூலாக்கம் பெற்றது 1970களுக்குப் பிறகே என்பது குறிப்பிடத்தக்கது. இக்காலக்கட்டத்திற்கு முன்பு தமிழல் ஆய்வுகளே நடைபெறவில்லையா? நடைபெற்றதெனில் எத்தகைய 'ஆராய்ச்சி முறை'யை மேற்கொண்டனர் என்ற வினா எழுவது இயல்பு. இக்காலக்கட்டத்திற்கு முன்பு ஆய்வு செய்தவர்கள் ஆங்கிலத்திலுள்ள ஆராய்ச்சிமுறையினைப் பின்பற்றி ஆய்வு நிகழ்த்தியுளட்ளனர். இதனை ஆங்கிலத்தில் எழுதியுள்ள அவர்களது ஆய்வேட்டின் மூலம் அறிந்து கொள்ளலாம். இக்காலக்கட்டத்தில் தமிழ் ஆய்வேடுகளும் ஆங்கிலத்திலேயே எழுதியது குறிப்பிடத்தக்கது.

1970களுக்குப் பிறகே தமிழல் ஆய்வு செய்யும் 'ஆராய்ச்சி முறை'யினைப் பற்றிய நூல்கள் வெளிவந்தன. இவை வெளிவருவதற்கான பின்புலம் யாதெனின், இக்காலக்கட்டத்தில்தான் அறிவியல் நிறைஞர் (ஆீடை) என்ற பட்ட வகுப்பு அறிமுகப்படுத்தப்பட்டது. இப்பட்டத்திற்குப் பாடத்திட்டமாக 'ஆய்வு நெறியியல்' ஓர் பாடமாக அறிமுகப்படுத்தப்பட்டது. இதன் காரணமாகவே தமிழில் 'ஆராய்ச்சி முறை' நூலாக்கம் பெற்றது. இக்காலக்கட்டத்தில்தான் தமிழ் ஆய்வேடுகள் தமிழில் எழுதலாம் என்று அறிவிக்கப்பட்டது.

3. தொல்காப்பியர் - கையாண்ட 'ஆராய்ச்சி முறை'

தொல்காப்பியர் நூற்பா வைப்பில் கையாண்ட 'ஆராய்ச்சி முறை'யைப் பின்வருமாறு காணலாம். அவைக்ளாவன.

1. கருத்துத்தொடர்ச்சி
2. தொகை, வாகை, விரி
3. பிறப்பு அடிப்படை
4. அகரவரிசை
5. இன அடிப்படை
6. ஏறுவரிசை
7. இறங்குவரிசை
8. வடிவவொழுங்க
9. அளவொழுங்கு
10. வழக்கு-அடிப்படை
11. தொடரமைப்பு
12. கூட்டல் பெருக்கல்
13. முரண் ஒழுங்கு
14. புறனடை

என்னவாகும். பரப்பு கருதி ~~இவற்றுள் சிலவற்றை~~ மட்டும் இங்கு காண்போம்.

3.1 ~~தொகை, வகை, விரி~~

தொகை, வகை, விரி என்ற 'ஆராய்ச்சி முறை'யைத் தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தின் அனைத்தியல்களிலும் பயன்படுத்தியுள்ளார். இவ்வாராய்ச்சி முறையே இன்று முதன்மையான 'ஆராய்ச்சி முறை'யாக மேற்கொள்ளப்படுகின்றது. இவ்வாராய்ச்சி முறையில்லாமல் எவ்வாய்வும் நிகழ்த்த முடியாது. இதற்குத் தொல்காப்பியரும் விதிவிலக்கல்ல.

சான்றாக தொல்காப்பியர் இவ்வாய்ராய்ச்சி முறையைப் பிறப்பியலில் பயன்படுத்தியுள்ளதைக் காணலாம். தமிழ்மொழி எழுத்துக்களின் பொதுவான பிறப்பிடங்களை முதலில் தொகுத்து, அவற்றை உயிரெழுத்து, மெய்யெழுத்து, சார்பெழுத்து என வகைப்படுத்தி, அவற்றின் பிறப்பிடங்களை விரித்துக் கூறியுள்ள தன்மை இதற்குச் சான்றாகும். இதனைத் தொல்காப்பியர்,

| | நூ.எண் (நூற்பா எண்) |
|---|---|
| எழுத்துக்களில் பொதுபிறப்பிடம் | 83 |
| உயிரெழுத்துக்களின் பிறப்பிடம் | 84-88 |
| மெய்யெழுத்துக்களின் பிறப்பிடம் | 89-100 |
| சார்பெழுத்துக்களின் பிறப்பிடம் | 101 |
| புறனடை | 103 |

என்றிவ்வாறு வரிசைப்பட நூற்பாக்களை அமைத்துள்ளார். இவற்றினுள் ஷபிறப்பு அடிப்படை' (நூ.எண் 83-99), ஷஇன அடிப்படை'யிலான (நூ.எண் 88-99) 'ஆராய்ச்சி முறை'யையும் காணமுடியும்.

3.2. அகர வரிசை

அகரவரிசை 'ஆராய்ச்சி முறை'யினைத் தொல்காப்பியர் பல்வேறியல்களில் பயன்படுத்தியுள்ளளார். அதாவது நூன்மரபு (31-32), மொழிமரபு (54-58), உருபியல் (173-181) ஆகிய இயல்களில் பயன்படுத்தியிருந்தாலும் உயிர்மயங்கியலில் அகரவரிசை முறையைச் சிறப்பாகக் கையாண்டுள்ளார் என்பது குறிப்பிடத்- தக்கது.

இவற்றினுள் 'அ' கரம் முதல் ஷஔ' காரம் ஈறாக வரிசையாகப் பயன்படுத்தியுள்ளார். குறிப்பாக ஷஎ' கர வீறு பற்றிக் குறிப்பிடும்போது 'ஒ' கர வீற்றினையும் சேர்த்துக் குறிப்பிட்டுள்ளார். இதற்குக் காரணம் யாதெனின் 'எ' கர வீறும், 'ஒ' கர வீறும் பெயர்க்கு இறுதியில் வருவதில்லை. இரண்டும் ஒரே இலக்கணத்தன்மை பெறுவதால் சேர்த்துக்கூறியுள்ளார். உயிர்மயங்களில் நூற்பாக்களைத் தொல்காப்பியர்,

| | நூ.எண் |
|---|---|
| 'அ' கரவீறு | 203-220 |
| 'ஆ' காரவீறு | 221-234 |
| 'இ' கரவீறு | 235-248 |
| 'ஈ' காரவீறு | 249-253 |
| 'உ' கரவீறு | 254-263 |
| 'ஊ' காரவீறு | 264-271 |
| 'எ' கரவீறு, 'ஒ' கரவீறு | 272-273 |
| 'ஏ' காரவீறு | 274-279 |
| 'ஐ' காரவீறு | 280-288 |
| 'ஓ' காரவீறு | 289-294 |
| 'ஔ' காரவீறு | 295 |

என்றில்லவாறு அகர வரிசைப்பட அமைத்துள்ள முறையினைக் காணமுடிகின்றது.

3.3 தொடரமைப்பில் ஒழுங்கு

உயிர்மயங்கியலில் 'அ'கரம் 'ஔ'காரம் இறுதிவரை ஒவ்வொரு உயிரீறின் அவ்வழிப்புணர்ச்சி பற்றிக் கூறி முடிந்ததும், வேற்றுமைப் புணர்ச்சி பற்றிக் கூறும்போது,

'வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே'

தொல்-எழுத் -(216,225,252,259,266,276,292)

என்று கூறுவதில் தொடரமைப்பிலான ஒழுங்கைக் காணமுடிகின்றது.

எவ்வாறெனின் 'கூறியதுகூறல்' என்ற தவற்றைத் தவிர்ப்பதற்குக் 'கூறியதுகூறல்' என்ற அடிப்டையிலமைந்த 'ஒரே' நூற்பாவைத் திரும்பத் திரும்ப பயன்படுத்துவதில் தொடரமைப்பிலான ஒழுங்கைக் காணமுடிகின்றது. இதைப்போலவே புள்ளிமயங்கியலிலும்,

"தொழிற் பெயரெல்லாம் தொழிற்பெயரில"

தொல்-எழுத்-(306, 327, 276, 292)

என்ற நூற்பா திரும்பத் திரும்பப் பயன்படுத்துவதைக் காணமுடியும்.

3.4 கூட்டல் பெருக்கல்

குற்றியலுகரப்புணரியலில் ஏறுவரிசை, முரண் அடிப்படை, வழக்கு அடிப்படையிலான ஒழுங்கைக் காண்பதோடு மற்றுமொரு 'ஆராய்ச்சிமுறை'யினையும் காணமுடிகின்றது. அவை 'கூட்டல் பெருக்கல்' என்பனவாகும்.

அதாவது குற்றியலுகரப்புணரியலின் எண்ணுப்பெயர்ப் புணர்ச்சியில் நிலைமொழியில் நிற்கின்ற எண் பெரியதாகவும், வருமொழியில் நிற்கின்ற எண் சிறியதாகவும் இருந்தால் அந்த பெண் இரண்டும் கூட்டப்படுகின்றது.

சான்றாக நிலைமொழியல் 'பத்து' என்ற எண்ணும், வருமொழியில் 'ஒன்று' எண்ணும் வருமானால் 'பதினொன்று'எனக் கூட்டப்படுவதைக் காணமுடிகின்றது.

(எ.டு) பத்து., ஒன்று ஸ்ரீ பதினொன்று

4. 'முறை' பிறழ்வு

தொல்காப்பியர் நூற்பா வைப்புமுறையில் எல்லா இடங்களிலும் சரியான 'ஆராய்ச்சி முறை'யைக் கையாண்டுள்ளாரா?யெனில் இல்லையென்பதுதான் உண்மை. பெரும்பான்மையான இடங்களில் சரியான ஆராய்ச்சிமுறையினைக் கையாண்டுள்ளார். சிறுபான்மையான இடங்களில் முறைபிறழ்வும் காணப்படுகின்றன.

சான்றாக, நூன்மரபில் குறிலெழுத்து, நெடிலெழுத்துக்குரிய மாத்திரையளபுகளை முதலில் கூறிவிட்டுப் (நூ.எண் 3-6) பின்னர் மாத்திரையென்பது என்ன? என்ற வினாவிற்கு (நூ.எண் 7) விடையளிக்கின்றார். இவற்றில் 'முறை'பிறழ்வு இருப்பதனைக் கண்டறியலாம். இதைப்போலவே மற்ற விலவிடங்களிலும் (அதாவது 179 ஆவது நூற்கா 175க்குப் பின்னர் வரவேண்டும். 181ஆவது நூற்பா 174க்குப் பின்னர் வரவேண்டும்) இடம்பெறக் காணலாம்.

இவ்வாறு 'முறை' பிறழ்ந்திருக்கக் காரணம் யாதெனின் தொல்காப்பியர் காலத்தில் அச்சு இயந்திரங்கள் இல்லை. மனனம் செய்து படிக்கின்ற வழக்கம் இருந்தது. இவ்வாறு மனமம் செய்ததில் நூற்பா 'முறை' பிறழ்ந்திருக்கலாம், அல்லது அச்சுய இயந்திரங்கள் வந்த பிறகு பதிப்பகத்தால் 'முறை' பிறழ்ந்து பதிப்பிக்க வாய்ப்புண்டு. இக்காரணங்களால்தான் நூற்பா 'முறை' பிறழ்ந்திருக்கலாம், அல்லது அச்சு இயந்திரங்கள் வந்த பிறகு பதிப்பகத்தால் 'முறை' பிறழ்ந்து பதிப்பிக்க வாய்ப்புண்டு. இக்காரணங்களால்தான் நூற்பா 'முறை' பிறழ்ந்திருக்க வேண்டும்.

முடிவுரை

தொல்காப்பியர் தனக்கென்று பல்வேறு 'ஆராய்ச்சிமுறை'களை உருவாக்கிக் கொண்டு, ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொரு விதமான 'ஆராய்ச்சிமுறை'யினை மேற்கொண்டுள்ளார். இதற்குக் காரணம் அவரது காலகட்டத்தில் 'ஆராய்ச்சிமுறை' வன்முறைப்படுத்தப்படவில்லை என்பதை அவரது 'ஆராய்ச்சிமுறை'யிலிருந்தே அறிய முடிகின்றது. தொல்காப்பியர் ஓர் 'ஆராய்ச்சியாளர்' என்பது நாமனைவரும் அறிந்த உண்மை. இவவுண்மை மேலும் வலுப்பெற அவர் மேற்கொண்ட ஆராய்ச்சிமுறைகளும் துணைசெய்கின்றன.

'ஆராய்ச்சிமுறை' என்பது வரன்முறைப்படுத்தாதக் காலக்கட்டத்திலும் 'ஆராய்ச்சிமுறை' இருந்தது என்பதிலிருந்து, ஒவ்வொருவரிடத்திலும் 'ஆராய்ச்சிமுறை'-யானது இயல்பாகவே அமைந்துள்ளது என்பதை அறியலாம்.

இன்றைய 'ஆராய்ச்சிமுறை'கள் பலவற்றைத் தொல்காப்பியர் அன்றே கையாண்டிருப்பதால், இன்றைய 'ஆராய்ச்சி முறை'களின் தோற்றுவாயாக தொல்காப்பியர் விளங்குகிறார் எனலாம்.

ஆய்வுக்குத் 'திட்டம்' என்பது மிக இன்றியமையாதது என்பதை உணர்ந்த தொல்காப்பியர், மிகத் தெளிவாகத் திட்டம் தீட்டி செயல்பட்டிருக்கின்றார் என்பதை அவரது 'ஆராய்ச்சிமுறை'களிலிருந்து கண்டறிய முடிகின்றது.

தொல்காப்பியம் முழுமையும் ஆராய்வோமானால் இன்னும் பல புதிய உண்மைகள் கிடைக்குமென்பதில் ஐயமில்லை.

முதன்மைச் சான்றாதாரம்

இளவழகனார் (ப.ஆ), 'தொல்காப்பியம் - விளக்கக் குறிப்புக்களுடன்' கழக வெளியீடு, சென்னை, 1943

# நாட்டுப்புற இலக்கியத்தில் உளவியல்

பி. சேதுராமன்
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழாய்வுத் துறை, தேசியக் கல்லூரி,
திருச்சிராப்பள்ளி - 1.

நாட்டுப்புற இலக்கியங்களில் கிராமிய மணம் மட்டும் அல்லாமல் கிராமங்களின் மனமும் வெளிப்படுகிறது. கிராமத்து மக்களின் மனக் கண்ணாடிகளே இவ்விலக்கியங்கள் எனலாம். இத்துறை தற்காலத்தில் வேகமாக வளர்ந்து வருகிறது.

நாட்டுப்புற இலயக்கியத்தை ஆராய்பவர்கள் கிராம மக்களின் ஆன்மாவை வெளிப்படுத்துகின்றனர். அதில் சமூகப் பண்பாடும் மரபும் கலந்திருக்கும். உளவியலுக்கு நாட்டுப்புற இலக்கியங்கள் பெருந்துணை புரிகின்றன. இவ்வாறு ஊகத்தின் அடிப்படையில் நடத்தப்பெறும் ஆய்வினை உளவியல் ஆய்வுக் கோட்பாடு (ளலஉாழயயெடலவஉைய) என்பர். சிக்மண்ட் ஃபிராய்டு போன்றவர்கள் இத்தகைய ஆய்வில் பெரிதும் ஈடுபட்டார்கள்.

தாலாட்டுப் பாடல்கள்

இன்பம் துன்பம்

உள்ளததில் துன்பம் தாங்க இயலாத நிலையில் அதனை எடுத்து வெளியே சொல்லுவது ஆறுதல் பெற வழியாகும். அது போலத் தன் பிறந்தகப் பெருமை, உடன் பிறந்தோர் தரும் சீர்வரிசைகளின் உயர்வு, குழந்தையின் அருமை பெருமைகள், அது பிறந்த குடிப்பெருமை ஆகிய பலவற்றை வாய்விட்டுச் சொல்வதும் மனமகிழ்ச்சியை அதிகப்படுத்தும். துன்பம் பிறரிடம் சொன்னால் குறையும், இன்பம் பிறரிடம் சொன்னால் மிகும். இது மனவியல் உண்மையாகும். எனவேதான் தாய்மார்கள் தம் துன்பங்களையும் இன்பங்களையும் வாய்விட்டுப் பாடுகிறார்கள்.

"உன் அரிய அம்மான்மார்
என்ன கொண்டு வந்தார்கள்?
கொத்துவிடா நெத்தும்
கோதுபடா மாங்கனியும்"

இவ்வாறு தன் உடன் பிறந்த சகோதரர்கள் தன் குழந்தைக்குக் கொண்டு வந்த பரிசுகளை விளக்கிப் பாடுகிறாள். ஒன்று விடாமல் உயர்த்தி உயர்த்திக் கூறுகிறாள். இதனால் அவளது மகிழ்ச்சி அதிகரிக்கிறது. பிறந்த வீட்டுப் பெருமை பேசுவதில் அவர்களுக்கு மகிழ்ச்சி ஊற்றென ஊறுகிறது.

"ஏழைக் குடிசையிலே
ஏன் பிறந்தாய் செல்வமுத்தே
எத்தனையோ சீமாட்டி
ஏங்கித் தவங்கிடக்க
என் வயிறு தான் தேடி
ஏன் பிறந்தாய் செல்வமுத்தே"

என்று பாடும் தாயின் மனதில் வேதனை குறை வழி இருக்கிறது.

நிறைவேறாத ஆசைகள்

தாலாட்டுப் பாடல்கள் தாய்மார்களின் நிறைவேறாத ஆசைகளில்

வெளிப்பாடுகளாக விளங்குகின்றன. கிராமத்து மக்கள் தம்மால் வாழ முடியாத வாழ்வினைக் கற்பனையில் வாழ எண்ணுகிறார்கள். தமக்குக் கிட்டாத ராஜவாழ்க்கை அவர்களுக்குக் கனவுகளாக விரிகின்றன. இக்கற்பனைகளும் கனவுகளும் தாலாட்டின வடிவத்தில் வெளிவருகின்றன. உளவியல் அடிப்படையில், ஆசைகள் சொல்லப்படுவதால் பாதி நிறைவேறி விடுவதாகக் கருதுகின்றனர்.

ஆண்டம்மான் என்ன தந்தான்
ஆனை கொடுத்து விட்டான்
செல்லம்மான் என்ன தந்தான்
செம்பவழத் தொட்டில் இட்டான்
பொற்சங்கால் போட்டினால்
புத்தி குறையுமென்று

---

பட்டு விலை மதிக்கப்
பத்து பெறும் உங்கள் அம்மான்

இப்பாடல்களில் தங்கம், வெள்ளி, முத்து, பவளம் போன்ற விலையுயர்ந்த பொருட்கள் இவர்களால் விலைமதிக்கப்படுகின்றன. குழந்தைகளின் பெற்றோர்களும் மாமன்மார்களும் மகாராசர்களாகவும், குபேரர்களாகவும், தாட்டியவான்களாகவும் விளங்குகின்றனர். நாராயணர் சங்கும் இவர்களுக்கும் எளிதில் கிட்டுகின்றனர்.

இக்கற்பனைகளும் கனவுகளுமே கிராமத்து மக்களின் வாழ்வியலாகும். கவலைகளையும் துன்பங்களையும் மனவியல் அடிப்படையில் இவர்கள் தற்காலிகமாக மறக்க இவை உதவும்.

விளையாட்டுப் பாடல்கள்

பல விளையாடல்கள் குழந்தைகள் தமது பிற்கால வாழ்விற்குரிய முயற்சிகளாக அமைந்துள்ளன. தட்டலங்கா புட்டலங்கா என்ற விளையாட்டினைச் சான்றாக எடுத்துக் கொள்ளலாம். தாய்க்கிழவி ஒருத்தி 'தட்டலங்க புட்டலங்கா' என்ற பாடலைக் குழந்தைகளின் காலைத் தொட்டு எண்ணுவாள். குழந்தைகள் எதிர் எதிராகக் காலை நீட்டி உட்கார்ந்து கொண்டிருக்கும். 'எந்தக்காய் சாயுமோ, இந்தக்காய்' என்று சொன்னவுடன் குழந்தைப் படுத்துக் கொள்ள வேண்டும். எல்லோரும் சாய்ந்தபின், நெல் வேகவைப்பதாகவும், காயப் போடுவதாகவும், காய்ந்த நெல்லைப் பதம் போடுவதாகவும் பாவனை செய்ய வேண்டும். குழந்தைகளின் தாடையைத் தட்டி கடக்கென்று சத்தம் வருமாறு செய்வாள். சத்தம் வந்தால் பதம் ஆகிவிட்டது என்று பொருள். பிறகு நெல்குத்திட குழந்தைகளின் கால்களைத் தரையில் தட்டுவர் அப்போது,

"சின்ன உலக்கையைக் குத்திகுத்தி
பெரிய உலக்கையைக் குத்திகுத்தி
சீமாட்டி வச்ச உலக்கை
சிங்கு சிங்கின்னு குத்துது" என்று பாடுவர்.

நெல் குத்தியவுடன் விறகு எடுக்கக் காட்டுக்குப் போவார்கள். பாட்டிக் கிழவியோ குழந்தைகளை வரவேண்டாம் என்று தடுப்பாள். குழந்தைகளோ அவளிடம் ஒற்றைக்கால் செருப்பைக் கேட்கும். அவளோ அவர்களை துரத்துவாள். இந்த விளையாட்டில் பெண் குழந்தைகள் ஈடுபடும். இவர்களின் வாழ்வில் நெல் அறுத்தல், அவித்தல், காயவைத்தல், பதம் பார்த்தல், குத்துதல், விறகு பொறுக்குதல் போன்றவை பயிற்சியாகிறது.

தொழில் பாடல்கள்

தொழில் உடலுக்குத் துன்பம் தருவது போலவே உள்ளத்துக்கும் சோர்வு தருகிறது. உடல் துன்பம் உள்ளத்தையும் பாதித்து துன்பம் தந்து சோர்வடையச் செய்கிறது. இந்தச் சோர்வையும் துன்பத்தையும் போக்கிட தொழிலாளர்கள் பாடல்களை பாடுகின்றனர். இப்பாடல்களில் சிற்றின்பச் சுவையும் பேரின்பச் சுவையும் கலந்து வருவதுண்டு. சிற்றின்பச் சுவையுடன் பாடும்போது அவர்கள் சுயஇன்பம் பெறுகின்றனர். பேரின்பச் சுவையுடன் பாடும்போது அவர்கள் காப்பு கிடைப்பதாக நம்புகின்றனர்.

நாற்றுப் பறிப்புப் பாட்டினை இரு குழுவினர் மாறி மாறிப் பாடுவார்கள். நாற்றைப் பறிப்பது முடியாகக் கட்டுவது, கட்டைச் சுமப்பது, நாற்று நடுவது ஆகியவை இப்பாட்டில் இடம் பெறும்.

"நாற்றையெல்லாம் பிடுங்கையில் ஏலங்கிடி லேலோ
நண்டும் சேர்த்துப் பிடிக்கிறாங்க - ஏலங்கிடி லேலோ
முடிஞ்சுவச்ச முடிச்சை யெல்லாம் - ஏலங்கிடி லேலோ
முழங்காலிலே மோதியடிப்பார் - ஏலங்கிடி லேலோ
பெரியகட்டை சரியாவைத்து ஏலங்கிடி லேலோ
பெருமையாய்த்தான் தலையில் வைத்து ஏலங்கிடி லேலோ
இடுப்பிலொரு கையும் வைத்து ஏலங்கிடி லேலோ
அடுத்த வயல் போறாங்கடி ஏலங்கிடி லேலோ" என்று பாடுகின்றனர்.

ஏற்றம் இறைக்கும் தொழிலாளர்கள் ஏற்ற மரத்திற்கு மேல்நின்று வேலை செய்வார்கள், இவ்வேலையிலுள்ள ஆபத்தை நீக்கிட

"ஒன்பதே கோவிந்தம்
உமையவளே தஞ்சம்
உமையவளே தாயே
பத்தே கோவிந்தம
பார்வதியே தஞ்சம்"

என்று பாடுகின்றனர். இதனால் காப்புக் கிடைக்கும் என்ற எண்ணம் உளவியல் அடிப்படையில் கிடைக்கிறது.

திருமணப் பாடல்கள்

நல்ல சொற்களைக் கேட்கின்ற மனம் மகிழ்ச்சி அடைகின்றது. தீய சொற்களைக் கேட்கின்ற மனம் வருத்தம் அடைகின்றது. ஒருவரை ஒழிக ஒழிக என்று அடிக்கடி திட்டுவதால் திட்டு கேட்டவர் மனவியல் அடிப்படையில் பாதிக்கப்படுகிறார். ஒருவரை வாழ்க வாழ்க என்று அடிக்கடி வாழ்த்துவதால் வாழ்த்தப்படுபவர் மனவியல் அடிப்படையில் பயன் பெறுகிறார். மல்லிகைத் தொடுப்பவர் கைகளிலும் அணிபவர் மார்பிலும் மணம் பரப்புவது போலவே வாழ்த்துச் சொல்பவரையும் கேட்பவரையும் மகிழ்ச்சிப்படுத்துகின்றது. திருமண வாழ்த்துப் பாடல்கள் இந்த உளவியல் அடிப்படையில்தான் பாடப்படுகின்றன. இல்லறத்திற்குள் நுழையும் மணமக்கள் வாழ்த்துதலைக் கேட்டு மனம் மகிழ்கின்றனர்.

"கட்டின மாங்கலியம்
கண் நிறைந்த மாங்கலியம்
பூட்டின மாங்கலியம்
புகழுடனே தான் வாழி
____________________
____________________
உடுத்தின கூறை
உரிமையுடன் தான் வாழி"

இப்பாடலில் மாங்கலியம் வாழி என்றும், ஆடை வாழி என்றும் வாழ்த்துகிறார்கள். அத்துடன் ஆல், அருகு, மூங்கில் ஆகியவை கிளைத்து வாழ்வது போல் வாழ்ந்திருப்பீர் என்றும், மகிழ்ச்சியுடன் வாழ்ந்திருப்பீர் என்றும் வாழ்த்துகின்றனர். இவ்வாழ்த்துதல்களே உளவியல்படி இவர்களுக்கு வாழ்வினைக் கொடுக்கின்றது.

ஒப்பாரிப் பாடல்

ஒப்பாரிப் பாடல்களைச் சோகச் சுமைதாங்கிகள் என்று சொல்லலாம். இப்பாடல்களால் அவர்களின் சோகங்கள் குறைகின்றன. சோகம் சொல்லச் சொல்லக் குறையும் தன்மையை உடையது.

அன்னையை இழந்த பெண்ணின் அவலம்

தாய்பாசம் உலகில் ஈடு இணையற்றும் உணர்ச்சியின் வடிவமானது அவளுக்காக அழுபவர்களை வளர்த்த தெய்வம் அந்தத் தாய் அனைவரையும் தவிக்கவிட்டு இறந்தவுடன் இறந்த தாய்க்காக அழுபவர்களின் பாடல்களில் தாய்மையின் வரலாறு தவழ்ந்து வருகிறது.

"மார்மேலே தொட்டி கட்டி - எனக்கு
மடிமேல் நடை பழக்கி
தோள் மேலே தொட்டி கட்டி - எனக்கு
துடைமேல் நடை பழக்கி
வளர்த்த அருமையென்ன - என்னை
வைத்திருந்த நேர்த்தி என்ன?"

என்று ஒப்பாரி வைத்து தன்னுடைய மனக்கவலையை மறக்கிறாள்.

மனிதன் பிறந்தது முதல் அவன் இறக்கும் வரையுள்ள இடைப்பட்ட காலங்களில் தாலாதட்டுப் பாடல், நிறைவேறாத ஆசைகளுக்கானப் பாடல், விளையாட்டுப் பாடல், வினாவும் விடையும்மான பாடல், தொழில் சம்மந்தமான பாடல், புராணங்கள் தொடர்பான பாடல்,திருமணப்பாடல், ஒப்பாரிப்பாடல், ஆகிய நாட்டுப்புற பாடல்களை பாடியுள்ளனர். அப்பாடல்களில் உளவியல் சிந்தனைகள் பல புதைந்து கிடப்பதை இக்கட்டுரையின் மூலம் அறியலாம்.

# மருத்துவ இதழ்களின் இதழியல் கூறுகள்

ந. சிவசுப்பிரமணி
ஆய்வாளர்
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021.

இதழியல் துறையின் தொடக்க காலம் முதல் இன்று வரை காலந்தோறும் தேவைக்கேற்ப இதழ்கள் தோன்றி வருகின்றன. பலநூறு இதழ்களைப் பெற்று விளங்கும் தமிழ் இதழியல் துறையில் மக்களின் உடல் நலனைக் கருத்தில் கொண்டு பல மருத்துவ இதழ்கள் வெளிவந்தன. இதில் மருத்துவக் கட்டுரைகளோடு சிறுவர் முதல் பெரியவர் வரை அனைவருக்கும் உண்டாகக்கூடிய நோய்கள் பற்றியும், அதைத் தீர்க்கும் வழிமுறைகள் பற்றியும் அறிவுத்திறன் போட்டி, துணுக்குகள் மற்றும் பல சிறப்பு அம்சங்களைக் கொண்டு வெளிவரும் மருத்துவ இதழ்களை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். 2002 - ஆம் ஆண்டு மே மாதம் வெளிவந்த மாத இதழ்களான மருத்துவர், ஹெல்த் ஹெல்த்டுடே, ஹோமியோபதிச் சுடர் எனும் நான்கு இதழ்கள் மட்டும் ஆய்வுக்களமாக அமைகின்றன.

**இதழியல் கூறுகள்**

மாத இதழ்களாக வெளிவரும் மருத்துவ இதழ்களின் கூறுகளை புனைவுகள் அல்லாதன என்ற வகையில் மட்டுமே அடக்கலாம். இந்த இதழ்களில் புனைவுகள் (குறைவழைளெ) இடம் பெறுவதில்லை. கட்டுரை, மருத்துவக் குறிப்புகள், மருத்துவ அறிவுப்போட்டி, வாசகர் கடிதம், விளம்பரங்கள், கேள்வி-பதில், படங்கள் எனும் கூறுகள் மருத்துவ இதழ்களில் உள்ளன.

**கட்டுரைகள்**

மருத்துவர், ஹெல்த், ஹெல்த்டுடே, ஹோமியோபதிச் சுடர் எனும் நான்கு இதழ்களும் பல கட்டுரைகளை வெளியிட்டுள்ளன. கட்டுரைகள் அனைத்தும் மருத்துவச் செய்திகளை உள்ளடக்கியவையாக உள்ளன. மருத்துவர் இதழில் 16 கட்டுரைகள் வெளியிடப்பட்டுள்ளன. அவற்றுள், மனிதர்களின் முடி அமைப்பைப் பற்றிய கட்டுரையும், வெங்காயத்தின் மருத்துவக் குணங்கள், மே மாதத்தில் நமக்குக் கிடைக்கக்கூடிய மூலிகைகள் என்பன பற்றிய கட்டுரைகளும் சிறப்பானவையாக உள்ளன.

ஹெல்த் டுடேயில் 30 கட்டுரைகளும், ஹோமியோபதிச் சுடரில் 13 கட்டுரைகளும், வெளியிடப்பட்டுள்ளன. இந்தக் கட்டுரைகள் நோய்க்கான காரணங்களையும் அவற்றைத் தடுக்கும் வழிமுறைகளையும் கூறுபவைகளாக அமைக்கப்பட்டுள்ளன.

**மருத்துவக் குறிப்புக்கள்**

மக்கள் அனைவரும் அறியும் வண்ணம் மருத்துவக் குறிப்புக்கள் அடங்கிய செய்தித் துணுக்குகள் அதிக அளவில் மருத்துவ இதழ்களில் வெளியிடப்படுகின்றன. மருத்துவர் இதழில் ஒவ்வொரு பக்கத்தின் கீழ்ப்பக்கத்தில் வெளியிடப்படுகின்றன. மருத்துவர் சான்றாக "மஞ்சட்காமாலை நோயால் பாதிக்கப்படுவது கல்லீரல்"1 என்று பதினொன்று மற்றும் பன்னிரண்டாம் பக்கங்களில் குறிப்பிடப்பட்டுள்ளதை எடுத்துக்காட்டலாம்.

மருத்துவ அறிவுப் போட்டி

அறிவுத் திறனை வெளிப்படுத்தும் கருவி போட்டி ஆகும். போட்டி இருவரிடையோ, அதற்கு மேற்பட்டவர்களிடையோ நிகழும். "இதழ்கள் நடத்தும் அறிவுத்திறன் போட்டியைப் பெரும்பான்மையான இதழ்கள் வெளியிடுகின்றன"2. அதேபோன்று மருத்துவ இதழ்களும் அறிவுப் போட்டியை நடத்துகின்றன.

ஹெல்த் இதழில் சரியானதைப் பொருத்திடுக என்று ஒருபுறம் பத்து நோய்களும் அதற்கு எதிர்ப்புறம் பத்து மருந்துகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

வாசகர் கடிதம்

வாசகர்களின் கருத்துக்களைத் தொகுத்து வாசகர் கடிதங்களாக வெளியிடுவதன் மூலம் வாசகர்கள் மகிழ்ச்சியடைகின்றனர். இக்கடிதங்கள் இதழில் உள்ள பிரச்சினைகளையும், சிக்கல்களையும், வெளிக்கொணரும் ஒரு கருவியாகப் பயன்படுகின்றன. ஆய்விற்குட்பட்ட இதழ்களில் ஹெல்த். ஹோமியோபதிச்சுடர் ஆகிய இதழ்கள் மட்டுமே முறையை 'அன்புள்ள ஆசிரியருக்கு'. 'சார்போஸ்ட்' என்று வாசகர் கடிதங்களை வெளியிடுகின்றன. அக்கடிதங்களில் ஒன்று, 'வலியில்லாத பிரசவம்' என்ற தலைப்பில் கண்மணி என்பவர் திருவாரூரிலிருந்து எழுதியது. "பிரசவத்தை மறுபிறவி என்றே சொல்வார்கள். பெண்களது பிரசவகால பிரச்சினைகளை அந்தக்கால மருத்துவத்தையும், நவீன மருத்துவத்தையும் ஒப்பிட்டு ஒரு கதை போல எழுதியிருப்பது பாராட்டுக்குரியது. சுகமாக சுமையை வலியின்றி இறக்கி வைக்க ஆலோசனை தந்திருப்பது எல்லோருக்கும் இனிப்பான செய்தியாக இருக்கும்"3. இவ்வாறு வாசகர்களின் கடிதங்களோடு அவர்களின் முழுமையான முகவரியுடன் இவ்விரு இதழ்களும் வெளியிடுகின்றன.

விளம்பரங்கள்

விளம்பரம் என்பது இதழின் உள்ளடக்கப் பகுதிகளில் ஒன்றாகிவிட்டது. செய்திகள், கதை, கட்டுரைகள் வெளியிடுவதைப் போன்றே விளம்பரங்களும் வெளியிடப்படுகின்றன. மேலும் விளம்பரம் என்பது குறைந்த செலவில் நிறையப் பேருக்கு அவர்களை வாங்கத் தூண்டும் வகையில், கருத்துக்களை, பொருள்களை, பணிகளைப் பற்றிக் கவர்ச்சியாகச் சொல்லுகின்ற ஒரு முறையாகும். இதைப் போலவே மருத்துவ இதழ்களும் தமது இதழ்களில் விளம்பரங்களை வெளியிடுகின்றன. ஹெல்த் டுடேயில் 33 விளம்பரங்கள் வெளிவந்துள்ளன. அவற்றில் ஒன்று "3000 வருட சரித்திரம் வாய்ந்த ஓர் அற்புத மூலிகை கருஞ்சீரகம் - மூலிகைகளின் ராணி பராகா"4 என்ற விளம்பரம். மருத்துவர் இதழில் ஒன்பது விளம்பரங்களும், ஹெல்த் இதழில் 18 விளம்பரங்களும், ஹோமியோபதிச் சுடரில் 4 விளம்பரங்களும் வெளியிடப்பட்டுள்ளன. இந்த மருத்துவ இதழ்களில் வெளியிடப்பட்டுள்ள அனைத்து விளம்பரங்களும் மருத்துவ விளம்பரங்கள்தான் மற்ற விளம்பரங்கள் வெளிப்படவில்லை.

கேள்வி - பதில்

வாசகர்களுக்கு ஏற்படும் சந்தேகங்களுக்கு அந்தந்த நோய்க்கு உரிய சிறப்பு மருத்துவரைக் கொண்டு சிறப்பான முறையில் பதில்களைத் தருகிறது ஹெல்த் மற்றும் ஹோமியோபதிச் சுடர். ஹோமியோபதிச் சுடரில் 'டாக்டரிடம் கேளுங்கள்' என்ற பகுதியில் கேள்விகளுக்கு ஆலோசனைகள் வழங்கப்படுகின்றன.

அபிராமி, என்ற திருச்சி வாசகரிடமிருந்து வந்த கேள்வி - "எனக்கு வயது 20 பார்க்க அழகாக இருப்பேன். ஆனால் காலில் பித்த வெடிப்பு உள்ளது. நடக்க முடியவில்லை. வெடிப்பு நீங்க வைத்தியம் கூறுங்கள்" இதற்கு "வெறுமனே பித்த வெடிப்பு என்று கூறி உள்ளீர்கள். அதில் வலியா (அ) எரிச்சலா, ஏதேனும் நீர் போன்று கசிகிறதா போன்ற விபரங்களைச் சேர்த்துக் கூறி இருந்தால் சரியான ஆலோசனை வழங்கலாம், ஆனாலும் பரவாயில்லை. இந்த பனிக் கால வெடிப்புக்கு ஏற்ற ஹோமியோபதி மருந்து, பெட்ரோலியம் (நவசழடநரஅ). இம்மருந்தை 30வது வீரியத்தில் வேளைக்கு 3 மாத்திரை என்ற அளவில் சுவைத்து விழுங்கி வாருங்கள், வெடிப்புகள் மறைந்துவிடும்"5 என பதில் அளித்துள்ளனர். மற்ற இதழ்களில் வாசகர்களின் கேள்வி-பதில் பகுதி இல்லை.

செய்தித் தாள்களையும் பருவ இதழ்களையும் புரட்டினால் கண்ணையும் கருத்தையும் கவர்கின்ற புகைப்படங்கள், ஓவியங்கள், நகைச்சுவைப் படங்கள், சிந்தனைக்குரிய கருத்துப்படங்கள், வரைபடங்கள் ஆகியவை பல வண்ணங்களில் இடம் பெற்றிருப்பதைக் காண்கின்றோம். இன்றைய இதழ்களின் வெற்றிக்குப் படங்கள் பெருந்துணை புரிகின்றன. 'படங்கள் இல்லாப் பத்திரிகை பாழ்' என்று கூறுமளவிற்குப் படங்களின் முக்கியத்துவம் கூடியுள்ளது. ஆதலால் மருத்துவ இதழ்களிலும் பல படங்கள் இடம்பெற்றுள்ளன. இவ்விதழ்களில் காணப்படும் படங்கள் மருத்துவம் சார்ந்தவை. மருத்துவக் கருவிகள், மனித உடல் உறுப்புகள், மூலிகைகள், குழந்தைகள் போன்ற படங்கள் மருத்துவ இதழ்களில் இடம் பெற்றுள்ளன.

முடிவுகள்

ஆய்விற்கு உட்பட்ட மருத்துவ இதழ்களில் வெளிவந்த கட்டுரைகள் அனைத்தும் மக்களின் நலன் பேணுவதை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளன.

செய்தித் துணுக்குகள் மக்களின் மனதில் பதிவதற்கேற்ப ஓரிரு வரிகளில் அமைந்து சிறப்புச் செய்கின்றன.

மருத்துவ இதழ்களில் நடத்தும் பலவித அறிவுத்திறன் போட்டிகளின் மூலமாக வாசகர்கள் நோய்கள் பற்றியும், அந்நோய்க்கான மருந்துகள் பற்றியும் அந்நோய்களால் பாதிக்கப்படும் உறுப்புகள் பற்றியும் அறிந்து கொள்ளுவதற்கு ஓர் அறிய வாய்ப்பாக அவை அமைகின்றன.

வாசகர்களின் கடிதங்கள் இதழ்களின் நிறைகுறைகளைச் சுட்டிக்காட்டுவதால் மருத்துவ இதழ்களின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைசெய்கின்றன.

இவ்விதழ்களில் வெளிவரும் விளம்பரங்கள் அனைத்தும் மருத்துவ விளம்பரங்களாகவே உள்ளன. இவ்விளம்பரங்கள் மூலமாக வாசகர்களைப் பயன்பெறச் செய்வதுடன் இதழ் வளர்ச்சிக்கும் விளம்பரங்கள் உறுதுணையாக அமைகின்றன.

கேள்வி-பதில் மூலமாக வாசகர்கள் தமக்கு ஏற்படும் நோய்கள் பற்றிய ஐயங்களைத் தெரிவித்து, நிவர்த்தி செய்வதற்கு ஏற்ற வகையில் ஆய்விற்குட்பட்ட மருத்துவ இதழ்கள் அமைந்துள்ளன.

குறிப்புக்கள்

1. மருத்துவர் : பக். 11-12
2. பி. பார்வதி, தமிழ் வார இதழ்களில் இதழியல் உத்திகள் (1983), முனைவர் பட்ட ஆய்வேடு, ப.205
3. ஹெல்த் : மே 2002, ப.4
4. ஹோமியோபதிச் சுடர் : மே 2002, ப.27
5. மேலது, ப.28

# தமிழ் மொழி உள்வாங்கிய பிறமொழிச் சொற்கள்

ம. செங்கோல் மேரி
விரிவுரையாளர்
அமெரிக்கன் கல்லூரி
மதுரை

உள்ளத்தில் உதிக்கும் சிந்தனைகளை வெளிக்கொணரும் ஊடகம் மொழி. மநனிதா் ஒருவருக்கொருவர் தொடர்பு கொள்ளும் நிலையில் ஆதிக்க சமுதாயத்தின் பழக்கவழக்கம், கலாச்சாரம் மற்றும் மொழிகளை சிறுபான்மைச் சமுதாயம் சூழலின் காரணமாக ஏற்று அறிந்தும் அறியாமலும் நடைமுறையில் உள்வாங்கிக் கொண்டது. நம் நாட்டில் ஆங்கிலேயர் ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகள் ஆதிக்கம் செலுத்தியதால், பல ஆங்கிலச் சொற்கள் தமிழர்களின் பேச்சு வழக்கில் புகுந்து தமிழோடு தமிழாகக் கலந்துவிட்டது.

ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழி சொற்களைப் பெறும் பெழுது அது அம்மொழியின் சொற்களஞ்சியம். அவ்வாறு பெறும் சொற்கள் அயல்மொழிச் சொற்களாவுமிருக்கலாம். அல்லது நமது மொழிச் சொற்களுக்கு இணையான மருவிய சொற்களாகவுமிருக்கலாம். இவ்வாறு நாம் பெறும் சொற்கள் தமிழ் மொழியின் பண்பாட்டிற்கும், கொள்வதற்கும் பயன்படுகின்றன.

தமிழ்மொழி உள்வாங்கிய பல சொற்களில், சில சொற்களின் பொருளை அறிந்து பயன்படுத்துகிறோம். சில சொற்களை அவற்றின் பொருள் புரியாததாலும் அவை பேச்சுவழக்கில் சிறிது மருவி இருப்பதாலும் சமுதாயத்திற்கு ஊறுவிளைவிக்கும் சொற்களாகவும் பயன்படுகின்றன. எனவே தமிழுக்குள் புகுந்த அயல்மொழிச் சொற்களைப் பற்றிய அறிவைப் பிறருக்குக் கொடுக்க வேண்டும் என்பதும், தவறான புரிதலை அளிக்கும் சொற்களின் உண்மைப் பொருளை எடுத்துச் சொல்வதுமே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

நாம் பேசும் ஒவ்வொரு சொற்களுக்கும் ஒரு பொருள், உணர்வு அதனுள் உண்மை இத்தனையும் இருக்கிறது. இவற்றைப் புரிந்து நாம் பயன்படுத்தாவிட்டால் அர்த்தங்கள் அனர்த்தங்களாக மாறி சமுதாயத்தைச் சீர்குலைத்து விடுகின்றன.

1. 'சிடு சிடு' இச்சொல் 'உானை'. அதாவது பிறரைக் குறை கண்டபிடித்துத் திட்டுவத என்ற பொருளைக் கொடுக்கும் சொல். பிறர் நம்மைத் திட்டுவதை நாம் சிடுசிடு எனப் பேசுகிறார் என்கிறோம். அவன் ஒரு சிடுமூஞ்சி என்பதில் chid என்ற ஆங்கில வார்த்தையின் அர்த்தமும் உணர்வும் இருப்பதை நாம் அறியலாம்.

2. 'ஒசி' என்ற சொல் O.C என்ற ஆங்கில வார்த்தையின் மருஉ ஆங்கிலக் கிழக்கிந்திய கம்பெனி நம்நாட்டை ஆட்சி செய்த பொழுது அதன் ஊழியர்கள் ரயிலில் பயணம் செய்வதற்காக அந்தக் கம்பெனி 'ழுெ ஊழஅியலெ யககயசைள' என்று தலைப்பிடப்பட்ட பயணச்சீட்டை அவர்களுக்கு வழங்கியது. அதைப் பெற்றவர்கள் காசு இல்லாமல் பயணம் செய்தனர். இச்சொல்லின் சுருக்கக் குறியீட்டை நாம் உள்வாங்கிக் கொண்டு காசு இல்லாமல் இனாமாகக் கிடைக்கும் எந்தப் பொருளையும் ஓசி என்று குறிப்பிட்டுக் கூறுகிறோம். இச்சொல்லின் பொருளை நாம் முழுமையாக உள்வாங்கிக் கொள்ளவில்லை என்றே கூறலாம்.

3. 'மெல்ல மெல்ல' என்ற தமிழ்ச் சொல்லிற்கும் Mellow- (Soft, re-

lated) மெதுவாக, ஓய்வாக, இதமாக, என்ற பொருளில் வரும் பிறமொழிச் சொல்லிற்கும் ஒப்புமை உண்டு. 'மெல்லப்போ மெல்லப்போ மெல்லிடையாளே' என்ற பாட்டு They Mellow on the lawn என்ற வாக்கியத்தோடு பொருள் ஒப்புமை தோன்றுவதை நாம் அறியலாம்.

4. 'அரிக்கன்லைட்' என்றும் சொல் Harricane என்னும் அட்லாண்டிக் கடல் புயலின் பெயரைத் தாங்கியுள்ளது. இந்தப்புயல் வீசும் பொழுது அட்லாண்டிக் கடற்கரையில் வாழும் இங்கிலாந்து மக்கள் அந்தப் புயலின் தன்மைக்கேற்ப அமைக்கப்பட்ட அணையமுடியாத இந்த அரிக்கன்லைட்டை அவர்கள் பயன்படுத்தினார்கள். இவ்விளக்கை நம்காட்டிலும் அறிமுகப்படுத்தியதால் நாமும் அதை பயன்படுத்தினோம் அதன் விளைவு இன்று நாம் பெரும்பலான விளக்குகளை இச்சொல்லாலேயே குறிப்பிடுகூறோம் அகல்விளக்கு என குறிப்பிடுவது பேச்சு வழக்கில் அருகிவருகிறது.

5. குண்டர்கள் என்ற சொல் தமிழில் பல புரிதலில் கையாளப்- படுகிறது. gonadola என்ற இத்தாலிய மொழிச்சொல் வென்ஸ் நகரத்துப் படகு ஓட்டிகளைக் குறிக்கும். இவர்கள் சாதாரணமாக முரட்டுக் குணம் படை ந்தவர்களாக இருப்பார்கள். நம்நாட்டில் முரட்டுக் குணம் படைத்தவர்களை குறிப்பிடுவதற்கு பேச்சு வழக்கில் இச்சொல் பயன்படுகிறது. 'குண்டர் தடுப்புச் சட்டம்' என்று சொல்வதும் நம் வழக்கத்தில் உண்டு என்பதை அறியலாம்.

6. filthy என்ற ஆங்கலச் சொல் அசிங்கமான, ஒழுங்கில்லாத என்னும் பொருளில் பயன்படுத்தப்படுகிறது. மேலும் இதன் சரியான உச்சரிப்பு ஃபில்த்தி என்பதாகும். தமிழில் இந்த ஃபி என்ற உச்சரிப்பு இல்லை. அதை 'பி' என்றே நாம் சொல்லிப் பழகிவிட்டோம். (க) என்ற ஒலி ஆங்கிலத்தில் தனித்தன்மை வாய்ந்த ஒலியாகும். இவ்வொலிக்கு நாம் பழக்கப்படாததால் 'கடைவால' (you filthy fellow) என்று ஆங்கிலேயர்களால் சொல்லப்பட்ட இச்சொல் தமிழ் உச்சரிப்பில் 'பில்த்தி' என்று உச்சரிக்கப்பட்டு பிறகு 'புல்த்தி' என்று மருவி இன்று பேச்சுவழக்கில் தகாத ஒரு சொல்லாக பிறரைப் பழித்துப் பேச இச்சொல் பயன்படுத்தப்படுகிறது. இச்சொல்லின் புரிதல் சமுதாய சீர்கேட்டிற்கு வழி வகுக்கிறது என்பதை நாம் அறிவோம். இத்தகு சொற்கள் குறித்த உண்மைப் பொருளை, பயன்பாட்டை அறிதல் நலம் பயக்கும். உரையாடுவதும் உறவுகள் வளர்வதும் பேச்சு வழக்கில் நாம் கையாளும் சொற்களை உணர்ந்து பேசும் பொழுது அவை சமுதாய வளர்ச்சிக்கும், உறவுகளுக்கும் பெரிதும் துணை செய்கின்றன. அவற்றின் புரிதலை நாம் அறியாமல் கையாளும் பொழுது அவை மாற்று விளைவுகளை ஏற்படுத்தி விடுகின்றன.

இவ்வாறு தமிழ் மொழிக்குள் ஆங்கிலச்சொற்கள் புகுந்தது உலகமயமாதலில் தமிழும்

தன் பங்கை ஆற்றியிருக்கிறது என்பதை அறியலாம்.

## தொல்காப்பியம் உணர்த்தும் வாழ்வியல் அறம

கோ. மலர்விழி, எம்.ஏ.எம்.பில்.,
தமிழ்த்துறை விரிவுரையாளர்,
இ.ஜி.எஸ். பிள்ளை கலை,
மற்றும் அறிவியல் கல்லூரி, நாகப்பட்டினம் - 2.

பொருளிலக்கணம் தமிழ்மொழிக்குத் தொல்காப்பியர் வழங்கிய தனிக்கொடை. இது மக்களின் வாழ்விலக்கணத்தை வரையறுக்கும் பொருளியல் சுரங்கமாகும். எழுத்தும் சொல்லும் பற்றி உலகத்தில் உள்ள எல்லா மொழிகளிலும் இலக்கணம் உள்ளது. எழுத்தையும் சொல்லையும் பயன்படுத்தும் மனிதனுடைய வாழ்க்கையை - வாழ்க்கையின் இலக்கணத்தை உணர்த்தும் இலக்கணமாகத் தொல்காப்பியத்தின் பொருளதிகாரம் விளங்குகின்றது என்று தொல்காப்பிய சிறப்பினை உணர்த்துவார் மா. இராச மாணிக்கனார்.

பண்டைத்தமிழர் தம் வாழ்வின் குறிக்கோள்களாக அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையும் கொண்டிருந்தனர். அவர்கள் வாழ்க்கையில் இம் மூன்றும் சிறந்து விளங்கிய நிலையைத் தொல்காப்பியம் தெளிவுபடுத்துகின்றது. பண்டைத் தமிழர் தம் வாழ்வு அகமென்றும், புறமென்றும் இருகூறாகப் பகுத்து நோக்கப்பட்டுள்ளது. இப்பாகுபாடே வாழ்வின் அடிப்படை நிலைகளாகத் திகழ்ந்தவை. அகம், புறம் என்னும் இருவகை நெறிகளும் அறத்தின் தொடர்பு கொண்டு அறம், பொருள், இன்பம் என்ற வளர்ச்சியுற்ற நிலையினை

"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு" - 89 நூற்பா
"அந்நிலை மருங்கின் அறமுத லாகிய
மும்முதற் பொருட்டும் உரிய வெண்ப"

என்ற நூற்பாக்கள் தெளிவாக்குகின்றன. பண்டைத் தமிழர் தான் தனித்து வாழ்ந்த அகவாழ்விலும், பிறருடன் கூடி வாழ்ந்த சமுதாய வாழ்விலும் அறநெறிகளைப் பின்பற்றி வாழ்ந்தனர். அவர்கள் பின்பற்றிய அறநெறிகளைத் தொல்காப்பியப் பொருளதிகாரம் வகுத்து காட்டுகின்றது. அவர்கள் காதலியன் வெற்றியை அகவாழ்வும், வீரத்தின் சிறப்பை புறவாழ்வும் விளக்குகின்றது. தொல்காப்பியர் காட்டும் பண்டைத் தமிழர் தம் வாழ்வியல் அறநெறிகள் இவ்வியலில் ஆய்வு செய்யப் பெறுகின்றன.

### தொல்காப்பியம் உணர்த்தும் அகப்பொருள் அறம்

"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு உருவு நிறுத்த காம வாயில், நிறையே அருளே உணர்வொடு திருவென, முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே" என்ற நூற்பாவில் (மெய்ப்பாட்டியல்-25) தலைமக்களுக்குரிய பண்புளாகத் தொல்காப்பியர் பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உருவம், அன்பு, நிறை, அருள், உணர்வு, திரு போன்ற பத்துப் பண்புகளைக் குறிப்பிடுவர். இப்பண்புகளில் ஒத்த தலைவனும் தலைவியும் அன்பினால் ஒன்றுபட்டு இணைந்து வாழ்வதே அகவாழ்வாகும். இப்பண்புகள் அறத்தின் அடிப்படையாகும். இவற்றை அடிப்படையாகக் கொண்டே இல்லறம் சிறக்கின்றது. அன்பும் அறனும் இல்வாழ்க்கையின் பண்பும் பயனும் என்பதற்கேற்ப அமைந்ததே அக வாழ்க்கை.

அக வாழ்வைக் களவு, கற்பு எனத் தொல்காப்பியம் இரண்டாக பிரிக்கின்றது. களவு பிறர் அறியாமல் மறைவாக நிகழ்வது, கற்பு, பிறர் அறிய வெளிப்படையாக

இல்லறம் நடத்துவது ஆகும். அகவாழ்க்கை அன்பின் ஐந்திணைகளாகிய குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் இவற்றுக்கு பொதுவானது. அகவாழ்க்கையின் இன்பம், பொருள், அறம் ஆகிய அனைத்தும் அன்பின் அடிப்படையில் சிறந்து விளங்குவதை தொல்காப்பியம் உணர்த்துகிறது.

"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே- (நூற்பா 89)

என்ற நூற்பாவில் இன்பத்திற்கு அடிப்படையாக உள்ள இல்வாழ்க்கை தலைவன் தலைவியரிடையே உள்ள பேரன்பின் அடிப்படையில் நிகழ்வதையும், இல்லறத்தில் ஈடுபடும் தலைமக்களின் நோக்கமாக அறம், பொருள், இன்பம் என்ற மூன்றினையும் தொல்காப்பியம் கருதுகின்றது. அறத்தினால் பொருளை இடைவைத்தார். போகம், வீடு இரண்டும் சிறத்தலின் போகம் இங்கு வறி வீடுபேறு அடைவதற்குரிய காரணத்தை முன்னர் கூறினார் என்ற நச்சினார்க்கினியர் உரை இக்கருத்திற்கு உரம் சேர்க்கின்றது. இன்பநாட்டம் உயர்வானது அன்போடு பிறந்த இன்பமானால், அதனால் சிறந்த பொருள் வாழ்வும் அறமும் நிலைபெறும் என்று தொல்காப்பியர் சுட்டுகின்றார்.

தொல்காப்பியர் திணை என்ற சொல்லால் நிலப்பிரிவினை பிரித்துள்ளார். திணை என்னும் சொல் ஒழுக்கம் என்று பொருள்படும். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐந்து திணைகளும் அகனைந்திணை என வழங்கப் பெறுவன ஆகும். ஒவ்வொரு திணைக்கும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியவற்றை வரையறுத்து கூறியுள்ளார். முதற்பொருளினும் கருப்பொருளும் கருப்பொருளினும் உரிப்பொருளே சிறந்தது என்பது தொல்காப்பியர் கருத்தாகும். உரிப்பொருள் என்பது ஐந்து நிலத்து மக்களின் சிறப்பான ஒழுகலாற்றை கூறுவதாகும்.

குறிஞ்சி - புணர்தலும், புணர்தல் நிமித்தமும்
பாலை - பிரிதலும், பிரிதல் நிமித்தமும்
முல்லை - இருத்தலும், இருத்தல் நிமித்தமும்
மருதம் - ஊடலும், ஊடல் நிமித்தமும்
நெய்தல் - இரங்கலும், இரங்கல் நிமித்தமும்

என ஐந்திணைக்கும் உரிய உரிப்பொருள்கள் கூறப்படுகின்றன. இவ்வைந்திணை ஒழுக்கங்களும் அறத்திற்கு உட்பட்டவையாகும்.

"அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை" (குறள் 76)

என்ற குறளின் வழி, இவ்வொழுக்கங்கள் அறத்தின் வழி நிகழ்வதாலும் பாலையாகிய வாகை படலத்துள் அறநிலை கூறுதலாலும் இவை அறமாயின என்று இளம்பூரணர் கூறும் விளக்கவுரை தெளிவுபடுத்துகின்றன.

களவில் அறம்

களவு மணங்குறித்து,

"காம கூட்டம் காணும் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே"

என்பார் தொல்காப்பியர். உரையாசிரியராகிய இளம்பூரணர் களவு என்பது அறமெனில் அறம் அன்று. களவு என்னும் சொல்லை பார்க்கும் பொழுது அறத்தின் வழி

அமையாததாகும். களவாவது பிறருக்கு உரிய பொருளை மறைவாக எடுத்தல், அதுமட்டுமின்றி ஒத்தாருக்கும், மிக்காருக்கும் பொதுவாகிய கன்னியரை உறவினர் கொடுக்காது கன்னியர் தம் ஆசையினால் உறவினரை மறைத்து, புணர்ந்து பிறகு அறநில்ல வழாமல் நிற்றலால் இ∴து அறம் எனப்படும் எனக் களவின் அறநிலை பற்றி தெளிவுபடுத்துகிறார். பிறருக்கு உரியது என்று தாய் தந்தையரால் கொடையாகத் தலைவியை அவர் கொடுப்பக் கொள்ளாது இருவரும் ஒன்றுபட்ட உள்ளத்தோடு எதிர்பட்டு உணர்ந்த களவாதலின் இது பிறருக்குரிய பொருளை மறைவாக பெறுதலால் களவு என்றாயிற்று. இது வேதத்தை "மறைநூல்" என்று கூறியது போலக் கொள்க என்பார் நச்சினார்க்கினியர். வாழ்வியலில் களவு மணம் அறநெறியாக ஏற்கப்பெற்றிருத்தலை இக்கூற்றுகள் உறுதிப்படுத்துகின்றன.

"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி உரைக்குங் குறிப்புரை யாகும்" (நூற்பா 93)

என்ற நூற்பாவில் களவில் இருவர் கண்களும் அறிவு உடன்படுத்தற்குக் கூட்டி உரைக்கும் குறிப்புரையாகின்றன. பெருமையும் அறிவும் மிக்க தலைவனும், நாணமும் அச்சமுங் கொண்ட தலைவியும் ஒருவரை ஒருவர் வேட்கையுடன் காண்கின்றனர். இடைவிடாது நினைத்து களவு வழியில் உறவை வளர்த்து கொள்கின்றனர். இக்களவுக்கு தோழியும் துணை நிற்கிறாள். களவு வாழ்க்கை வாழ்ந்த தலைவன், தலைவியர் அதனை கற்பாக மாற்றிக்கொள்ள வேண்டும் களவு கற்பாகவில்லையெனில் தலைவியின் கற்புக்கு குற்றம் ஏற்படும் அன்றேல் அவள் சாக நேரிடும். எனவே களவை கற்பாக்க தலைவியும் தோழியும்வரைவு கடாவுவர். தோழி தலைவனை, வரையத் தூண்டும் போது இரவு வா என்றும் பகல் வா என்றும் பிறவாறும் அலைக்கழிப்பது வழக்கம். மேலும் களவு ஒழுக்கம், ஒழுகல் நும் குடிப் பிறப்புக்கும் சிறப்புக்கும் பொருந்தாமையால் இனா நீவிர் இவளை திருமணம் செய்து கொள்வதே நல்லது என்று வரைவு கடாவுவாள். அந்நிலையில் தலைவன் வரைவு முயற்சிகளில் ஈடுபடுவான். இவ்வாறு தலைவியின் கற்பு காக்கப்பெற்று கற்புறம் சிறக்கும். இக்கருத்தினை,

"நிலவும் இருளும் போலப் புலவுத்திரைக்
கடலுங் கானலுந் தோன்றும்
மடல்தாழ் பெண்ணையஞ் சிறுநல் லூரே" (குறுந். 81)

என்ற குறுந்தொகைப் பாடல் தொல்காப்பியரின் கருதிற்கு வளம் சேர்க்கிறது.

"புரைநீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்
வரைவுடன் பட்டோர்க் கடாஅல் வேண்டினும்
ஆங்கதன் தன்மையின் வன்புறை உள்பட்டப்
பாங்குற வந்த நாலெட்டு வகையினும்
தாங்கருஞ் சிறப்பின் தோழி மேன"

என்ற நூற்பாவில் அறத்தொடு நிற்றல் என்ற தனிக்கிளவி களவில் உண்டு. இதனை "புரைதீர் கிளவி" என்றும் தொல்காப்பியர் குறிப்பிடுவர். களவைக் கற்பாக்குவதும் கற்பறத்தை வலியுறுத்துவதும் இ∴தேயாகும். தலைவியின் களவொழுக்கத்தை பெற்றோர்க்கு வெளிப்படுத்துங்கால் தலைவி ஏற்கனவே கற்பு நெறிபட்டுவிட்டனர். அறத்தொடு பொருந்தவே நடந்துள்ளார், என்பதனை வலியுறுத்துவதே தோழியின் நோக்கமாகும். இப்பணியை நிறைவேற்றுகின்ற தோழி, தலைவியின் காதலன் எளியன்: பெருமையன்: வேட்கையன் என்றெல்லாம் தாயிடம் கூறி அறத்தொடு நிற்கும் செய்தியை தொல்காப்பியம் கூறுகின்றது. தலைவியின்

சுற்றத்தார் வரைவு இடையூறாயின் அதனை களைந்து தோழியும் தலைவியும் களவுக் காதலனையே கற்பு கணவனாக அடைய முயலும் முயற்சியை அறத்தொடு நிற்றல். இவ்வாறு வரைவு கடாவுதலும் அறத்தொடு நிற்றலும், ஒருவனுக்கு ஒருத்தி என்ற வாழ்வியலறத்தை - கற்பறத்தை வலியுறுத்துகின்றன.

கற்பில் அறம்

கற்பின் இலக்கணம் கூறும் தொல்காப்பியர்

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் பொடுப்பக் கொள்வதுவே" - (நூற்பா 140)

இந்நூற்பா கரணங்களுடன் (சடங்கு) மண வினை நிகழ்ந்ததைக் காட்டுகிறது. கரணம் என்றால் வதுவை சடங்கு என்று பொருளாகும். கொடுப்போர் இன்றியும் கரணம் நிகழ்ந்ததை,

"கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலையான" - (நூற்பா 141)

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

"பறைபடப் பணிலம் ஆர்ப்ப இளைகொள்பு
தொல்மு தாலத்துப் பொதியில் தோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல"

என்ற பாடலில் கற்பிற்கு கரண நிகழ்ச்சி ஒரு கலையாயிற்று. இதனால் கொடுப்போர் இல்லாமல் கரண நிகழ்ச்சி உண்மையாகவும் ஒழுக்கக் குறைபாடு இன்றி நடைபெறும் என்பதை குறுந்தொகை வழி அறிய முடிகின்றது.

"கரணத்தின் அமைந்து முடிந்த காலை
நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணும்
எஞ்சா மகிழ்ச்சி இறந்து வருபருவத்தும்
அஞ்ச வந்த உரிமைக் கண்ணும்"

என்ற நூற்பாவில் தலைவன் தலைவ இருவரிடையே களவில் கட்டுண்டு கிடந்த மனது வெளிப்படுகிறது. மகிழ்ச்சி பெருகுகிறது. தலைவி மாட்டு தலைவன் உரிமை உடையவனாகிறான். மணவாழ்க்கையை அறம், பொருள், இன்பம், ஆகிய நன்னெறியில் செலுத்துகின்றனர். அந்தணர், சான்றோர் ஆகியோரிடத்து அற முறைப்படி நடந்து கொள்கின்றனர். களவுக் காலத்தில் ஏற்பட்ட தவறுகள் ஏதேனும் நடந்திருப்பின் அவை "ஆகாயத்தில் எழுதிய எழுத்து போல அழிந்து போகின்றன". இல்லற வாழ்க்கையின் பயனாகிய மக்கட் பேற்றைப் பெறுகின்றனர். தலைவன் பொருள்வயிற் பிரிவு மேற்கொண்டு இல்லறத்துக்கு வேண்டிய பொருளீட்டி வருகிறான். விருந்தினரை அழைத்து உணவளிக்கச் செய்து விருந்தோம்பலாகிய அறத்துக்குத் துணை நிற்கிறான். இவ்வாறு தலைவன் தனது அறநெறியை பின்பற்றி நடத்தலை தொல்காப்பியம் காட்டுகின்றது.

"அவனறி வாற்ற அறியும் ஆகலின்
பெருமையில் திரியா வன்டான் கண்ணும்" (நூற்பா 145)

இந்நூற்பாவில் தலைவனை நன்குணர்ந்த தலைவி அவனது ஆற்றலையும், அறிவையும் உணர்த்திக் கூறுவாள். தலைவனது பண்பை அளவிட்டுக் கொள்வாள். தனக்கு உரிமை தந்த பெருமை உணர்வாள். புதல்வனை பயத்த நிலையில் காமக் கிழத்தி மாட்டுச் சென்று மேலும் தலைவனிடம் ஊடல் கொள்வாள். அறம்புரி நெஞ்சத்துடன் தலைவன் தலைவியிடம் முகம் மலர்ந்து இனிய வார்த்தைகள் பேசி அவளது

ஊடலை தவிர்ப்பாள். நல்லிசை நயந்த் சான்றோர் கூற்றால் அறத்தை விரும்பும் சிறப்புடையவனாகத் தலைவன் திகழ்கிறான். தான் தீய ஒழுக்கத்தில் ஈடுபட்டிருப்பினும் அதை மன்னித்து விடுமாறு தலைவியின் காலில் விழுந்து தலைவன் வேண்டுகிறான். இவ்வாறு கற்புக் காலத்திலும் இருவர் மட்டும் நிகழும் மனையறம் பற்றி தொல்காப்பியம் விளக்குகின்றது.

இல்லாளுக்குரிய மாண்புகளாக,

"கற்புங் காமமும் நற்பா லொழுக்கம்
அகம்புகல் மரபின் வாயில்கட் குரிய" (நூற்பா 150)

ஆகிய பண்புகளை தொல்காப்பியர் குறிப்பிடுவார். தாயைப் போல் தழுவிக் கொள்ளும் பண்புடையவள் தலைவி என்றும் தலைவனின் சோர்வினைக் காத்தல் தலைவியின் கடமையன்றோ தொல்காப்பியம் மொழிகின்றது.

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
நுண்ணிதன் மகிழ்ந்தன் றொண்ணுதல் முகனே" (குறுந் 167)

என்ற குறுந்தொகைப் பாடல் தலைவன் மீது தலைவி கொண்டிருந்த அன்பை புலப்படுத்தி தொல்காப்பியம் கருத்திற்கு வளம் சேர்க்கிறது.

"தற்புகழ் கிளவி கிழவன் முற் கிளத்தல் -
எத்திறத் தானும் கிழுத்திக் கில்லை
முற்பட வகுத்த இரண்டலங் கடையே" (நூற்பா 178)

இந்நூற்பாவில் தலைவன் பால் தன்னைப் புகழ்ந்து கூறுதலும்தன் உள்ள வேட்கையை உரைத்தலும் ஆகிய பண்புகள் தலைவியால் இல்லையென்றும் களவு வாழ்க்கையில் தலைவன் பால் அதிக அன்பு இருந்தபோதும் அவனை பெறுவதற்காக தலைவி மடலேறுதல் இல்லை என்ற நெறியும் கூறப்பட்டுள்ளது.

"எத்திணை மருங்கினும் மகடூஉ மடன் மேல்
பொற்புடை நெறிமை இன்மையான" (நூற்பா 38)

என்ற நூற்பானது எல்லாக் குலத்தின் இடத்தும் பெண்பால் மடலேறுதல் இல்லை. பெண்பாற்கு இன்றியமையாத பண்பு நாணம் என்பதால் பெண்கள் மடலேறுதல் இல்லை. ஆனால் ஆண்கள் மடலேறுதல் உண்டு என்ற கருத்து புலனாகிறது. தலைவி மடலேறினாளாக கூறும் புலனெறி வழக்கம் பொலிவுடைமையன்று. ஆதலின் அது கூறப்படாது என்ற பொருளினைத் தருகின்றது.

இல்லற இன்பமும் பயனும் குறைவின்றிக் கண்ட பின் இறுதி காலத்தில்

தம் சொல்லாலும் செயலாலும் இந்தச் சமுதாயத்திற்கு நற்பணியாற்றிட வேண்டும் என்பதைத் தொல்காப்பிய வாழ்வியல் அறம் எடுத்துரைக்கின்றது.

# கள ஆய்வு நோக்கில் ஒப்பாரி பாடல்கள்

எம். மருதுபாண்டியன்
வரலாற்றுத்துறை
சரஸ்வதி நாராயணன் கல்லூரி
பெருங்குடி

இந்தியாவில் உள்ள மாநிலங்களில் காணப்படும் நாட்டுப்புறப் பாடல்களை விட அதிக சிறப்பும், பெருமையும் வாய்ந்தது, தமிழ்நாட்டில் வழக்காறுகளில் உள்ள நாட்டுப்புறப்பாடல்கள், அதிலும் மிகவும் சிறப்பு வாய்ந்தது ஒப்பாரி பாடல்கள் ஆகும். இந்த ஒப்பாரி பாடல்கள் பலவிதமாக இருந்தாலும், ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு விதமான பல கருத்துக்களைச் சொல்லக்கூடிய பல ஒப்பாரி பாடல்கள் உள்ளன. அவற்றில் சில ஒப்பாரி பாடல்கள் இங்கு கள ஆய்வு ரோக்கில் ஒரு கிராமப்புற பெண்ணின், கற்பனை நயத்துடனும் எதுகை மோனை நயத்துடனும் கூடி உள்ள மூன்று வகையான ஒப்பாரி பாடல்களை நான் தொகுத்துள்ளேன்.

அவரது பெயர் மீ. சின்னப்பொண்ணு, பிறந்தது விருதுநகர் மாவட்டத்தில் உள்ள நரிக்குடி வட்டாரத்தில் உள்ள உலக்குடி கிராமத்தில் ஒரு பிரபலமான நாடக நடிகர் சாமிக்கண்ணுவிற்கும் மீனாட்சி என்ற தம்பதிக்கும் மகளாகப் பிறந்து பல இன்னல்களுக்குப் பிறகு மீனாட்சி சுந்தரம் என்பவரை மணந்து இன்றும் பல க்'டங்களுக்கும் மத்தியில் வாழ்ந்து வருகிறார். இருந்த பொழுதும் அவர் ஒப்பாரிப் பாடல்கள், மாரடிப்பாடல்கள், பழமொழி எனப் பலவற்றிலும் சிறந்து விளங்குகிறார்.

இந்த கள ஆய்வில் நேரடியாகச் சென்று அவரிடம் கேட்டு எழுதப்பட்ட ஒப்பாரி பாடல்களை மூன்று பகுதியாக பிரித்து தொகுத்தளித்துள்ளேன். அவையாவன

1. ஒரு பெண் தன் தாய் இறந்துவிட்டால் அந்த சோகத்தில் பாடும் பாடல்கள்
2. ஒரு பெண்ணின் தந்தை இறந்துவிட்டால் அதனால் ஏற்படும் இன்னல்களைச் சொல்லும் ஒப்பாரி பாடல்கள்
3. ஒரு பெண்ணின் கணவன் இறந்துவிட்டால் அதனால் அவள் படும் துயரங்களைச் சொல்லும் பாடல்கள்

ஒப்பாரி பாடல்களில் எண்ணற்ற வகைகள் இருந்தாலும் அவற்றில் இம்மூன்றினை மட்டுமே நான் இங்கு தொகுத்து அளித்துள்ளேன்.

தாய் இறந்துவிட்டால் பாடும் ஒப்பாரி பாடல்

ஒரு பெண், தன் தாய் இறந்துவிட்டால் அப்பெண் பாடும் பாடல்கள் மிகவும் சிறப்பாக, எதுகை மோனை நயத்துடனும் வார்த்தைகளை வரிசையாக பயன்படுத்திய விதமும் மிகவும் நேர்த்தியான ஒன்றாகும். அதில் ஒரு இடத்தில் உள்ள பாடல் வரி மிகவும் அழகு, அது என்னவென்றால் கப்பல் வருது என்று அந்த அம்மா கரையில நின்னு பார்த்தார்களாம், ஆனா ஆசையோடு பார்த்த அங்கு கப்பல் வரவில்லையாம் அந்த வருத்தத்தை தன் தாயின் இறப்பில் தெரிவித்து தன்னுடைய துக்கத்தை தெரிவிக்கிறாள். அந்த வரி,

கப்ப வருதுண்டு நான்
கரையேறி போய் பார்த்தேன்
கப்ப வருதும் இல்ல - என்ன பெத்த ஆத்தா

நீங்க இல்லாத சீமையிலே
கடற்கரையும் சோழில்ல

அதனுடைய ஆரம்ப பாடல் வரி,

தென்ன எழுநூறு, தென்னம் பூ முன்னூறு - நான்
தென்ன சுத்தி பூவெடுக்க நா சிறுசில தாயிழந்தேன்
வாழ எழுநூறு வாழப்பூ முன்னூறு - நான்
வாழ சுத்தி பூவெடுக்க - நா
வயசுல தாய் இழந்தேன்
மண்டய் வகுந்தில்ல மகிழம் பூ சூடிலில்ல
மாதம் அறியலயே
மலையில ஒரு ஆதால - நான்
பிறந்த வாசலில்ல நான் மயக்கமில்ல என்றிருந்தேன் - எனக்கு
மலையிடுஞ்சு மரம் சாய - எனக்கு
மயக்கமத்தும் தோனுதில்லள
கரையில ஒரு ஆதால - நான்
நீங்க இல்லாத சீமையிலே
கடற்கறையும் சோழில்ல ......

தந்தை இறப்பிற்கு பாடும் பாடல்கள்

ஒரு பெண் தன்னுடைய தந்தையின் இறப்பின் போது தன் தந்தையைப் பற்றிய எண்ணத்தில், தன்னுடைய தந்தையை ஒரு பெரிய மனிதா் என்று அவரது புகழை எடுத்துக் கூறும் விதத்தில் இந்த ஒப்பாரிப் பாடல்கள் அமைந்துள்ளன. அவை அடுக்குத்தொடா் விரிசையிலும், எதுகை மோனை நயத்துடனும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

காரவீட்டுத் திண்ணையில - நீங்க
காரியங்கள் பேசயில்ல - உங்க
காரியமும் மேப்போகும் - உங்களோட
கருத்த முளி சூதாடும்
ஓட்டு வீட்டுத் திண்ணயில - என்ன பெத்த அப்பா
ஒரு உத்யோகங்கள் பேசயில
ஓடும் சிலையாகும் - நீங்க பாக்கும்
உத்தியோகமும் மேப்போரும்
சந்தன பொங்குப்பெட்டி - நீங்க
சாஞ்சிருந்து சேதி சொன்னா
சாமி தலுகை வரும்,
தனுஸ்கோடி தீா்த்தவரும் - நீங்க
இல்லாத சீமையிலே - எங்களுக்கு
சாமி தலுக இல்ல ....
பொலிஞ்ச கோயிலுக்கு
பால்கொடம் தானமிட்டோம்
பால் கொடமே தேவையில்ல - என்ன பெத்த
பாண்டியரே தேவையிண்டாகளாம்

கணவன் இறப்பின் போது பாடப்படும் ஒப்பாரி பாடல்கள்

ஒரு பெண்ணிற்கு எல்லா உறவுகளையும் விட கணவனே உற்ற உறவாகும். அப்படிப்பட்ட கணவன் இறந்தால், அவள் அடையும் துக்கத்தை அவள் பாடும் ஒப்பாரி பாடல்கள் மூலம் அறியலாம்.

காக்கிம் கருவப்பில்ல - நான்
காய்காய்க்கும் தென்னம்பில்ல - என்ன
காயோடு வெட்டச் சொல்லி
காயிதமே வந்திருச்சு
பூக்கும் கருவப்பில்ல
பூ பூக்கும் தென்னம்பில்ல - என்ன
பூவோட வெட்டச் சொல்லி - ஒரு
புஸ்தகமே விட்டாங்களே
அண்டா விளக்கில்ல
அரளிப்பூவ உள்ளடக்கி - நான்
அண்டா அலுக்கடைய
அரளிப்பூ வாசம் கெட்டேன்
செம்ப வெழக்கில
செம்பகப்பூ உள்ளடக்கி
செம்பே அலுக்கடஞ்சு - நான்
செல்லமக சீர்கெட்டேன்
எட்டூரும் சுத்தியில்ல - ஒரு
இசஞ்ச மன வாராம
எழுதா கணக்கனுக்கும்
ஏடெறியா மோடனுக்கும் - நான்
ஈகவரியே மாலயிட்டேன்
பத்தூரும் சுத்தியில்ல - ஒரு
பதிஞ்ச மன வாராம
படியா கணக்கானுக்கும்
பாடெறிய மோடனுக்கும் நான்
பார்வதியே மாலயிட்டேன்
துலுக்கேன் தெருவுல - நான்
துத்திப்பூ வித்தேன்னே
ஆத்துக்கே போனாலும்
ஆறும் பகையாச்சு
அரச்சு மஞ்ச வீணாச்சு
குளிக்க மஞ்ச கொண்டுல்ல - நான்
குளத்துக்கே போனேன்டா
குளமும் பகையாச்சு
குளிச்ச மஞ்ச வீணாச்சு
தாழி கழுத்தக்காரவுக
தண்ணி நீராடயில
தண்ணி தெரிக்குமிண்டு - நான்
தலைமறைவா நிக்கிறனே

மஞ்ச கழுத்துக்காரி
மஞ்ச நீராடயில
மஞ்ச தெரிக்குமிண்ணு - நான்
மறஞ்சு இருந்தும் பார்ப்பனத்தே
மண்ணில தான் போடலாம - உங்கல
மங்கரையான் செஞ்ச தோசம் - நான்
மாதாவி செய்யலையா
குழியிலதான் போடலாம
குளக்கரையான் திண்ணலாம
குளக்கரையான் செய்த தோசம் - நான்
கொடும்பாவி செய்யலயே .....

இவ்வாறு பாடிவரும் இவள், படித்ததோ மிகவும் குறைவுதான். அதாவது மூன்றாம் வகுப்பு மட்டும்தான். இப்பொழுது இவள் காரியாபட்டி வட்டாரத்திற்குட்பட்ட டி. கடமன்குளம் ஊராட்சியில் உள்ள கீழஉப்பிலிக்குண்டு கிராமத்தில் நான்கு குழந்தையுடன் மிகவும் கஷ்டப்பட்டு வாழ்ந்து வருகிறாள். இப்பாடலை இவள் ஒரு மணிநேரம் மட்டுமல்லாது தொடர்ச்சியாக பல மணிநேரமாக பல கருத்துக்களுடன் பாடும் வல்லமை பெற்றவள். அதோடு மட்டுமில்லாமல் மாரடிப்பாடல்கள் மற்றும் படமொழிகளிலும் கைதேர்ந்தவர்.

ஆய்வில் உதவியவர்கள்

1. மீ. சின்னப்பொண்ணு, கீழஉப்பிலிக்குண்டு, காரியாபட்டி வட்டாரம், விருதுநகர் மாவட்டம்.
2. சங்கரலிங்கம், தமிழ்துறைத்தலைவர், சரஸ்வதி நாராயணன் கல்லூரி, பெருங்குடி, மதுரை
3. எம். காமாட்சி, வரலாற்றுத்துறை, சரஸ்வதி நாராயணன் கல்லூரி, பெருங்குடி, மதுரை

4. என்.எம். மாதே'ன், வரலாற்றுத்துறை, சரஸ்வதி நாராயணன் கல்லூரி, பெருங்குடி, மதுரை

# சிறார் வழக்காறுகளில் நல்லிணக்கம்

த. சுந்தரராஜன்
முனைவர் பட்ட ஆய்வாளர்,
நாட்டுப்புறவியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 10.

சிறார் என்பவர் எட்டு முதல் பதினான்கு வயது உள்ள சிறுவர்-சிறுமியர்களைக் குறிப்பிடுகிறோம். இவர்கள் விளையாடும் விளையாட்டுக்களில் எவ்வாறு ஒற்றுமையுடனும், நல்லிணக்கத்தோடும் விளையாடுகிறார்கள் என்பதனை அறியும் விதத்திலும், சிறார் வழக்காறுகளை பதிவு செய்யும் முயற்சியிலும் இக்கட்டுரை அமைந்துள்ளது.

இன்றைய காலகட்டத்தில் மதம், இனம், மொழி, சாதி, பொருளாதாரம் போன்ற நிலைகளில் பிரிவினைகளும் போராட்டங்களும் பல இடங்களில் நிகழ்ந்து வருவதை செய்தித்தாள், தகவல் ஊடகங்கள் வழி நாம் அறிந்து உணரமுடிகிறது. இத்தகைய சூழலில் மக்கள் அனைவரும் பொறுமையுடன் வாழ்வதற்கு அரசும், பல தொண்டு நிறுவனங்களும் முயற்சித்து வருகின்றன.

ஆனால் சமூகத்தில் முதியோர்களிடையேதான் இத்தகைய முரண்பாடுகள் வளர்ந்தோங்கி காணப்படுகின்றன. சிறார்களிடையே மனநிலையில் எத்தன்மை வேறுபாடின்றி, ஒருவருக்கு ஒருவர் உளமார்ந்த பழக்கவழக்கங்களையும் மேற்கொள்ளும் சூழலையும் காணமுடிகிறது.

திருச்சி மாவட்டம் மணப்பாறை வட்டத்தில் அமைந்துள்ள கோட்டைப்பழுவஞ்சி என்னும் சிற்றூரில் சிறார்களின் வழக்காறுகள் என்னும் பொருண்மையிலும் குறிப்பாக அவர்களின் விளையாட்டின் வழி நல்லிணக்கத் தன்மைகளை ஆராயும் விதத்திலும் களப்பணி மேற்கொண்டு, அவர்களிடம் கிடைத்த வழக்காறுகளின் அடிப்படையில், நல்லிணக்கம் எவ்வாறு இருக்கின்றன என்பதனை ஆராய்ந்து இக்கட்டுரை வடிவமைக்கப்பட்டுள்ளது.

## விளையாட்டு

விளையாட்டு என்பது ஒரு இடத்தில் கால சூழ்நிலை, இயற்கை அமைப்பு அவர்களின் பழக்க வழக்கங்கள் போன்றவற்றை பொருத்தே விளைாட்டு அமைகின்றன, விளையாட்டினால் உடலுக்கும் உள்ளத்துக்கும் வளம் சேர்க்கின்றன. குறிப்பாக, உடல்திறன், அறிவுத் திறன், மன மகிழ்ச்சி போன்ற திறமைகளினால் வாழ்வு உயர்வதற்கு ஒரு வாய்ப்பாக அமைகின்றது.

## சிறார் விளையாட்டுகள்

ஒத்தைக்கு ஒத்தை (ஒருவருக்கு ஒருவர்) குழுவாக விளையாடுவது
ஆண் - பெண் சேர்ந்து விளையாடுவது, ஆண்கள் மட்டும் விளையாடுவது
பெண்கள் மட்டும் விளையாடுவது, விளையாட்டின் வகைகள்

பம்பரம் (குத்துக்கட்டை), கிட்டிபுல், கண்ணாம்பூச்சி, தொட்டு விளையாடுதல்
நீர்மரம், மண்ணில் பொம்மை செய்து விளையாடுதல், அந்திக்கடை சந்திக்கடை
மெத்தை மேலே யாறு, பள்ளாங்குழி, அச்சங்காய்

இது போன்ற ஐம்பதுக்கும் மேற்பட்ட சிறார் விளையாட்டுகள் உள்ளன. விளையாட்டுகள் பாடல் பாடிக்கொண்டு விளையாடுவதும் உண்டு. சில விளையாட்டுகள் எண்களைப் பயன்படுத்தி கொண்டு விளையாடும் விளையாட்டுகளும் உள்ளன. ஒவ்வொரு விளையாட்டும் ஒரு கருத்தாக்கத்தை அடியோற்றி காணப்- படுகின்றன.

பாட்டுப்பாடி விளையாடும் விளையாட்டு

மெத்தையில் பாரு
நானூா
என்ன செய்யிற
குருவி புடிக்கிறேன்
என்ன குருவி
சிட்டுக்குருவி
எனக்கு கொண்ணூா தரியா
தர மாட்டேன்
அப்பென்ன
மெத்தைய விட்டு இறங்கு ...

இதுபோன்ற விளையாட்டுகள் விளைாடும் போது பாட்டு பாடுவதும், கேள்விக்கு பதில் கூறுவதும், மனப்பாடத் திறனை வளர்த்துக் கொள்வதற்கும் உதவுகின்றது.

மண்பொம்மைகள் செய்து விளையாடுதல்

குளத்தங்கரை மற்றும் ஆற்றங்கரையில் உள்ள களிமண்களை எடுத்து சின்ன சின்ன பொம்மைகள் செய்து வெயிலில் காயவைத்து விளையாடுதல். அதாவது விலங்குகளான ஆடு, மாடு, நாய், குதிரை மற்றும் அய்யனார் பொம்மைகளும், கூடை, முறம், அம்மி, ஆட்டுக்கள், குழவி போன்ற புலங்கு பொருள்களும் செய்து விளையாடுவார்கள். இதன் மூலம் அன்றாட குடும்பத்தில் பயன்படுத்தும் புலங்கும் பொருள்களை நினைவுபடுத்தும் வகையிலும், தானும் தன்குடும்பமும் என்ன தெய்வம் வழிபடுகிறோம் என்பதனையும், வழிபாட்டு முறைகளையும் தன்னுடைய செயல்திறனையும் வெளிப்படுத்துகிறார்கள்.

மண்ணால் வீடு கட்டி விளையாடுதல்

மணல்களை உருட்டி வீடுகட்டி விளையாடுவார்கள். வீடுகட்டி விளையாடும் போது வாசல்படி, ஜன்னல், சமையல் அறை, சாமி பூசை அறை, வீட்டுக்கானத் தோட்டம் அமைத்தல் போன்றவற்றை அமைத்து விளையாடுவார்கள். இவ்விளையாட்டின் மூலம் பகுத்துணர்வும், வீடு என்றால் இப்படித்தான் இருக்கும் என்ற எண்ணம் அவர்களுக்குள்ளேயே ஒரு கட்டமைப்பு மனப்பான்மை உருவாகின்றது.

அந்திக்கடை, சந்திக்கடை

இந்த விளையாட்டு ஒரு குழுவாகத்தான் விளையாட முடியும். இதில் இருபாலரும் சேர்ந்து விளையாடுவார்கள். அதாவது இரண்டு குழுவாக பிரிந்து விளையாடுவார்கள். ஒவ்வொரு குழுவுக்கும் ஒரு தலைவர்கள் இருப்பார்கள். இந்த விளையாட்டுக்கான பாடல்,

அந்திக்கடை சந்திக்கடை
ஆவரம்பூ பூத்தக்கடை
வெள்ளி முளைத்த கடை
வெங்காயம் தந்த கடை
காப்புடு கூப்புடு தஞ்சாவூர் ... என்று பாடுவார்கள்.

இவ்விளையாட்டில் தங்களுக்குத் தெரிந்த ஊர்களையும், அந்த ஊரில் தனக்கு தெரிந்தவற்றைச் சொல்லிப் பாடுவதன் மூலம் தெரியாதவர்களும் தெரிந்து கொள்ள முடியும்.

ஜெயம்

உடைந்து போன பல வண்ண வளையல்கள் அல்லது பல வண்ணப் பூக்களைக் கொண்டு விளையாடுவார்கள். யார் அதிக வண்ணம் உள்ள பூக்களையோ அல்லது வளையல்களை சேர்க்கிறார்களோ அவர்கள்தான் ஜெயம் (வெற்றி) என்று கருதுகிறார்கள்.

இதன் மூலம் சிறார்கள் வண்ணங்களைத் தெரிந்து கொள்கிறார்கள்.

ஒவ்வொரு விளையாட்டும் சிறார்களின் அறிவுத் திறனை பெருக்கும் வகையில் அமைந்துள்ளன. சிறார் வழக்காறுகளில் அவர்கள் வாழும் இடங்களில் உள்ள பழக்க் வழக்கங்கள் நம்பிக்கைகள் போன்ற வழக்காறுகள் பொதிந்து இருக்கின்றன. சிறார் வழக்காறுகளின் மூல்ம் நாகரிகமும், கல்வி வளர்ச்சியும் வளர்ந்தோங்குவதோடு அவர்களிடம் உள்ள வழக்காறுகள் அடுத்தடுத்தத் தலைமுறைகளுக்குப் பரவுகின்றன. நகரங்களில் இவ்வழக்காறுகளும், விளையாட்டு முறைகளும் மறைந்து கொண்டே வருகின்றன.

சிறார்கள் மதம், இனம், மொழி, ஜாதி, பொருளாதாரம் போன்றவைகளை முன்னிறுத்திப் பார்ப்பது இல்லை. இவர்கள் விளையாட்டில் போட்டியாக விளையாடினாலும் விளையாட்டு முடிந்தவுடன் ஒற்றுமையுடன் செல்கிறார்கள். சிலபோது அவர்களிடையே உள்ள ஒற்றுமையில் சரிவு ஏற்பட்டாலும், மீண்டும் விளையாடும்போது ஒன்று சேர்ந்து கொள்வார்கள். பெரியோர்களோ, பெற்றோர்களோ சிறார்களின் விளையாட்டில் பாதிப்பு ஏற்படுமாயின், அதை சரிபடுத்தி சிறார்களிடையே பகையை வளர்க்காது இருந்தால், மீண்டும் அவர்கள் ஒற்றுமையோடு இருக்க நேரிடும். சிறுவர்கள் விளையாடும்போது ஏற்படும் காயங்களாலும், அல்லது ஏதோ ஒரு விதத்தில் சிறிய பெரிய பாதிப்புகளாலும் பெற்றோரின் தலையீடுகளினால் சிறார்களிடையே பிரிவுணர்வும், சாதியுணர்வும் ஏற்படுகிறது. பெரியோர்களும், பெற்றோர்களும் உடலில் ஏற்படும் காயங்களை சரிபடுத்தி, மீண்டும் அவர்களை ஒன்று சேர்ந்து விளையாட அனுமதித்தால் சிறார்களிடத்தில் பிரிவுணர்வு ஏற்படாது, நல்லெண்ணங்கள் வளர்ந்தோங்க வழிவகுக்கும்.

தகவலாளர் பட்டியல்

| | | |
|---|---|---|
| ச. அன்புராஜா | - | வயது 7 |
| நீ. சசிகலா | - | வயது 12 |

ஆ. சின்னையா - வயது 14
சி. கமலா - வயது 13

# பாவேந்தர் பாரதிதாசனின் கவிதை நயம்

கோ. தேவி பூமா, M.A., M.Phil.,
தமிழத்துறைத் தலைவர்,
மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி (சுயநிதி),
பசுமலை, மதுரை - 104.

பாரதிக்குப்பின் தமிழ்க்கவிதை உலகில் தனிச் சிறப்பிறப்பிடம் பெற்றவர் பாரதிதாசன். பாரதி தொடங்கிய தமிழ் வழிபாடு பாரதிதாசனால் விரிவு பெற்றது. நிறைவு பெற்றது. பாரதியார் நாட்டு விடுதலையைப் பற்றியும், மக்களின் அகவிடுதலை, பொருளாதார விடுதலை, மொழி விடுதலையைப் பற்றி பரரதிதாசன் அழுத்தமாகப் பாடியுள்ளார்.

புதுச்சேரியில் கனகசபை முதலியார் இலக்குமி அம்மையாருக்கு மூன்றாவது மகனாக 1891ல் ஏப்ரல் மாதம் 29ம் நாள் புதன்கிழமை பாவேந்தர் இம்மண்ணில் தோன்றினார். பெற்றோர் அவருக்குச் சூட்டிய பெயர் சுப்புரத்தினம். வித்துவான் தேர்வை 1908ல் பெற்றார்.

பாரதியினும் எளிய மொழி பழகுதமிழ் தமிழ்க் கவிதைக்கு ஊட்டமாய் திகழ்கிறது. பாரதிதாசனின் சுவடுபதியாத பாடல் இல்லை.

'இதயமெல்லாம் அன்பு நதியினில் நனைப்போம்
இது எனதென்னம் ஓர் கொடுமையைத் தவிர்ப்போம்'

குடும்பத்திலுள்ள அனைவருக்கும் அன்பு என்னும் அடிப்படைப் பண்பு வேண்டும். அன்புக் கயிற்றால் அனைவரும் கட்டுண்டிருப்பர் என்பதைப் பாவேந்தர் புதியுலகு செய்வோம் என்ற தலைப்பில் பாடுகிறார்.

'குழந்தைகள் பள்ளிவிட்டு வந்தார்கள்
குருவிக்கூட்டம் இழந்த நல்லுரிமை தன்னை
எய்தியே மகிழ்வதைப் போல்
எழுந்தோடி மக்கள் தம்மை ஏந்தினாள் இரு கையாலும்'

என அன்பின் பிணைப்பை கவிதையால் வெளிப்படுத்துகின்றார்.

ஆண்கள் மட்டும் கல்வி கற்றால் போதாது பெண்களுக்கும் கல்வி அவசியம் என்பதை இவ்வாறு கூறுகிறார்.

'பெண்கட்குக் கல்வி வேண்டும் - குடித்தனம் பேணுதற்கே
பெண்கட்குக் கல்வி வேண்டும் - மக்களைப் பேணுதற்கே
பெண்கட்குக் கல்வி வேண்டும் - உலகினைப் பேணுதற்கே
பெண்கட்குக கல்வி வேண்டும் - கல்வியைப் பேணுதற்கே'

கல்லாமையினால் ஏற்படும் தீமையையும் விளக்குகிறார்.

'கல்வியில்லாத பெண்ணை
களர்நிலம் - அந்நிலத்தில்
புல் விளைந்திடலாம் - நல்ல
புதல்வர்கள் விளைவதில்லை
கல்வியையுடைய பெண்கள்
திருந்திய கழனி - அங்கே

நல்லறிவுடைய மக்கள்
விளைவது நவிலவோ நான்'

உலகில் இன்று நூற்றுக்குத் தொண்ணூறு விழுக்காட்டிற்கு மேலே, தாம் வாழ்ந்தால் போதும், தன் பெண்ணாட்டி பிள்ளை நன்றாக இருந்தால் போதும், தமக்கு மட்டும் சோறு கிடைத்தால் போதும், வீடும் நல்ல வருவாயும் இருந்தால் போதும் என்றும், இவை இருந்தால் தான் உயர முடியும் என்ற குறுகிய மனப்பான்மையை உடையவர்களைத் தான் பார்க்க முடிகிறது.

'தன் பெண்டு, தன்பிள்ளை, சோறு, வீடு
இவையுண்டு தான் உண்டு என்போன்
சின்னதொரு கடுகு போல் உள்ளம் கொண்டேன்'

இப்படிப்பட்ட உள்ளத்தை உடையவர் கடுகுக்கு ஒப்பானவர் என்று கூறுகிறார்.

பெண்களிடம் ஆட்சி அதிகாரம் இருந்தால் நாட்டிலே நல்லாட்சி நடைபெறும் என்று பெண்ணின் பெருமையைப் பேசுகின்ற 'குடும்ப விளக்கு' என்ற நூலிலே கூறுகிறார்.

'மகளிரெலாம் அரசியலைக்
கைப்பற்றி ஆண்டால்
மாநிலத்தில் போரில்லை
சாக்காடும் இல்லை'

பெண் மக்களிடம் ஆடசியை ஒப்படையுங்கள். அவர்கள் நன்றாக ஆளுவார்கள் என்று அவர் வேண்டவில்லை. அவர்கள் ஆண்டால் மாநிலத்தில் போரும் இருக்காது. சாக்காடும் இருக்காது என்றே உரைக்கிறார்.

பாவேந்தன் தமிழன் பால் கொண்டிருந்த ஈடுபாட்டிமைன உயிர்ப்புள்ள சொற்களால் பாடி நம் முன்னோரின் உணர்வினை எல்லாம் தொடுகின்றார். உயிருக்குச் சமம் தமிழ், அதாவது தமிழே உயிர்! தமிழ்ச் சமூகம் படைத்திடத் தமிழே துணை! உயிருடைமைக்கு அடையாளம் தமிழ் நலம் காப்பதே ஆகும்.

தமிழ் சுவைக்கு ஈடு இணை எதுவிமில்லை. காதலை விட தமிழே சுகம் என்கிறார் கவிஞர்.

'மங்கையொருத்தி தரும் சுகமும் - எங்கள்
மாந்தமிழுக்குக்கு ஈடில்லை என்பேன்'.

பழமை வாதிகளின் பக்கமே போகாமல், பழமைக் கொள்கையில் நல்லவற்றை எல்லாம் கொண்டு, இக்கால் அறியாமையில் விளைந்த மாற்றங்களைக் கூறி, பகுத்தறிவு பாதைகளைக் காட்டி, சீர்திருத்தமான வழியினை ஏற்படுத்தி, நல்லவை நடைபெறப் பாடப் பட்டவையே அவரது கவிதைகள் எனலாம்.

'எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு
எங்கள் பகைவர் எங்கோ மறைந்தர்
இங்குள் தமிழர் ஒன்றாதல் கண்டே'

ஆரியர் இந்நாட்டில் புகுந்த காலம் நாலாயிரம் ஆண்டுகட்கு முன்பாகும்.

பாவேந்தருடைய கடவுட் கொள்கை. அவர் முதன்முதலாக பாரதியார் முன்பாகப் பாடிக் காட்டிய

'எங்கெங்குக் காணினும் சக்தியடா - தம்பி
ஏழு கடல் அவள் வண்ணமடா - அங்குத்

தங்கும் வெளியினில் கோடியண்டம் - அந்தத்
தாயின் கைப்பந்தென ஓடுமென'

என்பதேயாகும். அந்தக் கொள்கையில் உறுதியாக கடைசி வரை நின்றார். கடவுள் பெயரால் நடைபெறும் மூடப்பழக்க வழக்கங்களையும், ஏமாற்றுகளையும் நமக்கு புரியாத வேண்டாத வேற்று மொழியல் அவனுக்கு வழிபாடு செய்தலையும், இறையுருவங்களைப் பார்ப்பனர் மட்டுமே நீராட்டுதல் அணிவித்தல் அழகு செய்தல், வடமொழி மந்திரம் சொல்லுதல், அர்ச்சனைத் தட்டேந்தி வருதல், அதில் போடுகின்ற பணத்திற்கு ஏற்றவாறு சாமி பிரசாதம் கொடுத்தல், சல்வரைக் கண்டு மாலை, மரியாதை, பரிவட்டம் ஏழைகட்கு ஏதோ கடனுக்குத் திருநீறும் குங்குமமும் இவைகளைத் தான் அவர் எதிர்த்திருக்கிறார்.

கவி என்போன் கட்டுக்குள் நிற்காதவன். அவன் கவிகளும் ஒரு கட்டுக்குள் நிற்பன வல்ல. எந்த இடத்திலேனும், எதைப் பற்றியேனும், எந்தச் சூழலிலும் உள்ளத்திலின்று ஊற்றெடுத்து தங்கு தடையின்றி ஓடிவருவதே உண்மைக் கவிதைகள். அந்த வகையில் உள்ளத்திலிருந்து உணர்ச்சிகளோடு வெளிப்படுவதால் அவற்றைப் படிப்போரையும் கேட்போரையும் அக்கவி வெள்ளத்தில் மூழ்கடித்து அக்கவிஞைப் போலவே உணர்வு கொள்ளச் செய்வது பாவேந்தரின் கவிதைகளும் தாம். அவர் கவிதைகள் தம் வேலையைக் குறைவற முடித்து பல மாற்றங்களை, புரட்சிகளை, நல்வினைகளை நம் தமிழகத்தே செய்து முடித்திருக்கிறது.

# பாரதியார் பார்வையில் பெண் விடுதலைச் சிந்தனை

க. வள்ளி.
தமிழ் உயராய்வு மையம்,
மதுரைக் கல்லூரி, மதுரை -11.

தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும் பாரதியாரின் பங்களிப்பு மிக அதிகம். பாறையாக இருந்த மனிதனை சொல்லென்னும் உளியால் சிற்பமாக்கி அவனின் படைப்புக்கள் ஒவ்வொன்றும் பல கோணங்களில் பார்த்து இரசிக்கக் கூடியாதாகவும். சுவைக்கக் கூடியதாகவும், இருக்கின்றன. இப்படைப்புகளில் பெண்களைப் பற்றி பாரதி என்ன சொல்கிறார் என்பதை கீழ்வருமாறு காணலாம்.

பெண்ணியம் என்ற சொல்லிற்கு விளக்கம்

ஆங்கிலத்தில் 'Feminism' என்ற சொல் பெண்கள் பற்றிய அறிவுத்துறை சார்ந்ததாகும் Feminism என்ற சொல் தமிழில் பெண்ணியம் என்று வழங்கப்படுகிறது.

பெண்ணின் முதன்மைச் சிறப்பு

"உலகில் பெண்ணே முதன்மைச் சிறப்புடையவள்ளு மற்ற எல்லாச் சிறப்புகளும் பெண்ணின் சிறப்புக்குப் பின்னதே எனலாம். இயற்கையே பெண்ணுக்கு முதன்மைச் சிறப்பை அருளியிருக்கின்றது. ஊயிர்களைப் பிறப்பித்தும், பேணிக்காத்தும் வாழ்நாளெல்லாம் பிறர்க்கு அன்பு செய்யும் அரும்பெருமை கொண்டவள் பெண். பேண்ணின் முதன்மைப் பெருமையை மறுக்குமிடம் நரகமாகும்ளு ஒப்பி ஓம்புமிடம் சொர்க்கமாகும் என்பர் திரு.வி.க"

பெண்ணின் காதல் மொழி - ஓர் ஆணுக்கு மிகப் பெரிய மலையும் கடுகளவாக மாறியதாம் என்பதை சஞ்சீவிப் பர்வதத்தின் சாரல் என்னும் குறுங்காவியத்தில்,

"கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டிவிட்டால்
மண்ணில் மைந்தருக்கு மாமலையும் ஓர் கடுகாகும்"

வள்ளுவர் பெண்ணின் பெருமையை வாழ்க்கைத் துணை நலம் என்று போற்றுகிறார். இல்லறப் பண்புகள் கொண்டு வாழும் பெண் தன் கணவனின் வருவாய்க்கேற்ற வகையில் செலவுகள் செய்து குடும்பத்தை நடத்துவார் - இக்குடும்பப் பெண் தன்னையும், தன் கணவனையும், பிள்ளைகளையும், உற்றார் உறவினர்களையும் அன்பால் அரவணைத்து வாழ்க்கையை நடத்திவரகின்றாள். கற்பு நெறியில் ஒழுக்கமுடைய பெண்ணாகவும், வாழ்க்கைத் துணைவியாகவும் இருக்கின்றாள் என்பதை வள்ளுவர் இக்குறளில்,

"மனைத்தக்க மாண்புடையாள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"

பாரதியார் தேசிய கீதங்களில் பாரத மாதா, சுதந்திர தேவி, தமிழ்த்தாய் ஆகியோர் தெய்வத்தன்மை பெற்ற தாய்த் தெய்வங்கள் என்று பெருமையாகப் பாடுகின்றார். பெண்கள் அனைவரும் சக்தியின் அவதாரங்கள். இவர்கள் அனைவரும் தெய்வத்தன்மை பெற்றவர்கள் - தெய்வங்கள் என்று பெண்ணை தெய்வமாக வணங்குகிறார்.

"மண்ணுக்குள் எவ்வுயிரும் தெய்வ மென்றால்
மனையாளும் தெய்வ மன்றோ?"

அன்பும், அருளும் கொண்டு உயிர்களைக் காத்தல் தெய்வத்தின் பண்பு

பெண்களிடத்தில் சிறப்புப் பண்புகளாக விளங்கும். அறிவு, அடக்கம், பொறுமை, அன்பு தாய்மை, அழகு, மென்மை, இன்பம் ஆகிய அனைத்தும் பெண்களின் தெய்வப் பண்பாகும். எனவே பாரதியார் பெண்ணை தாயாகவும், தெய்வமாகவும் நினைத்து வணங்க வேண்டும் என்கிறார்.

பெண்களுக்கு ஏற்படும் தடைகள்

பெண்ணின் முன்னேற்றத்திற்கும், உரிமைக்கும், வளர்ச்சிக்கும் பல சாஸ்திர சம்பிரதாயங்களும், சமூக மூடப்பழக்க வழக்கங்களும், மூடநம்பிக்கைகளும் மிகப் பெரும் தடையாகவே இருந்து வருகின்றன எனலாம்.

"பெண்ணுரிமைக்குத் தடையான சாத்திரங்களைச் செல்லரித்துவிட்டனவென்றும், அவற்றை அடுப்பிலிட்டு எரிக்க வேண்டும் என்றும் பாரதி கொதிப்புற்று எழுதினார்".

பாரதி பெண்களுக்கு விடுதலை வேண்டும் என்பதிலும், பெண்ணுரிமையை நிலைநாட்ட வேண்டும் என்பதிலும் தீவிர வேட்கையோடு இருந்தார்.

ஆணுக்கு என்று சொத்துரிமை ஏற்பட்டதோ அன்றே வீட்டிலும், நாட்டிலும் அவனின் கொடி உயர்ந்தது.

"அடுப்பதும் பெண்களுக்கு படிப்பெதற்கு"

என்று நினைத்து பெண்ணை வெறும் காமப் பொருளாகவும், தனக்கு பணிவிடை செய்யும் வேலைக்காரியாகவும், பிள்ளைகளைப் பெற்றுத்தரும் இயந்திரமாகவுமே ஆண்கள் கருதத் தொடங்கினர்.

சங்ககாலம் முதல் இன்று வரை பெண்ணடிமைத்தனம் தான் தழைத்தோங்கி உள்ளது. பெண்ணடிமைத்தனத்தை தாங்காது கொதித்து எழுந்த பாரதி ஆணாதிக்கத்தை வன்மையாக எதிர்த்தார். பெண்ணை அவமதிக்கும் ஆண் வீரனல்ல என்றார். அவன் செய்கின்ற செயல்கள் அனைத்து அநாகரிகமானது என்றும், எந்த விதத்திலும் ஆணுக்குப் பெண் தாழ்வில்லை என்றும், ஆணும் பெண்ணும் ஒருடல் ஈருயிராக வாழும் சிவசக்தி என்றார்.

ஆணுக்கு பெண் இழைப்பில்லை - ஆண் மகனுக்கு நிகராக தடைகளை எல்லாம் தகர்த்து எரிந்து 'சட்டங்கள் ஆள்வதும், பட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் செய்யவேண்டும் என்று உரிமை முழக்கமிடுகிறார்'.

பாரதியார் பெண்களுக்கு வீரம் வேண்டும். அது அவர்கள் வளர்ந்தபின் வராமல் குழந்தையை இருக்கும்போதே இரத்தத்தோடு கலந்து வளரவேண்டும். அவர்கள் கோழையாக இருக்கக்கூடாது என்பதை பாரதியார்

ஓடி விளையாடு பாப்பா - நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா

புதுமைப்பெண்

பெண்களுக்கு இச்சமூகம் இழைக்கும் கொடுமைகளைக் கண்டு கண்டு கொதித்து எழுந்த பாரதி, தங்களுக்கு தடைவிதிக்கும் சமுதாயத்தின் சாஸ்திரங்களையும் முன்னேற்றத்தை முடக்கிவைக்கும் மூடப்பழக்க வழக்கங்களையும் உடைத்து எரிந்து புதிய சமுதாயத்தை உருவாக்கி அதில் புதுமைப் பெண்ணாக புரட்சிநடை போட வேண்டும் என்கிறார். தான் படைத்த காவியத்திலும் பெண் உரிமைகளுக்குக் குரல் கொடுத்துப் போராடும் வீரப் பெண்ணாகவும், ஆணாதிக்கத்தை உடைத்தெறியும் புரட்சிக்காரியாகவும், பெண்ணுரிமையை நிலைநாட்டும் புதுமைப் பெண்ணாகவும்

பாஞ்சாலி சபதத்தில் பாஞ்சாலியை படைத்திருக்கிறார். காதலின் சமத்துவத்தைக் கண்ணமாவின் காதலிலும், குயில்பாட்டின் காதலிலும் எடுத்துக் காட்டுகிறார்.

பாரதி - பெண்களுக்கு விடுதலை வேண்டும் என்று போராடி, பல சதி வழக்கத்தை எதிர்த்தா. அடுப்பூதும் பெண்களுக்கு படிப்பெதற்கு என்று இருக்காமல் மூடப்பழக்கத்தை முறியடித்து தன்னம்பிக்கையோடு செயல்பட வேண்டும். விருப்பம் இல்லாத திருமணத்தை தடை செய்வதும், பிடிக்காத கணவனை விவாகரத்துச் செய்து கொள்ளவும், கணவன் இறந்தால் மறுமணம் செய்து கொள்ள வேண்டும். உடன்கட்டை ஏறும் சதியை முறியடிக்க வேண்டும் என்றார்.

அறியாமை இருளில் மூழ்கித் துன்பமடைந்து, அதைப் போக்க வேண்டுமென்ற கவலையின்றி வாழ்வதை ஒதுக்கிவிட்டு வெற்றிநடை போட்டு சமுதாயம் முன்னேற பெண்கள் அறத்தோடு, செயல்பட்டு அறியாமை இருளை விரட்டி, ஆணுக்கு எந்தவிதத்திலும் பெண் இழைத்தவள் இல்லைஎ ஆணும் பெண்ணும் சரிநிகர் சமமாக வாழ வேண்டும். அப்படி சமுதாயத்தில் பெண்கள் வாழ்வதே பெண்களின் அறம் என்கிறார் பாரதி.

"ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவி லோங்கியிவ் வையந் தழைக்குமாம்"

பெண்களுக்குள்ள அறிவை வளரவிடாது மட்டம்தட்டும் சமூகத்தை நினைத்து கொதித்து எழுந்து அவர்களை வன்மையாக கண்டித்து பெண்களுக்கு இறைவன் இயற்கையாக கொடுத்த அறிவை வளரவிடுங்கள். பெண்களுக்கு அறிவு வளர்ந்தால் சமுதாயம் ஒளிபெற்றுவிடும். பெண்களும் கல்வி கற்க வேண்டும். 'கற்ற பெண்ணே நற்றாய்' என்றார். கண்கள் இரண்டனுள் ஒன்றைக் குத்திக் கெடுத்துவிடுவதன் மூலம் அழகிய காட்சியினை முழுமையாய்க் காணவிடாது செய்யலாமா? பெண்களின் அறிவை வளர்ப்பதற்குரிய வழிவகைகளை ஏற்படுத்தினால் உலகத்திலுள்ள அறியாமை அழிந்துவிடும் என்பதை பெண்ணறிவு என்ற தலைப்பில் பாடலாக வடித்துள்ளார்.

"பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான் - புவி
பேணி வளர்த்திடும் ஈசன்ஞ
மண்ணுக்குள்ளே சிலமூடர் - நல்ல
மாதர் அறிவைக் கெடுத்தார்
கண்கள் இரண்டினில் ஒன்றைக் குத்திக்
காட்சி கெடுத்திட லாமோ?
பெண்கள் அறிவை வளர்த்தால் - வையம்
பேதைமை அற்றிடும் காணீர்" என்றார்.

முடிவுரை

பாரதி இலட்சியப் பெண்மையின் சிகரமாகப் புதுமைப் பெண்ணாக படைத்தார். பல லட்சியங்களில் கூட்டுப் பண்பால் உருவாக்கப்பட்டவளாக பெண்கள் இருக்க வேண்டும் என்றார். கண்ணம்மாவின் உயிர்க் காதல் பண்பும்,, பாஞ்சாலியின் அஞ்சா நெஞ்சமும், வீரமும், குயிலின் விடாமுயற்சியும் போராட்டப் பண்பும் விசாலாட்சியின் தன்னம்பிக்கை மற்றும் பொறுமையும், வீரமும், கல்வியில் மேன்மையுற்ற பெண்களின் கல்விப் பண்பும், தேசப் பணிகள் ஆற்றிய மகளிரின் தொண்டும் ஒருசேர மிளிரும் பான்மையில் பாரதி புதுமைப் பெண்ணைப் படைத்தார். இப்புதுமைப் பெண் - பாரதியின் பார்வையில் பூந்தென்றலாக இருக்காமல் புயலாக மாற வேண்டும். ஆணுக்கு அடிமையாகாமல் - சமஉரிமையோடு கல்வி கற்று அடுப்பூதும் பெண்களுக்கு

படிப்பெதற்கு என்று இருக்காமல் சட்டங்கள் ஆளவேண்டும், பட்டங்கள் செய்ய வேண்டும், தங்கள் அறிவை வெளிகாட்டி அறியாமை இருளை விரட்டி ஆணுக்கு நிகராக பெண் வளரவேண்டும், வாழ வேண்டும். இச்சமூகம் அவர்களுக்கு அந்தஸ்தைக் கொடுக்க வேண்டும், உடன்கட்டை ஏறும் சதியை முறியடித்து மறுமணம் செய்து கொண்டு மாபெரும் சக்தியாக பெண்கள் உலா வரவேண்டும் என்பதே பாரதியின் கனவாகும். அன்று பாரதியின் கனவு ஒவ்வொன்றும் இன்று நனவாகிக் கொண்டே வருகின்றது. எல்லாத் துறைகளிலும் பெண்கள் தன் கால்களை பதித்துள்ளார்கள். பாரதியின் அன்றைய கனவு இன்று நிறைவேறிக் கொண்டே வருகின்றன எனலாம்.

அடிக்குறிப்புக்கள்

1. திரு.வி.க. பெண்ணின் பெருமை, ப.31

2. பாரதியார் கதைகள் 'சந்திரிகையின் கதை' ப.14, 118.
3. பாரதியார் கதைகள், ப.104.

# பசுமலை கிறிஸ்தவ தேவாலயத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

J.S. ஜிஜிகிறிஸ்டோபெல
முனைவர் பட்ட ஆய்வாளர்
மதுரைக்கல்லூரி,
மதுரை - 11.

## முன்னுரை

பசுமலை கிறிஸ்தவ தேவாலயம் பற்றி புராணங்களிலும், வரலாற்று நிகழ்வுகளிலும் செய்திகள் இடம் பெற்றுள்ளன. பசுமலை தேவாலயம் தொடக்க காலத்தில் இன்று வரை எப்படி இருக்கிறது என்றும், பசுமலை தேவாலயத்தின் தோற்றம் வளர்ச்சியும் ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## பசுமலை திருச்சபையின் தோற்றமும் வளர்ச்சியும்

மதுரையில் செமினரி கட்டிடத்தில் ஆரம்ப காலத்தில் வழிபாட்டுக் கூட்டம் நடந்து வந்துள்ளது. மதுரை நகரில் வாழும் கிறிஸ்தவர்களுக்கு ஒரு தேவாலயம் அவசியம் தேவைப்பட்டுள்ளது. இத்தகைய தேவையை அறிந்த அமெரிக்கன் மி'ன் அதற்காக முன் வந்துள்ளது. பசுமலை செமினரி முதல்வர் வில்லியம் டிரேஸியுடன் இணைந்து மி'னரி செர்ரி (ஊறநசசல) என்பவர் செயல்பட அடிமரிக்கன் மி'ன் கேட்டுக் கொண்டது. செர்ரி மிகச் சிறந்த கட்டிட நிபுணர் ஆவார். இவர் தான் கீழவாசலில் உள்ள ஆலயத்தையும் கட்டியவா என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## ஆலயத்தின் தோற்றம்

1845-ஆம் ஆண்டு பசுமலை திருச்சபை உதயமாகியுள்ளது. மி'னரிகளும், செமினரி மாணவர்களும் தொடக்க காலத்தில் உறுப்பினர்களாக இருந்துள்ளனர். 1846-ஆம் ஆண்டு வில்லியம் டிரெஸியும் செர்ரியும் இணைந்து ஆலயம் எழுப்பும் முயற்சியை மேற்கொண்டனர். 1847-ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் ஆலயம் கட்டும் பணி முடிவடைந்துள்ளது.

## ஆலயத்தின் அளவு

250 பேர் ஒரே நேரத்தில் அமர்ந்து வழிபாடு செய்யும் அளவிற்குக் கட்டிடம் கட்டப்பட்டுள்ளது. இவ்வாலயத்தின் அளவு முறையே 60 ஒ 30 ஒ 17 அடி ஆகும்.

## ஆலயச் சிறப்பு

'மி'னெரிகளால் கட்டி முடிக்கப்பட்ட பசுமலை தேவாலயம் இன்றைய சபை மக்களால் 'பழைய கோயில்' என்றும், 'சின்ன கோயில்' என்றும் அழைக்கப்படுகின்றது. பள்ளி மாணவர்களும், ஆசிரியர்களும் 'கிண்டர் கார்டன்' (முனைெநச புயசனநெ) என்று அழைக்கிறார்கள். ஆனால் மி'னரிகள் இவ்வாலயத்திற்குச் சூட்டிய பெயர் 'புதிய இங்கிலாந்து ஆலயம்' என்பதாகும்.1

## பெயர்க்காரணம்

அமெரிக்காவுக்கும், இங்கிலாந்துக்குமிடையே என்றும் நல்லுறவு இருந்ததில்லை. இதனால் மி'னரிகள் 'புதிய இங்கிலாந்து ஆலயம்' என்று குறிப்பிடுவது வியப்பைத் தருவதாகும். 'புதிய இங்கிலாந்து' என்பது திருச்சபை வரலாற்றில்

மிகவும் முக்கியமான ஒன்றாகும். 1847-ஆம் ஆண்டு பசுமலையில் கட்டி முடிக்கப்பட்ட தேவாலயத்திற்கு 'புதிய இங்கிலாந்து ஆலயம்' என்று பெயரிட்டுள்ளனர்.

ஆலயமணி

"பசுமலை தேவாலயத்திலுள்ள 'ஆலயமணி' மிகவும் பெருமைக்குரியதாகும். அமெரிக்காவில் பாஸ்டன் நகரிலிருந்து கொண்டு வரப்பட்டதாகக் கூறுகின்றனர்".2

இவ்வாலயத்திலுள்ள ஆலய மணியில் எடை 366 கிலோ ஆகும். ஆலயமணி தேவாலயதிற்கு முக்கியமான தகவல் பரிமாற்றத்திற்கும், வழிப்பாட்டுக்கும் பயன்படுகின்றது. அதனை,

"சபை மக்கள் ஒழுங்காகக் கூடிவருவதற்கு ஒரு மணி இந்த ஆலயத்திற்குத் தேவைப்படுகின்றது. சுதேசிகளிடம் கடிகாரம் இல்லாததால் ஆராதனைக்கு காலதாமதமாக வருகின்றனர். ஆராதனை முடிந்த பின்னர் கூட சிலர் வருகின்றனர்"3 என்று மி'னரி ஒருவர் கூறுவதிலிருந்து வழிபாட்டில் அனைவரும் ஒரே நேரத்தில் கலந்து கொள்ளவும், அதற்கு முன் அறிவிப்புத் தருவதாகவும் ஆலயமணி இடம் பெறுகின்றது.

ஆலயத்தின் இன்றைய நிலை

சபையில் இடம்பெற்றுள்ளோரின் எண்ணிக்கை அதிகரித்ததன் காரணமாக, புதிய இங்கிலாந்து ஆலயத்தில் இடம் போதாமல், தேசிய நெடுஞ்சாலையையொட்டி, 'ஒயிற்றின் நினைவாலயம்' கட்டப்பட்டுள்ளது. இறைவழி அவ்விடத்தில் தொடங்கிய பின்னர் 'லெனாக்ஸ் அச்சகம்' புதிய இங்கிலாந்து ஆலயத்தில் நடைபெற்று வந்துள்ளது. அச்சகத்தை வேறு இடத்திற்கு மாற்றம் செய்தவுடன் 'கிண்டர் கார்டன்' வகுப்புகள் இதே இடத்தில் நடத்தப்பட்டுள்ளது. பசுமலை 'ஆசிரியர் பயிற்சிப் பள்ளியும்' இவ்விடதில் இயங்கியுள்ளது. பசுமலையின் முதல் மி'னரிகள் கட்டிய 'முதல் தேவாலயம்' என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

ஆலயத்தின் அமைவிடம்

பசுமலை கிறிஸ்தவ மதுரை - கன்னியாகுமரி தேசிய நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. மதுரை பெரியார் பேருந்து நிலையத்திலிருந்து 5 கி.மீ. தொலைவிலும், மாட்டுத்தாவணி பேருந்து நிலையத்திலிருந்து 10 கி.மீ. தொலைவிலும் பசுமலை தேவாலயம் அமைந்துள்ளது. தென் தமிழகத்தில் பாண்டி மண்டலமாகிய பாண்டி நாட்டில் மதுரையில் தென்பகுதியில் அமைந்துள்ளது. தேவாலயம் பசுமையிலேயே அமைந்து 1 கிறித்தவரின்றி பிற மதத்தவர்களும் வழிபடும் புனிதத்தலமாக விளங்கி வருகின்றது.

ஓவியச்சிறப்பு

பசுமலை தேவாலயத்திலுள்ள கண்ணாடியில் இயேசு ஒரு குழந்தையைத் தூக்கி வைத்திருப்பது போல ஓவியம் வரையப்பட்டுள்ளதைக் கண்டு மகிழலாம். குழந்தையைத் தூக்கி வைத்திருக்கும் இயேசுவின் தலைக்கு பின்னால் 'தெய்வீக வட்டம்' வரையப்பட்டுள்ளதால், இயேசுவின் சிறப்பினை அது உணர்த்தவதாக அமைகின்றது. இயேசு குழந்தையைத் தூக்கி வைத்துக் கொண்டு தனித்து நிற்பது எங்கும் காண்பது அரிதாகும். அதுவும் ஆலய பீடத்தின் மேலே இப்படியொரு படம் இருப்பது மிகவும் அபூர்வமானதாகும். இதனை பசுமலை தேவாலயத்தின் தனியொரு

ஒயிற்றின் நினைவாயலம்

இன்று 'சின்னக் கோயில்' என்று அழைக்கப்படும் 'புதிய இங்கிலாந்து ஆலயம்' இடங்கொள்ளாது போகவே புதிய ஆலயம் எழுப்ப வேண்டியது

அவசியமானதால் 'கல்லறைத்தோட்டம்' இருந்த இடத்தைத் தேர்வு செய்துள்ளனர்.

"கல்லறை தோட்டம் இடம் மாறியதால் தான் பசுமலையில் அடக்கம் செய்யப்பட்ட 'மி'னெரிகளின் கல்லறை' இல்லாமல் வேறு இடத்திற்கு மாற்றம் செய்யப்பட்டுள்ளது.

புதிய ஆலயத்தை கட்டுவதற்கு நிதி தேவைப்பட்டுள்ளது. அமெரிக்காவிலிருந்து தாராளமாக நிதி திரட்டி 1904ஆம் ஆண்டு ஆலயம் கட்டி முடிக்கப்பட்டுள்ளது. இந்த ஆலய கட்டுமான பணிச்செலவில் பாதியை 'எட்வர்டு ஒயிற்றின்' என்ற அடிமரிக்கர் ஏற்றுக் கொண்டு பத்தாயிரம் டாலரை வைப்புத் தொகையாக வழங்கியுள்ளனர். இவ்வாலயம் எழுப்பும் முன்னரே எட்வர்டு ஒயிற்றின் இறந்து விட்டார். எனவே, அவரது பெயரையே இவ்வாலயத்திற்கு சூட்டியுள்ளனர், அன்று முதல் ஒயிற்றின் நினைவாலயம் என அழைக்கப்பட்டு வருகின்றது.

சிறப்பாகக் கருத இடம் உண்டு. அதுபோலவே பசுமலை ஒயிற்றின் நினைவாலய பீடத்தின் மேலுள்ள படக் கண்ணாடியும் பாராட்டுதலுக்குரியதாக அமைந்துள்ளது எனலாம்.

தெய்வீக அன்பு

தமிழ்நாட்டில் உள்ள திருச்சபைகள் யாவும் பசுமலையை நன்கு அறியும். பசுமலை திருச்சபையார் ஆண்டுதோறும் நடத்தி வரும் தெய்வீக அன்பின் திருக்காட்சிதான் எவர் மனதிலும் முதலாவது இடம் பெறும் என்பதில் ஐயமில்லை.

முடிவுரை

பசுமலை கிறித்தவ தேவாலயம் அன்று முதல் இன்று வரை சிறப்பாக அமைந்துள்ளது. இத்தேவாலயம் வரலாற்று நிகழ்வுகளில் முக்கிய இடம் பெற்றுள்ளன. இத்தேவாலயம் மக்களால் இன்றுவரை போற்றப்படுகின்றன.

அடிக்குறிப்பு

1. டி. தேவராஜ், பசுமலை வரலாற்று கதைகள், ப-3
2. ஆய்வாளர் கள ஆய்வில் சேகரித்த தகவல்
3. டி. தேவராஜ், மு.நூ., ப-6
4. மேலது, ப-23

# இருளாயி மல்லையன் சிறுதெய்வ உருவாக்க கட்டமைப்பு

சி. சாந்தி,
முனைவர் பட்ட ஆய்வாளர்
மதுரைக் கல்லூரி, மதுரை -11.

முன்னுரை

இந்த நூற்றாண்டு தந்த அறிவியல் துறைகளுள் நாட்டுப்புறவியல் துறையும் ஒன்று. வாழையடி வாழையாக வாழ்ந்து, வளர்ந்து வருகின்ற நாட்டுப்புற மக்களின் வாழ்வையும், வாழ்வியல் கூறுகளையும் படம் பிடித்துக் காட்டும் இயல் என்று நாட்டுப்புறவியல் அறிஞர்கள் கூறுகின்றனர். நாட்டுப்புற மக்களின் வாழ்வியல் கூறுகளில் ஒன்று தான் அவர்கள் உருவாக்கிக் கொண்ட தெய்வங்களும் வழிபாட்டு முறைகளும். அவ்வகையில் இக்கட்டுரை ஆண்டிபட்டி அருகே உள்ள கண்டமனூர் பகுதியில் வாழ்கின்ற மணியாரர் என்ற சாதியினர் வணங்கும் குலதெய்வமான 'இருளாயி மல்லையன்' என்ற தெய்வத்தைப் பற்றியும், வழிபாட்டு முறைகளைப் பற்றியும் ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

இருப்பிடமும், சாதியும்

தேனி மாவட்டம், ஆண்டிபட்டியில் இருந்து சுமார் 15 மைல் கல் தொலைவில் கண்டமனூர் அமைந்துள்ளது. இவ்வூரில் மணியகாரர் என்ற சாதியைச் சேர்ந்த மக்கள் வாழ்கின்றனர். இவர்களின் குலதெய்வமாக இருப்பது 'இருளாயி மல்லையன்' ஆகும்.

சிறுதெய்வ விளக்கம்

சிறுதெய்வங்களை குலதெய்வம், சாதியத் தெய்வம், ஊர்த்தெய்வம், காவல் தெய்வம், துணைத் தெய்வம் என பல பகுப்புகளாக நாட்டுப்புறவியல் அறிஞர்கள் பகுத்துக் காட்டுவர். இப்பகுதியில் முதல் தொடக்கம் என்பது குலதெய்வமாகும். காலப்போக்கில் இச்சிறு தெயவத்தின் வளர்ச்சி என்பது சாதியத்தெய்வம், ஊர்த்தெய்வம் என வளர்ச்சி பெற்றிருக்கின்றன. ஒரு சாதியில் தோன்றிய ஒருவர் அச்சாதியின் உயர்வுக்காக பாடுபட்டு அகால மரணம் அடைந்தவராகவும், கர்ப்பமான பெண்கள் குழந்தை பெற்றுக் கொள்ள முடியாத சூழ்நிலையில் இறந்து போனவர்களையும், கன்னிப் பெண்கள் தங்கள் கற்பை பாதுகாப்பதற்காக தற்கொலை அல்லது கொலை கொண்டவர்களையும் வணங்கியிருக்கின்றனர். அதாவது மனிதனோடு மனிதனாக வாழ்ந்து இறந்ததற்குப் பின்னர் தெய்வமாக்கப்பட்டவர்கள் என்ற நிலையில் தான் இத்தெய்வங்கள் உள்ளன. இவர்கள் மீது கொண்ட அன்பாலோ அல்லது பயத்தாலோ செய்யப்படும். அதாவது சிறு தெய்வ வழிபாட்டில் ஆவிக்கோட்பாடு முக்கிய அங்கம் பெறுகிறது. ஒருவர் மரணமடைந்த பின்னர் அவரது ஆன்மாவாகிய ஆவி மரணமடைந்து விடுவதில்லை. அது உலவிக் கொண்டே இருக்கும். அவ்வாவியை ஒரு கூட்டுக்குள் கொணர்ந்து பலியிட்டு வழிபாடு செய்வதன் மூலம், வழிபடுவோருக்கு நன்மை கிட்டும். அவ்வாறு வழிபாடு நடத்தாமல் இருந்தால் இறந்தவரின் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கு தீங்கு நேரிடும் என்று நம்பினர். இந்த நம்பிக்கையே குலதெய்வ வழிபாட்டின் தொடக்கமாக அமைந்தது. ஒரு குடும்பத்தினர் வணங்கிய நிலையில் வளர்ச்சி பெற்று அக்குடும்பத்தைச் சேர்ந்த சாதியினர் ஒன்று கூடி வழிபாடு நடத்தும் பொழுது சாதிய தெய்வமாகவும், அவ்வூரே சாதி கடந்து ஒன்று சேர்ந்து வழிபடும்

பொழுது ஊர்த்தெய்வமாகவும் வளர்ச்சி பெறுகிறது, இச்சிறு தெய்வ வழிபாட்டின் தொடக்கம் என்பது நடுதல் வழிபாட்டிலிருந்து தொடங்கியது என்றே கூறலாம்.

இருளாயி மல்லையன் உருவாக்கம்

இருளாயி, மல்லையன் என்ற இருவரும் கண்டமனூர் ஜமீனில் தங்கி வேலை பார்த்து வந்தவர்கள். இவ்விருவரில் மல்லையனின் வேலை என்பது ஜமீன் எல்லைக்குள் பிரிட்டிஸ்காரர்களை வந்துவிட்டால் உடனே தம்பட்டா அடித்து ஊர் மக்கள் அனைவரையும் விழிப்புடன் இருக்கச் செய்வதாகும். வருசநாட்டு பகுதியில் கிடைக்கக்கூடிய அரிய மருந்துப் பொருட்கள்மீதும், வாசனைமிகு பொருள்கள் மீதும், விவசாயப் பொருட்கள் அனைத்தின் மீதும் பிரிட்டிஸ்காரர்கள் ஆசை கொண்டிருந்தனர். அப்பொருள்களை கொள்ளையடித்துச் செல்வதற்காகவே வருசநாட்டுப் பகுதிகளுக்குள் வந்தனர். ஒருநாள் பிரிட்டிஸ்காரர் உள்ளே நுழைய கண்டமனூர் ஜமீன் நான் போய் அவர்களைப் பார்த்துவிட்டு வருகிறேன் என்று கூற அதற்கு மல்லையன் இல்லை ஐயா நீங்க இங்கேயே இருங்க ான் போய் பார்த்து விட்டு வாறேன் என்று கூறிப் புறப்பட்டாா. அப்போது தான் மல்லையனை நோக்கி 'நீ போக வேண்டாம் என் கல்யாணத்துக்கு தேதி குறித்து கங்காணம் எல்லாம் கட்டியாச்சு. அதனால் நீ வெளியே எங்கும் செல்லுதல் கூடாது என்று கூறினார். அப்போது மல்லையன் இல்லை ஐயா பரவாயில்ல எதுவும் நடக்காது. நானே போய் பார்த்துட்டு வாறேன் என்று ஜமீன் சொல்லியும் கேட்காமல் குதிரையை பூட்டிக்கொண்டு சென்ற போது பிரிட்டிஸ்காரர் சுட்டுக் கொன்று விட்டனர். மல்லையனும் இறந்து விட்டான். குதிரை மட்டும் தனியாக அரண்மனைக்கு வந்து சேர்ந்தது. குதிரையைக் கண்ட அனைவரும் மல்லையனை தேடிச் சென்றனர். அவ்வாறு அவர்கள் தேடிச் சென்றபோது மல்லையன் இறந்து கிடந்தான். பின்பு இறந்த மல்லையனை அடக்கம் செய்வதற்குரிய ஏற்பாடு நடைபெற்றுக் கொண்டிருந்த சமயத்தில் மலலையனுக்கு கல்யாண தேதி குறித்து கங்காணம் கட்டி மனைவியாக தேர்ந்தெடுக்கப்பட்ட பெண் தான் இருளாயி. மேலும் மல்லையனை அடக்கம் செய்யும் பொது இருளாயியும் என் கணவரோடு சேர்ந்து உடன்கட்டை ஏறப்போகிறேன் என்று கூற அதற்கு ஜமீன்தார் உனக்கு வேண்டிய அரண்மனை மற்றும் வாழ்வதற்குரிய அனைத்து வசதி வாய்ப்புகளையும் ஏற்படுத்தி தருகிறேன் என்று கூறியபோது இருளாயி இல்லை எனக்கு தாலி கட்டானாத்தான் என் புரு'ன் இல்ல. எங்க இரண்டு பேருக்கும் கல்யாண தேதி குறித்த பிறகும் நானும் அவரைத்தான் கணவராக நினைச்சு வாழ்கிறேன. அதனால் அவர் தான் என் கணவர் அவர் இல்லாத உலகில் எனக்கு இங்கு என்ன வேலை. அவர் போன இடத்துக்கே நான் போறேன் என்று உடன்கட்டை ஏறும்போதும் எனக்கு உரிய பொருளான காதோளம், கருகமணி, எலுமிச்சம்பழம், மல்லிகைப் பூ, சேலையின் நுனிப்பகுதி இவை அனைத்தும் நான் என் கணவரோடு உடன்கட்டை ஏறுகின்ற இடத்தில் உள்ளது உள்ளபடி வேகாமல், கருகாமல் இருந்தால் மட்டும் எங்களை நினைத்து வணங்குங்கள் உங்களை நாங்கள் நல்லபடியாக காக்கிறோம் என்று இருளாயி கூறிவிட்டு உடன்கட்டை ஏறுகிறாள். பின்பு அவள் கூறியது போல் அனைத்து பொருட்களும் வேகாமல் இருக்க அவர்கள் இருவரையும் தங்களுடைய குலதெய்வமாக நினைத்து இம்மக்கள் வணங்கி வருகின்றனர்.

முடிவுகள்

இருளாயி மல்லையன் என்ற இருவரும் அவ்வினத்தில் பிறந்து அதே இனத்தில் வளர்ந்து இவ்வினத்தின் வளர்ச்சிக்காக பாடுபட்டவர்கள் அதாவது மேலும் இருளாயி கூறிய அனைத்து பொருட்களும் அப்படியே இருந்தால் மேலும் ஜமீனில்

பணிபுரிந்து ஜமீனின் நலத்தற்காக வாழ்ந்து இறந்ததால் மல்லையனின் சாதிக்கு உயர்வைத் தேடித்தந்தான். மேலும் மல்லையன் இறந்தவுடன் தாலி கட்டாத நிலையிலும் அவனை கணவனாக ஏற்றுக் கொண்டு இறந்த இருளாயியையும் அச்சாதியினர் இறைத்தன்மைக்கு உயர்த்தினர். இருளாயி கூறிய அனைத்துப் பொருட்களும் அப்படியே இரந்ததால், மேலும் தங்கள் இனத்தைச் சார்ந்தவர்கள் (மணியாரர்) என்றதாலும், இவர்கள் இருவரையும் குலதெய்வமாக எண்ணி வணங்கி வருகின்றனர்.

# தமிழில் பாயிரமும் அதன் பெயர்களும்

இரா. களதிக்குமார்
முனைவர் பட்ட ஆய்வாளர்
தியாகராசர் கல்லூரி,
மதுரை 9.

முன்னுரை

தமிழிலக்கியம் மூவாயிரம் ஆண்டுகாலப் பரப்பையும், பல்வேறு இலக்கியக் காலப்பகுதிகளையும், இலக்கண, இலக்கிய வகைகளையும் உடையது. தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்கள், காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள் ஆகியவற்றில் முதலில் காணப்படுவது பாயிரங்களாகும். இக்காலத்தில் அவை நூண்முகங்கள் எனும் பெயரில் காணப்படுகின்றது. இக்கட்டுரையில் 'பாயிரம்' என்ற சொல்லின் வழக்காறுகளும், பொருளும், பாயிரத்தின் பல்வேறு பெயர்களும் ஆய்வு செய்யப்படுகின்றன.

தமிழில் பாயிரம்

பாயிரங் கூறுதல் என்பது தமிழ் இலக்கண இலக்கிய பரப்பில் தொன்றுதொட்டு வரும் மரபாக உள்ளது.

"ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவல் அன்றே"

என்னும் நூற்பா பாயிரத்தின் இன்றியமையாச் சிறப்பினை உணர்த்தும். தொல்காப்பியத்திற்குப் பனமம்பாரனார் செய்த சிறப்புப்பாயிரம் ஒன்று உண்டு. பனமம்பாரனார் தொல்காப்பியரோடு ஒருங்குகற்ற ஒரு சாலை மாணாக்கர் என்று அறிஞர் பெருமக்கள் கருதுவர். தொல்காப்பியர் காலத்திலேயே பாயிரம் எழுதும் முறை தொடங்கிவிட்டது. எனினம் பாயிரம் பற்றிய கோட்பாடுகளை கூறுவனவாக இறையனார் களவியலுரை, இளம்பூரணருரை, நச்சினார்க்கினியருரை, நன்னூல் போன்றவை உள்ளன.

தொல்காப்பியத்தினுள் 'பாயிரம்' என்ற சொல்லையோ அதன் இலக்கணத்தையோ காண இயலவில்லை.

பாயிரம்-விள்க்கம்

பாயிரம் என்ற சொல் ஒரு நூலுக்கு முன்னர் உரைக்கப்படும் முகப்பு உரை எனலாம். பழமொழி நானூற்றுப் பாடலில் காணும் 'பாயிரங்கூறி' என்ற தொடருக்குப் பல்வேறு வகையான விளக்கங்களைக் கூறுகின்றனர். "வீரத்துக்கு வேண்டு முகவுரைகள் சொல்லி" என்பது திருநாராயண ஐயங்கார் எழுதியுள்ள பொருட்குறிப்பர்கும்.

"பாயிரம் - ஒரு நூலுக்கு முன் உரைக்கப்படும் முகவுரை; அ∴து ஈண்டு ஒரு வீரன் தன் வீரச்செயலுக்கு முன்னர்க் கூறும் வீரவுரைகளை உணர்த்துகின்றது" என்று மி.பொன். இராமநாதன் செட்டியார் தெளிவுரை எழுதியுள்ளார். "பாயிரம் என்பது பெருமை என்னும் பொருளையுடையது. இதற்கு முகவுரை என்று பொருள் கூறுவாரும் உண்டு" என்று மொ.அ.துரை அரங்கசாமி விளக்கம் கூறுகின்றார். களவியனுரை ஆசிரியர் பாயிரம் என்ற சொல்லுக்குப் 'புறவுரை' என்று விளக்கம் தருவர்.

பாயிரப் பெயர்கள்

பாயிரத்தைக் குறிக்கும் பெயர்களை முதன்முதலில் நன்னூலில் காண்கிறோம். அவை,

"முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்"

என்னும் நூற்பாவால் அறியமுடிகின்றன. இந்நூற்பாவுக்குப் "பாயிரத்தின் இலக்கணங்களை முன்னுணர்ந்தல்லது நூல்களைச் செய்தலும் அவற்றையீதலும் ஏற்றலு முடியாமை கருதி முன்னுரைத்தலின் முகவுரையென்றும், 'பதிகக்கிளவி பல்வகைப் பொருளைத் தொகுதியாகச் சொல்லுதறானே' என்பவர்களின்; மேல் வகுக்கும் ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பல்வகைப் பொருளையுஞ் தொகுத்துச் சொல்லுதலிற் பதிகயென்றும், நூலினது பெருமை முதலியன விளங்க அணிந்துரைத்தலின் அணிந்துரையென்றும், முகவுரை யென்றாற் போல நூன்முக-மென்றும், நூல் நுதலிய பொருளல்லனவற்றை அதற்குத் தந்துரைத்தலின் தந்துரையென்றும், அணிந்துரை யென்றாற் போல புனைந்துரையென்றும் பாயிரத்திற்குப் பெயராம் எனச் சங்கநமச்சிவாயர் உரையெழுதுகின்றனர்.

பாயிரத்தைக் குறிக்கின்ற பெயர்களில் முகவுரை, அணிந்துரை, நூன்முகம் புறவுரை, தந்துரை, புனைந்துரை என்ற ஆறும் தமிழ்ச் சொற்களெனத் தெளிவாக அறியமுடிகிறது. பாயிரம், பதிகம் என்னும் இரண்டு சொற்களையும் வடசொற்களின் திரிபுகள் எனச் சிலர் ஐயுறுவர். வில்லிபாரத உரையில் வை.மு.கோ., "பாயிரம் பாஹ்யம் என்ற வடசொல்லின் திரிபு; வெளிப்பட்டது என்பது அவயப் பொருள்; நூற்குப்புறமாக அமைந்திருக்கும் நூன்முகம்" என்று விளக்கம் எழுதியுள்ளார்.

தொகுப்புரை

பாயிரங்கூறல் என்பது பண்டைகாலந் தொட்டுத் தமிழ்நிலத்து வழற்கும் மரபாகும். அது நூலின் பொருளை நன்கு விளங்க வைப்பது. மாணாக்கர்களுக்கு விழித்துணையாய் அமைந்தது. நூல்களின் வாயிலாகவும், விளக்கமாகவும் அமைந்துள்ளது. எந்த ஒரு நூல் உரைப்பினும், அந்நூற்குப் பாயிரம் உரைப்பது பண்டைய மரபு. பாயிரத்தின் இன்றியமையாச் சிறப்புக்களைப் பல்வேறு மேற்கொள்களின் மூலமாகவும் உவமைகளின் மூலமாகவும் உரையாசிரியர்கள் உணர்த்துகின்றனர். பாயிரம், பதிகம் என்பவற்றை வடசொற்களின் திரிபு என்று கொள்ளுவதைவிட தமிழ்ச் சொற்கள் என்று கொள்ளுவதே பொருத்தமுடையதாகும். பதிகம் என்ற சொல்வழக்கு இலக்கண நூன்முகங்களில் அருகிய வழக்காய் உள்ளது.

# இறையியல் நூல்களைக் கற்றல் இன்று தேவையா?

Dr. சுடேல் தியாகராஜன்,
Reader in Tamil,
Pachaiyappa's College,
Chennai 30.

இறையியல் நூல்களைக் கற்றல் இன்று தேவையா என்ற பொருளில் ஆராய்கின்ற நிலையில், இறையியல் என்றால் என்ன? கற்றல் என்றால் என்ன? இறையியல் நூல்கள் பற்றிய விளக்கம், அறிவியல் கல்வி வாழ்வை முழுமையாக்குமா? இன்றைய நிலையில் இறையியல் தத்துவங்கள் தேவையா? இறைவன் என்ற ஒருவன் இருக்கின்றானா? காட்ட முடியுமா? எப்பொழுது? இறை உண்மையை உணர்ந்தால்-என்ன நன்மை? தத்துவங்களை ஏன் மறைபொருளாகக் கூறவேண்டும்? சமயங்கள் பல ஏன்? ஏற்றத்தாழ்வு உண்டா? இறையியல் நூல்களைப் படித்தால் பக்குவம் வருமா? என்பன போன்ற தடைகளுக்கு விடையளிக்க வேண்டும். இத்தடைகளுக்கு விடையளிக்கும் நிலையில் இக்கட்டுரை அமைகிறது.

இறையியல் என்பது, கடவுள் நெறி, பக்தி நெறி, வழிபாட்டு நெறி ஆகும். கற்றல் என்பது மொழியை எழுதப்படிக்கக் கற்றல், என்று அமையும், மொழியைக் கற்றல், அடிப்படைக் கல்வி, உயர்நிலைக்கல்வி, ஆராய்ச்சி போன்ற நிலைகளைத் தாண்டி, அறிவியல், வாழ்வியல் என்ற இரண்டின் அடிப்படையில் கற்றல் அமையும், அறிவியல் என்பது உலகம், பொருள்கள், அண்டம், பிண்டம், விஞ்ஞானம் போன்ற புறப்பொருள் சார்ந்த கல்வி, அறிவு. வாழ்வியல் என்பது மனிதனுடைய அகப்பண்பு சார்ந்த நிகழ்வுகள் தொடர்பானது. இது மெய்ஞ்ஞானம் எனப்படுகிறது.

இறையியல் தத்துவங்களை, அறிந்த பொருள்களைக் கொண்டு அறியாத பொருளை விளக்கல் என்ற நிலையில் பல எடுத்துக்காட்டுகள் வழி விளக்குவதாக இறையியல் நூல்கள் அமைய வேண்டும். நூல்களை அவை உணர்த்தும் பொருளடிப்படையில், எதுகை மோனை நயங்கள் மட்டுமே உள்ள கவிதை நூல்கள்.

நகைச்சுவை மட்டுமே உள்ள பொழுதுபோக்கு நூல்கள், வாழ்வைச் செம்மைப்படுத்தும் இலக்கு நோக்கிச் செல்லும் குறிக்கோள் இலக்கியம் என்று வகைப்படுத்தலாம். இலக்கு நோக்கிச் செல்லும் குறிக்கோள் இலக்கியம் அறிவியல், ஆன்மிகம் என்று இரண்டு வகைப்படும். ஆன்மீக இலக்கியம் இறைவனை நோக்கிச் செலுத்துவது.

அறிவியல் தொடர்பான கல்வி மட்டும் ஒருவனை முழுமையாக்காது. வாழ்வியல் செயல்களும் சேரும் பொழுது தான் அறிவியலும் அறிவியல் சார்ந்த வாழ்வும், ஆராய்ச்சியும் பொருள் பொதிந்து முற்றுப்பெறும்.

இந்நிலையில், வாழ்வைச் செம்மைப்படுத்தும் இறையியல் கல்வி இன்றியமையாதது.

இறையியல் தத்துவங்களை மகான்களும் ஞானிகளும், அருளாளர்களும் தம் அனுபவங்கள் வாயிலாகவும், மெய்யுணர்த்தல் வாயிலாகவும் அரிய நூல்களாக இவ்வுலகிற்கு அளித்துள்ளனர்.

இந்நூல்கள் அனைத்தும் அரிய கருவூலங்களாக உள்ளன. இவற்றில் கூறப்பட்ட தத்துவங்கள், இறை நெறிகள் எல்லோராலும் எளிதில் புரிந்து கொள்ளக் கூடியவனவாக இல்லை. அனைவராலும் கடைப்பிடிக்கவோ, புரிந்து கொள்ளவோ

இயலா நிலையில் உள்ளன.

இறையியலினால் பண்படுகின்ற பொழுது, சிந்தை தெளிவடைகிற பொழுது, அத்தெளிவால் மலர்தலும் கூம்பலுமற்ற அசைவறுமதி ஏற்படுகின்ற பொழுதுதான், அறிவியலும் சிறக்கும் வாழ்வியலும் சிறக்கும். பிறவிப்பயனும் பொருளுள்ளதாகும். இல்லையெனில், அறிவியலை அழிவை நோக்கிச் செலுத்தி அடுத்த நொடியில் உலகம் என்னாகுமோ என்ற அவலநிலையில் உலகம் அல்லால் உறும். பண்படாநிலையில்தான், கொலை, கொள்ளை, தீவிரவாதம், போர், போட்டி, பொறாமை போன்றவை உலக நாடுகளுக்கிடையேயும், தனி மனிதர்களுக்கிடையேயும் ஏற்படுகின்றன.

சமைத்தல் என்பது பக்குவப்படுத்துவது. மனித மனத்தைப் பக்குவப்படுத்துவது சமயம்.

"அரம்போலும் கூர்மைய ரேனும் மரம் போல்வர்
மக்கட் பண்பு இல்லாதவர்"
"அறிவினால் ஆகுவதுண்டோ பிறிதின் நோய்
தன்நோய் போல் போற்றாக்கடை"

எனவே, பக்குவம், மனிதப்பண்பு தேவை.

இறையியல் நூல்களை உணர்ந்தால் பக்குவம் வருமா? ஆம். எல்லாச் சமயங்களும் அடிப்படையாக வலியுறுத்துவது தனிமனித ஒழுக்கத்தையே.

ஒழுக்கம், அதனடிப்படையில் மலரும் அன்பு, ஜீவகாருண்யமாகிய மனிதப்பண்பு இல்லா இடத்தில் பக்திக்கு வேலை இல்லை.

அன்புடைமை, அறிவுடைமை, அருளுடைமை, ஆள்வினையுடைமை, ஒழுக்கமுடைமை, பண்புடைமை, நாணுடைமை, அழுக்காறாமை, அவையஞ்சாமை, இன்னா செய்யாமை, போன்றவற்றை உணரும் நிலையில் கருணையோடு கூடிய இறை உணர்வு தானே மலரும்.

இறையுணர்வு மேலோங்க, மேலோங்க பண்பட்ட ஒழுக்கம் தானே மலரும். எனவே இவற்றை வளர்க்க, சமய இலக்கியங்களில் நிலையாமையை உணர்த்தும் போக்கு உள்ளது. அதாவது, பொய்ப் பொருளுக்காக ஒழுக்கமற்ற அவல வாழ்க்கை வாழாதே. மெய்ப்பொருளை உணர்ந்து உண்மை வாழ்க்கை, பொருளுடைய வாழ்க்கை வாழ் என்று சமய இலக்கியங்கள் அறிவுறுத்துகின்றன.

சான்றாக,

"ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந்தார்களே" (திருமந்திரம் - 145)

"அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
கிடக்கப்படுத்தார் கிடந்தொழிந்தாரே" (திருமந்திரம் - 148)

என்று நிலையாமையை உணர்த்துகிறது திருமந்திரம். மேலும்,

கடவுள் என்ற ஒருவர் உண்டு. அவரைக் காட்ட முடியாது. உணர்த்த முடியும்.

"விறகில் தீயினன் பாலில் படுநெய்போல்
மறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே"

என்றபடி, பக்குவப்படுத்திய பாலில் நெய் கிடைப்பது போல், பக்குவப்பட்ட

உள்ளத்தாரால் மட்டுமே இறைவனை உணர முடியும், உணர்த்த முடியும்.

இறையியல் இலக்கியங்களில், தத்துவப் பொருள்களை மறைபொருளாகக் கூறுவதற்குக் காரணம், பக்குவப்பட்டவர்களாலேயே உணர்ந்து, புரிந்து கடைப்பிடிக்க இயலும். பிறருக்குக் கூறினால், பன்றியிடம் கொடுத்த முத்துமாலை போன்றது. எனவே, பக்குவம் அற்றோர் மேலோட்டமாகப் பொருள் கொள்ள, பக்குவமுடையோர், ஆழ்பொருளை உணர்ந்து ஒழுகுவர்.

சான்றாக,

"நந்தவனத்திலோராண்டி அவன்
நாலாறுமாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டுவந்தானொரு தோண்டி அதைக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி"

என்ற பாடல் பாமரரும் பாடுவர். பாமரனுக்குப் பானையாகவும், மெய்ப்பொருளுணர்ந்தோர்க்கு உடலாகவும், பொருள் புலப்படும். பாமரனால் பாடல் அழியாமல் பாதுகாக்கப்படுகிறது. காலந்தோறும் எடுத்துச் செல்லப்படுகிறது.

திருமூலர் ஒன்பதாம் தந்திரத்தில் 70 பாடல்கள் சூன்ய சம்பா'ணை என்ற பெயரில் மறைபொருள் கூற்றாகப் பாடல்களை அமைத்துள்ளார். சா்றாக,

சூரிய சந்திரக்கலையை ஞான சாதனையால் சோத்து அக்கினிக்கலையில் விளங்க வல்லார்க்குப் பேரின்பம் உண்டாகும் என்பதை,

"தட்டத்து நீரிலே தாமரை பூத்தது
குட்டத்து நீரில் குவளை எழுந்தது
விட்டத்தினுள்ளே விளங்க வல்லார்கட்குக்
குட்டத்திலிட்டதோர் கொம்மட்டியாமே"

என்று திருமூலர் கூறுகிறார். மேலும், ஆசாபாசம் நீங்கிச் சித்தம் தூய்மையானால் சிவன் விளங்குவான் என்பதை,

"கோரை எழுந்து கிடந்த குளத்தினில்
ஆரை படர்ந்து தொடர்ந்து கிடந்தது
நாரை படுகின்றாற் போலல்ல நாதனார்
பாரை கிடக்கப் படிகின்றவாறே" என்றும் கூறுகிறார் திருமூலர்.

எனவே, இறையியல் நூல்கள், தனிமனித ஒழுக்கங்களையும், அன்பையும் அடிப்படையானவை என்று வலியுறுத்தி மனிதனைப் பண்படுத்துவதால், இன்றைய உலகிற்கு இறையியல் நூல்களைக் கற்றல் என்பது இன்றியமையாதது.

# இதழியலும் பாரதிதாசனும்

ம. இலட்சுமணன்
திரு. ஆ. கோவிந்தசாமி அரசு கலைக் கல்லூரி, திண்டிவனம்

தமிழ் இலக்கிய வரலாற்றில் இருபதாம் நூற்றாண்டின் கவிதையில் இதழியல் மூலம் புதுமைகால ஏற்படுத்தியவர் பாரதிதாசன. இதழ்கள் சமுதாயத்துடன் தொடர்புடைய ஒரு அறிவுச் சாதனமாகும். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் அதற்கு முன்பும் இதழ்த்துறைக்கு வருவோர் இலக்கியத் துறையில் தேர்ச்சி பெற்றவர்களாக விளங்கினார்கள். இதழியல் துறையானது மக்களுக்கு எழுத்தறிவை வழங்க மக்கள் தொடர்புச் சாதனமாக விளங்குகின்றன. எழுத்தறிவைப் பெறுவது ஒரு நாட்டின் அடிப்படைத் தேவைகளின் ஒன்றாகும். அந்த அறிவைத் தருவது இதழ்களாகும். தமிழ் இலக்கிய வரலாற்றில் இருபதாம் நூற்றாண்டில் கவிதையின் மூலம் பாரதிதாசன் இதழியலோடு கொண்டிருந்த தொடர்பைக் குறித்து இக்கட்டுரையில் ஆய்ந்து அறியலாம்.

**இதழ்களின் நோக்கங்கள்**

சமுதாய வாழ்க்கை நிலை மாற்றம் அடைதலையும் சமுதாய வளர்ச்சியையும் சமுதாயச் செய்தித் தொடர்புகள் பிரதிபலிக்கின்றன. இன்று இதழ்கள் சமுதாயத்தில் வாசிப்புப் பழக்கத்தினை மக்களிடையே அதிகப்படுத்துகின்றன. சமுதாயத்தோடு தொடர்பு கொண்டுள்ள இதழ்களின் நோக்கங்களை மா. அண்ணாதுரை பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

இன்றியமையாச் செய்திகள், தகவல், விமர்சனம், வழிகாட்டுதல் ஆகியவற்றைத் தன்னகத்தே உடையது.

ஒரு சமுதாயத்தின் முழுத் தோற்றத்தை வெளிப்படுத்தும் செய்திகளை வெளியிடுவதாலும், தலையங்கத்தின் வாயிலாக அறிவுரை வழங்குவதாலும், ஒரு சிறந்த செய்தித்தாழ் பொது மக்களின் உள்ளக் கிடக்கையை வெளியிடுவதாக அமையும். உயிர்த்துடிப்பு, கற்பனை வளம், சுயசிந்தனை, நகைச்சுவை ஆகியவற்றோடுக் கூட ஆர்வம் ஊட்ட வல்லதாக அது அமைய வேண்டும்.

சமுதாயததிற்குத் தேவையான சிறப்புமிக்க வட்டாரச் செய்திகளுக்கு இதழ்களில் உரிய இடத்தை ஒதுக்குவதில் தனிக்கவனம் செலுத்த வேண்டும்.

உண்மை, மனித உரிமை, மனித உயர்பண்பு, மனித மேம்பாடு ஆகியவற்றுடன் அந்தந்தச் சமுதாயத்திற்கு ஏற்ற வகையில் பாடுபடுவது அதன் தலைமை நோக்கமாக அமைய வேண்டும்.

**கவிதை இதழ்கள்**

இதழ்கள் பொதுவாக கதைகள், கட்டுரைகள், செய்திகள், விளம்பரங்கள் போன்றவற்றை வெளியிடும். இதழ்களில் உரைநடைக்கு முக்கியத்துவம் கொடுக்கும் இருபதாம் நூற்றாண்டில் கவிதைக்கு முதன்மை தந்து முழுக்க முழுக்க கவிதை ஏடாக வெளிவந்திருப்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். அதில் 'ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம்' என்னும் இதழ் பாரதிதாசனை ஆசிரியராகக் கொண்டு 1935 ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. இந்தியாவின் முதன் முதலில் வெளிவந்த கவிதை ஏடாகக் கருதப்படுகிறது.

ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் இதழின் ஆசிரியர் பாரதிதாசன் இதழின் நோக்கத்தை - 'நமது பத்திரிக்கைக்குக் கவிதை தந்து உதவ முன்வரும்

கவிஞர்கட்கு வேண்டுகோள்' என்ற தலைப்பில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார். எக்கொள்கை பற்றியும் எழுதுக, எண்ணங்களைக் கவிதையால் அமைத்தல் வேண்டும். அனைவரும் பாட்டுக்களைப் படித்துச் சுவையறிதல் வேண்டும் தமிழ்க் கவிஞர்கள் பெருகுதல் வேண்டும் என்ற எண்ணத்தோடு, ஸ்ரீ சுப்பரமண்ய பாரதியார் எளிய நடையில் புதிய வகையில், சுவையோடுக் கவிதை தந்தார்கள். இதில் அவர்கள் வெற்றி பெற்றார்கள். அவர்கட்குப் பின் அவ்வகையில் கவிதை வரைதல் வேண்டும் என முயல்பவர்கள் பலர் உண்டு.

பாரதி கவிதா மண்டலம் சிறப்புறுதல் வேண்டும், பெருகுதல் வேண்டும் : இயற்கையழகு, தமிழ், நாடகம் இவை பறங்றி கவிதை புனைந்து உதவுக : மாணவர்கட்குப் பாட்டு எழுதித் தருக : தேசியம் பாடுக, சமூகச் சீர்திருத்தம் பாடுக : பெண்கள் உரிமை பாடுக : பெண்கள் பெறும் கொடுமையைப் பாடுக : பிற மொழிகளில் உள்ள பாட்டுக்களைத் தமிழ்ப் பாட்டுகளாக்கித் தருக : உங்கள் உள்ளத்தில் ததும்பி வரம் இனிய தமிழ்க் கவிதைகளைத் தொகுத்துக் காட்டுவது தான் - தமிழுக்குத் தொண்டு செய்வது தான் ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் மேற்போட்டக் கொண்ட வேலை. ஆதரிக்க வேண்டுகிறேன் - ஆசிரியன்.

என்று இதழின் நோக்கங்களைப் பாவேந்தர் குறிப்பிட்டுள்ளார். இதழில் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, சாமி சிதம்பரனார், ப. ஜீவாநந்தம், கு. அழகிரிசாமி போன்றோர் பாடைப்புகளையும் வெளியிட்டு எழுத்தாள்களுக்கு ஆதரவு நல்கியுள்ளார்.

கவிதை இதழ்கள்

| ஆண்டு | இதழ் | ஆசிரியர் | இடம் |
|---|---|---|---|
| 1935 | ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் | பாரதிதாசன் | புதுவை |
| 1946 | குயில் | பாரதிதாசன் | சென்னை |
| 1955 | காவியம் | சுரதா | சென்னை |
| 11962 | ஊர்வலம் | சுரதா | சென்னை |
| 1964 | கவிதை | சுரதா | சென்னை |
| 1964 | கவிப்புயல் | மா. செங்குட்வன் | சென்னை |
| 1966 | முல்லைச்சரம் | பொன்னடியான் | சென்னை |
| 1966 | சுரதா | சுரதா | சென்னை |
| 1971 | எழிலோவியம் | ப. பரமசிவன் | சென்னை |
| 1973 | காவியப்பாவை | புலவர் கபிலவாணன் | சென்னை |
| 1973 | கவிதா மண் உலகம் | வானம்பாடி | சென்னை |

புதுக்கவிதை இதழ்கள்

| | | |
|---|---|---|
| 1964 | - | நோக்கு |
| 1965 | - | கவிஞன் |
| 1972 | - | வானம்பாடி |

குறைந்த காலத்தில் அதிகமான கவனிப்பையும், சிறுபத்திரிகை வட்டாரதில் மிகுந்த பாதிப்பையும் கவிதை எழுதுவோரிடையே தீவிரமான தாக்கத்தையும் ஏற்படுத்திய சிறு பத்திரிக்கை 'வானம்பாடி' ஆகும்.

இதழியலும் பாரதிதாசன் வெளியீடும்

பாரதிதாசனின் புரட்சிக் கருத்துக்களை உலகுக்குப் பரப்பியவை

இதழ்களேயாகும். நல்லறிஞர்களின் கருத்துக்கள் அடங்கிய வைரப் பெட்டகமே இதழ்கள். நாட்டு மக்களை நல்வழிப்படுத்துவன் இதழ்களே. இதழ்களின் பெருமையை பாரதிதாசன் தம் கவிதையில் இனிதாக எடுத்துக் கூறுகின்றார்.

தமிழகத்தில் இன்று பல இதழ்கள் வெளிவருகின்றன. இதழாசிரியர் தவறான செய்திகளைளும் திரித்துக் கூறும் விமர்சனங்களையும் வெளியிடக்கூடாது. இவரது சிறிய தவறும் சமுதாயத்தில் பெருங்கேட்டினை விளைவித்துவிடும். இதழ்களே சமுதாயத்தை உயர்வடையச் செய்யும் என்பதை. இதழாசிரியாகள் உணர வேண்டும்.

சின்னப்பிழை ஏடெழுதும்
கணக்காயன் செய்திடினும்
திருநா ட்டார்பால்
மன்னிவிடும் ஆதலினால்
ஏடெழுதும் வாழ்க்கையிலே
விழிப்பு வேண்டும்.

என்று பாவேந்தர் இதழாசிரியர்களுக்கு அறிவுறுத்துகிறார். நாட்டில் உள்ள சில இதழாசிரியர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது நடுநிலைமை இருப்பதில்லை. நல்லொழுக்கம் சிறிதுமில்லை. தமிழை மாய்க்கும் கெடு நினைப்பே மிகவுடையார். கீழ்மையிலே உடல் வளர்ப்பர், பொருள் படைத்தோன் அடி நந்த நாணுகிலார். அறமொன்றும் கூறுகிறார், ஏழையோரின் மடி மறிக்கும் திறமுடையார், மறந்தேனும் திராவிடரை மதித்தல் இல்லார் என்பார் பாவேந்தர்.

தன்னினத்தான் வேறினத்தான்
தன் பகைவன் தன் நண்பன்
எவனா னாலும்
அன்னவனின் அருஞ் செயலைப்
பாராட்டுவோன் செய்தி
அறிவிப் போனாம

என்பார் பாவேந்தர். இதழாசிரியர் கலைப்பண்பும் உயர்நினைப்பும் உடையவராக இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் இதழ்கள் சிறப்புப் பெறும்.

பாரதிதாசனை ஆசிரியராகக் கொண்ட இதழ்கள்

1920 ஆம் ஆண்டு முதல் 1963 ஆம் ஆண்டு வரை பாரதிதாசனை பல்வேறு இதழ்கள் நடத்தியுள்ளார். பாவேந்தரை ஆசிரியராகக் கொண்ட இதழ்கள் 1.ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் 1935, 2.புதுவை முரசு, 3.குயில் (புத்தகம்)
4. குயில் (பெயர் பன்னூல்), 5. குயில் (திங்கள்)
6. குயில் (தினசரி), 7. குயில் (கிழமை)
8. குயில் (திங்களிருமுறை)

பாவேந்தரின் படைப்புகள் வெளிவந்த பிற இதழ்கள் தேசசேவகன் குடியரசு, திராவிட நாடு, காஞ்சி, கிராம ஊழியன், மணிக்கொடி, கலைமகள், ஆத்மசக்தி போன்ற இதழ்களாகும்.

முடிவுரை

இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய வரலாற்றில் புதுமையையும், புரட்சியையும் ஏற்படுத்தியவர் பாரதிதாசன். அவர் கவிதை மூலம் இதழியலோடு கொண்டிருந்து தொடர்பைக் குறித்து இக்கட்டுரையில் ஆய்வு செய்யப் பெற்றுள்ளதை அறியலாம்.

# தாலாட்டுப் பாடல்களில் பண்பாட்டுக் கூறுகள்

கு. ஜீவலெட்சுமி,
கிறித்தவ இயல் துறை,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை - 21.

முன்னுரை

பண்பாடு என்பது சமுதாய ஒழுங்கை நிலை நிறுத்தக் கூடிய சமூகக் கூறு. கூடிவாழும் ஓர் இனத்தின் அடையாளமாகப் பண்பாடு விளங்குகிறது. ஒரு சமூகத்தின் மதிப்பினைக் காட்டும் கண்ணாடி பண்பாடு ஆகும். "பண்புடையார் பட்டுண்டு உலகம்" என்றார் வள்ளுவர். "பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல்" என்கிறது கலித்தொகை.

பண்பாடு - விளக்கம்

"பண்பாடு மனிதனின் கை வண்ணத்தைப் புலப்படுத்துகிறது"1 என்பர் சி.சி. நாத்.

"தன்னுடைய தேவைகளை நிறைவு செய்து கொள்ள மனிதன் உருவாக்கிக் கொண்ட கருவிதான் பண்பாடு"2 என்பர் மாலினோசுகி.

"பண்பாடும் சமயமும் சார்புடையன ஒன்று மற்றொன்றின் விளைவு: தனிமனிதன் கூட்டம், குழு சமூகம் என்ற மும்மை நிலையுடையது"3

பண்பாட்டுக் கூறுகளான

1. நம்பிக்கை
2. சடங்குகள் குறித்து இவ்வியலில் ஆய்வு செய்யப்படுகின்றது.

நம்பிக்கை - விளக்கம்

"அறிவு நிலைக்கு அப்பாற்பட்ட எண்ணங்களையே நம்பிக்கைகள் என்பர்"4.

நம்பிக்கை என்பது மக்களின் வாழ்க்கையோடு இணைந்துள்ளது. நம்பிக்கைகளைக் கொண்டே அம்மக்களின் பண்பாட்டை அறியமுடியும். "மக்களின் அறிவு, நம்பக்கை, கலை, ஒழுக்கம், சட்டம், வழக்கம் முதலியவைதாம் பண்பாடாக பார்க்கின்றன"5 என்கிறார் மானிடவியல் பேரறிஞர் டெய்லர் (வயலடழச). இதிலிருந்து நம்பிக்கை பண்பாடாக மலர்வதை அறிய முடிகிறது.

நம்பிக்கை பண்டைத் தமிழரிடமிருந்து வழிவழியாக வழங்கி வருவை இலக்கண, இலக்கியங்களில் இடம்பெறுவதிலிருந்து அறியமுடிகிறது.

"புள்ளும் புள்ளும்" பிறவற்றினிமித்தமும் (தொல் பொருள் 91)

எனக்குறிப்பிடப்படுவதில் நிமித்தம் என்பது நம்பிக்கை ஆகும்.

இலக்கியங்களிலும் நிமித்தம் பற்றிய செய்தி இடம் பெறுவதை

"அஞ்சுவரு குராற் குரலுந் தூற்றும்"

என்க கூகை அலறினால் சாவு வரும் என்ற இக்கால மக்களிடம் இருக்கும் நம்பிக்கை பண்டு தொட்டு தமிழரிடையே வழங்கி வருபவை பற்றி புறநானூற்று குறிப்பு வழி அறியமுடிகிறது. நம்பிக்கை என்பது உணர்வு வயப்பட்டது. அகம் சார்ந்தது அச்சத்தினால் பிறப்பது. (நாட்டுப்புற நம்பிக்கைகள் பெரும்பாலும் அச்சவுணர்வின் அடிப்படையாகத் தோன்றியதாகக் காட்சியளித்தாலும், இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்களை உணராதபொழுதும் மனித வாழ்வில் ஏற்படும் சில நிகழ்ச்சிகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாத பொழுதும் மனமானது சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கிறது. அவையே நம்பிக்கைகளாக உருவாகின்றன5.

தீமை அண்டாது இருக்கவும், நன்மை பெருகவும் நம்பிக்கைகளைக் கடைபிடிக்கின்றனர். சில காரியங்களைச் செய்தால் நன்மை கிடைக்கும் என நம்புகின்றனர் எனது நம்பிக்கைகளுக்கான காரண காரியங்களை ஆராயமல், பின்பற்றுகின்றனர். நம்பிக்கைகள் வழிவழியாகப் பின்பற்றப்பட்டு வருகின்றன.

குழந்தைப் பேற்றின் சிறப்பு

திருமண உறவால் உண்டாகும் குருதி உறவே குழந்தே, தாய்க்கும், சேய்க்கும் மிக நெருங்கிய அன்பான உறவாக இது விளங்குகிறது. குழந்தைப் பேறு அடையாத பெண்களை 'தரிசு நிலத்திற்குச் சமமாகவும்', 'காய்க்காத மரத்திற்கு ஒப்பாகவும்' சமூகம் எண்ணுகிறது அதோடு 'மலடி' என்ற பெயர் சூட்டி சமூக மதிப்பிலிருந்து விலக்கப்படுகிறது. எனவே பெண்கள், தான் திருமணம் முடிந்தவுடன் தனக்கு ஒரு குழந்தை வேண்டும் என் வேண்டுகின்றனர். "ஈன்று புறந் தருதல் என் தலைக் கடனே"6 எனும் புறநானூற்று வரி குழந்தை பெறுவது பெண்களின் தலையாய கடமை என்று கூறுகிறது. பிற இலக்கியங்களிலும் குழந்தைப் பேற்றின் சிறப்பு கூறப்படுகிறது. வள்ளுவர் தம் குறளில்

"பெறுமவற்றுள் யாம் அறிவது இல்லை அறிவு அறிந்து
மக்கட்பேறு அல்ல பிற"7 எனக் கூறுகிறார்.

புறநானூற்றில்

"படைப்பு பலபடைத்து பலரோடு உண்ணும்
உடைப்பெருஞ் செல்வர் ஆயினும், இடைப்படக்
குறுகுறு நடந்து, சிறுகைநீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும், துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்ப்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம் வாழும் நாளே"8

என குழந்தைப் பேற்றின் சிறப்புக் கூறப்படுகிறது.

குழந்தையின் மழலைச் சொல் கேட்டு இன்புறுதல் குழல், யாழின் மூலம் பெறும் இன்பத்தைவிடப் பெரிது என்ற

"குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச் சொல்கேளா தவர்"

வள்ளுவரின் கருத்து இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

குழந்தைப் பேற்றின் அருமை கருதியும், சமூக நன்மதிப்பைப் பெறும் பொருட்டும், திருமண உறவின் மூலம் கிடைக்கும் உயர்ந்த உறவாகவும் குழந்தைக் கருதப்படுவதால் பெண்கள் திருமணம் முடிந்த சில வருடங்களுக்குள் குழந்தைப்பேறு அடைய விரும்புகின்றனர். அதற்காக சில, தெய்வ வழிபாடுகளை மேற்கொள்கின்றனர். குறிப்பாக

குழந்தைப்பேறு கிட்டுவதற்காக

1. குழந்தைக்காக விரதமிருத்தல்
2. அரசமரம் சுற்றுதல்
3. வேம்பினைச் சுற்றுதல்
4. துளசிக்கு நீர் சொரிதல்
5. கோவிலுக்கு நேர்தல்
6. விளக்கேற்றுதல் எனப் பகுத்து ஆராயப்படுகிறது.

இவ்வியலில் முதலில் நம்பிக்கைகளைக் குறித்தும் பிறகு சடங்குகள் குறித்தும் ஆய்வு செய்யப்படுகிறது.

சடங்கு

காலங் காலமாக மக்களால் நிகழ்த்தப்படுபவை சடங்குகளாகும். சடங்குகளுக்கு நம்பிக்கை அடிப்படைக் காரணங்களாக இருக்கின்றன.

"தனி மனிதனுடைய நன்மைக்கும் துன்பநீக்கத்திற்காகவும் செய்யப்படுவதைச் சடங்கு என்று கொள்வோம்"9 என மு. பாலகிரு'ணன் சடங்கு என்பதற்கும் விளக்கம் கூறுகிறார். ஒருவர் தமக்கு வந்த துன்பத்தைப் போக்கி கொள்ளும் செயல் அல்லது துன்பம் வராமல் தடுக்க மேற்கொள்ளப்படும் செயலைச் சடங்கு என்று உணரமுடிகிறது.

முன்னோர்கள் செய்யத் தொடங்கிய செயல்கள் அனைத்தும் நன்மை தருவன என்பது காலப்போக்கில் சமூக் கோட்பாடு ஆனது. எனவே பின்னால் வந்தவர்களும் காரணம் கேட்காமலே வழிவழியாக அச்செயல்களைச் செய்யத் தலையிட்டனர். அவ்வாறு செய்யப்படும் செயல்களே சடங்குகள் எனப்பட்டன10.

தாலாட்டுப் பாடலில் இடம் பெறும் சடங்குகள்

1. காப்பிடல், 2. வளைல் அணிவித்தல், 3. நீராட்டுதல், 4. மையெழுதுதல், 5. தொட்டிலிடுதல், 6. காதணிவிழா, 7. கண்ணேறு கழித்தல் போன்றவை.

முடிவுரை

1. நம்பிக்கை பண்டைக் காலம் தொட்டு வழிவழியாகப் பின்பற்றப்படுகின்றன.
2. நம்பிக்கை குறித்த காரண காரியங்களை மக்கள் பகுத்துக் காண்பதில்லை.
3. இலக்கண, இலக்கியங்களிலும் நம்பிக்கை பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன.
4. விரதமிருத்தல், அரச, வேம்பு போன்ற மரங்களைச் சுற்றுதல், துளசிக்கு நீர் சொரிதல், கோவிலுக்கு நேர்தல், விளக்குகள் போன்ற நம்பிக்கைகளைக்

1. சமயம் சார்ந்த நம்பிக்கைகளும், சடங்குகளும் 'குழந்தைப் பேற்றினை' நல்கும் என நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர்.
2. நம்பிக்கைகளின் விளைவே சடங்குகளாகும்.
3. கடவுள் குழந்தையைக் காக்க வேண்டும் என்பதற்காக சடங்கின் இறுதியில் காப்பரிசி வழங்குகின்றனர். இவ்வாறு வழங்கினால் குழந்தைக்கு நன்மை கிட்டும் என நம்புகின்றனர்.
4. கண்ணேறு வராமல் குழந்தையைக் காக்க ஆரத்தியெடுத்தல், அத்தியெறிதல் போன்ற சடங்குகளை நிகழ்த்துகின்றனர்.
5. நீராட்டல், தொட்டிலிடல், வளையல் அணிவித்தல், காதுகுத்து போன்ற சடங்குகளைக் குழந்தைக்காகச் செய்கின்றனர்.

குறிப்புக்கள்

1.க.ப. அறவாணன், தமிழர் மேல் நிழந்த பண்பாட்டுப் படையெடுப்பு, ப. 40
2.மேலது
3.மதுர. விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், தொகுதி-2, ப.1800
4. க. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 171
5. சீ. பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 160
6. புலியூர் தேசிகள், புறநானூறு, ப. 354
7. நாமக்கல் கவிஞர், திருக்குறள் (குறள் - 61), ப. 14
8. புலியூர் தேசிகன், புறநானூறு, ப. 240
9. மு. பாலகிருட்டிணன், கண்ணேறு கழித்தல், ப. 183, 10.மேலது

# தாலாட்டுப் பாடல்களில் கருத்துப் பரப்பல்

சு. முத்துப்பாண்டியம்மாள
முனைவர் பட்ட ஆய்வாளர்,
செந்தமிழ்க் கல்லூரி, மதுரை - 1.

முன்னுரை

தொல்காப்பியத்தில் "பண்ணத்தி" என்று இடம்பெறும் நாட்டுப்புறப்பாடல்கள் காலத்தை வென்றவை. இயற்கை அன்னையில் மடியில் தவழ்ந்து திரிந்து வெள்ளை உள்ளம் படைத்த பாமரமக்களின் எளிய கலை உணர்ச்சிமிக்க உள்ளங்களிலிருந்து கிளர்ந்து, கிளைத்து எழுந்த இந்த காட்டு மல்லிகைச் சரங்கள் அந்த மக்களின் வாழ்க்கைச் சூழல், அவர்களின் உள்ள உணர்வுகள், அச்ச உணர்வுகள், ஆசைக் கனவுகள், விழுமிய எண்ண அலைகள் ஆகியவற்றோடு இசைச் சிறப்பினையும், அழகுணர்ச்சியையும் இணைத்து அவர்களது நாவில் நடனமாடி, நல்ல மணம் பரப்பி வாழ்வின் பல நிகழ்ச்சிகளிலும், பல்வேறு மனநிலைகளிலும் உற்ற துணையாக நின்று அவர்களது வாழ்வோடு இரண்டறக் கலந்து வளர்ந்து வந்திருக்கின்றன. இந்நாட்டுப்புறவியலைப் பற்றிய ஆய்வு சமூக உளவியல் போன்ற பல நோக்குகளில் மேற்கொள்ளப்பட்டு வருகின்றது. சமூக உளவியல் கூறுகளில் ஒன்றான 'கருத்துப்பரப்பலின்' ஒரு பார்வையாக இக்கட்டுரை அமைகிறது.

கருத்துப்பரப்பல்

பொது மக்கள் கருதினைச் செயல்படுத்த வேண்டிச் செய்யப்படும் எம் முயற்சியும் 'கருத்துப்பரப்பல்' எனலாம். "பொதுவாகக் கருத்துப்பரப்பல் மக்களின் நம்பிக்கையையும், மனப்பான்மையையும், இறுதியாக அவர்களின் செயல்களையும் தன்வயப்படுத்த முயற்சி செய்கிறது என்று எடுத்துக் கொள்ளப்படுகிறது.2 கருத்துப்பரப்பலின் குறிக்கோள், கருத்துக்களையும், மனப்பான்மையையும் தன்வயப்படுத்தி அதன் மூலம் அவர்களின் நடத்தையையும் தன்வயப்படுத்துவதாகும்.

தாலாட்டுப்பாடல்களின் கருத்துப்பரப்பல்

மண்ணில் பிறந்த மனிதன் தாலாட்டுப் பாடல்களின் வழிதான் முதன் முதலில் சமுதாயதில் வழக்கிலுள்ள பலவற்றைத் தெரிந்து கொள்கிறான். தாலாட்டுப்பாடல்கள் பெரும்பாலும் குழந்தைத் தொடர்புடைய கருத்துக்களையே கொண்டிருக்கும் இப்பாடல்கள் குழந்தையை உறங்க வைப்பதற்காகப் பாடப்படினும் அதன் வாயிலாகத் தாய் தன் எண்ணங்கள், இறையுணர்வு குழந்தைப்பேற்றிற்காகப் பட்டத் துன்பங்கள், குலப்பெருமை, உறவின் பெருமை போன்றப் பல கருத்துக்களை வெளியிடுகிறாள்.

"மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் அன்னார்
உயிர் நீப்பிர் மானம் வரின்"3

எனும் குறளில் கவரிமான் ஒரு முடியை இடிந்தாலும் தன் உயரினைப் போக்கிக்கொள்ளும் என்பது கூறப்பட்டுள்ளது. இத்தகைய தன்மையைப் பெண்கள் கொண்டிருத்தல் சிறப்பு ஆகவே அதனை உணர்ந்த தாய்

"கண்ணான கண்ணோ - ஏனம்மா நீ
கவரிமான் பெத்த கண்ணோ
மானுண்ட கண்ணோ - ஏனம்மா நீ
மானோடி வந்தவளோ"

எனத் தாலாட்டுப் பாடலில் பாடுகிறாள். கவரிமான் பற்றி ஆண் குழந்தைக்குப் பாடியிருப்பின் அதில் சிறப்பில்லை. ஆனால் இப்பாடலின் இறுதியடி பெண் குழந்தைக்குப் பாடப்பட்டிருப்பதை உணர்த்தும். பெண்களுக்கு மானமே பெரிது என்னும் கருத்தைக் குழந்தைக்குப் பரப்புவது மட்டுமின்றி அதனைக் கேட்டுக் கொண்டிருக்கும் உறவினர்களுக்கும் பரப்புவதோடு தன் கற்பின் பெருமையையும் இவ்வாறு வெளிப்படுத்துகிறாள்.

"சீதை மகளோ - கண்ணே நீ
ஸ்ரீ ராமர் பெத்த கண்ணோ
அல்லி மகளோ - கண்ணே நீ
அர்ச்சுனர் பெத்த கண்ணோ"
"கண்ணுக்குக் கண்ணாடி
காதலுக்கு வீர தண்டை
வீரத்தண்டை விலைமதிக்கும்
வீமன் உன் மாமன்"

என்னும் தாலாட்டுப்பாடலில் மகாபாரதக் கதைப் பாத்திரங்கள் மிகுதியாக வருகின்றனர். அர்ச்சுனரைப் போல் திறமை, ராமன், வீமனைப் போன்று வலிமையுடையவனாக குழந்தை விளங்க வேண்டும் எனும் கருத்தைப் பரப்பவே தாய் இந்த மகாபாரதப் பாத்திரங்களைத் தாலாட்டுப் பாடலில் குறிப்பிடுகிறாள் எனலாம்.

"தன் குலப்பெருமையைப் பேசுவதில் பெண்கள் பெருமகிழ்ச்சி அடைகின்றனர்"4 அக்குலம் மங்காது காக்கப்பட வேண்டும் என்னும் கருத்து சமுதாயதில் ஊன்றியுள்ளது. குலம் காக்க ஆண்குழந்தை பிறக்க வேண்டும் எனும் கருத்து

"எங்க குலம் மங்காம
எதிர் குலம் ஏசாம
தன் கவலை மாத்த வந்த
தங்கமணி நித்திரையோ" எனும் பாடல் வரி குறிப்பாகப் பரப்பப்படுகிறது.

தாலாட்டு உறவினர் பற்றிய கருத்துப் பரப்புதலுக்கும் துணைபுரிகிறது. தாலாட்டில் சிறப்பாக மாமன் மருமகளுக்குச் செய்ய வேண்டிய செய்யும் சீர்கள் பற்றிய கருத்தும் காணப்படுகிறது.

"முத்தளக்க நாழி
முதலளக்கப் பொன்னாழி
வச்சளக்கச் சொல்ல
வரிசையிட்டார் மாய்மாமன்"

மாமன் தரும் சீர்பற்றிக் கூறும் வழி மாமன் சீரும் சிறப்பும் உடையவனாக வாழ்தலும், அவ்வாறு வாழ்தலில் மருமக்கள் பயனடைவர் எனும் கருத்தும் தாலாட்டில் உணரப்படுகிறது.

தாலாட்டுப் பாடலில் ஒரே கருத்து திரும்பத்திரும்ப வரும் ஏனெனில் எந்தக் கருத்துமே திரும்பத்திரும்பக் கூறாவிட்டால் அதன் வலிமை இழந்து வழக்கத்திலிருந்து மறைந்துவிட ஏதுவாகும். அடுத்தடுத்துக் கூறப்படும் கருத்து கருத்துப்பரப்பலை வலிமை பெறச் செய்வதாகவும் அமைகிறது.

முடிவு

தாலாட்டுப் பாடலில் தந்தையின் பெருமை, தாய் செய்த தவங்கள், மாமனின் பெருமை போன்றவை இடம் பெறுகின்றன. தாலாட்டுப்பாடலில் கருத்துப்பரப்பல்

இடம் பெறுவதால் நல்ல கருத்துக்களை வைத்துப் பாடல்பெறும் தாலாட்டுப் பாடல்கள் நல்ல பயனைத் தரும் எனலாம்.

அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியம் - சூத்திரம், எண் 173
2. பி.குப்பசாமி - சமூக உளவியலுக்கு ஓர் அறிமுகம், ப. 4
3. திருக்குறள், குறள் எண். 969
4. பாலசுந்தரம், ஈழத்து நாட்டார் பாடல்கள் ஆய்வும் மதிப்பீடும், பக் - 23-24.

# வாய்மொழிப் பாடல்களில் நம்பிக்கைகள்

சி. சுமதி
முனைவர் பட்ட ஆய்வாளர்,
செந்தமிழ்க் கல்லூரி, மதுரை - 1.

## முன்னுரை

வாய்மொழிப் பாடல்கள் என்பது படிக்காத பாமர மக்களால் பாடப்படுகின்ற பாடல்கள் வாய்மொழிப்பாடல்கள் அல்லது நாட்டுப்புறப் பாடல்கள் என்று அழைக்கப்படுகின்றன. கிராமப்புற மக்களின் பழக்கவழக்கங்களையும் பண்பாடுகளையும், நம்பிக்கைகளையும், கலை இலக்கியங்களையும் தொகுப்பதும் ஆராய்வதுமான துறையாகும். மானாமதுரை வட்டாரப்பகுதிகளில் கிடைக்கக்கூடிய வாய்மொழிப் பாடல்களில் காணப்படுகின்ற நம்பிக்கைகளை விளக்கக் கூடியதாய் இக்கட்டுரை அமைகிறது.

## நம்பிக்கைகள்

நம்பிக்கைகள் பழக்கவழக்கங்கள் போன்றவை வாய்மொழிப் பாடலின் அடிப்படைப் பொதுக்கூறாக அமைகின்றன. மனித சமுதாயத்திற்கிடையே பலவித நம்பிக்கைகள் என்று தோன்றியது யாரால் உருவாக்கப்பட்டது? என்று ஆதியும் அந்தமும் காணமுடியாததாகவே திகழ்கிறது. தொன்றுதொட்டு மக்களின் பழக்கவழக்கங்கள் சடங்குகள் தெய்வவழிபாடு இவற்றின் வாயிலாகவே நம்பிக்கைகள் வெளிப்படுகிறது. காலம் காலமாக நாட்டுப்புற நம்பிக்கைகள் ஒரு மனிதனிடமிருந்து மற்றொருவனுக்கு பரவி சமுதாயத்தில் தழைத்து நின்று நிலைத்திருக்கும் பண்பினைப் பெற்றிருக்கின்றன நாட்டுப்புற நம்பிக்கைகள்.

“நம்பிக்கை என்பது ஒரு மனநிலை. அது தொடர்ந்து நீடித்து உரமடைகிற போது ஆழ்மனத்தில் பதிவாகிவிடுகிறது. இந்நிலையில் அதற்கு மகத்தான சக்தி உண்டாகிறது” என்பார் என்று ஆசிரியர் திரு.பா. பொன் வேலப்பன் நம்பிக்கைப் பாடல்கள் என்ற தனது கட்டுரையில் கூறியுள்ளார் (ந.பு. தமிழ் - தொகுப்பாசிரியர் சங்கரவள்ளி நாயகம் ப.89) சமூகத்தின் மரபினை அறிவிக்கவல்லன. அச்சமுதாயத்தின் நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டு சமுதாயத்தால் பரக்கப்படுவன. அவை சமூகத் தேவைகள் மற்றும் குறிக்கோள்கள் அடிப்படையில் தோன்றியவை. மனிதனின் தன்னிலை உணர்வும், சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன என்கிறார் க.காந்தியவர்கள் (க. காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.102)

## தெய்வ நம்பிக்கை

தமிழ்ச் சமுதாயத்தில் நிலவிவரும் பல்வேறு நம்பிக்கைகளுள் தெய்வ நம்பிக்கை மிகத் தொன்மையானது. அனைத்து வகையான நம்பிக்கைகளுக்கும் அடித்தளமாக இருப்பது தெய்வ நம்பிக்கையே.

பொதுவாக சமுதாயத்தின் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கைகள் உண்மையாகவோ, பொய்யாகவோ இருக்கலாம். ஆனால் கிராமப்புற மக்களைப் பொருத்தளவில் தெய்வத்தின் மீது அளவற்ற நம்பிக்கை உடையவர்களாக் காணப்படுகின்றனர்.

குழந்தை பிறப்பதற்குக் காரணம் இறைவன் என நம்புகின்றனர். மனித வாழ்க்கையில் சிறந்த பேறு குழந்தைப் பேறு ஆகும். ஒவ்வொரு தாயும் தான் பல நாள் தவம் செய்து இறைவன் அருளால் குழந்தைப் பேற்றை டைந்ததாக நம்புகின்றனர்.

"எம்பெரிய மதுரையில - எங்கண்ணே
பிள்ளையார் கோயில்ல
அரசமரம் சுத்தி வந்து உங்களப்பா
அர்ச்சனை செய்யயில
பார்த்திருந்த பரமசிவம்
பாலகனத் தந்தாரோ"

தவமிருந்தும், விரதமிருந்தும், பூசைகள் செய்தும் குழந்தை பிறந்ததாகக் கிராமப்புற மக்கள் அசைக்க முடியாத நம்பிக்கை உடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

தவம் பற்றிய நம்பிக்கை

தவமிருத்தல் என்பது ஒன்றைப் பெற வேண்டும் அல்லது அடைய வேண்டும் என எண்ணிப் புலன்களை ஒருநிலைப்படுத்தி உடலை வருத்தி இறைவனையே நினைத்திருத்தலாகும். "சி. சத்திய சீலன் தவமிருப்பதால் குழந்தைப் பிறக்கும் வாய்ப்பு ஏற்படுவதை அறிவியல் உண்மைகளை ஆதாரங்காட்டி விளக்குகிறார்.

சோதிட நம்பிக்கை

கிராமப்புறங்களில் இன்னும் சோதிடம், குறி, கோடாங்கி போன்றவற்றில் மக்கள் மிகுந்த நம்பிக்கை கொண்டவர்களாக திகழ்கின்றனர். நாள், நட்சத்திரம் பார்த்துதான் எந்தச் செயலையும் நாட்டுப்புற மக்கள் செய்யத் தொடங்குவார்கள். நல்ல நாள் எது என்பதை பஞ்சாங்கம் பார்ப்பவரிடம் அறிந்து கொள்கிறாகள்.

"பச்சை கரி பாக்கு
பாண்டியரு எம் பிறப்பு
பத்துனா காணாட்டா
பாதைய தடம் பாா்ப்பேன்
பார்வதிய நாள் கேட்பேன்
பார்வதியும் சொல்லலையின்னா
பாஞ்சாங்கம் பார்த்திடுவேன்"

என்ற ஒப்பாரிப் பாடலில் தெய்வத்தை கூட நம்பாமல் சோதிடத்ததை மக்கள் நம்புகின்றனர் என்பதற்குச் சான்றாய் அமைகிறது.

சகுன நம்பிக்கை

நாட்டுப்புறத்தில் ஏராளமான சகுன நம்பிக்கைகள் உண்டு. சிலவற்றை நல்ல சகுனம் என்றும் சிலவற்றைக் கெட்ட சகுனம் என்றும் நம்புவார்கள். சுமங்கலி, நிரைகுடம், பிணம் போன்றவன நல்ல சகுனத்தின் அடையாளங்கள். பயணம் செல்லும் போது குறுக்கே பூனை, பாம்பு, விதவை, எண்ணெய், விறகு விற்பவர் போன்றவர் வந்தால் அது தீய சகுனம் என்பது கிராமப்புற மக்களின் நம்பிக்கை.

"மூணருகுத் திண்ணையில - எனக்கு
முகூர்த்தம் வைக்க வரயில
முக்கெளளி செல்லுச்சே "

என்ற பாடலில் சகுனம் பார்ப்பதில் பாமர மக்கள் கொண்டிருக்கும் நம்பிக்கை வெளிப்படுவதைக் காண்கிறோம்.

பெரியார் போன்ற சமய சீர்திருத்தவாதிகள் ஒடுக்கப்பட்ட அனைத்து மக்களின் அடிமைச் சங்கிலிகளையும் அடித்து நொறுக்கி மனித நேயம், அன்பு, நீதி, சமத்துவத்தை தாக்கி நிறுத்த செயல்பட்டனர். இவர்களின் வாழ்வியலும் இறை அனுபவத்தை உணர்ந்துள்ளனர். பெரியார் கடவுள், சமயம் இவற்றின் பெயரால் சமூகத்தல் தாழ்த்தப்பட்ட சாதிக் கொடுமைகள், அநீதிகள், மனித நேயமற்ற செயல்கள் இவற்றையே வெறுத்தார்.

"கடவுளே மற" என்ற பெரியார் "மனிதனை நினை" என்று சொன்னார்.

இதிலிருந்து அவரது சமூக ஈடுபாட்டினை உணர முடிகின்றது.

**இறைசாயலில் மனிதர்கள்**

நமது சமய மரபில் இறைவனின் அரிய படைப்பாக மனிதனைக்காண்கின்றோம். இறை பார்வையில் மனிதரை மதிப்பதும், மனிதத்தைத் தூக்கிப் பிடிப்பதும் கடவுளை ஏற்பதாகின்றது.

"மனிதர்கள் கடவுளின் உருவிலும், சாயலிலும் படைக்கப்பட்டவர்" (தொ. நூல் 1:26-27)

"இவ்வுலகில் மனிதர்கள் இறைவனின் பிரதிநிதிகள், முகவர்கள் இவர்களுக்கு செய்யாதது இறைவனுக்கு செய்யாதது, இவர்களுக்கு செய்வது இறைவனுக்கு செய்வதாகும்". மத். 25:40, 45

இறைவன் மீது எத்தகைய ஈடுபாடு வைத்திருந்தாலும் மக்கள் மீது அன்பும், சமூகத்தின் மீது அக்கறையும் இல்லாதவர்களை இறைவன் ஏற்பதில்லை.

"எரிபலிகளையும், வேறு பலிகளையும் விட அன்பும் பரிவும் மேலானது" என்று இறைவனுக்கு ஏற்புடையதைப் பற்றி எடுத்துரைப்பதை அறிய முடிகின்றது. சமூக மக்கள் ஒவ்வொருவரின் வாழ்வும் அர்த்தமுள்ள முறையில் சிறப்பாக அமைய வேண்டும் என்று இறைவன், இறை தூதர்களை அழைக்கின்றார். இஸ்ரவேல் மக்களை எகிப்தின் அடிமைத் தளையிலிருந்து விடுவிக்கக் கடவுள் மோசேயை அனுப்பினார். அப்போது மோசே கடவுளின் பெயரைக் கேட்க,

"இருக்கின்றவராக இருக்கின்றவர் நானே" (விடு. பய. நூ. 3:14)

என்று கூறுகிறார். தான் எக்காலத்திலும் மக்களுக்காக இருப்பவர் என்பதை உணர்த்த இவ்வாறு கூறுகிறார். இவ்வாறு கடவுள் தம் பணியைச் செய்ய ஆபிரகாம், ஈசாக், யாக்கோபு இவர்களைத் தேர்ந்தெடுக்கிறார். ஆகவே,

"ஆபிரகாம், ஈசாக், யாக்கோபின் கடவுள் வாழும் கடவுள்"

(மாற். 12:26-27)

என்று கூறுகிறார். மக்களின் விடுதலையில் இடையூறுகள் நிகழும்போது இறைவன் மக்களை காக்க ஆறுதலான வார்த்தைகளைக் கூறுகிறார்.

"அஞ்சாதீர்கள், நிலைகுலையாதீர்கள், இன்று ஆண்டவர் தாமே உங்களுக்காக ஆற்றும் விடுதலைச் செயலைப் பாருங்கள். ஆண்டவரே உங்களுக்காகப் போராடுவார்".

(விடு. பய. நூ. 14:13-14)

என்றார் மோசே. இவ்வாறு ஆண்டவர் மக்களிடம் இறைதூதர்களின் வாயிலாகவே தன்னை வெளிப்படுத்தியதை அறிய முடிகின்றது.

**சமூக மேம்பாட்டில் இறை குரல்**

சமூகத்தின் மீது மிகுந்த அக்கறைக் கொண்டு செயல்படும் செயல்பாடுகள் அனைத்திலும் இறைவன், இறைதூதர்களுடன் உடனிருந்து செயல்படுகிறார். இவ்வாறு சமூக ஈடுபாட்டில் உண்மையாக ஈடுபடுவோர், உண்மையான இறை அனுபவத்தை

பெறுகின்றனர். சமூக ஈடுபாடு உடையவர்களே, இறைவனின் குரலைக் கேட்க முடிகிறது. அவரை அடையாளம் கண்டு கொள்ள முடிகிறது. இவற்றின் மூலம் இறை வெளிப்பாடு நிகழ்கிறது. இதனால் இறையனுபவம் கிடைக்கிறது. சமூக அநீதிகளை எதிர்த்து போரிடும்போது, இறைதூதர்களுக்கு பல்வேறு இடறல்களும், துன்பங்களும் வருகின்றது. அவற்றைப் பொறுக்க முடியாதவராய் எரேமிய இறைதூதர்

"என் தாயின் கருவறையே எனக்குக் கல்லறையாக இருந்திருக்கக் கூடாதா?"
(எரே. 20:17)

என்று முறையிட்டுப் புலம்புகிறார். ஆயினும்,

"ஆண்டவர் வலிமை வாய்ந்த வீரரைப் போல என்னோடு இருக்கின்றார்"
(எரே. 20:11)

என்று ஆறுதல் அடைகிறார். இவ்வாறு இறைவன் துன்பங்களில் தேற்றுபராகத் திகழ்வதைக் காணமுடிகின்றது. இறைவன், இயேசுவை உயிர்பெறச் செய்தது. அநீதி புரிவோருக்கு தண்டனையாகவும், நேர்மையாளருக்கு வாழ்வளிக்கும் மீட்பாகவும் அமைந்தது. இது ஒரு நற்செய்தி, குறிப்பாக, நேர்மையாளருக்கும், இறைவனை நம்பி மீட்புக்காக காத்திருந்தோருக்கு, சமுதாயத்தில் புறக்கணகணிக்கப்பட்டோருக்கும், பாவிகள் எனப் பழிச்சொல்லப்- பட்டவருக்கும், ஏழை எளியவர்களுக்கும் ஒரு சிறந்த நற்செய்தி. இது இறைவன் மக்கள் மீது கொண்ட சிறந்த அன்பைக் காட்டுகிறது. பவுல் இதனை,

"தாயின் வயிற்றில் இருந்தபோதே என்னைத் தமக்கென ஒதுக்கி வைத்துத் தமது அருளால் என்னை அழைத்த கடவுள் தம் மகனைப் பற்றிய நற்செய்தியைப் பிற இனத்தவர்க்கு நான் அறிவிக்குமாறு அவரை எனக்கு வெளிப்படுத்தத் திருவுளங் கொண்டார்". (கலா. 1:15-16)

இதற்காகவே இறைவன் தன்னை அனுப்பியுள்ளார் என்பதை உணர்ந்தார். இவ்வாறு சமூக மேம்பாட்டில் இறைவன் தன்னை வெளிப்படுத்தியதைத் அறிய முடிகின்றது.

முடிவுரை

சமூகத்தில் செல்வந்தர்கள் அனைவரும் நேர்மையாளர்- களாகவும், ஞானிகளாகவும் எண்ணப்பட்டார்கள். ஏழைகளுக்கு வறுமை ஏற்படக் காரணம் அவர்களின் பாவங்கள் என்றும், பாவங்களுக்கான தண்டனை என்றும் கருதினர். வறுமை கடவுளின் சாபமாகவும் கொள்ளப்பட்டது. இதனால் வறியோர்கள் அனைவரும் தீயோர், இறைப் பற்றில்லாதவர்கள் என்று நம்பப்பட்டார்கள். இத்தகைய சூழ்நிலையில் இறைவன், இறைவாக்கினர்களை அனுப்பி அம்மாக்களை மீட்டதைப்பற்றி இவற்றில் அறிய முடிகின்றது.

# ஊடகங்களில் விளம்பரத்தின் இன்றியமையாமை

செ. சோபியா,
முழு நேர முனைவர் பட்ட ஆய்வாளர்
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி,
சிவகாசி.

இன்றைய உலகம் விளம்பரத்தால் இயங்கிக் கொண்டிருக்கிறது என்றால் மிகையாகாது. மனித வாழ்வில் விளம்பரம் அந்த அளவிற்கு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. மனிதனின் உபயோகப் பொருட்களை இன்றைய விளம்பரங்களே நிர்ணயிக்கின்றன. சங்க காலம் முதல் விளம்பரங்கள் இருந்தமையைச் சான்றுகள் மூலம் அறிய முடிகிறது. ஒரு தொழிலின் உயிர் நாடியே விளம்பரம்தான். இப்படிப்பட்ட விளம்பரத்தின் இன்றியமையாமைய விளக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

**விளம்பரம் - விளக்கம்**

அரசோ, உற்பத்தியாளரோ அல்லது விற்பனையாளரோ தங்களது கொள்கைகளைப் பரப்புவதற்கும் தங்கள் தயாரிப்புக்களை மக்களிடையே அறிமுகப்படுத்தி விற்பனையைப் பெருக்குவதற்கும் பயன்படும் சாதனம் விளம்பரமாகும்.

**விளம்பரமும் தற்காலமும்**

தற்காலத்தில் விளம்பரம் மிகவும் செல்வாக்குப் பெற்று வளர்ந்து வருகின்றது. இதனால் செய்தித்தாள்கள், இதழ்கள், வானொலி, தொலைக்காட்சி போன்றவற்றை விளம்பரங்கள் ஆக்கிரமித்துள்ளன.

1. பத்திரிக்கைகளில் நூற்றுக்கு ஐம்பது சதவீதம் (50.'.100) விளம்பரங்கள் ஆக்கிரமித்துள்ளன என்பதை,

செய்தித்தாள்

இவ்வரைபடத்தின் மூலம் செய்தித்தாளில் விளம்பரத்தின் முக்கியத்துவத்தை அறியலாம்.

2. தொலைக்காட்சி விளம்பரங்கள் மக்கள் விரும்பும் வண்ணம் உள்ளதால் மக்கள் இதனை விரும்பி பார்க்கின்றனர் என்பதை, மக்கள் அப்பொருட்களை வாங்குதைக் கொண்டு அறிய முடிகின்றது. தொலைக்காட்சியில் 30 நிமிட நாடகத்திற்கு 15 நிமிடம் விளம்பரங்கள் ஒளிபரப்பப்படுகின்றன. மீதமுள்ள 15 நிமிடம் நாடகம் ஒளிபரப்பப்படுகின்றன. இதன் மூலம் விளம்பரங்கள் தொலைக்காட்சியில் எந்த அளவு ஆக்கிரமித்துள்ளன என்பதை அறியலாம்.

3. வானொலியிலும் விளம்பரங்கள் ஒலிபரப்பப்படுகின்றன. 'சூரிய வெப்பம்' 'கொடைக்கானல்' மற்றும் 'மதுரை வானொலி' போன்ற ஒலிபரப்புகளில் ஒரு பாடல் ஒலிபரப்பட்டால் அதை அளவு விளம்பரங்களும் ஒலிபரப்பப்படுகின்றன.

நம் நாட்டில் பல்வேறு தகவல் தொடர்புச் சாதனங்களின் மூலம் விளம்பரப்படுத்தப்படுவதால் தற்காலத்தை 'விளம்பரயுகம்' என்று கூறலாம். உற்பத்தி நிறுவனங்கள் தற்காலத்தில் விளம்பரத்திற்கென்றே பல கோடி ரூபாய் செலவு செய்கின்றனர். இவ்வாறு விளம்பரப்படுத்துகின்ற விளம்பரங்கள் ஏறத்தாழ 80மூ சதவீதம் மக்களை சென்றடைகின்றன.

**விளம்பரத்தின் முக்கிய வகைகள்**

விளம்பரம் யாருடைய கவனத்தை ஈர்த்து யாருடைய மனதில் தாக்கத்தை ஏற்படுத்துகிறதோ, அதை அடிப்படையாகக் கொண்டு விளம்பரத்தை நான்கு

வகைகளாகப் பிரிக்கலாம்.

விளம்பரத்தின் வகைகள்

1. பெண்கள் விளம்பரம், 2. சிறுவர்கள் விளம்பரம்

3.ஆண்கள் விளம்பரம், 4. பெரியவர்கள் விளம்பரம்

பெண்கள் மீது விளம்பரத் தாக்கங்கள்

அரசு, தனியார் தொலைக்காட்சிகள், செய்தித்தாள்கள், இதழ்கள் போன்றவற்றில் செய்யப்படுகின்ற விளம்பரங்களில் பெரும்பாலானவை ஆண்களை விட பெண்களை மிகவும் தாக்குகின்றன. அந்த பொருளை வாங்க வேண்டும் என்ற எண்ணத்தை ஏற்படுத்துகின்றன.

சேவிங் கிரீம், ஃபர்பீம் பைக் போன்ற ஆண்களுக்குத் தேவையான பொருட்களிலும் கூட பெண்களை மையமாய வைத்து விளம்பரங்கள் வெளிவருகின்றன. இதனால் ஆண்களிடம் மனதளவில் பெண்களை பற்றிய தவறானக் கருத்தை மறைமுகமா ஏற்படுத்துகின்றன.

ஆண்களின் உள்ளாடைக்கும் பெண்களையே விளம்பரங்கள் பயன்படுத்துகின்றன.

(எடுத்துக்காட்டு) வைக்கிங் பனியன், ஜட்டிகள்

சிறுவர்கள் மீது விளம்பரத் தாக்கங்கள்

செய்தித்தாள்கள், வானொலி, தொலைக்காட்சி போன்ற- வற்றில் வரும் விளம்பரங்கள் சிறுவர்களை அதிகம் தாக்கம் பெறச் செய்கின்றன. சில விளம்பரங்கள் சிறுவர்களை குறிவைத்தே வெளியிடப்படுகின்றன என்பதை தொலைக்காட்சி விளம்பரங்கள் மூலமாக அறியலாம்.

ஆண்களின் மீது விளம்பரத் தாக்கங்கள்

விளம்பரங்கள் தற்போது ஆண்களையும் விட்டு வைப்பதில்லை. புதிய பைக்குகள், அழகு சாதனப் பொருட்கள், ஆடைகள் போன்றப் பொருட்களை வாங்கத் தூண்டுகிறது. பெரும்பாலும் விளம்பரங்கள் ஆண்கள் புதிய பொருட்களை வைத்திருப்பதால் பெண்கள் இப்பொருட்களால் கவரப்பட்டு ஆண்களிடம் வருவதாக விளம்பரங்கள் வருவதால் ஆண்களை எளிதாக விளம்பரங்கள், கவர்ந்து விடுகின்றன.

பெரியவர்கள் மீது விளம்பரத்தாக்கங்கள்

விளம்பரங்கள் பெரியவர்கள் மீதும் தாக்கத்தை ஏற்படுத்துகின்றன. விளம்பரங்கள் ஓய்வு பெற்று வீட்டில் இருக்கப் போகும் பெரியவர்களை தங்கள் எதிர்காலத்தின் பொருட்டு சிந்திக்கக் கூடியதாக விளம்பரங்கள் வருகின்றன.

ஊடகங்களில் விளம்பரம்

விளம்பரம் பல கோடி மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தியுள்ளது. தற்காலத்தில் விளம்பரங்கள் மக்கள் பார்க்கும், கேட்கும் இடங்களில் எல்லாம் நிறைந்துள்ளன. விளம்பரத்தில் உள்ள செய்தி, எந்த அமைப்பு அல்லது எம்முறை மூலம் வெளியிடப்படுகிறதோ அந்த அமைப்பு அல்லது முறையே விளம்பரச் சாதனமாகும். விளம்பரச் சாதனம் குறைவானச் செலவில் அதிகமான மக்களிடம் விளம்பரச் செய்தியைப் பரப்புவதாக அமைகிறது.

விளம்பரச் சாதனங்கள்

செய்தி அச்சகங்கள், செய்தித்தாள்கள்
வாரமாத இதழ்கள், ஆண்டு மலர்கள்
தொகுப்பேடுகள், மஞ்சள் பக்கங்கள்

சிறப்பு மலர்கள், வெளிப்புற விளம்பரம்
சுவரொட்டிகள், தட்டிகள்
பலகைகள், அலங்கார மின்விளக்குகள்
பலூன்கள், பட்டங்கள்
போக்குவரத்து நிலைய விளம்பரங்கள்
விளம்பர பிரசுரங்கள், நேர்முக அஞ்சல்
சுற்றுக் கடிதம், துண்டுப் பிரச்சுரம்
கூப்ப், அஞ்சல் அட்டை
மாதிரித் தொகுப்புகள்.
வானொலி, தொலைக்காட்சி
வீடியோ, திரை ஆடிகள்
விளம்பரச் செய்திகள், விளம்பரத் திரைப்படங்கள்

என்ற பல்வேறு சாதனங்கள் மூலமாக விளம்பரம் செய்யப்படுகின்றன.

விளம்பரத்தின் பயன்கள்

விளம்பரங்களின் மூலமாக உற்பத்தியாளர்கள், விற்பனையாளர்கள், நிறுவனங்கள், மக்கள் ஆகியோர் பயனடைகின்றனர்.

1. விளம்பரங்கள் விற்பனையைப் பெருக்க உதவுகிறது

2. உற்பத்தியாளர்கள் தாங்கள் உற்பத்தி செய்யும் பொருட்களை விற்பனை செய்வதற்கு விளம்பரதாரர்கள், பணியாளர்கள் தேவை என்பதை வெளியிடவும் விளம்பரம் உதவுகிறது.

3. உற்பத்தி செய்யப்படும் பொருட்களுக்கான புதிய பயன்பாடுகளை தயாரிப்பாளர்கள் மக்களுக்கு விளம்பரத்தின் வாயிலாக அறிவிக்கின்றனர். விளம்பரத்தின் மூலமாக நேற்றைய ஆடம்பரப் பொருட்கள் இன்றைய இன்றியமையாத தேவைகளாக மாற்றப்படுகின்றன. இவ்வாறு மாற்றப்படுவதன் காரணமாக மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயர்த்தப்படுகிறது.

ஒரு பொருளை மக்களுக்கு அறிமுகம் செய்ய விளம்பரம் இன்றியமையாத ஒன்றாக விளங்குகிறது. விளம்பரத்தின் மூலம் மட்டும் இன்றைய சந்தை உலகில் பொருள் உற்பத்தியாளர்கள் தங்களின் பொருட்களை விற்பனைச் செய்ய முடியும். விளம்பரங்களால்தான் மக்கள் புதிய பொருட்கள் பற்றியும் அவற்றின் பயன்பளை பற்றியும் அறிய முடிகிறது. விளம்பரம் செய்யப்படாதப் பொருட்களை மக்கள் வாங்குவது அரிது. நல்ல தரமான பொருளாக இருந்தாலும் விளம்பரம் இல்லையென்றால் மக்கள் அப்பொருளை வாங்கமாட்டார்கள். விளம்பரயுகமான இன்று விளம்பரம் இன்றியமையாததாக மக்களிடம் காணப்படுகிறது.

# திருப்பாவை ஒரு நாட்டுப்பாடல்

பா. சந்தானம்,
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை, அமெரிக்கன் கல்லூரி, மதுரை - 2.

முன்னுரை

ஆண்டாளின் திருப்பாவையும் மாணிக்கவாசகரின் திருவம்பாவையும் தமிழர்களுக்குக் கிடைத்துள்ள பக்தி செல்வங்களில் மிக முக்கியமானது. இவற்றுள் திருப்பாவை எனும் பாசுரத்தை நமக்களித்தவர் கோதை நாயகி, சூடிக்கொடுத்த சுடர்க் கொடியாள் என பாராட்டப் பெறும் ஆண்டாள் ஆவார். இவருடைய பாடல்களில் காணக்கிடக்கும் நாட்டுப்பாடல்களைக் காண்பதே கட்டுரையின் நோக்கம்.

நாட்டுப்பாடல்

இலக்கிய வளர்ச்சிக்கு அடிப்படையாகவும், வளமூட்டுவதாகவும் இருந்து வருவது நாட்டுப்புறப்பாடல்கள். நாட்டுப்புறப் பாடல்களே நாட்டுப்பாடல்கள் என வழங்கும். நாட்டுப்பாடல்கள் ஒவ்வொன்றும் வாழ்வியலை உயிரோட்டமுடன் எடுத்துக் கூறுவது. தமிழ்நாட்டில் எண்ணிலடங்கா பாடல்கள் வழங்கி வருகின்றன. பழங்கால நாட்டுப்பாடல்கள் பழம்பெரும் இலக்கியங்களுக்குத் தாயாக உள்ளது. இப்பாடல்கள் அனைவருக்கும் புரியக்கூடியது. இனிமையானது. ஏட்டில் எழுதாமல் இதயத்தில் எழுதக் கூடியதே நாட்டுப்பாடல்கள்.

தொல்காப்பியத்தில் நாட்டுப்பாடல்

பழம்பெரும் இலக்கியமான தொல்காப்பியம் நாட்டுப்பாடல் குறிப்பு காணப்படுகிறது. தொல்காப்பியத்தில் பண்ணத்தி என்று கூறப்படுவது நாட்டுப்பாடலே எனலாம். இதில் வரும் புலன் எனும் வனப்பு இவ்வகைப் பாடல்களைக் குறிப்பதாகக் கூறுவர்.

திருப்பாவை

சங்க காலத்தையும் நீதி நூல் காலத்தையும் அடுத்து வந்தது பக்தி இலக்கிய காலம் (600-900) எனக் கூறலாம். பக்தி பாடல்களை நாயன்மார்களும் ஆழ்வார்களும் இக்காலக்கட்டத்தில் தான் அதிகமாகப் பாடினார்கள். இங்கு ஆழ்வார்களில் ஒருவராகிய ஆண்டாள் பாடியதே திருப்பாவை. இப்பாவைப் பாடல்கள் தொடக்கத்தில் விளையாட்டாக இருந்தது. பின் சமயச் சார்பாக மாறியது. அடுத்து மார்கழி மாதம் நோன்பிருந்து நீராடினால் நமக்கு நல்ல கணவனும் மாதம் மும்மாரி மழை பொழியும் என்ற நம்பிக்கை அடிப்படையில் மாறியது.

நம்பாவைக்குச் செய்யும் கிரிசைகள்
நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்
பிள்ளைகளெல்லாரும் பாவைக் களம் புக்கார்

என்ற திருப்பாவை தொடர்கள் பாவை சமைத்து வணங்கும் முறையைக் குறிக்கிறது. இதன்மூலம் முற்காலத்தில் மகளிர் விளையாட்டாக இருந்த பாவை பின்னர் தை நீராடலாக வளர்ந்து சமயநெறிக் காலத்தில் பாவை நோன்புப் பாடலாக முழுவளர்ச்சி பெற்றமை உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

பாவைப் பாடல்கள் தோற்றம்

ஸ்ரீமத் பாகவதம் - தசமஸ்கந்தம் - 22ம் அத்தியாயத்தில் கண்ணன் கோபியரின் துகில் கவர்ந்த சரிதத்தில் பாவைப் பாடல்களைப் பற்றிய செய்திகள் காணப்படுவதாக மு. இராகவய்யங்கர் கூறுவர்.

அரசு குலத்துப் பெண்கள் சூரியோதயத்தில் யமுனை நதிக்கரையில் காத்தயாயின் தேவியின் உருவம் செய்து மலர்மாலையுடன் பூசை செய்து மகமாயி என அழைத்து எங்களுக்கு நந்தகோபனின் மகனை நாயகனக அடைய அருள்வீராக என்று கூறி ஒரு மாத காலம் இடைவிடாது நோன்பிருந்து வந்தனர். எனவே அன்றைய நாளிலிருந்து பாவை நோன்பு வடவர் இலக்கியத்திலிருந்து வந்தது எனக் கூறுவர்.

பாவைப்பாடலில் அம்மானை

மகளிர் விளையாட்டக்களில் பல இலக்கிய வடிவம் பெற்று விளங்கி வருகின்றன. அதில் அம்மானை ஊசல், பந்தாடல் எனப் பல வகையில் அமையும். இங்கு பாவைப் பாடல்களில் மிகவும் சிறப்பாக கூறப்பட்டுள்ளது. அம்மானைப் பாடல்கள் நாட்டப்புற வடிவங்களில் ஒன்று, அம்மானை என்பது ஒருவர் வினாத் தொடுக்க அதற்கு மற்றொருவர் விடைபகர்தல் என அமையும்.

இங்கு துயிலும் ஒரு பெண்ணை எழுப்புதல், எழுந்த பெண்கள் இறைவனை எழுப்புவதாக அமைதல் திருப்பாவையில் உள்ளது.

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாள் நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்
வையத்து வாழ்வீகளர் நாமும் நம்பாவைக்குச் செய்யும் கிரிசைகள் கேளிரோ
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து
என்ற பாடல் வரியின் மூலமும் அம்மானை விளையாட்டு அறிய முடிகின்றது.

உரையாடல்

சிலப்பதிகாரத்தில் கண்ணகியும் நெடுஞ்செழியனும் சந்திக்கின்ற வேளையில் உரையாடல் உணர்ச்சி ததும்பக் காட்டுவர் அடிகள். நாட்டுப்புற பாடல்களிலும் உரையாடல் காணப்படுகின்றது. இங்கு திருப்பாவையிலும் உரையாடல் சுட்டப்பட்டுள்ளமை விளங்கும்.

இன்னும் உறங்கிதியோ
சில்லென்று அழையேன்மின்
நங்கைமீர் போதருகின்றேன்
எல்லோரும் போந்தாரோ
போற்தார் போந் தெண்ணிக் கொள்
என்ற வரிகள் உரையாடலைச் சுட்டுகிறது.

நம்பிக்கை

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நம் தமிழ்ச் சங்கத்தில் சில பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் நம்மிடையே கலந்து ஒன்றுபட்டுக்கிடக்கின்றன. அவற்றை அகற்ற எவ்வளவோ முயன்றும் முடியாத முடிவாக உள்ளது. அந்த வகையில் பாவைப் பாடல்களிலும் நம்பிக்கை புரையோடிக் கிடக்கிறது. இதில் தன்னலம் பொது நலம் இரண்டும் கலந்ததாக உள்ளது.

தை நீராடுதல் பற்றி நம் சங்க இலக்கியங்கள்

தை திங்கள் தண்கயம் படியும் பெருந்தோள் குறுமகள் (நற் 80வது)
தையின் நீராடிய தவந்தலைப் படுவாயோ (கலி. 59)
என்று தை நீராடுதல் தமிழ்மக்களின் நம்பிக்கை இது நாட்டுப்புறத்தில் இன்றும்

வழங்கப்படுகிறது.

திரும்பத் திரும்ப

நாட்டுப்புறப் பாடலில் ஒரு எழுத்தோ சொல்லோ மீண்டும் மீண்டும் வந்து பாடலை மேன்மைப்படுத்தும் இச்சொல் பொருள் வேறுபாடாக அமையாது இருக்கும். இங்கு பாவைப் பாடல்களில் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் எம்பாவாய் என முடிதல் நாட்டுப்புறப் பாடல்களை ஒத்துள்ளது.

பாவைப் பாடலில் இயற்கை வருணனை

சங்கப் பாடல்களில் பொருநாற்றுப்படையில் விடியற் பொழுதில் பொருநன் நின்று பாடுவதாக பாடல் அமைந்துள்ளது. அதுபோல நாடல்புறப்பாடல்களும் இயற்கையில் வர்ணனைகளாகவே அமையும் பாவைப் பாடல்களில்

கீசு கிச என்றெங்கும் ஆனைச் சாத்தான் கலந்து பேசின பேச்சரவம் கேட்டிலையோ என பறவையின் ஒலியும்

வந்தெங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப் பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண் என் கோழியன் ஒலியும் சுட்டப்பட்டுள்ளது.

இவ்வாறு காலை வருணைகள் பாவைப்பாடல்கள் காணக்கிடக்கின்றன.

புராணமரபுக் கூறுகள்

முடிவுரை

இது காணும் கூறியவற்றால் திருப்பாவையில் நாட்டுப்புற அமைப்பு எவ்வாறு பயின்று வந்துளளது என்பதைக் கண்டோம்.

தொல்காப்பியத்தில் நிலத்தையும், பொழுதையும், முதற்பொருளாகக் கூறுவர் காப்பியர். இப்பாடலில் உலகத்தை அளந்த திருமாலின் சிறப்புக்கூறி, நீராடுதல் முதல் இரண்டு அடிகளில் பேசப்படுகின்றன.

திருப்பாவையில் ஆயர்களை பேசுவதால் முல்லையின் நிலத்தை சுட்டுகிறது. பழங்காலத்தில் செல்வம் என்று ஆடு மாடுகளைக் குதித்தனர். இன்று கிராமங்களில் உழவர்களுக்குப் பயன்படுவது மாடுகள்தான். இம்மாடுகளிலிருந்து கிடைக்கக்கூடிய பல், தயிர் என்பன பேசப்படுகின்றது. இதுவே செல்வம் என்று கூறுகின்றனர்.

மருத நிலம் பேசப்படுகிறது. வயலும், வயலும் சார்ந்த இடமே மருத நிலம். அங்குதான் உழவுத்தொழில் சிறப்பாக நடக்கும். உழவுப்பாட்டு, நடவுப்பாட்டு, அறுவடைப்பாட்டு என்று பலவகைப் பாடல்கள் பிறக்கும் இடமாகும். இங்கு குறிக்கப்பெறுவது ஓங்குபெருஞ்செந்நெல் விளைவதாக கட்டப்பட்டு அந்நெல்களுக்கிடையே கயல்மீன்கள் துள்ளித்திரிவதாக காட்டப்பட்டுள்ளது.

பாரெங்கும் நீர், பரந்து விரிந்து காணப்படுகிறது. நீரின் மிகுதியால், குவளையின் மலர்கள் மலாந்து இருக்கும் காட்சி சித்தரிக்கப்பட்டுள்ளது. அதில் வண்டுகள் ரீங்காரமிடுவதும் காட்டப்பட்டுள்ளது.

எனவே இப்பாடலின் மூலம் காணப்படும் ஒரு கிராமத்தின் நிகழ்ச்சியை தன் பாடலின் மூலம் எளிய வார்த்தைகளால் இனியமையா கூறியுள்ளார் ஆண்டாள்.

இக்காட்சிப்படுத்துதல் மூலமாக ஒரு கிராமம் நம் முன் நிற்கிறது.

# "அண்மைக்காலத் தமிழ்த் திரைப்படங்களில் தேசிய ஒருமைப்பாட்டுச் சிந்தனைகள்"

ஆர். மாலா எம்.ஏ.,எம்.பில்.,பி.எட்.,பி.எச்.டி
இ.மா.கோ. யாதவர் மகளிர் கல்லூரி,
மதுரை - 14.

முன்னுரை

விடுதலைக்கு முற்பட்ட காலக்கட்டத்தின் நாட்டின் அரசியல், பொருளியல் விடுதலையை முன்னிறுதி இந்திய தேசியச் சிந்தனைகள் அமைந்திருந்தன. கலை, இலக்கியங்களிலும், நாடகங்களிலும், திரைப்படங்களிலும் நாட்டின் விடுதலை பற்றிய சிந்தனைகள் பிரதான இடம்பெற்றிருந்தன. ஆங்கிலேய ஏகாதிபத்திய எதிர்ப்பு, அந்நியர்களின் சுரண்டல் என்ற நிலையில் தோன்றிய 'இந்திய தேசியம்' 1947க்குப் பின்னர் மத பேதம், சாதி பேதம், மாநில பேதம், மொழி பேதம், இன பேதம் முதலான பேதங்களைக் கடந்து 'நாம் இந்தியர்', 'இந்தியர் அனைவரும் ஒருதாய் மக்கள்', 'ஒன்றே மனித குலம்', 'ஒருவனே தேவன்', 'கன்னியாகுமரியிலிருந்து காஷ்மீர் வரை இந்தியா ஒன்று' என்ற நிலையில் இந்திய தேசிய ஒருமைப்பாட்டைக் கட்டமைக்க வேண்டிய சூழல் ஏற்பட்டது. இந்தியாவில் தீவிரவாதம் குறிப்பாக மதத் தீவிரவாதம் தாண்டவமாடுகின்றது : மதவெறி, மொழிவெறி, இனவெறி, மாநில வெறி ஆகியன தீவிரவாதிகளைத் தோற்றுவிக்கின்றன. இத்தகைய சவால்களை எதிர்கொண்டு மக்களை ஒருங்கிணைத்து தேசிய ஒருமைப்பாட்டையும் சகோதரத்துவத்தையும் மனிதநேய உணர்வையும் பேண வேண்டிய பொறுப்பு இந்திய அரசுக்கும் மக்களுக்கும் உள்ளது. தமிழ்த் திரைப்படங்களில் தொடக்க காலத்திலிருந்து காலத்தின் தேவைக்கேற்றவாறு தேசிய ஒருமைப்பாட்டுச் சிந்தனைகள் காலந்தோறும் இடம்பெற்று வருகின்றன.

மதக்கலவரம்

இந்தியா பன்மொழி பேசும் மக்களைக் கொண்ட நாடுஞ் பல மதத்தவர்கள் வாழும் நாடு. அதனால் தான் இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் 'இந்தியா மதசார்பற்ற நாடு' என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. 'வேற்றுமையில் ஒற்றுமை' காணுவதே இந்தியப் பண்பாடாகும். இருப்பினும் இந்தியாவில் இந்து - முஸ்லீம் மதச்சிக்கல் நீண்ட நாட்களாகத் தீர்க்கப்படாத ஒன்றாகவே இருந்து வருகின்றது. 1992 டிசம்பர் ஆறாம் நாள் பாபர் மசூதி இடிக்கப்பட்டது இதற்குச் சான்றாகும். இம் மதக் கலவரத்தை அடிப்படையாகக் கொண்டு மணிரத்னம் தயாரித்த படமே 'பம்பாய்' என்ற திரைப்படமாகும்.

மதக்கலவரத்தினால் நாட்டுக்கு எத்தகைய சிக்கல்கள் தோன்றும்ஞ உயிரிழப்புக்களும் பொருளிழப்புக்களும் ஏற்பட்டு நாட்டின் பொது அமைதியைச் சீருலைக்கும் அப்பாவி மக்கள் எவ்வாறெல்லாம் பாதிக்கப்படுவார்கள் என்பதே இப்படத்தின் கதைக்கருவாகும். 'பம்பாய்' திரைப்படதின் கதைத் தலைவன் இந்து மதத்தைச் சேர்ந்தவன்ஞ அவன் ஓர் இசுலாமியப் பெண்ணைக் காதலித்து மணந்து கொள்கின்றான். இதன்மூலம் கலப்புத் திருமணத்தை மதவொற்றுமையை மணிரத்னம் வலியுறுத்துகின்றார். இதற்கும் ஒருபடி மேலே சென்று மனிதன் மதத்தின் பெயரால் தன்னை அடையாளப்படுத்திக் கொள்வதைவிட தேசத்தின் பெயரால் நாட்டின் பெயரால் அடையாளப்படுத்திக் கொள்வதைவிட தேசத்தின் பெயரால் நாட்டின் பெயரால்

அடையாளப்படுத்திக் கொள்ள வேண்டும் என்கின்றார். 'பம்பாய்' திரைப்படத்தின் ஒரு காட்சியில் கதைத் தலைவனிடம் ஒருவன் 'நீ இந்துவா? முஸ்லீமா?' என்று கேட்கின்றான். அவனிடம் கதாநாயகன்,

"நான் இந்துவும் இல்லை முஸ்லீமும் இல்லை நான் வெறும் இந்தியன்" என்று பதிலளிக்கிறான். இத்தகைய 'இந்தியன்'. 'இந்தியக் குடிமகன்' என்ற உணர்வே தேசிய ஒருமைப்பாட்டின் அடித்தளமாகும். இந்துவும் முஸ்லீமும் இந்தியத்தாய் ஈன்றெடுத்த மக்களே ஆவர்ளூ மதக்கலவரம் மனித நேயத்தைக் கொன்று மக்களைப் பிரித்து வைக்கினறதுளூ மதவெறி இல்லாத மனிதத்தை மதிக்கும் சூழல்தான் இன்றைய இந்தியாவிற்குத் தேவை.

சாதிக்கலவரம்

தேச விடுதலை பேராட்டக் காலத்தில் காந்தியக் கொள்கைகள் முதன்மையிடம் பெற்றிருந்தன. தீண்டாமைக் கொடுமைகளைக் களைவதும் மதுவிலக்குப் பிரச்சாரமும் காந்தியக் கொள்கைகளுள் சிறப்பிடம் பெற்றிருந்தன. காந்தியடிகள் தீண்டாமை ஒழிப்பிற்காக 'ஹரிஜன்' (கடவுளின் குழந்தைகள்) என்ற இதழை நடத்தினார். நால் வருண பேதம் இந்திய சமுதாயத்தில் அன்றும் இன்றும் சாதிய வெறியைத் தூண்டி, சாதிக் கலவரங்களுக்கு வித்திட்டு வருவதைக் காணுகின்றோம். 'நான் சிகப்பு மனிதன்' (1985) என்ற திரைப்படம், நாட்டின் நலனுக்குப் பல்வேறு அநீதிகளை இழைக்கும் அயோக்கியர்களை அழித்து நீதியை நிலைநாட்டும் நல்லவன் ஒருவனைப் பற்றிய கதையாகும்ளூ நீதிக்காகப் போராடும் கதாநாயகன் சட்டத்தின் பார்வையில் குற்றவாளியாகவும், மக்களின் நலனுக்காகப் பேராடுவதால் மக்களின் பார்வையில் அவன் நல்லவனாகவும் திகழ்கின்றான். இப்படத்தில் நாட்டுப்பற்றையும் தேச உணர்ச்சியையும் தூண்டும் வசனங்களும் உரையாடல்களும் குறைவுளூ எனினும் 'காந்தி தேசமே' என்ற திரைப்படத்தின் பாடல் தேசிய ஒருமைப்பாட்டை வலியுறுத்துகின்றதுளூ நம் நாட்டின் இன்றைய இழிநிலையைச் சிந்திக்க வைக்கின்றது.

"ஜாதி என்கின்ற மாயப்பேய் ஒன்று
இரத்தம் கேட்கின்றதே
தர்மம் தப்பித்துக் கள்வர் கோட்டைக்குள்
தஞ்சம் கேட்கின்றதே"

என்னும் பாடல்வரிகளில், இத்திரைப்படம் இன்றைய தேசிய ஒருமைப்பாட்டிற்குச் சாதிப் பிரிவினைகள் தடையாக இருப்பதைச் சுட்டிக் காட்டுகின்றதுளூ

தீவிரவாதம்

நம் நாட்டின் தேசிய ஒருமைப்பாட்டிற்கும் மக்கள் ஒற்றுமைக்கும் மதத் தீவிரவாதம், மொழிவெறித் தீவிரவாதங்கள் இன்று தடைக்கற்களாக அமைந்துள்ளன. நாட்டையே அச்சுறுத்திட அழிக்க நினைக்கும் தீவிரவாதப் போக்குகள் தேசிய ஒருமைப்பாட்டிற்கும் நாட்டின் முன்னேற்றத்திற்கும் தடைக்கற்களாக அமைந்துள்ளன. நாட்டையே அழிக்க நினைக்கும் அத்தகைய தீவிரவாதிகளையும் வன்முறையையும் காவல்துறையைச் சேர்ந்த ஒருவன் போராடி அழித்து வெற்றி பெறுவதே 'ஜெய்ஹிந்த்' என்ற திரைப்படத்தின் கதைக் கருவாகும். இத்திரைப்படம் இளைஞர்களின் உள்ளத்தில் தேசிய உணர்ச்சியைத் தூண்டுகின்றது. இத்திரைப்படத்தின் நாயகன் தீவிரவாதிகளை

எதிர்க்கும் போராட்டத்தில் ஆசை, காதல், குடும்பம், தமது உடைமைகள் அனைத்தையும் இழக்கின்றான். ஆயினும் தீவிரவாதிகளை அழித்து நாட்டைக் காப்பாற்றுகின்றான். இத்தகைய நாட்டுப்பற்றும் தியாக மனப்பான்மையும் இன்றைய இளைஞர்களுக்கு இருந்தால் தான் தேசிய ஒருமைப்பாட்டைக் கட்டிக் காக்க முடியும். இத்திரைப்படத்தில் இடம்பெற்றுள்ள 'தயரின் மணிக்கொடி தாயின் மணிக்கொடி' என்ற பாடல் இளைஞர்களுக்கு வீர உணர்ச்சியைத் தூண்டி, நாட்டுப்பற்றை வலியுறுத்துகின்றது.

"இளைஞர் ரத்தம் என்ன போலியா
எழுத வேண்டும் புதிய இந்தியா"
"பூக்கள் கொண்டு வந்தால்
இது புண்ணிய தேசமடா
வாட்கள் கொண்டு வந்தால்
தலை வாங்கிடும் தேசமடா"

என்னும் இத்திரைப்படப் பாடல்வரிகள் சிந்தனைக்குரியவை. மதத்தீவிரவாதம், இனத் தீவிரவாதம், மொழி தீவிரவாதம், மாநில வெறித் தீவிரவாதம் முதலான தீவிரவாதங்களை ஒடுக்கிப் புதிய இந்தியாவைக் கட்டமைக்கும் பொறுப்பு இன்றைய இளைஞர்கள் கையிலேயே உள்ளது. புண்ணிய பூமியை போர்க்களமாக மாற்றக் கூடாது. மக்கள் ஒற்றுமையையும், நாட்டின் பொது அமைதியையும் சீர்குலைக்கும் தீவிரவாதச் சக்திகளை - வெடிகுண்டுக் கலாச்சாரத்தை எதிர்த்து இளைஞர்கள் போராட வேண்டும் என்பதையே இத்திரைப்படப்பாடல் வலியுறுத்திக் கூறுவதைக் காணுகின்றோம்.

ஒன்றே மதம் ஒருவனே தேவன்

பல்சமய நம்பிக்கைகளும் பல கடவுள் வழிபாட்டு முறைகளும் இந்திய தேசிய ஒருமைப்பாட்டிற்குத் தடையாக அமைந்திருக்கின்றன. ஆதலால் இந்தியாவின் முன்னேற்றத்திற்கும் இந்திய மக்களின் ஒருமைப்பாட்டிற்கும் ஒரே மதமும் ஒரே கடவுளும் உடனடித் தேவை என்ற சிந்தனையையும் தமிழ்த் திரைப்படங்கள் முன் வைக்கின்றன. சான்றாகப் 'புதிய மன்னர்கள்' என்ற திரைப்படத்தில் இடம்பெறும் பின்வரும் பாடல்வரிகளைக் குறிப்பிடலாம்.

"ராமர் என்னடா பாபர் என்னடா
ஒரே கோயில் கட்டு
மதம் எல்லாமும் ஒன்றே ஒன்று"

இந்திய மக்களுக்கும் அரசுக்கும் 'மத நல்லிணக்கம்', 'மதச்சகிப்புத்தன்மை' ஆகிய கொள்கைகள் அவசியமான ஒன்றாகும். ஒரேயிடத்தில் இந்துக்களும் இசுலாமியர்களும் சேர்ந்து வழிபடும் கூட்டுவழிபாட்டுமுறை தோன்றினால் மதக் கலவரத்தையொழிக்கலாம் என்பதை இப்பாடல் வரிகள் சுட்டிக்காட்டுகின்றன.

தேசமும் தாயும் ஒன்று

தேசமும் தாயும் ஒன்று. அதனால் தான் 'பாரதத் தாய்', 'தமிழ்த் தாய்', 'அன்னை பூமி' என்று கவிஞர்கள் தாயையும் தேசத்தையும் இணைத்துக் கவிதை பாடியுள்ளார்கள். தேசப்பற்றும் ஒருவன் தன் தாய்மீது செலுத்தும் பற்றும் ஒன்றே. அவற்றுக்குள் வேறுபாடில்லை என்பதை 'அழகன்' திரைப்படத்தில் இடம்பெறும் பின்வரும் பாடல்வரிகள் சுட்டிக்காட்டுகின்றன.

"தேசம் வேறல்ல
தாயும் வேறல்ல ஒன்றுதான்
தாயைக் காப்பதும்

நாட்டைக் காப்பதும்
ஒன்றுதான்"

'அழகன்' திரைப்படத்தின் கதை நாட்டுப்பற்றை வலியுறுத்துவதென்றுனு எனினும் இப்படத்தின் பாடல்வரிகளில் நாட்டுப்பற்று உயிரோட்டமாக இழையோடிருப்பதைக் காணுகின்றோம்.

அனைத்துலக ஒருமைப்பாடு

வன்முறைக் கலாச்சாரம், அணு ஆயுத ஒழிப்பு, உலக அமைதி ஆகியனவற்றை எடுத்துக்காட்டும் வகையிலும் தமிழ்த்திரைப்படங்கள் உலக அமைதிக்கும் சர்வதேச நலனுக்கும் நமது பங்களிப்பைச் செய்து வந்திருப்பதைக் காணுகின்றோம். போராட்டம் இல்லாத - போரற்ற உலகத்தைச் சமைக்கவும் தமிழ்த்திரைப்படங்கள் வழிகாட்டியுள்ளன. 'முகவரி' என்னும் திரைப்படத்தில் இடம்பெற்றுள்ள 'ஆண்டே நூற்றாண்டே' என்னும் பாடல் இதற்குத் தக்க சான்றாகும்.

"போர்க்களம் உழுதுவிடு - அங்கே
பூச்செடி நட்டுவிடுனு
அணுகுண்டு அத்தனையும் - பசிபிக் கடலில் கொட்டிவிடு"

இளைஞர்களின் கையில் இந்தியா

ஒரு நல்ல மாணவன் - இளைஞன் எப்படி இருந்தால் நலம் என்பதை 'ஆய்த எழுத்து' என்னும் திரைப்படத்தின் இயக்குநர் மைக்கேல் என்னும் கதாபாத்திரத்தின் மூலம் காட்டியுள்ளார். நாட்டிற்காகப் போராடும் இளைஞர்களுக்குத் துணிச்சல் அதிகம் வேண்டும் என்பது இத்திரைப்படத்தின் கதைக்கருவாகும். இத்திரைப்படத்தில் இடம்பெற்றுள்ள 'ஜனகனமண' என்ற பாடல் தேச உணர்ச்சியை விதைக்கும் கருத்துக் கவிதைப் பாடலாகும்.

"நல்லவர் யாவரும் ஒழிந்து கொண்டால்
நரிகளின் அட்டகாசம் துவங்கி விடும்
வாலிப கூட்டணி வாடிளடுத்தால்
வலப்பக்கம் பூமி திறந்துவிடும்
ஆயிரம் இளைஞர்கள் துணிந்து விட்டால்
ஆயுதம் எதுவும் தேவையில்லை"

ஆதலால் எதிர்கால இந்தியாவின் வளமும் நலமும் ஒருமைப்பாடும் இளைஞர்கள் கையில் தான் உள்ளது என்பதை எடுத்துக்காட்டும் வகையில் தமிழ்த்திரைப்படங்கள் அண்மைக் காலங்களில் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

முடிவுரை

அண்மைக் காலத் தமிழ்த் திரைப்படங்களில் மதக் கலவரம், சாதிக் கலவரம், தீவிரவாதப் போக்குகள் ஆகியனவற்றைச் சாடியும், ஒன்றே மதம்னு ஒருவனே தேவன்னு தேசமும் தாயும் ஒன்று, அனைத்துலக ஒருமைப்பாட்டுச் சிந்தனை, எதிர்கால இந்தியா இளைஞர்களின் கையில் என்பதை வலியுறுத்தியும் தேசிய ஒருமைப்பாட்டுச் சிந்தனைகள் அமைந்திருப்பதை இக்கட்டுரை எடுத்தியம்பியுள்ளது.

# இதழியல்

மோ. மகாலட்சுமி
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை, மாநிலக் கல்லூரி,
சென்னை - 600 005.

முன்னுரை

"காலையில் எழுந்தவுடன் செய்தித்தாள்" என்பது இன்று பலரின் பழக்கமாகிவிட்டது. இதழ்களின் தாக்கத்திற்குட்படாத, எந்தத் துறையும் இல்லை. பத்திரிக்கைகளின் செல்வாக்கு எழுத்தில் அடங்காது. 'ஆக்கல், அழித்தல்' என்று 'எல்லாம் வல்லதாக' இதழியல் செல்வாக்கும் - செல்வாக்கும் பெற்றிருப்பதால் அதனைப் பற்றி அறிந்து கொள்ளுதல் இக்காலத் தேவையாகி விட்டது.

வியக்கத்தக்க வகையில் இதழியல் விரைந்து வளர்ந்து வருகின்றது. அறிவியல், தொழில் நுட்ப முன்னேற்றத்தின் விளைவாக இதழ்கள் - செய்தித்தாள்கள் - அளவாலும், இயல்பாலும், பரப்பாலும், வகைகளாலும் நமது அரசியல், பொருளாதார சமுதாய வாழ்க்கையில் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றன. அச்சிதழ்கள் இணைய இதழ்களாக வடிவெடுக்கும் போக்கு அதிகரித்துள்ளது.

செய்தித்தாளின் அடிப்படையும் தோற்றமும்

கூட்டு வாழ்க்கையில் மனிதன் ஈடுபட்ட காலத்திலிருந்தே , மனிதர்கள் செய்திகளைப் பரிமாறிக் கொள்ளத் தொடங்கி இருக்கலாம். நம்மைச் சுற்றிலும் என்ன நடக்கிறதென்பதை அறிந்து கொள்ளும் ஆர்வம், மனிதனின் உடன் பிறப்பு, பேச்சு மொழி உருவாவதற்கு முன்பே "செய்கைகள்" மூலமும், ஒலிகளின் மூலமும் மனிதர்கள் செய்திகளைப் பரப்பினார்கள.

சீழ்க்கை ஒலியாலும், பறையறைவித்தும், மணியடித்தும், புகை எழுப்பியும், தீயம்புகளை வானத்தில் எறிந்தும் ஓரிடத்தில் நடப்பதை சுற்று வட்டாரத்து மக்களுக்கு அறிவிக்கும் பழக்கம் வரலாற்றுக் காலத்திற்கு முன்பே தோன்றியதாகும்.

பேச்சு மொழி வளர, வாய் வழியாக, விரிவாகச் செய்திகளைப் பரப்ப முடிந்தது. ஒருவரை ஒருவர் பார்க்கின்ற பொழுது நடப்பு விவரங்களைக் கேட்டறிந்து, அறிந்தவற்றை மற்றவர்களுக்கும் கூறி வந்தனர். இன்றும் செவிவழிச் செய்திகள் விரைந்து பரவுவதைக் காணலாம்.

இணைய இதழியல் - ஓர் அறிமுகம்

"அறிவியல் தகவல் வளர்ச்சி, மாக் லூகன் கூறியுள்ளபடி உலகத்தையே ஒரு சிறு கிராமமாக மாற்றிவிட்டது எனலாம்".

இது, தகவல் யுகம். இருபத்தொன்றாம் நூற்றாண்டைத் தகவல் தொழில் நுட்ப நூற்றாண்டு என அழைக்கின்றோம். மண்தின்ற கண்ணனின் வாயைத் திறந்து பார்த்த யசோதை, ஈரேழு உலகங்களைக் கண்டதாகப் புராணக் கதை உண்டு. அதற்கொப்ப, இன்று கையடக்கக் கணிப்பொறிக்குள் பிரபஞ்சத்தின் அனைத்து அசைவுகளையும் காண முடியும்.

சைகையில் பேசிய ஆதி மனிதன், ஆதி நவீன மனிதனாக மாறிவிட்டான். இதற்கு முதன்மைக் காரணம், கணிப்பொறியும் இணையமும் கண்டுபிடிக்கப் பெற்றதே எனலாம்.

இதழியல் விளக்கம்

சொல் விளக்கம் : 'ஜெர்னலிசம்' என்ற ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கம் 'இதழியல்'. இந்தச் சொல்லின் மூலம் 'டையர்னல்' என்ற பழைய இலத்தீன் மொழிச் சொல்லில் இருந்து பிறந்தது. வாஸ்கோடகாமா பயண நூல் 'எ சர்னல் ஆப் தி பஸ்டு வாயேஜ் ஆப் வாஸ்கோடகாமா', என்று பெயர் பெற்றது. ஆனால் இப்பொழுது 'சர்னல்' என்பது 'இதழ்'களையே குறிக்கிறது என்று எழுத்தாளர் அ.மா.சாமி விளக்குகின்றார்.

இதழ் என்பதை 'பத்திரிக்கை', 'செய்தித்தாள்', 'தாளிகை' என்றும் குறிப்பிடுகின்றனர்.

இலக்கணம்

இதழ்களுக்கும், குறிப்பாக செய்தித்தாள்களுக்கும் எழுதும் தொழிலைத்தான் முதன் முதலில் இதழியல் என்ற சொல் குறித்தது. "அற அடிப்படையிலும் சட்ட நோக்கிலும் பொறுப்பேற்கும் அமைப்பாகவும் இதழியல் திகழ்கின்றது".

மேத்யூ அர்னால்டு "இதழியல் அவசரத்தில் பிறக்கும் இலக்கியம்" என்று புகழ்கின்றார்.

இதழியல் - ஓர் அறிவியல்

தொடக்க காலத்தில் இதழியலில் யார் வேண்டுமானாலும் எப்படியே ஈடுபடலாம் என்ற நிலை இருந்தது. இப்பொழுது தக்க பயிற்சி இன்றி இதழியலில் ஈடுபட இயலாததென்ற அளவிற்கு இதழியல் ஓர் அறிவயலாக (ளுஉடைநஉந) வளர்ந்துள்ளது.

அறிவியல் என்னும் சொல் காரண காரியம் ஆகியவற்றிற்குரிய தொடர்பைப் பற்றிய ஒழுங்குபடுத்தப் பெற்ற அறிவின் தொகுதியைக் குறிக்கின்றது. உண்மைகளை மொத்தமாகத் தொகுப்பது மட்டும் அறிவியலாகாது. அவற்றை முறைப்படி தொகுத்து, வகைப்படுத்தி, பகுத்தாய்ந்து கூறுவதே அறிவியலாகும். இந்த விளக்கத்தின் படி இதழியலும் ஓர் அறிவியலே.

ஓர் இதழ் உருவாகும் நிலையைத் தொடக்கம் முதல் இறுதி வரை அறிவியல் நோக்கில் முறைப்படுத்தியுள்ளனர். செய்திகளைச் சேகரிப்பது, எழுதுவது, செப்பனிடுவது, அச்சிடுவது, வெளியிடுவது ஆகிய அனைத்தும் ஆய்வு முறையிலேயே அமைகின்றது. ஆதலால்தான் இன்று இதழியல் சமுதாய அறிவயில்களில்ஒன்றாகச் சிறப்பிடம் பெற்று விளங்குகின்றது.

இதழியல் ஓர் கலையியல்

அறிவியலாக விளங்கும் இதழியல் ஓர் அற்புதக் கலையிலாகவும் (யுசவ) திகழ்கின்றது.

கலையியல் என்பது உள்ளத்து உணர்ச்சிகளை அழகாக வெளிப்படுத்துவதாகவும், மகிழ்ச்சியை வழங்குவதாகவும், ஓர் உயரிய குறிக்கோளை நோக்கி அழைத்துச் செல்வதாகவும் இருக்க வெண்டும். இதழியல் இத்தகைய இயல்புகள் அனைத்தும் ஒளிர்கின்றன.

இதழ் - விதி முறைகள்

அச்சிதழுக்கெனக் குறைந்தபட்ச விதிகளும் நெறிமுறைகளும் உள்ளன. சட்டங்களும் கட்டுப்பாடுகளும் உள்ளன. ஆனால் இணைய இதழுக்கெனத் தனிச் சட்டங்கள் இன்னும் ஏற்படுத்தப் பெறவில்லை. இணையச் சட்டங்களும் முழுவீச்சில் செயற்பாட்டுக்கு வரவில்லை.

ஆனால் இரண்டு ஊடகங்களையும் அரசு தனித்தனியேதான் பார்க்கின்றது. ஓர் அச்சிதழின் வாசகர் எண்ணிக்கையை உள்ளடக்கியது அன்றுளூ அந்தக் கூட்டுத் தொகையை ஏ.பி.சி. (ஆடிட் பீரோ ஆ'.ப் சர்க்குலேஷ்ன்) ஏற்காது. இந்தக் கூட்டுத்தொகை, இதழ்களின் செல்வாக்கையும், விளம்பரங்களையும் உயர்த்தக் கூடும்.

தமிழ் மொழி இணையம் மூலமும் வளமை பெறுகிறது. இணைய இதழ்கள், தமிழில் எந்த எதிர் விளைவையும் ஏற்படுத்தவில்லை. இணையத்தில் வாசிக்கலாம், பார்க்கலாம், கேட்கலாம்ளூ ஆனால் இப்போதைய இணைய இதழ்களில் வாசிப்பு மட்டும் தான் இருக்கிறது. பத்திரிக்கையைக் கையில் வாங்கிப் படிப்பது போல் தான் இருக்கிறது.

அரசுச் செய்திகள்

செய்தித்தாட்களின் மூலங்களாக உலகில் பல்வேறு நாடுகளில் மன்னர்கள் தங்களது செய்திகளைப் பரப்ப மேற்கொண்ட முயற்சிகளும், முறைகளும் அமைந்தன.

ரோம் நாட்டை ஆண்ட ஜீலியஸ் சீசர் கி.மு. 60-இல் அரண்மனைச் செய்திகளை "ஆக்டா டையர்னா" (யுஉவய னுரைசயெ - அன்றாட நடவடிக்கை) என்ற பெயரில் எழுதி பொது இடங்களில் வைத்தார். அவர் போரிட்டுக் கொண்டிருந்த பொழுது, போர்ச்ச செய்திகளை தலைநகருக்'கு அனுப்பி வந்தார். இதனால் சீசரை "இதழியலின் தந்தை" என்று அழைக்கின்றனர். இவருக்கு முன்னோடியாக சிசரோவைக் கருதுவாரும் உள்.

இணையம்

கணிப்பொறியில் ஒவ்வொருவரும் வெவ்வேறு தகவல்களைச் சேமித்து வைத்துள்ளார்கள். இலக்கியம், திரைப்படம், வரலாறு, புவியியல், வானவியல், அறிவியல், கணிதம் என்று எண்ணற்ற தலைப்புகளில் தகவல்கள் உள்ளன. இப்படி உலகெங்கும் சிதறிக் கிடக்கும் தகவல்களை இணைத்துவிட்டால் யாரும் எந்த நேரமும் போய் அத்தகவல்களைப் பெற முடியும். இப்படி உலகெங்கும் கணிப்பொறியில் உள்ள செய்திகளின் இணைப்பே இணையம் எனப்படும். இதனை ஆங்கிலத்தில் "இண்டர்நெட்" என்பர்.

இணைய இதழகள்

"தாளில் எழுதியது அல்லது அச்சிட்டது தான் இதழ் என்று பத்தொன்பதாம் நூற்றாண்டு வரைக் கருதப்பட்டது. இருபதாம் நூற்றாண்டில் மின்னிதழ்கள் தோன்றி அந்தக் கருத்தை மாற்றியதுடன் அச்சிதழ்களை மிஞ்சும் அளவுக்கு இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மின்னிதழ்கள் வளர்ந்தும் விட்டன.

இ.ணை இதழ்கள் தோற்றமும் வளர்ச்சியும்

வையக விரிவு வலை, 1991-இல் அறிமுகம் ஆனது. 1994-ம் ஆண்டு மத்தியவர்களில் நெட்ஸ்கேப் நேவிகேட்டர் (நேவளஉயிந யேஎபையவழச) என்ற உலாவி (டீசழறளநச) பயன்பாட்டுக்கு வந்தது. 1955-ல் மைக்ரோசாப்ட் (ஆகைசழளழகவ) நிறுவனத்தின் இண்டர்நெட் எக்ஸ்புளோரர் (ஐவெநசநெவ நுஒிடழசநச) என்ற உலாவி, புழக்கத்துக்கு வந்தது. இதன் பிறகே முழுமையான வலைப்பின்னல் உலகம் முழுவதும் சாத்தியமாயிற்று.

ஆனால், இந்த உலாவிகளின் வரவுக்கு முன், குறும்பரப்பு வலையமைப்பு, ஆங்காங்கே அமைந்திருந்தது. இவற்றுக்கு இடையே மின்னஞ்சல் பரிமாற்றமும் இருந்தது.

தமிழகத்தை விட்டுத் தொழில் நிமித்தம் வெளி நாடுகளுக்குச் சென்ற

தமிழர்கள், தமிழைப் பார்க்கவும் கேட்கவும் வழியில்லாமல் இருந்தனர். எனவே இணையம் மூலம் தமிழைப் பார்க்க விரும்பினர். கலந்துரையாடல்-மின்னஞ்சல் மூலமாக தங்களுக்குள் ஒரு தொடர்பினை உருவாக்குவதற்கே முதலில் இணையத்தைப் பயன்படுத்தத் தொடங்கினர். இணையத்தில் தமிழை வெளிநாட்டுத் தமிழர்கள் 1986 முதல் பயன்படுத்தத் தொடங்கிவிட்டனர்.

1992-93ம் ஆண்டுகளில் எஸ்.சி. தமிழ் இலக்கிய மன்றம், 'அ' என்று ஒரு தமிழ் இலக்கிய மின்னிதழை நடத்தியது. இதுதான் முதல் தமிழ் மின்னிதழாகக் கருதப்படுகின்றது.

தினபூமி.காம் : இந்த "அ" இதழுக்குப் பிறகு 1996-ல், தமிழ் நாளிதழான "தின பூமி" இணையத்தில் இடம் பிடித்தது. "இந்திய மொழிகளைப் பொறுத்தவரை தமிழ்தான் முதன் முதலில் 1996-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் இணையத்தில் ஏறியது".

உலகமெங்கும் உள்ள நாடுகளில் தமிழ் வளர்க்கும் அரிய பணியைத் தமிழ் இணைய இதழ்கள் ஆற்றி வருகின்றன. பெரும்பான்மையான இணைய இதழ்களின் பெயர்கள் (ருசுடு) இனிய, எளிய தமிழில் இருப்பது பாராட்டுக்குரியது.

இ-இதழியல் 1992-ல் தோன்றிய போதும் 1997-ல் தான் அது அழுத்தமாக எழுந்து நின்றது. 1999-2000 காலத்தில் உச்ச நிலையில் இருந்தது. 2001-க்குப் பிறகு அதன் வளர்ச்சி தேயத் தொடங்கியது.

கட்டுரைக்கான உத்தியில் எழுத்து நடையும், வடிவமைப்பும் கவனத்தில் கொள்ளப் பெறுகின்றன. தொழில்நுட்ப மேம்பாடு இல்லை. இணைய இதழ் ஆசிரியர்களுக்கும் குறைந்த கணிணி - இணைய அறிவு உள்ளது. உச்சபட்ச சாத்தியப்பாடுகள் தெரியாததால் பிரத்தியேக அம்சங்களில் நிற்கவில்லை.

இணைய இதழ்களின் நிறைகுறைகள்

நிறை : ருினயவந செய்வது நாளுக்கு 4, 5 முறையிலிருந்து 50 முறை கூட ருினயவந செய்யலாம். உடனே தகவல் பரிமாறலாம். ஒரே நேரத்தில் 100 நாட்டிலிருந்து 100 பேர் தொடர்பு கொள்ளலாம். அரட்டை அடிப்பது (ஊாயவ) இணையத்தில் மட்டுமே சாத்தியம்.

குறை-என்றால், சரியாக திட்டமிடுதலின்றி இல்லை. வெளிநாட்டுத் தமிழர்கள் வாசிக்கிறார்கள். உள்நாட்டில் வாசிப்பதில்லை. வித்தியாசமான அனுபவம் கொடுக்க வேண்டும். தொழில் நுட்ப ரீதியான அனுபவம் இல்லை.

# 'தலித் ' என்ற சொல்லின் தோற்றமும் 'தலித்' மக்களின் அவலநிலையும்

ச.க.அழகாம்பிகை, எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி
விரிவுரையாளர்
கந்தசாமிக் கண்டர் கல்லூரி
வேலூர் - நாமக்கல் - 638 182.

முன்னுரை:

"தலித் முரசு
புதிய கோடங்கி
மண்
மின்னம்பலம்
நிழல்
காலச்சுவடு
அழகிய பெரியவன்."

தற்காலச் சூழலில் 'தலீத் விடுதலை இயக்கம்' என்பது பல திசைகளில் செயல்படுகிறது. அரசியல் தளத்தில் இரட்டை வாக்குரிமை, தனி வாழிடம், தனியார் துறையில் இட ஒதுக்கீடு. சிறப்புக் கூறுத் திட்டம் வன்கொடுமைத் தடுப்புச் சட்டத்தைத் தீவிரமாக அமுல்படுத்துதல் முதலிய கோரிக்கைகள் முன் வைக்கப்படுகின்றன. பண்பாட்டுத் தளத்தில் சாதி ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்பு, மதம் மாறுதல், பௌத்தத்தைத் தழுவுதல் முன்னோர் வழிபாடு, தமிழ் பெயர் சூட்டுதல், மொழி வழி தேசியத்தைப் பின்பற்றுதல், தலித் இலக்கியம் போன்ற செயல்பாடுகளைத் தலித் இயக்கத்தில் காணமுடிகிறது.

'தலித்' என்னும் சொல்லுக்கு நேரடியாக ஒடுக்கப்பட்டவர்கள் எனப் பொருளாகின்றது. 1970-முதல் தீண்டாதார் நடத்த முற்பட்ட எதிர்ப்பு இயக்கங்களின் விளைவாக இந்தச் சொல் எங்கும் பரவியது. சிவில் உரிமைகளை வலியுறுத்தவும், பெருமித உணர்வை, ஊட்டவும் முனைந்து இந்தச் சொல் பயன்படுத்தப்பட்டது. தீண்டப்படாதவர்களைப் பொறுத்தவரை இந்து சமூகத்தின் ஒடுக்குமுறையை எதிர்க்கும் போக்கு இதிலுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. விடுதலைப் போராட்த்தில் தீண்டப் படாதவர்களுக்குப் பெரிதும் ஊக்கத்தை அளித்துள்ளது. தீண்டப்படாத வர்களின் தலைவர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்கள் ஏனைய இந்த மக்களின் பணியில் ஈடுபட்டோர் ஆகிய அனைவரும் குறிப்பாக தீண்டப்படாத வர்களின் விடுதலை இயக்கத்தைத் துவக்கிய பாபா சாகேப், டாக்டர் பி.ஆர்.அம்பேத்கார் பிறந்த மகாராட்டிரத்தைச் சார்ந்தவர்கள்.

இவர்கள் இந்தச் சொல்லைப் பயன்படுத்தினர். தீண்டப்படாதவர்களுக்கு இழைக்கப்பட்டு வந்துள்ள சாதிக் கொடுமைகள், அநீதிகள் ஆகியவற்றை வெளிப்படுத்தும் பேரணிகள், தெருமுனை நாடகங்கள் ஆகியவை தோன்றின. இவற்றின் விளைவாக "தலீத்" இயக்கம் தோன்றியது.

காலப்போக்கில் தலீத் இயக்கப் பேச்சாளர்கள் தலீத் என்னும் சொல் அனைத்து வகையான பொருளாதார சமூக ஒடுக்குமுறைகளையும் உள்ளடக்கியதாகக் கொண்டு சிறுபான்மையோர், பெண்கள், அனைத்து மதங்கள் சாதிகளிலுள்ள பின்தங்கியோர் ஆகியோரையும் குறிப்பதாகக் கொண்டனர். ஆரம்ப காலக் கட்டத்தில் தலீத் என்பது 'செடியூல்டு' வகுப்பாரை மட்டும் குறித்த போக்கிலிருந்து இந்த வளர்ச்சி வேறுபட்டது. காலப்போக்கில் இந்த வளர்ச்சி அனைத்தும் பிற்பட்ட வகுப்பாரையும் செடியூல்டு வகுப்பால் உள்ளிட்ட அனைத்துச் சாதிகள் குழுக்களைச் சார்ந்தவர்களையும் குறிப்பதற்குப் பயன்பட்டது.

ஒடுக்கப்பட்ட அல்லது சிதறிய என்னும் பொருள்படும் சமஸ்கிருத சொல்லே 'தலீத்' என்பது இந்த வகையில் இந்திய சமுதாயத்தில் இன அல்லது குழு ஒருங்கிணைவு காரணமாக அப்புறப்படுத்தி ஒதுக்கி வைக்கப்பட்டவர்களை இது குறிக்கிறது. இவ்வாறு ஒதுக்கப்பட்ட மக்களுக்குள் பல்வேறு அளவிலான தாழ்வுகளுக்கு உட்படுத்தப்பட்டவர்களாக செடியூல்டு வகுப்பினர், பழங்குடியினர் மற்றும் இந்திய சமுதாயத்தில் சமூக பொருளாதார வாய்ப்பு வசதிகள் மறுக்கப்பட்டு ஒழுங்கற்ற வகையில் சிதறியவர்கள் அனைவரையும் உள்ளடக்கியதாயிற்று. இவ்வகையினரைப் பட்டியல் வகையினர் என நாட்டில் மக்கள் தொகையில் 22.5 விழுக்காடு மக்களை வகைப்படுத்தியுள்ளது. சமூக, பொருளாதார வாழ்க்கை மேம்பாட்டிற்கான வாய்ப்புகள் மறுக்கப்பட்டன. அளவாகக் கொண்டு பார்த்தோமானால் இந்திய நாட்டு மக்கள் தொகையில் 50-க்கும், 60-க்கும் இடைப்பட்ட விழுக்காடு அளவு மக்கள் தலீத்துக்கள் என்று மதிப்பிடலாம்.

### தீண்டாமை ஒழிப்பு

தீண்டப்படாதார் அல்லது'தலீத்துக்கள்' என்ற தற்போது அழைக்கப்படுவோர் தமது உரிமைகள், சுதந்திரம் ஆகியவற்றிற்காக நடத்தும் போராட்டம் இதுபோன்ற விடுதலை இயக்கங்களுக்கு உரிய தன்மை வாய்ந்ததாக பலவகையான கட்டங்களைக் கடந்து வந்துள்ளது. தனிமனிதர்களாக இருந்து எதிர்ப்புக்குரல் எழுப்பியதிலிருந்து தொடங்கி, தீண்டாதார் படிப்படியாக இந்த இயக்கத்தை எதிர்ப்பு என்ற கட்டத்தில் இருந்து புரட்சிக் கட்டத்திற்குக் கொண்டு வந்துள்ளனர்.

டாக்டர் அம்பேத்கார் இந்த மக்களின் உரிமைகள், சுதந்திரம்

ஆகியவற்றை இடம்பெற வைத்தார். 1865 டிசம்பர் 18-இல் அமெரிக்க நாட்டு அரசியலமைப்புச் சட்டத்தின் 13-வது திருத்தம் ஏற்பட்டது அந்த திருத்தத்தில்

> "அடிமைத்தனமோ, வழக்கு மன்றத்தால் ஒருவருக்கு
> தண்டனையாகக் கூடிய குற்றத்திற்கு விதிக்கப்பட்ட
> தண்டனையால் தவிர வேறு வகையில் கட்டாயப்படுத்தி
> வேலை வாங்குவதோ அமெரிக்க ஐக்கிய நாட்டிலோ
> அல்லது அதன் ஆட்சியதிகாரம் செல்லும் எந்த
> இடத்திலும் இருக்கக்கூடாது"

1949 நவம்பர் 26-இல் அரசியலமைப்பு நிர்ணய சபையில் நிறைவேறிய இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் 17-வது விதி தீண்டாமை என்பது சட்டப்படி தண்டனைக்குரியதொரு குற்றம் என்கிறது. ஆப்ரகாம்லிங்கன் அடிமையொழிப்பு பிரகடனத்தில் கையொப்பம் இட்டதற்கு இணையான வெற்றிக்குரிய நேரமாக டாக்டர் அம்பேத்கார் அவர்களுக்கு இந்தத் தருணம் அமைந்தது.

"நான் பிறந்துவிட்ட சாதி மக்கள் ஆளாகி இருக்கும் வெறுக்கத்தக்க அடிமைத் தனத்தையும், மனிதாபிமானமற்ற அநீதியையும் ஒழிக்க முடியாமல் போவேனாகில் துப்பாக்கியால் சுட்டுக்கொண்டு என் வாழ்க்கையை முடித்துக்கொள்வேன்".

என்று சபதம் மேற்கொண்டவர் டாக்டர் அம்பேத்கார் தலித் மக்களின் அவலநிலை:

அகல்
சின்னஞ்சிறு அறையொன்றில்
தன்னந்தனியே ஒரு மூலையில்
கசிந்து வரும் காற்றின்
வருணைக்கப் பயந்து
நடுங்கியபடி
பாடிக்கொண்டிருக்கிறதொரு பாடலை
தனதே யான தொரு மொழியில்
மெலிதானவொரு குரலில்
எப்போதோ நீ ஊற்றிப் போன
எண்ணெயில் கடைசித்துளி
மிச்சமிருக்கும் வரை
நிறைந்திருக்கும் இவ்வறை
சோகம் ததும்பும் அந்தப்பாடலில்
என்றேனும் நீ
திரும்பி வருகையில்

காணலாம்

வெளியேற்றுவதற்கான வழிமுறைகள்
உண்மையுமாய் இன்மையுமாய்
கூத்தாட்டுவானாக நீ குடியிருக்கும்
இந்தக் கூட்டை நெருப்பிட்டு எரித்து
நீடுறடுத்து நீர்நிலைகளில் தூவுவேன்
புனலோடு புனலாய்
கரைந்தோடுவாய் நீ
சாதி மீறி நேசித்தவர்களின்
குழிகளின் மீதிருந்து
சிரிக்கிறார்கள் நரிப்பயல்கள்
பலபட்டறைச் சாதியென்று
எங்களை,
அத்தனை தந்திரத்துடன்
சாதியைப் படைத்தவன்
பாம்புச் சட்டைகள்
இறைந்து கிடக்குமொரு
பாலைப் பெரு வெளியைப் போல
நீளப் படுத்திருக்கிறது

முடிவுரை

"டாக்டர் அம்பேத்கார் எடுத்துக்கொண்ட புகழார்ந்த சபதம் இது, சுதந்திர பாரதத்தின் அரசயலமைப்புச் சாசனப்படி திண்டாமை ஒழிக்கப்பட்டது. இதனால் அவரது சபதம் நிறைவேறியது. அவர் கண்ட கனவு நனவானது. அவருடைய இலட்சியம் நிறைவேறியது. அடிமைத்தனம் ஒழிந்தது. அவர் சொன்னார்., சொன்னதைச் செய்து முடித்தார். சட்டப்படி "தீண்டாமை" என்பது ஒழிக்கப்பட்டுவிட்டது. ஆயினும் நாட்டில் குறிப்பாகக் கிராமப் புறங்களில் அது இன்னமும் நடைமுறையில் பின்பற்றப்படுகின்றது. தீண்டப்படாதாரான ஆண்களும், பெண்களும் உண்மையிலேயே விடுதலைப் பெற்று இந்திய சமூகத்தில் சமத்துவமும், சுதந்திரம் பெற்றவர்களாக இருக்கும்படியாக்குவது அனைவருக்கும் உரிய பெரியதொரு கடமையாகும்.

# பெண் எழுத்தில் காதல்

க.அம்பிகாவதி
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை -21.

## முன்னுரை

காதலும் வீரமும் மனிதனின் அடிப்படையான உணர்வுகளில் ஒன்று. இந்த அடிப்படையான உணர்வுகளை உலகில் உள்ள எல்லா இடங்களிலும் பல்வேறு பரிமாணங்களில் காணமுடிகின்றது. கவிதை தொடங்கிய காலத்தில் இருந்தே காதல் கவிஞனின் பாடுபொருளாக அமைந்துள்ளது. கவிஞர்கள் காதலைச் சிறப்பாகச் சிறப்பித்துப் பாடுகின்றனர். இக்காதலில் பல பிரச்சனைகள் உண்டு. இப்பிரச்சினைகளினால் உடலளவிலும், உள்ளத்தளவிலும் பெரும்பாலும் பாதிக்கப்படக்கூடியவர்கள் பெண்களே. பெண்கள் காதலை எவ்வாறு ஏற்றுக்கொள்கின்றனர். காதலினால் வரும் பிரச்சனைகளை எவ்வாறு எதிர்கொள்கின்றனர் என்பதை வத்ஸலாவின் சுயம் சல்மாவின் 'ஒரு மாலையும் இன்னொரு மாலையும்', வெண்ணிலாவின் 'நீரிலலையும் முகம்' ஆகிய படைப்புகளின் வழி எடுத்துக்காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## பெண்கள் பார்வையில் காதல்

தான் பெண் என்ற நனவிலி மன உணர்வுடன் தன் அனுபவங்களை மறைக்காது எழுதுவதும், அவ்வனுபவங்களை நம்பகத் தன்மையுடனும், உண்மைத்தன்மையுடனும் எழுதுவதும் பெண் எழுத்தாகும்.

காதலை உள்ளப்புணர்ச்சி, மன இசைவு என்றும் கூறுகின்றனர். ஆணுக்கும், பெண்ணுக்கும் பாலமாய் அமைந்து பிணைப்பை ஏற்படுத்தும் உணர்வே காதல். இவ்வுணர்வு இருபாலாருக்கும் பொதுவாய் அமைய வேண்டியது இன்றியமையாததாகும். ஆனால் இவ்வுணர்வு பொதுவாய் அமையாமல் ஆண்களையே மையமாகக் கொண்டு இயங்குகிறது. ஆண்களால் சித்தரிக்கப்பட்ட காதலுணர்வுகளே சமூகத்தில் பெண்களுடைய காதல் உணர்வுகளாக வரையறுக்கப்படுகின்றன. எனவே பெண்களது காதலுணர்வு களைப் பெண்களே இனங்கண்டு வெளிப்படுத்தும் போதுதான் அதன் எதார்த்த உண்மையைக் கண்டுகொள்ளமுடியும்.

ஆண்களால் உருவாக்கப்பட்ட அச்சம், மடம், நாணம் முதலிய

வரையறைகளைத் தாண்டிப் பெண்கள் வெளிவரத் துணிந்து விட்டனர். பெண்கள் அன்பைத்தேடி அழிந்து மடிந்துவிடாமல் தனித்து நின்று வாழக் கற்றுக்கொண்டுள்ளனர். பெண்களது காதல் எதிர்பார்ப்பு எப்படிப்பட்டது, காதல் இழப்புகளை எவ்வாறு சந்திக்கின்றனர் பெண்களிடம் ஆண்கள் எவ்வாறு காதல் கடன் படுகின்றனர் என்பது பற்றிப் பெண் கவிஞர்கள் தெளிவாகக் கூறியுள்ளனர்.

காதலின் இழப்புகள்

களவு கற்பில் முடியவேண்டும் என்பது தமிழிலக்கியக் கொள்கை. இன்றைய நடைமுறை வாழ்வில் களவு கற்பில் முடிவதென்பது சாத்தியம் உடையதாகத் தெரியவில்லை. அதனால் அதிகப் பாதிப்பிற்கு உள்ளாகுபவர்கள் பெண்களே. பெண்கள் பாதிப்பிற்கு உள்ளாவதுடன் பல இழப்புகளையும் சந்திக்க நேரிடுகின்றது என்பதைப் பெண் கவிஞர்கள் தமக்கே உரிய மொழியில் தெளிவாகக் கூறிச் செல்கின்றனர்.

காதலர்களாக இருக்கும்போது நல்லவர்களாக இருக்கும் ஆண்கள் திருமணத்திற்குப் பிறகு முற்றிலும் மாறிவிடுகின்றனர் என்பதை வத்ஸலா தன் கவிதை மூலம் வெளிப்படுத்துகின்றார்.

"எனக்குள் உள்ள என்னை
நான் அடையாளம் கண்டு
கொள்ள வில்லை
நீயும் தான்
நான் நீயானேன்
இல்லை
நீ உருவாக்கிய நானானேன்"[1]

என்கிறார். பெண்ணுக்குள் இருக்கும் ஆசைகள், கனவுகள், விருப்பங்கள் என்று எதையும் பற்றிக் கவலை கொள்ளாமல், பெண்களை ஆண்கள் அவர்களுக்கு ஏற்றவாறு உருவாக்கி விடுகின்றனர். ஆண்கள் பெண்களது உடலையும், உழைப்பையும் உறிஞ்சி எடுத்துக்கொண்டு அவளது விருப்பங்களை மட்டும் அவளோடு விட்டுச் செல்கின்றனர் என்பதை,

"நீ பெற்றுக் கொள்ளாமல் விட்டுச் சென்ற
எஞ்சிய பிரியங்களினால்
உருவாக்குவேன்
இன்னும் சில கவிதைகளை"[2]

என்கிறார் சல்மா. காதலால் பெண்கள் ஒடுக்கப்பட்டு, ஒரு குறுகிய வட்டத்திற்குள் சுழன்று கொண்டிருக்கிறார்கள் என்பதை சல்மா எனக்குள்ளாகப் பதிந்து துளைக்கும் உன் காதலை என்னால் கடக்கவே முடிவதில்லை. ஆனாலும்,

"விரிந்து பகிர்வேன் நான்

அதனிடம் எனது பெண்மையை"[3]
என்கிறார்.

காதல் எதிர்பார்ப்பு

காதல் வேண்டாம் என்று தூக்கி எறியக்கூடியவர்களாகப் பெண்கள் இல்லை. ஏதோ ஒரு விதத்தில் அன்பு, மன ஆறுதல் போன்றவற்றை எதிர்பார்க்கின்றனர். காதல் பெண்களுக்குத் துன்பம் தந்தாலும், மனத்திற்கு ஆறுதல் தரக்கூடியதாகவும், மகிழ்ச்சித் தரக் கூடியதாகவும் இருக்கின்றது. பெண்களுக்குக் காதலனிடமும், கணவரிடமும் அதிக எதிர்பார்ப்பு உண்டு. காதலர்களாக இருக்கும்போது இன்பம் தரும் காதல் தம்பதியாக ஆன பின்பு காணாமல் போகின்றது என்பதை,

"இன்று
எல்லாத் தொடுதலும்
அதில் போய்தான் நிற்கிறது"[4]

என்கிறார். மேலும்,

"இப்பொழுதெல்லாம்
வாழ்வின் நிறைவு நிறைவின்மைகளைப் பற்றிதான்
பேசிக் கொண்டிருக்கிறோம்
தள்ளித் தள்ளி உட்கார்ந்து"[5]

என்று கூறுகிறார், வெண்ணிலா.

காதல் வாழ்வானது திருமண வாழ்வில் இருந்து வேறுபடும் விதத்தினைச் சுட்டிக்காட்டுகின்றார். காதலியாக இருந்தபோது கிடைத்த சுதந்திரம் மனைவியான பிறகு பறிபோகின்றது என்பதற்குச் சான்றாக,

"எனக்கு வரும்
அநாமத்து காதல் கடிதங்களையும்
உன்னை சீட்டிக் போகும்
பெண்களைப் பற்றியும்
நாம் பரிமாறிக் கொள்ளும்
அந்தரங்க விநாடிகள்
அத்தனையும் காணாமல் போயின
நண்பன்
கணவனான போது"[6] என்கிறார்.

காதலர்களுக்கு இடையே உள்ள நட்புறவையும், அதே காதலர்கள் கணவன் மனைவியான பிறகு ஏற்படும் இடைவெளியையும் வெண்ணிலா சித்திரமாக்கியுள்ளார். காதல் வாழ்வானது திருமணம் என்ற சமூக அங்கீகாரத்திற்கு உட்படும்போது அங்கு இயல்பாகவே ஆணாதிக்க மனோபாவம் வந்து விடுகின்றது. பெண்கள் ஆண்களிடம் உண்மையான அன்பை மட்டுமே எதிர்பார்க்கின்றனர். அந்த உண்மையான அன்புதான் தன்னைச் சக உயிரியாக மதிக்கும் என்று நம்புகின்றனர். பெண்கள் காதலை வெறுக்காமல் ஏற்றுக்கொள்கின்றனர்.

காதல் கடன்

ஆண்கள் பெண்களிடம் காதல் கடன்படுகின்றனர் என்பதை வத்ஸலா மிக அழகாக எடுத்துக் கூறுகின்றார். மற்றக்கடன்களை எல்லாம் திருப்பி அடைத்து விடலாம். ஆனால் காதல் கடனை எப்படித் திருப்பி அடைக்கமுடியும் என்று கேள்வி எழுப்புகின்றார். காதலர்களாக இருந்தபோது நம் உள்ளத்தில் ஏற்பட்ட உணர்வுகள், அதனால் ஏற்பட்ட இன்பங்கள் என்று எல்லாவற்றையும் திருப்பிக் கொடுக்க முடியுமா? முடியுமானால் கொடுத்துவிடு என்கிறார் வத்ஸலா. இவை எல்லாம்,

"எனக்காக அல்ல
எக்கடனும் இல்லாமல்
உன்னுடன் வாழ்க்கை துவங்கப் போகிறாளே
அந்த பெண்ணுக்காக"[7]

என்று கூறுகின்றார். காதல் தோல்வியால் ஏற்படும் உள்மனப் போராட்டத்தை எடுத்துக் காட்டுகின்றார் வத்ஸலா.

முடிவுரை

உள்ளப் புணர்ச்சியும், உடற்புணர்ச்சியும் ஒருகிணைந்ததுதான் காதல். ஐம்புல இன்ப நாட்டங்களும் காதலோடு பின்னிப் பிணைந்துள்ளன. பெண்கள் இன்ப நாட்டங்களோடு காதல் தாய்மை என்ற வரையறைக்குள் கட்டுப்பட்டு அதனை மீற முடியாதவர்களாக உள்ளனர். பெண் எழுத்தில் காதல் உணர்வானது ஏக்கமும், எதிர்பார்ப்பும், ஏமாற்றமும் நிறைந்ததாகக் காணப்படுகிறது. காதலில் ஏமாற்றம் அடைந்த பெண்கள் அக்காதலை தூக்கி எறிந்துவிட்டு தங்கள் மனத்தைச் சரிபடுத்தும் மனநிலையை உடையவர்களாக உள்ளனர் என்பதை பெண் எழுத்தில் காணமுடிகின்றது. அதே நேரம் காதலில் ஏமாற்றம் அடைந்தாலும் அக்காதலையே நினைத்து உயிர் வாழும் உள்ள உணர்வுகளும் பெண் எழுத்தில் தெனிப்பதை உணரமுடிகின்றது.

குறிப்புகள்

1.வத்ஸலா, சுயம், ப.30.
2.சல்மா, ஒரு மாலையும் இன்னொரு மாலையும், ப.74.
3.சல்மா, பச்சை தேவதை, ப.79.
4.வெண்ணிலா, நீரிலலையும் முகம், ப.41.
5.மேலது., ப.41.
6.மேலது., ப.59.
7.வத்ஸலா, மு.நூ., ப.68.

# கு.ப.ரா சிறுகதைகளில் பெண்கள்

வெ.அழகு சுந்தரம்
இளநிலை ஆய்வாளர்
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை

## முன்னுரை

மணிக்கொடியில் சிறுகதை எழுதியவர்களுள் புதுமைப்பித்தனுக்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றப்படுபவர் கு.ப.ரா. அவர்களே. இவர் சிறுகதை மட்டும் அல்லாமல் புதுக்கவிதை, ஓரங்கநாடகம், மொழிபெயர்ப்பு போன்ற துறைகளிலும் சிறப்பானதோர் இடத்தை வகிக்கிறார். ஆனாலும் சிறுகதைகளிலே சிறந்து விளங்குகிறார். இவரது படைப்புகளான புனர்ஜென்மம், காணாமலே காதல், கனகாம்பரம், சிறிது வெளிச்சம் என்னும் நான்கு தொகுதிகளில் சமுதாயம், அரசியல், வாழ்க்கை பண்பாடு ஆகிய நிலைகளை விளக்கிக்காட்டி இன்றைய நடைமுறைச் சமுதாய வாழ்வையும், குடும்ப வாழ்க்கையின் இன்ப துன்பங்களையும், ஆண், பெண் உறவு பற்றியும் பெண்ணுள்ளத்தின் வேதனைகளைப் பற்றியும் விளக்கிக்கூறி இந்தச் சூழலில் பெண்களுக்கு ஏற்படும் சிக்கலிலிருந்து எவ்வாறு வெளிவருகின்றனர் என்பதைப் பற்றியும் தம் சிறுகதைகளில் கூறுகிறார்.

கு.ப.ரா.அவர்கள் தம் சிறு கதைகளில் பெண்கள் பற்றிக்கூறும் பகுதியில் பெண்ணியத்தின் பார்வையில் பார்க்காமல் பெண்களைப் பற்றி தம் கதைகளில் எவ்வாறு சித்தரித்துள்ளார் என்பதைப் பற்றி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். மேலும் இவரது அனைத்துத் தொகுதிகளையும் எடுத்துக் கொள்ளாமல் முனைவர் சுபாசு சந்திரபோசு என்னும் ஆசிரியர் தொகுத்து வெளியிட்டுள்ள 15 சிறுகதைகளை மட்டுமே எடுத்துக் கொள்ளப்படுகிறது.

## சமுதாயத்தில் பெண்கள்

சமுதாயத்தில் பெண்கள் என்றாலே ஓர் ஏளனப் பார்வை உண்டு. அதாவது பெண் சிசுக்கொலை, இளம் வயதில் திருமணம், கணவனை இழந்த பெண்கள் காலம் முழுவதும் விதவைக்கோலம் பூணுதல், வீட்டை விட்டு வெளியே செல்லாதிருத்தல், கணவனே யன்றி மற்ற ஆடவருடன் பேசக்கூடாது என்ற செயல்கள் மூலம் பெண்கள் சமுதாயத்தில் அடக்கி ஆளப்படுகின்றனர். இதே கொடுமைகளை தம் கதைகளில் சித்தரித்துள்ளார் கு.ப.ரா அவர்கள்.

"கனகாம்பரம்" என்னும் சிறுகதையில் பெண்கள் திருமணமான பின்பு தனது கணவனேயன்றி வேறொரு ஆடவருடன் பேசுவதை மக்கள்

ஏற்றுக்கொள்ளவில்லை என்பதைத் திறம்பட விளக்கவந்த கு.ப.ரா அவர்கள், நண்பர்கள் இருவரும் முற்போக்குச் சிந்தனை உடையவர்களாக இருந்தாலும் படிக்காத பெண் கணவனேயன்றி வேறொரு ஆடவனுடன் பேசிவிட்டாள் என்பதால் ராமுவின் மனது என்ன நிலையை அடைகிறது.

மணி என்று கூறியதற்கு

"எங்கேயோ வெளியே போயிருக்கார் நீங்க யாரு?"

என்ற கேள்வி பிரமிக்க வைத்தது என்றால் மேலும்

"இதோ வந்துவிடுவார். உள்ளே வந்து உட்காருங்கள்" என்றாள் சாரதா.

"அதைக் கேட்டதும் உண்மையிலே ராமு திகைத்துப் போனான் தலை கிர்ரென்று சுற்றியது"

என்று கூறும் பொழுது ஆண்கள் மட்டும் வேறொரு ஆண் அல்லது பெண் யாரிடமும் பேசலாம். ஆனால் பெண் தன் கணவனின் நண்பன் வந்த பொழுது வந்து உட்காருங்கள் என்று கூறுவது சமுதாயத்தின் எழுதப்படாத குற்றமாக விளங்குகிறது என்பதை இக்கதை மூலம் விளக்குகிறார். இதே போல் நூருன்னிசா, புனர்ஜென்மம், அடிமைப்பயல், திரை போன்ற சிறு கதைகளும் சமுதாயத்தில் பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளை விளக்குகின்றது.

குடும்ப வாழ்க்கையில் பெண்கள்:

பெண்கள் சமூகத்திலும். பொருளாதாரத்திலும், அரசியலிலும் மட்டும் இன்னல்களை அனுபவிக்கவில்லை. அவர்களின் குடும்ப வாழ்க்கையிலும் பல இன்னல்களைச் சந்திக்கின்றனர். அதாவது பெண்கள் தனது கணவன், குழந்தைகள், மாமியார் என எந்த உறவுகளை எடுத்துக் கொண்டாலும் அந்த உறவுகளினால் அன்பும் ஆதரவும் எப்பொழுதும் கிடைக்கப்பெறுவதில்லை என்பதனை "பெண் மனம்" என்னும் சிறுகதையில் விளக்கியுள்ளார்.

மணந்துகொண்ட பெண்ணை வைத்துக்கொண்டு தன் மனைவியின் தோழியை ஆசையுடன் பார்க்கும் தனது கணவனின் செயலைக் கண்டு என்ன செய்வது என்று அறியாமல் மனத்தில் வேதனையும், கோபமும், பொறாமையும், எரிச்சலும் கொள்ளும் மனைவியை இக்கதை காட்டுகிறது.

"ஆமாம். நீங்கள் அசட்டு பிசட்டு என்று பார்த்தது அவள் மனசுக்குச் சமாதானமாக இல்லை என்னிடம் கேட்டேவிட்டாள்" என்னடி கனகம்?" உன் ஆம்படையான் அப்படி வெறிச்சி வெறிச்சிப் பார்க்கிறார்"

என்று தனது கணவனின் அறிவு இல்லா செயலை எண்ணி வெட்கப்பட்டு, வேதனைப் பட்டு அவனுக்கு எடுத்துக் கூறுவதைப் போல் இடித்து உரைக்கிறாள். ஒரு பெண்ணுக்கு மற்றதைவிட கணவனே சிறந்தவன் அவனே அப்படி செய்தால் அவள் எங்கே முறையிடுவாள் என்பதை இக்கதை காட்டுகிறது. இதே போல் கனகாம்பரம், இயற்கையின்

வெற்றி, என்ன வேண்டும்? விடியுமா? என்ற சிறுகதைகளிலும் பெண்களின் வெதனைகள் இடம் பெறுவதைக் காணமுடிகின்றது.

### பாலுறவில் பெண்கள்

பாலுறவு மனித உறவுகளுள் அடிப்படையான உறவு என்றும், உயிர் வாழ்வதற்கு அடுத்த படியான இன்றியமையாத உறவு என்றும் கூறுகிறார் "எரிக்பெர்னே" என்னும் அறிஞர்.

பாலுறவு இன்றியமையாத உறவே என்றாலும் கு.ப.ரா.தம் கதைகளில் உருவக் கவர்ச்சியையும், பருவக் கிளர்ச்சியையும் அடிப்படையாகக் கொண்டு படிக்கும் மனங்களுக்குப் போதை ஊட்டும் வகையில் பாலுறவைச் சித்தரிக்கவில்லை. பண்பாட்டின் எல்லைக்குள் இருந்தே பெண்களுக்கு பாலியலால் என்ன விளைவுகள் உண்டாகின்றன என்பதைத் தம் கதைகளில் விளக்குகிறார்.

### முடிவுரை

கு.ப.ரா அவர்கள் தம் சிறுகதைகளில் சமுதாயத்தின் நிலைகளை அப்படியே படம்பிடித்துக் காட்டினாலும் பெண்களே நாட்டின் கண்கள் என்பது போல் பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகள் நாட்டிற்கு இழைக்கப்படும் கொடுமைகள் என அறிந்து தம் சிறுகதைகளில் சமுதாயத்தில் பெண்கள் அடையும் இன்னல்களையும், குடும்ப வாழ்வில் அடையும் துயரங்களையும் பாலியல் உறவில் படும் வேதனைகளையும் எடுத்துக்கூறி அதிலிருந்து பெண்கள் எவ்வாறு தம்மை மாற்றிக் கொண்டு வீறுநடை இட்டுச் செல்கிறார்கள் என்பதைத் தெள்ளத் தெளிவாக விளக்கிக்காட்டியுள்ளார்.

### குறிப்புகள்

1.கு.ப.ராஜகோபாலன் சிறுகதைகள், தொகுப்பாசிரியர் முனைவர் சுபாசு சந்திரபோசு.
2.சிறுகதைச் சிற்பி கு.ப.ரா., முனைவர் இரா.மோகன்.
3.பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும் முனைவர் செ.சாரதாம்பாள்.

# ராஜமுருகு பாண்டியன் கவிதைகளில் தலித் அழகியல்

சு. அழகுமலை
முனைவர் பட்ட ஆய்வாளர்
இலக்கியத் திறனாய்வுத்துறை
தமிழியற்புலம்
ம.கா.பல்கலைக்கழகம், மதுரை -21.

## முன்னுரை

இன்றைய நவீன இலக்கியங்களில் தலித் இலக்கியங்கள் வெகுவிரைவாகப் பெருகி வருவதை இன்று காணமுடிகிறது. தலித் இலக்கியங்கள் பொதுவாகப் பிற சாதியினரை எதிர்ப்பதற்காக மட்டுமே தோன்றியுள்ளன என்று பலர் நினைக்கின்றனர். ஆனால் தலித் இலக்கியங்கள் அப்படி 7யில்லாமல் ஒவ்வொரு நிலையிலும் ஆதிக்கம் செலுத்துகின்ற உயர்ச்சாதியினருக்கு எதிராகத் தலித் பண்பாட்டினை தமது இலக்கியங்களில் பதிவு செய்கின்றன. பண்பாட்டின் ஒரு வடிவம்தான் அழகியல். தலித் பண்பாட்டினை உணர்த்துவதுதான் தலித் அழகியல்.

## அழகியல்

கிரேக்கச் சொல்லான 'Airthetikos' என்பதற்கு 'புலன்களின் வாயிலாக உணரும் திறன்' என்று பொருள். இதிலிருந்து ஆங்கிலத்தில் Aesthetic என்ற சொல் உருவாகி அதன் மூலம் தமிழில் அழகியல் என்ற சொல்லாடலாக மொழி பெயர்க்கப்பட்டது. ஆதிக்கச் சாதியினருக்கு எதிராகத் தலித் பண்பாட்டினை சமுதாய ரீதியாக வெளிப்படுத்துவது தலித் அழகியலாகக் கருதப்படுகின்றது.

## தலித் எழுத்துக்கள்

தலித் எழுத்தாளர்கள் இன்றைய சமுதாயப் பிரச்சனைகளில் அடங்கிய தலித்துக்களின் நிலைபாடுகள் குறித்து ஆராய்வதும், மொழி, பண்பாடு, அழகியல் ஆகியவற்றினை தமது எழுத்துக்கள் மூலம் அடையாளப்படுத்தவதும் தங்களது நோக்கமாகக் கொண்டு செயல்படுகின்றனர். பாமா, என்.டி.ராஜ்குமார், அபிமானி, ராஜமுருகு பாண்டியன், ரவிக்குமார், ராஜ்கௌதமன், அன்பாதவன், அழகியபெரியவன், ம.மதிவண்ணன். சிவகாமி, தய்.கந்தசாமி போன்ற தலித் எழுத்தாளர்கள், தலித்துகளின் பிரச்சனைகளை மட்டுமே தமது எழுத்துக்களின் மூலம் பதிவு செய்யாமல் அவர்களின் பண்பாடு, அழகியல் போன்றவற்றினை சமுதாயத்திற்கு அடையாளப்படுத்துகின்றனர். இந்த வகையில், ராஜ முருகு பாண்டியனின் "சில தலித் கவிதைகளும்" என்ற தொகுப்பில் கூறப்பட்ட கவிதைகளில் அழகியல் விசயங்களை இவ்வாய்வில் உணர்த்தப்படுகின்றது.

சமுதாயத்தில் உயர்சாதிகளுக்கென்று உணவு. உடை, பழக்கவழக்கங்கள், நாகரிகம், பண்பாடு, கலை, இலக்கியம் என்று எல்லாமும் மிக ஒழுக்கத்தோடும் நேர்த்தியோடும் இருப்பதாகவும் இதுதான் உயர்பண்பாட்டிற்கான அழகியல் என்று காலங்காமாக கற்பிக்கப்பட்டு வருவதை நம்மால் காணமுடிகிறது. தலித்துகளுக்கென்று அழகியல் இருப்பதை யாரும் கருதுவதில்லை.

தலித்துக்களின் பண்பாடு, உணவு, இருப்பிடம், பழக்கவழக்கங்கள், நாகரிகம் போன்றவையெல்லாம் ஏழ்மையிலும் எளிமை நிறைந்ததாகவும் இருப்பதால் ஆதிக்கச் சாதியினரும் இதனை அழகியலாகப் பார்க்கமாமல் மிகவும் இழிவாகப் பார்க்கின்றனர். செத்தமாடு உண்ணுதல், தனிச் சுடுகாடு. செருப்புப்போட, நகை அணிந்துகொள்ள மறுப்பு, சைக்கிளில் செல்லத் தடை, தனி தேநீர்க்குவளைப் பிரச்சனை, மலம் தின்ன வைக்கும் கொடுமைகள், குடிசைகள் தீக்கிரையாதல், அண்டைக்கு அடிமைப்பணிபுரிதல், நிலமிழப்பு இப்படிப் பலவாறாக தலித் வாழ்க்கையில் அழகியல் சிதைந்திருக்கிறது.

உயர்சாதிப் பண்பாட்டில் உள்ளவையெல்லாமல் மேலானவையாகக் கருதப்படுகின்றன. கற்பது, புரோகிதம் பண்ணுவது, நாட்டை ஆள்வது, இது போன்ற பிற எல்லாப் பணிகளுக்கும் நான்தான் சிறந்தவன் என்பதே உயர்சாதிப் பண்பாட்டு அழகியலுக்கு எதிராக தலித்துகள் செய்கின்ற ஒவ்வொன்றையும் சுட்டிக்காட்டி இதுதான் தலித் அழகியல் என்று உணர்த்தும் அவசியம் இன்றையக் காலகட்டத்தில் தேவையாகிறது.

"உன்னுடைய செய்திக்காகப்
பறையடித்தோம்
உன்னுடைய செருப்புக்களைத்
தோல் உரித்தோம்
நீ
நாறிப் போவாய் என்பதற்காக
மலம் சுமந்தோம்
அழுகிப் போவாய் என்பதற்காக
குழிவெட்டினோம்"

(சில தலித் கவிதைகளும், பக்.84-85)

உயர்ச் சாதியினரின் பண்பாடு, பழக்கவழக்கங்கள் போன்றவற்றை அழகியலாகக் கருதப்படும்போது, பறையடித்தல், செத்த மாட்டைத் தோல் உரித்தல், மலம் அள்ளுதல், குழி வெட்டுதல் போன்றவை எங்களுக்கான அழகியலாகக் கருதுகிறோம் என்று தலித்துகளின் குரலாக இக்கவிதை உணர்த்துகிறது. சாதி மதங்களைக் கடந்து சரித்திரம் படைக்க வேண்டிய தலித்துகள் மேல்ச் சாதியினரின் அழகியலின் போலியான மாயைக்குள்

சிக்காமல் அவற்றை எதிர்ப்பதோடு, தலித் அழகியலை வெளிப்படையாகப் பதிவு செய்ய வேண்டும்., இது தான் எனது பண்பாடு, இது எனது மொழி, இது எனது கலை, இது எனது நாகரிகம், இது எனது மண், இது எனது அழகியல் என்று சமுதாயத்திற்கு வெளிக்காட்ட வேண்டும். எல்லாக் காலத்திலும் தலித் சமூகத்தை ஏமாற்றி வந்த உயர்ச்சாதிக்காரர்களுக்கு இந்தப் புதிய அழகியலை அறிமுகப்படுத்த வேண்டும்.

"முதலாளியம்மாவின்
பழம்புடவை
அம்மாவிற்குப் புதுப்புடவை
அம்மாவின்
பழம்புடவை
அக்காவிற்குப் புதுப்புடவை
அக்காவின்
கிழிந்த புடவை
தங்கைக்குப் புதுத் தாவணி
தங்கையின்
கிழிந்த தாவணி
தம்பிக்குப் புதுக் கோவணம்"

(சில தலித் கவிதைகளும், ப.72)

இக்கவிதை தலித்துகளின் வறுமை நிலையினைக் குறிப்பிட்டாலும் தலித்துகளுக்கான அழகியலை எடுத்துரைக்கிறது. பழைய புடவை, கிழிந்த புடவை, கிழிந்த தாவணி, கோவணம், ஆகியவற்றைப் பயன்படுத்துதல் தலித்துகளின் ஏழ்மை நிலையினை விளக்குகிறது. பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களாக இருக்கின்ற தலித் சமுதாயத்திற்கு இவைதான் அழகியலாகத் தெரிகிறது. தலித் மக்களின் வாழ்வியல் கூறுகளில் எத்தனையோ சிறப்பம்சங்கள் அழகியலாய் நிரம்பிக் கிடக்கின்றன.

"எங்கள்
வரலாறுகளை
வேதங்களைச் சொல்லி
பேதங்களைப் புகுத்தி
அசுத்தப் படுத்தினாய்
எம்மொழியை
நீசமொழியெனக்
கொச்சைப் படுத்தினாய்"
(சில தலித் கவிதைகளும், ப.20)

உயர்ச்சாதியின் பண்பாட்டினை உணர்த்துகின்ற வேதங்களை எங்களுக்கு கற்றுக்கொடுத்து. அதன்மூலம் எங்களை வர்ணாசிரமத்தின் மூலம் எங்களை அசுத்தப்படுத்தினாய். அதன் பின் நாங்கள் பேசுகின்ற

மொழியினை நீச மொழி என்று கொச்சைப் படுத்தினாய் என்றாலும் அந்த கொச்சை மொழியே எங்களது அழகியலாக கருதுகிறோம் என்று தலித் உணர்வினை வெளிப்படுத்துவதாக இக்கவிதை உணர்த்துகிறது. இதன்மூலம் ஆதிக்க சாதியினரின் மொழிதான் நாகரிகமானது என்று உணர்த்தும் போது. எங்களுடைய மொழியும் அழகியல் உடையது என்று தலித் கவிதையின் மூலம் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

ஒவ்வொரு இலக்கிய வடிவமும் அதற்குரிய அழகியலை முன்னிறுத்துகிறது. அந்த வகையில் தலித் இலக்கியத்திலும் பல அழகியல் கூறுகள் படிந்துகிடப்பதை மேற்கண்ட கவிதைகளின் மூலம் அறியமுடிகிறது. தலித் இலக்கியங்கள் ஆதிக்கத்திற்கு எதிரான சொல்லாடல்கள், மரபுகள் உடைப்பு. புதிய தொன்மங்கள், எழுத்து வடிவமுறை மாற்றல், இலக்கணங்களை மீறுதல், நாட்டுப்புறக்கலைகளோடுத் தொடர்பு படுத்துதல் போன்ற அழகியல்களை உருவாக்குகிள்றன.

இவ்வாறாக, தலித் மக்களிடம் உணர்வுகளை ஏற்படுத்தவது ஆதிக்கச் சக்திகளுக்கு எரிச்சலை ஊட்டுவது, தங்களிடம் உள்ள தாழ்வு மனப்பான்மையைப் போக்குவது போன்றவையும் தலித் கவிதைகளின் அழகியலாகக் கூறப்படுகின்றது. ஆதிக்கச் சாதியினருக்கு எதிராக தலித்துகள் தங்கள் சுய அடையாளத்தையும், பண்பாட்டையும் மீட்டெடுத்து, இதுதான் எங்களது அழகியல் என்று உணர்வதை ராஜமுருகு பாண்டியன் கவிதைகளின் மூலம் அறிய முடிகிறது.

# சிற்பியின் "ஒரு கிராமத்து நதி" ஒரு மானிடவியல் பார்வை

முனைவர்
அருணாதினகரன்
இணைப்பேராசிரியர் -
தமிழ்த்துறை
கோலிகிராஸ் தன்னாட்சிக் கல்லூரி
திருச்சிராப்பள்ளி - 620 002.

புறநானூறு,

"எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்ல வாழிய நிலனே"

என்று மனிதனின் வாழ்வில் மண்ணின் மைந்தர்களின் தாக்கத்தை எடுத்துக்காட்டுகின்றது. மண்ணுக்கும் அம்மண்ணில் பிறந்த மனிதனுக்கும் உள்ள தொடர்பு. உடலுக்கும் உயிருக்கும் இருக்கின்ற தொடர்பைப் போன்றது. இத்தகைய தொடர்பின் தாக்கத்தால் உருவான கவிதைத் தொகுப்பே சிற்பியின் "ஒரு கிராமத்து நதி" யாகும். இந்த பிறந்த மண்சார்ந்த படைப்புச் சிறப்பிற்காகவே இந்நூல் 2003இல் சாகித்ய அகாடமி விருதைப் பெற்றது என்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

பாலக்காட்டுக் கணவாயின் தெற்குத் தாழ்வாரத்தில் அமைந்த ஆத்துப் பொள்ளாச்சி கிராமம் சிற்பியின் பிறந்த மண்ணாகும். சிற்பி, ஐம்பது அண்டுகளுக்கு முன்னால் எத்தகைய அகப்புற மாசுகள் படியாத சூழலில், தன் வாழ்வு அரங்கேறிய ஊரை - ஊரை வாழ்வித்த நதியை - வளம் சேர்த்த இயற்கையை - சரித்திரச் சுவடுகளை - தன் மனதில் பதிவான அம்மண்ணின் மைந்தர்களை மண்ணியப் பற்றோடு பதிவு செய்கிறார். இப்பதிவை, மானிடவியல் பார்வையில் ஆராயும் வகையில் இக்கட்டுரை அமைகின்றது.

## நதியை நேசித்தல்

சிற்பி தன் கிராமத்தைச் சார்ந்து ஓடிய நதியை அதன் தொப்புள் கொடியாகப் பார்க்கின்றார். தனக்கும், அந்நதிக்கும் இடையிலான தொடர்பை அவர்,

"தானும் உணவாகி
மீனும் உணவாகி
இந்த நதிக்கு
நானும் உணவானேன்" (ஒ.கி.ந. ப.6)

என்று விளக்கிக் காட்டுகின்றார்.

நதிகளின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்தக்கூடாது. அதனுடைய இயற்கையான ஓட்டம் மானுடத்திற்குத் தடையின்றிச் சொந்தமாக

வேண்டும் என்று சிற்பி விரும்புகின்றார். அணைகளின் நீர்த்தேக்கம் ஒரு குறிப்பிட்ட இடத்தில் மட்டும் பயனைத் தருகின்றது. இந்த தேக்கத்தைக் கூட சிற்பி விரும்பாத தன்மையை,

"அணைகளை உடையுங்கள்
ஆறுகள் பாடட்டும்" (ஒ.கி.ந.ப.7)

என்று சொல்கிறார். இயற்கையை நேசிக்கும் சிற்பி தன் கிராமத்து நதியையும் தாயாக நேசிக்கிறார். தன் கிராமத்தை வளத்தோடு வாழவைக்கும் நதியுடன், தானும் சங்கமம் ஆகத்துடிக்கும் தவிப்பை,

"இது என் உதிரத்தின் உப்பு
இது என் தாய்ப்பால் (ஒ.கி.ந. ப.10)

என்ற வரிகள் தெரியப்படுத்துகின்றன. நதிக்கும் தனக்கும் உள்ள தொடர்பை, நதிப்படுகை, தாய்வீடு. கோரைப்பாய், வீணை, பள்ளியறை, துயரங்களின் வடிகால், சந்தோஷத்தின் சங்கமம் என்று பட்டியலிட்டுத் தருகின்றார்.

பூமித்தாயின் மாராப்பாகத் திகழும் அந்நதியே ஆத்துப் பொள்ளாச்சியின் வாழ்வுக்கும், வளத்திற்கும் அடிப்படை என்பதை,

"ஆடி ஆடி நகரும்
நடனக்கார நதி
இல்லாவிட்டால்
சபிக்கப்பட்ட
இந்தக்கிராமத்தை
யார் சீண்டுவார்கள்?" (ஒ.கி.ந. ப.12)

என்று கூறுவதில் சிற்பி நதிக்குத் தரும் மரியாதையை காணமுடிகின்றது.

இயற்கையை நேசித்தல்

சிற்பி, தன் கிராமத்தில் மக்களுக்கு நிழல்தரும் அத்திமரத்தை ஊர்காக்கும் காவலனாகப் பார்க்கின்றார். அம்மரத்தின் சிறப்பை,

"அந்த அத்திமரமும்
கெத்து கெத்தென்று
ஆற்றங்கரைக் கொரு
நிரந்தரக் காவலனாக" (ஒ.கி.ந. ப.18)

நிற்கின்றது என்று பெருமிதத்துடன் குறிப்பிடுகின்றார். அந்த அத்திமரம் இன்று வெட்டப்பட்டு அந்த ஞாபகம் மட்டும் எஞ்சி இருப்பதை,

"நாற்பது இலையுதிர்காலம்
கடந்து போனபின்
ஆற்றங்கரை யோரம்
காவல் இருந்தது
ஒரு ஞாபகம் மட்டும் (ஒ.கி.ந. ப.19)

என்று தாயாகக் காவலனாக, அம்மாவின் முத்தம் போல் குளிர்ச்சி தந்த மரம் இன்றில்லை என்பதை ஆதங்கத்துடன் புலப்படுத்துகின்றார்.

சரித்திரச் சுவடுகள்

சிற்பி, தன் கிராமததின் சரித்திரச் சுவடுகளைப் பற்றிப் பெருமிதத்துடன் பகிர்ந்து கொள்கிறார். ஆற்றுப் படுகைகளில் கிடைத்த சங்ககாலக் காசுகள், திகம்பரச் சமணர் கற்படுக்கைகள், தீர்த்தங்கள் சிலைகள் என்று சரித்திரச் சின்னங்களை அவர் பட்டியலிட்டுத் தருகின்றார். (ஒ.கி.ந. பக்.58-59)

பாறைச் சிற்பங்கள்

சிற்பி, நதியோரம் கிடந்த பாறைகள் மேல் நதியின் நீரோட்டம் ஏற்படுத்திய இயற்கைச் சிற்பங்களை ரசித்து எழுதுகின்றார். அப்பாறைச் சிற்பங்களை,

"மைக்கேல் ஏஞ்சலோக்கனின்
கர்வத்தை அடக்கும்
சிற்பக் கலைக்கூடம்" (ஒ.கி.ந. ப.22)

என்று மகிழ்ச்சியுடன் வருணிக்கிறார்.

நிறைவாக

சிற்பியின் ஒவ்வொரு கவிதையிலும் தான் பிறந்த மண்சார்புடைய அனுபவம், பாதிப்பு தாக்கம், நேசிப்பு ஆகியவை அழுத்தமான முத்திரையாகப் பதித்துள்ளமையைக் காணமுடிகின்றது.

சிற்பி, நிகழ்வுகளை, செய்திகளை வெறும் கவிதைப் பதிவுகளாகத் தராமல், அவற்றை தன் உயிருடன், நாடிநரம்புகளுடன் தொடர்புகொண்ட உயிர்ப்புடன் வெளிப்படுத்துகின்றார்.

இன்று, இயந்திரக்கதியில் இயங்கும் மக்கட்கூட்டம், தனித்தனித் தீவுகளாக அந்நியப்பட்டு வாழ்ந்துவருகின்றது. இச்சூழலில் இந்த இருத்தல் மாற வேண்டும். ஒவ்வொருவரும் தாம் பிறந்த மண்ணை நேசிக்க வேண்டும். அம்மண்ணின் மக்களோடு உறவுகொண்டு வாழ வேண்டும் என்ற சிற்பியின் ஆதங்கத்தை எதிர்ப்பார்ப்பை அவருயை ஒரு கிராமத்து நதி அறிவுறுத்துகின்றது. இந்த அறிவுறுத்தலை வழிமொழிந்து கட்டுரை நிறைவடைகின்றது.

முதன்மைச்சான்று நூல்

சிற்பி, ஒரு கிராமத்து நதி, கோலம் வெளியீடு, பொள்ளாட்சி, முதல் பதிப்பு, டிசம்பர், 1998.

சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| 1.ஒ.கி.ந. | - | ஒரு கிராமத்து நதி |
| 2.ப. | - | பக்கம் |
| 3.பக். | - | பக்கங்கள் |

# அப்துல் ரகுமான் கவிதையில் படிமங்கள்

பூ.தங்கம்
முனைவர் பட்ட ஆய்வாளர்
இஸ்லாம் மற்றும் இஸ்லாமியத் தமிழ்த்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை-21.

தமிழ் மொழியல் கவிதை வரலாறு மிக நீண்டது. சங்க காலம் தொடங்கி அதன் வடிவம் எத்தனையோ மாற்றங்களைப் பெற்றதுடன் தனக்கான மரபைக் கொண்டிருக்கிறது. கவிஞன் தன் கவிதையைப் பல்வேறான உத்திகளில் கையாளுகின்றார்கள். ஒரு கருத்தைச் சொல்லும்போது அக்கருத்தை மட்டும் சொல்வதோடு மட்டுமில்லாமல் படிப்போர் மனதில் உணர்வைத் தூண்டி இன்பம் தரும் விதமாகத் தன் படைப்பு அமைந்திட உத்திகளைப் பயன்படுத்துகின்றனர். அவ்வுத்திகளில் படிமம் ஒன்றாகும். அப்துல் ரகுமான் கவிதைகளில் படிமங்கள் எவ்வாறு இடம் பெற்றுள்ளது என்பதை நோக்குவோம்.

## படிமம் பற்றிய கருத்தாக்கம்:

இலக்கியத்தில் ஒரு படிமச் சொல் பருப்பொருள் ஒன்றினை நேரடியாகச் சொல்லுவதாயினும் கருத்துத் தொடர்பால் அதற்கு அப்பாற்பட்ட நுண்பொருள் ஒன்றினைக் குறிக்கிறது. ஒரு இலக்கியப் படிமமானது, "பொருளையும், கருத்தையும்" இணைக்கும் தன்மையுடையதாகக் காணப்படுகிறது.

அப்துல் ரகுமான் கவிதைகள் உணர்ச்சி வெளிப்பாடுகளாக அமைந்துள்ளன. இவற்றின் அடிப்படையில் உணர்வுகளையும், கற்பனைகளையும் தன் கவிதைகளில் எடுத்துக்காட்டுவதை நோக்கமாகக் கொண்டுள்ளார். அப்துல் ரகுமான் கவிதையில் அரசியல் நோக்கம் குறைவாக இருந்தாலும், அவரது கவிதைகளில் சமுதாய உணர்வு மிகுதியாகக் காணப்படுகிறது. கவிஞரின் கவிதைகள் இலக்கிய இன்பம் தருவதாக அமைகிறது. இவரது நோக்கத்தைப் புலப்படுத்த படிமத்தை பின்வருமாறு வகைப்படுத்துகிறார்.

1. இலக்கிய இன்பம்
2. சமுதாய நோக்கு
3. அரசியல் நோக்கு
4. இயற்கையைப் பாடுதல்
5. காதல்

## 1.இலக்கிய இன்பம்:

கவிஞன் கவிதைகளைப் படைப்பதே இலக்கியத்தின் மூலம் இன்பத்தைத் தருவதற்கே, கூறவந்த கருத்தை படிப்போர் தெரிந்து

கொள்ளும் வண்ணம் அமைந்துள்ளது.

அப்துல் ரகுமான் தனது கற்பனைத் திறனை பயன்படுத்திச் சிறந்த படிமங்களைப் படைத்துள்ளார். அப்படிமப் பொருளை உய்த்துணர்வதற்கு இலக்கியம் நல்கும் இன்பம் நமக்குக் கிடைக்கிறது. மண்ணின் பெருமையைப் பாடும் அப்துல் ரகுமான் அதைத் தொட்டில், வட்டில், கட்டில் என்று படிமங்களை அமைத்துப் பாடுகிறார். இப்படிமங்கள் தரும் பொருளை உய்த்துணரும் போது கிடைக்கும் இன்பம் கவிதையின் நோக்கத்தை முழுமையாக உணர்த்துகிறது.

"உங்கள் தட்டில் நான்
ஊட்டும் வட்டில் நான்
கடைசியில் தூங்கும்
கட்டிலும் நானே"

(நேயர் விருப்பம் -15)

மரங்கள் என்னும் கவிதையில் இவர் படைக்கும் படிமங்கள் இவரது கற்பனையாற்றலுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

சமுதாய நோக்கு:

இலக்கியம் தம் சமுதாயத்தின் பின்புலத்தை ஒட்டியே அமைகிறது. அப்துல் ரகுமான் கவிதையில் அவர் வாழும் காலச்சூழல், சமுதாய வெளிப்பாடு விளங்குவதைக் காணலாம். குறைகளை நேரடியாகச் சுட்டாமல், படிமப் பொருளாக்கிக் கூறுகின்றார் கவிஞர்.

ஒருவர் குறைகளை நேரடியாகக் கூறாமலும், தனிப்பட்ட முறையில் கூறலமலும் மறைத்துக் குறைகளைக் கூறுவதே இலக்கிய நெறியாகும். கவிஞர் அப்துல் ரகுமானும் இலக்கிய நெறியில் இருந்து மாறாது கவிதைகளில் படிமத்தினைக் கூறுகிறார்.

ஒரு பொருளைக் காணும்போது அதனால் ஏற்படும் மன உணர்வுகள் படிமமாக வெளிப்படுகிறது. உமர் கய்யாமுக்குக் குயவனது சக்கரம் வாழ்க்கைச் சக்கரமாகத் தோன்றியது போல, அப்துல் ரகுமானுக்குச் சிகரெட்டும், சாம்பல் கிண்ணமும் சிந்தனையின் பிறப்பிடமாகத் தோன்றியது.

"உன்னுடைய உயர்ந்த ரகம்
என்னுடைய மட்டமான ரகம்
இரண்டுமே
சாம்பலில் தெரியவில்லை"[2]

(கரைகளே நதியாவதில்லை - பக்.68)

சிகரெட்டும் கவிஞனும் இவ்வாறு பேசிக் கொள்கின்றனர். எந்தக் கவிஞனும் தான் வாழும் சமுதாயத்திலிருந்து பிரிந்து தன் கவிதைகளைப் படைக்க இயலாது. அரசியல் நோக்கு:

மக்களின் உரிமைகளைப் பற்றி அவர்களுக்கு எடுத்துச் சொல்லவும், அரசியல் குறித்து விழிப்புணர்வு மக்களிடம் இல்லாததை தனது கவிதையில் படிமங்களாக அமைத்துப் பாடுகின்றார். போலி அரசியல் வாதிகளின் போலி உறுதிமொழிகளை நம்பி அவர்களுக்கு வாக்களித்து ஏமாந்து போகும்

மக்களின் நிலையினைச் சுட்டிக் காட்டுகிறார் கவிஞர்.
இதனையே,

"புறத்தினைச் சுயம்பர மண்டபத்தில்
போலி நளன்களின் கூட்டம்
கையில் மாலையுடன்
குருட்டுத் தமயந்தி"[3]

(பால்வீதி - பக். 72)

சுயநல அரசியலில் நல்லவர்கள் வெற்றி பெற இயலாத ஜனநாயகத்தையும், அரசியல் நிலையினையும் சுட்டிக் காட்டுகிறார்.

இயற்கையைப் பாடுதல்:

இயற்கையைப் பாடாத கவிஞர்களே இல்லை அகமும் புறமும் கலந்த மனித வாழ்க்கையை கவிஞர் அப்துல் ரகுமானும் ஐவகை நிலத்தை. அதன் தன்மைக் கேற்ப கவிதையைப் படைக்கிறார்.

ஐவகை நிலங்களும் மண்மகளின் அங்கமாக காட்சி தருவதாக கூறும் கவிஞர் இயற்கைப் படிமங்கள் உள்ளத்தில் கற்பனை ஓவியமாக பதியப்படுகிறது. "மண்" என்ற இவரது கவிதையில் இவர் படைத்துள்ள படிமங்கள் மிகச் சிறந்த கற்பனையின் விளைவாகும்.

"குறிஞ்சி என் கொங்கை
முல்லை என் கூந்தல்
மருதம் என் மணிக்கரம்
நெய்தல் என் பணிப்பெண்
பாலை என்
வேனிற் கால வியாதி"[4]

(நேயர் விருப்பம் - பக்.13)

ஐந்து நிலங்களையும் படிமப் பொருளாக்கி பாடுகின்ற தன்மை இவர் சங்க இலக்கிய மரபிலிருந்து மாறவில்லை என்பதை காட்டுகின்றது. ஒன்றோடொன்று தொடர்புடைய உருவகங்களைப் பயன்படுத்துவது படிமப் படைப்புக் கவிதையில் காணப்படும் பண்பு. அப்பண்பு ரகுமான் கவிதையில் காணக்கிடக்கிறது.

காதல் நோக்கு:

மனித வாழ்க்கை இயந்திரத் தனமாக மாறினாலும் மனித உறவும் உணர்வும் காதலும் வீரமும் கலந்து உள்ளது. அதனால் இலக்கியத்தின் தன்மை என்றும் மாறுவதில்லை. அகமும் புறமும் கலந்த மனிதன் வாழும் சமூகத்தில் ஒரு அங்கமாக காதல் விளங்குகிறது. சமூகப் படைப்பான இலக்கியம் காதல் வாழ்க்கைப் பாடுகிறது.

கவிஞர் அப்துல் ரகுமானும் காதல் உள்ளங்களின் உணர்வுகளைப் படிமமாக்கிக் கூறுகிறார். காதலுக்கு கண்ணில்லை என்று எதார்த்தமாகக் கூறுபவர்கள் மத்தியில் காதல் கண்கள் வழியாகப் பேசப்படும் என்பதை,

"என்னைக் கண்டதும்
கவிழும் உன் இமைகள்
கொசுவலையா?
மீன் வலையா?"[5]

(பால்வீதி - ப.31)

காதலிக்கும் பெண் மீது கொண்டுள்ள காதலை அறிய கொசுவலை, மீன்வலை என்பதை படிமமாகக் கூறுகிறார். கொசுவலை என்பது அதையும் உள்ளே அனுமதிப்பதில்லை. மீன் வலையில் மாட்டிக் கொண்ட எதுவும் வெளியில் தப்ப முடியாது. இதன் மூலம் அப்துல் ரகுமான் காதல் நோக்கு கவிதைகளில் மாறுபட்டுக் காணப்படுவதைக் காணலாம்.

காதலில் ஒருவருக் கொருவர் வாழும் தன்மையை கவிஞர்,

"ஒருவர் நினைவை
ஒருவர் கொளுத்திக் கொண்டு
இருவரும் எரிவோம்
மெதுவாக
நான் மெழுகுவர்த்தியாக
நீ ஊதுபத்தியாக"[6]

(பால்வீதி - ப.29)

ஒளிமயமான வாழ்வும், புகழும், மணம் பரப்பக்கூடியது. ஊதுபத்தி, மெழுகுவர்த்தியை படிமமாகக் கூறுகிறார் கவிஞர். ஒருவர் நினைவில் ஒருவர் வாழ்வது காதலின் உயர்வாகும்.

படிம உத்தியை பல கவிஞர்கள் கையாண்டாலும் தனக்கென தனிப்பாணியைக் கையாண்டு முத்திரைப் பதித்த சிறந்த கவிஞர்களில் ஒருவராகத் திகழ்கிறார் கவிஞர் அப்துல் ரகுமான்.

அடிக் குறிப்புகள் :

1.தா.ஏ.ஞானமூர்த்தி - இலக்கியத் திறனாய்வியல் - பக்கம் 156.
2.கவிஞர் அப்துல் ரகுமான். கரைகளே நதியாவதில்லை - பக்.68.
3.கவிஞர் அப்துல் ரகுமான் - பால்வீதி - பக்கம் 72
4.கவிஞர் அப்துல் ரகுமான் - நேயர் விருப்பம் - பக்.13.
5.கவிஞர் அப்துல் ரகுமான், பால்வீதி, பக்.31.
6.கவிஞர் அப்துல் ரகுமான், பால்வீதி. பக.29.

# சீக்கிய சிந்தனையில் தனிமனிதவாத விமர்சனமும் சங்கத் தத்துவமும்

இரா.காவேரி
முனைவர் பட்ட ஆய்வாளர்
குருநானக் ஆய்வுத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை-21.

## முன்னுரை

சமயங்கள் அனைத்தும் இறைவன், உலகம், மனிதன் என்ற கருத்துக்களுக்கு பல விளக்கங்களைக் கொண்டுள்ளன. இந்த விளக்கங்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று உலக வாழ்க்கையை மறுத்து (துறவறம்) இறைவனை அடைதல், மற்றொன்று உலக வாழ்க்கையை ஏற்று அதன்மூலம் இறைவனை அடைதல் என்பனவாகும். சீக்கியம் இரண்டு பிரிவுகளுள் இரண்டாவது வகையைச் சார்ந்தது. சீக்கியம் சமூக மனிதர்களை இரண்டு அடிப்படையில் பிரிக்கின்றது. ஒன்று தான், தனது என்ற சுயநலச் சிந்தனைகளை கடைப்பிடித்து சமூகத்தை விட்டுப் பிரிந்து வாழ்கின்றன மனிதர்கள் என்றும், மற்றொன்று பொது நலச்சிந்தனைகளைக் கடைப்பிடித்து சமூகத்துடன் இணைந்து வாழ்கின்ற மனிதர்கள் என்றும் பிரிக்கின்றது. முதல் பிரிவினரை "மன்முகன்" (ஹௌமைன்) என்றும் இரண்டாம் பிரிவினரை "குருமுகன்" என்றும் சீக்கியம் அழைக்கிறது. சீக்கியம் ஹௌமைன் எனும் தனிமனித உணர்வினை அழித்து குருமுகன் எனும் பொதத்தன்மை உடையவனாக மாற்றுவதை தன் அடிப்படை நோக்கமாகக் கொண்டுள்ளது. சீக்கியம் தனிமனித உணர்விற்கு எதிரான ஆயுதமாக சங்கத்தை (புனித கூட்டிணைவு) முன்மொழிகின்றது. அத்துடன் மனிதர்கள் சாதி, சமய, சமூக கருத்தக்ளால் பிளவு பட்டு வாழாமல் சகோதரத்துவ கருத்துக்களைப் பின்பற்றி இணைந்து வாழவேண்டும் என்றும் கூறுகிறது.

## சீக்கியத்தில் தனிமனிதவாதம் (ஹௌமைன்)

மனிதன் உயர் வாழ்வதற்கு தேவையான நிலம், நீர், காற்று எனும் மூன்றிற்கு அடுத்தநிலையில் தனிமனிதவாதம் எனும் தன்னுணர்வே அடிப்படைநிலையாக உள்ளது. மனிதன் இது சுயசிந்தனை, சுயதேவை, சுயஉணர்வு மற்றும் ஆளுமைத் திறன் போன்ற காரணிகளாக அமைந்துள்ளது. இவைதான் மனிதனுள் உழைப்பு மற்றும் செயல்பாட்டுத் தன்மையினை உருவாக்கி இயங்கச் செய்கின்றது. தன்னுணர்வற்ற மனிதனிடம் இயங்கும் தன்மை தென்படுவதில்லை. சீக்கியத்தில் குருநானக் ஹௌமைன் எனும் தன்னுணர்வு பற்றி அதிகமாகக் கூறியுள்ளார். "ஹௌமைன்" என்பது பஞ்சாபி மொழிச் சொல்லாகும். இது ஹௌ-நான், மைன்

- எனது என்ற இரண்டு சொற்களிலிருந்தும் ெ"ளமைன் தோன்றியது. ெ"ளமைன் எனும் சொல்லிற்கு நான் எனும் தன்னலம், புனிதமாக மற்றும் நல்ல நடத்தைகளிலிருந்து விலகிய நோய் என்ற விளக்கங்களும் காணப்படகின்றன. சீக்கய சமயத்தின் புனிதநூலான குருகிரந்தத்தில் "ெ"ளமை" ஏனும் சொல் ஆத்மீகநிலைக்குரிய விடுதலை மற்றம் அமைதியை அடைய முடியாதவர்களை குறிப்பதற்கான சொற்களாக பயன்படுத்தப்பட்டுள்ளது. சீக்கியம் மனிதனின் முழுமையான ஆன்மீக வாழ்க்கை என்பது இறைவன், இயற்கை, சமூகம் என்ற கருத்துடன் தொடர்புடையது என்று கூறுகிறது. அன்மீக வாழ்விலிருந்து விலகி தனித்து வாழக்கூடிய மனிதச் செயலினை "ெ"ளமைன்" என்கிறது. மனிதனுள் ெ"ளமைன் தான் என்ற தன்மை, தனிமனிதத்துவம், சுயநலம், தனிமுனைப்புச் சிந்தனை, ஆணவம், மற்றும் அகங்காரம் எனும் கருத்தினில் சமூகத்தில் சொத்து, சமூக உயர்வு மற்றும் அதிகாரம் எனும் கருத்திலும் இணைந்திருப்பதாக சீக்கிய சமயம் கூறுகிறது.

சீக்கியத்தில் கூட்டுணர்வு வாதம்:

உலக வாழ்வில் தனிமனிதன், சமூகம் எனும் இரண்டு கருத்துக்களும் தொடர்வண்டியின் வழித்தடத்தைப் போன்று தனித்தனியான சிறப்பியல்புடன் கூடிய ஒரங்கிணைவினைப் பெற்றுள்ளது. இந்த கருத்திற்கு மாறாக மனிதனும், சமூகமும் பிரிந்துவாழ முற்படும்போது கூட்டிணைவு பிரிந்து தனிமனிதத்துவம் ஏற்படுகிறதெனும் கருத்தினை சீக்கியம் தெளிவாக வரையறுத்துள்ளது. குருநானக் தனி மனிதன், சமூகம் எனும் இரண்டு கருத்திற்குமான செயல்முறைப்பாலமாக "சங்கத்" (புனித கூட்டிணைவு) கோட்பாட்டினை வலியுறுத்தியுள்ளார். சீக்கியம் தமது கூட்டுணர்வு கருத்தினை விதைப்பதற்கான முதற்நிலமாக சமயத்தை தேர்வு செய்தது. சீக்கியம் இறைவனை அடைவதற்கான வழிமுறைகளில் தனித்த முயற்சி மற்றும் தனித்த குணங்களை ஏற்கவில்லை. இறைவனை அடைவில் மக்களனைவரும் இணைந்து செயல்படுகின்ற சமூக நடவடிக்கையினைக் கூடியது. குருநானக் "சங்கத்" எனும் புனித கூட்டிணைவினை முதன்மைப்படுத்தினார். இங்கு மக்களனைவரும் ஒன்றாக கூடியிணைந்து இறைவனைத் துதித்து இறைவன்பினை பெறவேண்டும் என்றும் குருநானக் வலியுறுத்தினார். அதன்படி சங்கத்தில் குருவும் சீடர்களும் ஒன்றாக கூடி இறைவழிபாட்டினை மேற்கொண்டனர். குருநானக் சங்கத் எனும் கூட்டுணர்வுக் கருத்தினை சமயச் செயல்பாட்டிற்கு மட்டுமின்றி சமூகச் செயல்பாட்டிற்கும் வகுத்துரைத்தார். கூட்டிணைவு கருத்தில் சமயத்திற்கு அடுத்தபடியாக சமூக கருத்திற்கு முக்கியத்துவம் அளித்தார். மனிதன் தன்னைச் சார்ந்துள்ள சமூகத்துடன் ஒன்றிணைந்து வாழ வேண்டும் என்பது "சங்கத்தின்" அடிப்படைத் தத்துவமாக விளங்கியது. குருமார்கள் சமூக அக்கறை கொண்டு அதில் ஈடுபடாத மனிதர்களை மன்முகன் என்றழைத்தனர். சீக்கியம் மனிதர்களை சமூகத்துடன் சேர்ப்பதற்காக

சங்கத் (புனித கூட்டிணைவு), லங்கர் (பொதுவான உணவுமுறை), மற்றும் கீர்த்தன் (பொது ஜன வழிபாட்டுமுறை) எனும் அமைப்புகளை உண்டாக்கியுள்ளது. இவ்வாறாக, சீக்கியம் பொதுமையியம் எனும் கூட்டுணர்வு கருத்திற்கு அதிக முக்கியத்துவம் அளிக்கின்றது.

முடிவுரை

சங்கத் தத்துவம் "ஒற்றுபட்டால் உண்டு வாழ்வு" எனும் கருத்தினை எடுத்துரைக்கின்றன. சீக்கியம் புதிய சமூகத்தை கட்டுவிப்பதற்கான அடித்தளமாக கூட்டுணர்வுக் கருத்தினை வலியுறுத்துகின்றது. ஆனால், கூட்டுணர்வினைப் பின்பற்றுவதற்கு முன்னர் ஹௌமைன் எனும் தனிமனிதவாதக் கருத்திலிரந்து விடுதலை பெற வேண்டும் எனும் நியதிகளையும் கூறுகின்றது. சீக்கியம் இறை ஆணை, குறை விருப்பம் என்பவை சங்கத் எனும் புனித கூட்டிணைவினைப் பின்பற்றுவதே எனும் கருத்தை அதிக உறுதியுடன் கூறுகின்றது.

பார்வை நூல்கள்:

1.Gurbachan Singh Talib (Translation), Selection from the Holy Granth.
2.Harbans Singh, The Encyclopaedia of Sikhism.
3.முத்துமோகன், ந., சீக்கிய சிந்தனையில் இறைவன், மனிதன், உலகம்.
4.ஜக்ஜித் சிங், முத்துமோகன், ந., (மொழிபெயர்ப்பு) சீக்கிய சமய இயக்க வரலாறும் கருத்தியலும்.

# உள்வெளி உலகம்: கவிதையாக்க களங்கள்

பா.செல்வகுமார்
இலக்கணத்திறனாய்வுத்துறை
தமிழியல்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 21.

கட்டமைக்கப்பட்ட யதார்த்தம் அதனிலிருந்து முரண்படும் பிணக்கங்களின் மீது தமது வன்முறைகளையும் அழகியலாக மாற்றி அனைத்தையும் ஒன்றாக்கிச் செல்லும்போது தற்காக்கவும் தன்வெளியைக் கட்டமைக்கவும் பிணக்கம் கொண்ட உள்வெளி உலகம் யதார்த்தத்தை மீறிச் செல்கின்றன கவிதையில்

யதார்த்தப் புரிதலில் பார்த்த பார்வையினுள் பதியாமல் மற்றும் பதியவைக்கப்படாமல் நழுவிய காட்சிகள்., அனுபவ முழுமைக்கான பகுதியை இழக்கப்பண்ணுகின்றன. கலைகள் இத்த குணங்களை வெளிப்படுத்துகையில் மீண்டும் அவை அனுபவ முழுமைக்கான பங்களிப்பாகின்றன. யதார்த்த வெளியில் தெரிந்தோ தெரியாமலோ அனுபவ முழுமைக்கான பல சாத்தியப்பாடுகள் மழுங்க வைக்கப்படும் நிலையில், கலையில் கவிதையில் அனுபவ பங்களிப்புகள் செயலூக்கம் மிகுந்ததாக, உவமை, வேகம், படிமம், குறியீடு வெளிப்பாட்டு உத்திகளுடன் கலைசாத்தியப்பாட்டினை விணைப்படுத்துகின்றன. பார்வையினுள் பதியாத காட்சிகளை உள்வாங்குவதும் வெள்படுத்துவத் சிக்கலான ஒன்றாக இருப்பதினால், கவிதைகளும் இருண்மையுடையதாக மாறிவிடுகிற நிலை உருவாக்விடுகிறது. எனவே கவிதை வழக்கமான குறிப்புணர்த்லிலிருந்து விலகி குறிப்புணர்த்தலையே உலகமாக்கி புதிய உணர்வு விதிப்புகளைக் கொண்டு வருகின்றன. கட்டமைக்கப்பட்ட யதார்த்தத்திலிருந்து மறைக்கப்பட்ட காட்சியின் அனுவப்புலங்களை கண்டடைந்து வெளிக்கொண்டுவந்து புதிய உணர்வு விரிப்புகளைத் தரும் கவிதைகளின் இருண்மையும் கவிதையாக்கக் களங்களின் அழகியலும் மொழியின் பின்னலு் பேசுவதற்கு அப்பாஸின் "வரைபடம் மீறி" இங்கு ஆய்வுக்கானதாகிறது.

யதார்த்தத்தின் பேசாப்பகுதிகள் கவிதையில் உள்வெளி உலகமாக விரிந்து நிற்பதை "உன்" தலைப்பிட்ட கவிதையின் மூலம் சுட்டலாம். "உன் வரைபடத்தில் இல்லாத நிமிஷமென மரம் எப்படி வந்தது வரைந்தது கடல் என்றாலும் மேலே குங்சுகளொடு பறக்கும் பறவைகள் தெற்கு கரும் புள்ளியாய் தூரத்தில் மறையும்/ படகுகள், கால்கள், நலியை நனைய / கரையில் நிற்கும் மனிதத் தெற்கு" (ப.31) என்பதனுள் வரையப்பட உருவாக்க நினைத்தது கடல் எனினும் அதனைச் சுற்றி குஞ்சுகளொடு பறக்கும் பறவைகள், படகுகள், கால்கள்., கரையில் நிற்கும் மனிதர்கள் பேசாப்பகுதிகளின் ஆவணங்களாகிவிடுகின்றன. இது மொழியின் நேர்க்

கோட்டுத்தன்மையில் யதார்த்தத்தின் பேசாப்பகுதி தெளிவாகின்றது.

மொழியின் நேர்கோட்டுத் தன்மையை அழித்து நிற்கும் கவிதையாகக் "கடந்துபோக" (ப.34) கவிதையைச் சுட்டலாம். காரண காரியங்களைத் தேடிக் கொண்டிருப்பதல்ல நடைமுறை வாழ்க்கை. குறுக்காக நெருப்பாக துவக்கத்தின் நேர்கோடு துண்டுபட்டு நிற்கிறபோது மௌனங்களை நமது வேலைகளை, நமது காலத்தின் அவசரத்திற்காக போர்த்திவிட்டு போய்விடுகிறபோது கவிதையும் காட்சியைத் துண்டுபடுத்தி நிகழ்த்துகின்றன. கவிதை மொழியானது ஏற்கனவே தனது எழுவாயை, பயனிலையை, செயப்படுபொருளை அழித்திருப்பதுடன் காட்சி துண்டுபடல்களும் அடுத்தடுத்த காட்சியின் அருகாமைகளும், வரிகளின் ஒத்திசை மற்றும் முரணிசைவுகளும் புதிய ரசனை வெளிச்சத்தைக் கொடுக்கின்றன. எனவே "அறிந்த விஷயங்களை எல்லாம் சொல் / இடைவெளியற்றது காலம் / இது உன்னை சந்தித்தது" என்று கோர்வையற்று தொடர்கிறது கவிதை. கடந்து போவதற்குத்தான் சந்திக்கிறோம் என்பதில் காலத்தை தோற்கடிக்க முடியாத அதற்குள் சிக்கிக்கொண்ட சின்னஞ்சிறிய வாழ்வு பற்றியதாகக் கவிதையை உணர்ந்து கொள்ள முடிகிறது.

"எனக்குத் தெரியாதவர்கள் / உலகத்தில் வசிக்கிறார்கள் / என்னைப் போல் / எனக்குத் தெரிந்தவர்கள் / என் உலகமாகிறார்கள் / இதில் நின்று யோசிக்க நேரமேது/ சதா சிறகை அசைத்தபடி ஒரு பறவை / நடந்து கழியவும் தூரமேது / காலைகளின் மரங்கள் / வந்த வண்ணமாயிருக்கிறது" (ப.14) எனக்குத் தெரியாதாவ்கள் உலகத்தில் வசிக்கிறார்கள். என்னைப் போல் என்பது அறிமுகமில்லாத மனிதர்கள் ஒருங்கே வாழும் அந்நியமிக்க ஒரே காலத்திலான உலகைப் பற்றிய காட்சிப்படுத்தலாகவும், தெரிந்தவர்கள் உண்டான சுருங்கிய உறவாக தனிமனிதனின் வாழ்வு கட்டம் கட்டப்பட்டதாவும் தொடர்கிறது. கவிதையின் வெளிப்பாட்டு: முறையில் இது முதல் காட்சிப்படுத்தலாகவும், இக்காட்சிப் படுத்தலுக்குள் வலியும் உணர்வும் தம்மை பேசிக்கொள்வது பறவையாக ஊடிழைத்த காட்சிப்படுத்தலாகவும் மெருகேறுகிறது. பறவையானது தன் பயணத்தைத் தானாக கடத்த முடியாமல், தன் பயணத்தைக் காலம் என்ற விசையின்மீது தன்னை மீறி கடத்தப்படுவதாக உணர்த்துகின்றது. பறவை சதா சிறகை அசைக்கிறதே தவிர பறப்பதாக இல்லாமல் நடந்து கழிக்கிறது. பறவை மனிதனாகிறது. சிறகை அசைத்தலில் கனவுகள், ஆசைகள், எதிர்பார்ப்புகள், வாழ்வின் பன்முகங்கள் துடிக்கிறபொழுது அதை தட்டிக்கொடுப்பதோ குறைந்த அளவு அதனைப் புரிந்து கொள்வதோ இல்லாமல் காலம் என்ற யதார்த்தம் தன் வேலையான கடந்து போதலைச் செய்கிறது. எனவே மரங்கள் வந்த வண்ணமாயிருக்கிறது. சாலையில் காலம் இக்காலத்தின் யதார்த்தங்கள், நிறுவப்பட்ட அர்த்தங்கள், புனிதங்கள் என்று விரிகிறது. மறுக்கப்பட்ட உள் உலகமோ சிறகை அசைத்தலோடு வேறு வழியற்று நடந்து கழிக்கிறது

வாழ்வை இவ்வுலகம் வெளியே தெரியாதபடி அனைவருக்குள்ளேயும் உறைந்து கிடக்கிறது.

"தலை முடியிலிருந்து வழிந்து / பெரு விரல் நீட்டலில் முடியும் / உடலை போல அல்ல / ஓவியம், நீ / தெறி வழிந்து ஒழுங்கு கொண்டதாய் / தன்னை விரிக்கும் / உன் முகம் எனக்குள் / பிடிபட்டு விலகும் கண்ணாடியுள் / மண்டும் உணர்த்தும் / சொல்லில் அகப்படாது நழுவிப் போகும் / வெளிச்சம் நீ" (ப.24) இக்கவிதை விரிகளில் உடல், ஓவியம், கண்ணாடி, வெளிச்சம் முதலிய சொற்கள் ஒரு குறியீட்டை ஒழுங்குபடுத்துவதுபோல் தோன்றினாலும் இவை அனைத்துமே ஒன்றோடு ஒன்று பின்னாமல் வேறு ஒன்னை உணர்த்த முற்படுகின்றன. அப்படி வேறு ஒன்று எது என்பதைக் கட்டமைக்க முடியாமல் நழுவிவிடும் வேலையைச் செய்வதாக இவையிங்கு செயல்படுகின்றன. இங்கு சொல்லில் அகப்படாது நழுவிப்போவது வெளிச்சம் மட்டுமல்ல அர்த்தமும்தான். கவிதைக்குள் அதன் உலகத்தை உணர்ந்து கொள்ளும் முயற்சியாகக் கவிதை வரிகளை கட்டவிழ்ப்பின் மூலம் புரிந்து கொள்ள, பிடிபட்டு விலகும் கண்ணாடியுள் / கண்டும் உணர்ந்தும் / சொல்லில் அகப்படாது நழுவிப் போகும் / வெளிச்சம் நீ / சிதறி வழிந்து ஒழுங்கு கொண்டதாய் / தன்னை விதிக்கும் / உன் முகம் எனக்குள் / ஓவியம் நீ / தலைமுடியிலிருந்து வழிந்து / பெரு விரல் நீட்டலில் முடியும் / உடலை போல அல்ல / என்று அமைத்து ஒத வாசிப்பதையும் இவ்விதிகளை மாற்றி அமைத்து மற்றொரு வாசிப்பையும் இவ்வகையில் பலவித வாசிப்புகளையும் மேற்கொண்டு பன்மைக்கான அர்த்த த தளத்தை உருவாக்கலாம். கவிதையின் ஒருபக்க சாய்வினை உடைத்து அதை அவிழ்த்துக் காணும் முயற்சியாக அல்லாமல் கவிதையின் உலகத்தை உணர்ந்து கொள்ளவும் இங்கு கட்டவிழ்ப்பு தேவைப்படுகிறது. இவ்வகையில் கவிதைக்குள் ஒரு உருவத்தை அதன் உணர்வை அதன் செயல்பாட்டை புரிந்து கொள்ளும் மற்றொரு நபர் என இருவரின் நிகழ்வுக்குள் இயங்கும் உலகை அனுமானிக்கலாம். இங்கு வழக்கமான உடல் அல்லாத மற்றொரு உடலும், அர்தத்திற்கு இக்கால அதன் போக்குகளும் உணர்ந்து கொள்ள இயலுகிறது. மற்றொரு வாசிப்பில் இவ்வகையில் கவிதையில் உள்வெளி உலகை முன்வைக்கலாம். அறிவு வழிந்து திடநிலையாகி வேறு உலகோடு தொடர்பு கொள்ளாமல் பெருவிரல் நீட்டலில் முடிந்து விடுகிறது. ஓவியம் போன்ற மனிதர்கள் அப்படியல்ல. அவர்களின் சுதந்திரம் தெற்கும் அகப்படாமல் சிதறினாலும் ஒரு ஒழுங்கைக் கொண்டு வெளிச்சமாகத்தான் நழுவிப் போகிறார்கள். இவ்வகையில் இங்கு ஓவியத்தின் தன்மையை இறுகப்பட்ட முடிந்துவிட்ட வரையறை கொண்டதாக இல்லாமல் புதியபுதிய பார்வைகளுக்கு இடம்தரக்கூடியதாக இருக்கிறது என்பதையும் உருவாக்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. இங்கு ஓவியமும் கவிதையோடு தொடர்புகொள்கின்றன. ஓவியமும் கவிதையும் இறுக்கப்பட்ட வரைவுபடுத்தப்பட்ட அசைக்க முடியாத திடநிலையிலிருந்து திரவ நிலையாக (வழிந்து) மாறுகையில் அது பல்வேறு உருவங்களை வடிவத்

தோற்றங்களை ஏற்படுத்த வல்லதாக இருக்கின்றது. நழுவிப் போகும் வெளிச்சமாக விடுதலை பெற்ற மனிதனொருவன் இக்கவிதையுலகுக்குள் தென்படுகிறான் என்றும் கொள்ளலாம்.

இலக்கியம் பிரதிபலிக்கிறது எனும் யதார்தத்தின் ஒற்றைத் தளத்தைச் சுட்டுவதற்கு, அதன் போதாமையை உணர்த்துவதற்கு, கவிதையில் குறியீடும், படிமமும், இதுவரையிலான வெளிப்பாடடு முறைமையிலிருந்து தம்மை மாற்றிக்கொள்வது இதன்வழி புலனாகின்றது. மேலும் கவிதை மொழியில் வார்த்தைகளின் சோதனை முயற்சிகள் காட்சிப்படுத்தல் தன்மைக்குள் வெவ்வேறு தண்டாட்டங்கள் மூலமாக புதிய புதிய உணர்வினை கட்டியெழுப்ப முயற்சிக்கின்றன. இதன்வழி கவிதை மொழி இதன் உள்ளுறையில் எழுதப்படுவதென்பதும் அதன் உலகம் உள்வெளி உலகின் உணர்வுநிலைகளை வாசிப்பவருக்குள் கடத்துகிறதென்பதும் இங்கு கவிதையாக்க மற்றும் வெளிப்பாடடு வகையின் சில உத்திகளுடன் தொடர்புபடுத்தி வினை யாற்றுவது புலப்பாடடைகிறது.

# நவீன இலக்கியங்களில் அழகியல்

த.நிர்மல் கருணாகரன் ஆய்வாளர்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம் மதுரை

முன்னுரை

அழகியல் என்பது அழகு வாய்ந்த ஒரு பொருளைக் காணும் போது அல்லது அழகான முறையில் ஒரு கருத்தினை வெளியிடும்போது ஏற்படும் உணர்ச்சியாகும். மக்களின் சுவைத்தல் தன்மை வேறுபட்டிருப்பதால் எல்லோருக்கும் ஒரே வகையில் இவ்வுணர்ச்சி தோன்றாது. உள்ளத்தின் பண்பாட்டைப் பொறுத்தது அழகுணர்ச்சி. ஒரு பொருளைப் பற்றிய எண்ணக் கற்பனை, பாவம் ஆகியவற்றைப் பற்றி நிற்கும் கலைப்படைப்பு மக்களின் உள்ளதில் அழகுணர்ச்சியைத் தூண்ட வேண்டுமானால் அது உலகியல் நெறியோடு ஒட்டியும் இருக்க வேண்டும். அழகியல் அல்லது அழகுண்ச்சி காண்பவர் மனத்தின் போக்கிற்கேற்ப இன்பியலாகவோ, துன்பியலாகவே அமையலாம். நவீன இலக்கியங்களில் அழகியல் குறித்த செய்திகளைக் காண்போம்.

அழகியல் அணுகுமுறை:

இலக்கண விதிமுறைகளைப் பற்றிக் கவலைப்படாது, ஒரு கலைப்படைப்பில் அமைந்துள்ள அழகியல்புகளைக் கண்டறிந்து அவை எவ்வாறு அப்படைப்பின் சிறப்பிற்குக் காரணமாகின்றன என்பதை மதிப்பீடு செய்யும் திறனாய்வு முறையை அழகியல் அணுகுமுறை ஆகும்.

சான்று

மறைமலையடிகள் - முல்லைப்பாட்டு ஆராய்ச்சி
- பட்டினப்பாலை ஆராய்ச்சி

அழகியல் பற்றிய மேனாட்டார் எண்ணம்

தமிழ் இலக்கியத் திறனாய்வுத் துறையில் அழகியல் கோட்பாடு பற்றிய முழுமையான ஆராய்ச்சிகள் அதிக அளவில் வெளிவரவில்லை. ஆனால் ஐரோப்பிய அமெரிக்க மொழிகளில் இலக்கிய ஆய்வுத் துறையில் அழகியல் என்னும் கோட்பாடு பற்றி ஆராய்ச்சி நூல்கள் பல வெளிவந்துள்ளன. இதற்குக் காரணம் "அழகியல்" பற்றிய மேனாட்டார் பலர் கொண்டிருந்த சிந்தனைத் தெளிவே ஆகும்.

தாமஸ் அக்கினாஸ் என்பார். "புலன்கள் அல்லது மனத்தை இன்புறுத்துவது அழகு" என்றார். கீட்சு "உண்மையே அழகு" என்றார் கார்க்கி என்பார். கலைஞன் தன் படைப்புக்கு ஓர் உருவம் கொடுக்கும் பொருட்டுப் பல்வேறு கட்டுக்கோப்புகளையும், ஓசை நயங்களையும், நிறபேதங்களையும் அல்லது சொற்றொகுதிகளையும் சேர்க்கும் சேர்மானமே அழகு" என்று கூறுகிறார். ஜெர்மனியைச் சேர்ந்த சான்ட்

"கவிதை தனித்த முருகியல் இன்பம் வாய்ந்ததென்றும்
அதை உணர்ந்து திளைப்பதே கவிதையின் பயன்"

என்றும் "மதிப்பீட்டுத் திறனாய்வு" என்ற தம் நூலில் தெளிவுபடுத்தியுள்ளார்

எட்கர் ஆலன்போ,

தூய்மையானதும் ஆன்மாவை உயர்த்தவல்லதும்
மிகவும் செறிவானதும் ஆகிய இன்பம்
அழகை ஆழ்ந்து சிந்திப்பதனின்றும்
பெறப்படுவதாகும்"

இவ்வாறு அழகைப் பற்றிய தமது எண்ணத்தை வெளிப்படுத்துகிறார்.

அழகியல் என்பதற்கு பல்வேறு விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து அழகியல் என்பது கலைகளைப் பற்றிய ஒரு புரிதலை நமக்குத் தருகின்றது என்பதும், அறிவை விரிவாக்கு உள்ளத்தை நெகிழவித்து உணர்வு இன்பத்தைத் தருகிறது என்பதும் புலனாகிறது.

நவீன இலக்கியங்களில் அழகியல்

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற உதயங்களாம் புதுக்கவிதை, உரை இலக்கிய வகைகளில் அழகுணர்ச்சி வடிவத்திலும், பொருளிலும் சிறப்பான இடம் பெற்றது.

சிறுகதை, புதின வகைகளில் காலையில் தோற்ற வருணனை, பாத்திரப்படைப்பு வருணனை சிறப்புற அழகுணர்ச்சியைப் படம் பிடிப்பனவாகும்.

சிறுகதையில் இடம்பெற்றுள்ள பாத்திர வருணனை

சி.ஆர்.இரவீந்திரனின் "மகாகவியின் மயக்கம்" என்னும் சிறுகதைத் தொகுப்பில்,

"தங்கராஜன் மாநிறமாக இருந்தாலும் சிலசிவப்புத்தோல் அசிங்ககங்களுக்கு மத்தியில் சற்று அழகாககவே தோன்றுவான்" என்றும்,

கலைந்து நெற்றியில் தவழ்ந்து கொண்டிருந்த கூந்தல் இலவு காத்த கிளியோ என எண்ணத்தோன்றும், கண்கள் கனவு காண்பவை என்றும் இவர் வருணித்து உள்ளதன்மூலம் உணரலாம்.

கவிதை இலக்கியத்தில் அழகியல்

சாதாரண மனிதன் இயற்கைப் பொருள் ஒன்றினைக் காணும்போது அதன் மேற்போக்கான அழகு மட்டுமே அவனுக்குப் புலப்படும். ஆனால் கவிஞனுடைய அனுபவமோ அவ் இயற்கையில் அவனுடைய ஆழ்ந்த ஈடுபாட்டினை உணர்த்துவதாக அமையும்.

பாரதிதாசன் அருவியின் அழகில் மயங்கி

"அருவிகள் வைரத்தொங்கல் அடர்கொடி பச்சைப்பட்டே
குருவிகள் தங்கக்கட்டி குளிர்மலர் மணியின் குப்பை
எருதின் மேல் பாயும் வேங்கை நிலவுமேல் எழுந்த மின்னல்
சருகெல்லாம் ஒளி சேர்த்தங்கத் தகடுகள் பாரடா நீ",

என்று பாடு அழகின்பத்தை எடுத்தியம்பலாம்.

அழகின் சிரிப்பில்

"கடல்நீரும் நீலவானமும்
கைகோக்கும் அதற்கிதற்கும்"

என்று அழகுடன் வருணிக்கின்றார்.

புதுக்கவிதைகளில் அழகியல்

இருபத்தோராம் நூற்றாண்டு இயந்திரத்தனமான வாழ்க்கையை நமக்கு அளித்துள்ளது. ஒவ்வொருவரும் ஒவ்வொருவரிடம் இருந்தும் பொருளிடமிருந்தும் அந்நியப்பட்டிருக்கின்றோம். இந்த நவீன வாழ்க்கையை உருவாக்கக்கூடிய மயற்சியில் இலக்கியத்தில் குறிப்பாகக் கலைப்படைப்பின் பங்களிப்பு இன்றியமையாதது. அதில் அழகியலும் ஒன்று. அந்த அழகியல் புதுக்கவிதையில் ஏற்படுத்திய கவிதை இன்பத்தை இவன் காண்போம்.

இயற்கை அழகியல்

இயற்கை ஒரு திறந்த புத்தகம். வாழ்க்கையை அந்நியமாக்காமல் இணைக்கின்ற பாலமாகவும் இருப்பது இயற்கை வாழ்வை அழகியல் அணுகுமுறையில் அணுகுவதற்கும் துணைநிற்பது அழகுகள் அனைத்தும் உண்மையாக இருப்பதில்லை. ஆனால் உண்மைகள் என்றும் எப்போதும் அழகாகவே இருக்கின்றது.

கவிஞர் அப்துல்ரகுமான்

"வான உற்சவத்தின்
வான வேடிக்கை
முகில் புற்று கக்கும்
நெருப்புப் பாம்புகள்
கருப்பு உதட்டின்
வெளிச்ச உதறல்
இற சொற்பொழிவின்
சுருக்கெழுத்து"

என்று மின்னலின் இயல்பை எடுத்தியம்புகின்றார். பாரதிதாசன் தொடங்கி இன்றுவரை இயற்கையில் திழைத்து இயற்கை அழகினைப் பாடாத கவிஞர்கள் இல்லை. ஆனால் காலந்தோறும் கவிஞர்கள் இயற்கையை நோக்கும் பண்பும் போக்கும் மாறியுள்ள தன்மையை உணரமுடிகிறது.

முடிவுரை

இக்கட்டுரையின் வாயிலாக நவீன இலக்கியங்களில் அழகியல் செய்திகள் குறித்து அறிந்து கொண்டோம்.

# 'குதிரில் உறங்கும் இருள்' புலப்படுத்தும் தலித்தியம்

பூ.பாண்டியம்மாள்
முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்
(தமிழ்)
அய்ய நாடார் ஜானகி அம்மாள்
கல்லூரி
சிவகாசி.

பாப்லோ அறிவுக்குயில் அரியலூர் ஆயுள் காப்பீட்டுக் கழகத்தில் முகவ்ராகப் பணிபுரிந்து வந்தவர். தற்பொழுது திருநெல்வேலி மாவட்டம் 'அருளகத்தில்' பணிபுரிந்து வருகிறார். இவர் ஒரு தலித் படைப்பாளர் ஆவார். 'கிளுக்கி' என்ற சிறுகதைத் தொகுப்பு இவருடைய முதல் தொகுப்பாகும். இவருடைய கதைகள் அனைத்தும் தலித் மக்களின் பிரச்சினைகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டவையாகும். இக்கட்டுரை 'குதிரில் உறங்கும் இருளில்' பொதிந்திருக்கும் தலித்திய சிந்தனையை ஆய்வதாக அமைகிறது.

'தலித்' சொல் விளக்கம்

'தலித்' என்னும் சொல் ஒடுக்கப்பட்டோரைக் குறிப்பதற்காகவே முதன் முதலில் மராத்தியில் பயன்படுத்தப்பட்டது. 'தலித்' என்றால் துன்பத்திற்காளான தோற்கடிக்கப்பட்ட என்னும் பொருள்களைச் சாதாரண அகராதிகள் தருகின்றன. பொருளாதார ரீதியாகவும், அரசியல், கல்வி, சமுதாய ரீதியாகவும் யாரெல்லாம் புறக்கணிக்கப்படுகிறார்களோ அவர்கள் எல்லோரும் தலித்துக்கள் என்று சொல்லப்படலாம்.

பாப்லோ அறிவுக்குயிலின் 'குதிரில் உறங்கும் இருளில்' தலித்தியம்

தலித் மக்களின் அவலங்களைத் தன் கதைகளில் பதிவு செய்துள்ளார். தீண்டாமை, ஏற்றத் தாழ்வுகள், அடிமை நிலை, தண்டனை கொடுத்தல், தலித் பெண்கள் மீதான பாலியல் வன்முறை போன்றவற்றைப் பாப்லோ அறிவுக்குயிலின் கதைகளில் காணமுடிகிறது.

அடிமை நிலை

உரிமைகளையும் உடைமைகளையும் இழந்த தலித் மக்கள் உடைமையாளர் மற்றும் மேல்சாதி என்னும் ஆதிக்க வர்க்கத்தினரிடம் அவர்களின் ஏவல் பணிகளைச் செய்து அடிமை நிலையில் வாழ்கின்றனர்.

'செருப்புக்கும் கீழே சில மரவல்லி மலர்கள்', 'பலிவுண்ட மனிதம்' என்ற இரு கதைகளிலிலும் தலித் மக்களின் அடிமை நிலையைப் பாப்லோ அறிவுக்குயில் கூறியுள்ளார்.

"நம்பூருல எப்புரு ஊரு கட்டுமானத்த மீறாம நடந்துக்கிறியோ அதுபோல வேத்தூருலியும் நடந்துக்க.. கொராமத்த நெருங்கியதும் சைக்கிள உட்டு எறங்கி தள்ளிக்கிட்டே போடா... மறந்து போயிக்கூட குடியான தெருவுல சைக்கிளுல ஏறிக்கிட்டு போயிடாதே. எழவு சொல்ல வந்த வேத்தூரு வெட்டியானுக்கு அவ்வளவு ஆச்சாண்ணு கட்டி வெச்சி தோல

உறிச்சிப்புடுவானுவ"..

(குதிரில் உறங்கும் இருள், பலிவுண்ட மனிதம்., பக்.127-128) என்ற பகுதியின் வழி அடிமை நிலையை நன்கு அறிய முடிகிறது.

தீண்டாமை

தீண்டாமை என்பது தாழ்த்தப்பட்ட மக்களை ஒதுக்கியும் ஒடுக்கியும் வைத்திருக்கும் நிலையைக் குறிப்பதாகும். தாழ்த்தப்பட்டவர்கள் ஊர்ப் பொதுக்குளத்தில் குளிக்க இயலாத நிலையையும், மீறிக் குளித்தால் அவர்கள் மேல்நாதிக்கரர்களிடம் அடி வாங்கும் நிலையையும் "குதிரில் உறங்கும் இருள்" என்னும் கதையில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

"தங்களைத் தவிர காலனியாட்கள் யாராவது குளத்தில் கால் வைத்துவிட்டால் அவ்வளவுதான் ... அடி பின்னி விடுவார்கள்" (குதிரில் உறங்கும் இருள்., ப.55) என்ற பகுதியின் வழித் தீண்டாமையைக் காட்டுகிறார்.

"மாயமிருகம்" என்ற கதையிலும் தீண்டாமைக் கொடுமையைப் பற்றிய ஆசிரியர் கூறியுள்ளார். இன்றும் சில கிராமங்களில் "இரட்டை டம்ளர்" முறை காணப்படுவதை,

"இரட்டை டம்பளர் முறையை எதிர்த்து தேநீர்க்கடையிலுள்ள கண்ணாடி டம்பளர்களை உடைத்த என்மீது வைக்கோல் போருக்கு தீ வைத்ததாய் ஊர்த்தலைவரால் கொடுக்கப்பட்ட பொய் வழக்கில் நான் குற்றவாளி அல்ல என்ற தீர்ப்ப நகலைப் பெறும் பொருட்டுதான் இன்று வரவேண்டியதாய் ஆகிவிட்டது" (கு.உ.இ., மாயமிருகம், பக்.29-30) என்ற பகுதியின் மூலம் அறியலாம்.

இழிவாகப் பேசுதல்

எல்லா நிலைகளிலும் உயர்வாக உள்ளோம் என்ற திண்ணம் கொண்ட மேல்சாதியினர், தலித் மக்களைச் சாதியின் பெயரைக் குறிப்பிட்டோ அல்லது வேறு ஏதேனும் முறையிலோ இழிவாய்ப் பேசுவதுண்டு.

"வயல் வேலைக்கு ஆள் கூப்பிட வரும் போதெல்லாம் பார்த்திருக்கிறேன். பெண்களை வாடி - போடி என்று பேசுவதும் உயதானவர்களைக் கூட பெரியவர்கள் என்று எண்ணிப் பார்க்காமல், "காலனிக்காரன்" தானெ என்ற இளக்காரத்தில் "என்னடா மாரி நார்து பறிக்க ஒம்மொவன வரச்சொல்லுறியா?" என்கிற லட்சணத்தில் இருக்கம் அவன் பேச்சு" (குதிரில் உறங்கும் இருள்., மாயமிருகம், ப.27)

"சாமிக்கண்ணுவோட அய்யாவும் வீட்டு வேலைக்கோ கொல்லை வேலைக்கோ வரும் ஆட்களை, கோபம் வந்தால் "புழுத்த மாட்டுக்கறித் திங்கிற பயலே" என்று தான் வைவார்" (குதிரில் உறங்கும் இருள்., கானல் வெளி., ப.85) என்ற பகுதிகளின் மூலம் இழிவாகப் பேசும்நிலையை ஆசிரியர் தமது கதைகளில் பதிவு செய்துள்ளார்.

தண்டனை கொடுத்தல்

வேறு குலத்தவர் தவறு செய்யும் போது கிடைக்கும் தண்டனையை விடத் தலித் மக்கள் தவறு செய்யும் போது. அவர்களுக்கு அதிகமான

தண்டனை கிடைக்கின்றது.

"பலிவுண்ட மனிதம்" என்ற கதையில் மேல்சாதித் தெருவுக்குள் தாழ்த்தப்பட்ட சாதியைச் சார்ந்த குமரன் என்பவன் மிதிவண்டியில் செல்கின்றான். அவனை மேல்சாதிக்காரர்கள் சைக்கிளில் இருந்து இறங்கிச் செல்லவில்லை என்று அடித்துக் கொன்று விடுகின்றனர். இதனை "கீழ்க்குடியைச் சேர்ந்தவன் எப்படி தெருவில் சைக்கிளில் வரலாம்? அதுவும் நாட்டாரு கூப்பிட அவன்கண் முன்னாடியே எப்படி சைக்கிளுல ஏறிகிட்டு போவலாம்? குமரன் சொன்னது எதையும் காதில் வாங்காமல் அடி பின்னிவிட்டார்கள். அதோடு மட்டுமின்றி லாடம் கட்டிய செருப்புக்கலால் உயர் நிலையைப் பார்த்து உதைத்ததுதான் உடம்புக்கு முடியாமல் போயிற்று". (குதிரில் உறங்கும் இருள்; பலிவுண்ட மனிதம்., ப.129) என்று ஆசிரியர் கூறுவதன் மூலம் தண்டனையின் தன்மையை அறிய முடிகிறது

குழந்தை மனதில் சாதி விதைக்கப்படுதல்

நம் நாட்டில் சாதிப் பிரச்சினை என்பது தீர்க்க முடியாத ஒன்றாக உள்ளது. குறிப்பாகக் கிராமப்புறங்களில் தான் சாதியம் அதிகமாகப் பேசப்படுகின்றது. சிறுவயதிலேயே குழந்தைகளின் மனதில் சாதியை விதைக்கின்றனர். உயர்சாதி, தாழ்ந்தசாதி என்று பிரித்துப் பாகுபாடு செய்து குழந்தைகளின் மனதில் நஞ்சை விழைக்கின்றனர். இதனை,

"அவன் அம்மாகூட, "மாட்டுக்கறித் திங்குற பறயஞ் சக்கிலி ஊட்டுக்கெல்லாம் போயிடாதடா தம்பி... என்று தான் அறிவுரையாய் சொல்லுவாள்" (கு.உ.இ., கானல்வெளி., ப.85) என்ற பகுதியின் மூலம் ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார்.

குழந்தைத் தொழிலாளர் நிலை

இந்தியாவில் நகரங்களை விடக் கிராமங்களே அதிகமாகக் காணப்படுகின்றன. இந்தியாவின் முதுகெலும்பாகக் கருதப்படும் கிராமங்களைத்தான் உறுமை அதிகம் ஆட்டிப் படைக்கின்றது எனலாம். வறுமையின் காரணமாக குழந்தைகளும் ஏதாவது ஒரு வேலைக்குச் செல்ல வேண்டிய சூழ்நிலை உருவாகின்றது. அதனால் அக்குழந்தைகளின் கல்வி பாதிக்கப்படுகின்றது.

"மாயமிருகம்" என்ற கதையில் வறுமையின் காரணமாக பதின்மூன்று வயது சிறுவன் சாராயம் விற்று வயிற்றைக் கழுவும் நிலையை ஆசிரியர் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

"பட்டைச்சரக்கு கனஜோராய் வியாபாரம் ஆகிக் கொண்டிருக்கிறது. கூலிக்கு விற்று "வயிறு" கழுவும் சிறுவனைப் பார்த்த பொழுது என் மனது மட்டுமல்ல., குடிமகன்களின் வயிறும் எரியத்தானே செய்யும்? விற்கும் சிறுவனுக்கு பதின்மூன்று வயதிருக்கும். சரக்கு ஒருவனுடையது. இதன் உற்பத்தியும் மொத்த முதலீடும் இன்னொருவனுடையது. சில்லறை விலைக்கு வாங்குபவன் கொடுக்கும்

கூலி மட்டுமே சிறுவனுக்கு". (குதிரில் உறங்கும் இருள்., மாயமிருகம்., ப.29) என்று ஆசிரியர் கூறுவதன் மூலம் குழந்தைத் தொழிலாளர் நிலையையும் கூலிச் சுரண்டலையும் அறிய முடிகிறது.

தலித் பெண்கள் மீதான வன்முறை:

வயல்களில், பொதுவிடங்களில் மேல்சாதியினரின் கொடூரப் பார்வைக்கும் பாலியல் வன்முறைக்கும் தலித் பெண்கள் பாதிக்கப்படும் நிலை இச்சமூகத்தில் தொடர்ந்து வரும் அவலமாகும். "இன்று இந்தியாவில் ஒவ்வொரு மணி நேரமும் 3 தலித் மகளிர் பாலியல் வன்முறைக்குப் பலியாகிறார்கள்" (லீலாகுமாரி, பி.எம்., ப.9) என்று அய்வுப் புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றன.

"ஊர்த் தெருக்குளத்தில் இறங்கிக் குளித்துக் கொண்டிருந்த போது, ஈசப்பய ஒருத்தன் வந்து, (எந்தத் தெருடீ நீ" என்று எகத்தாளமாய்க் கேட்டதோடு. துணிகளை எல்லாம் சேத்தில் திணித்துவிட்டு, வஞ்சியபடியே கிட்டவந்து மாரப் புடுச்சி திருவினானே" (குதிரில் உறங்கும் இருள்., ப.55) என்ற பகுதியின் வழி மேல்சாதிக்காரர்களின் பாலியல் வன்முறைக்குத் தலித் பெண்கள் ஆளாக்கப்படுவதை அறிய முடிகிறது. நாடு விடுதலைப் பெற்று இத்துணைக் காலமாகியும் பெண்களால் தனியாகச் செல்ல முடியாத சூழ்நிலை இன்றைய காலக்கட்டத்தில் நிலவி வருவதை ஆசிரியர் தம் படைப்பின் வழி வெளிப்படுத்துகிறார். மேலும் காலங்கள் மாறினாலும் தலித் பெண்களுக்கு எதிராக நிகழும் இவ்வாறான கொடுமைகள் மாறவில்லை எனலாம்.

தொகுப்புரை

மேல்சாதிக்காரர்கள் தாழ்த்தப்பட்ட மக்களை அடிமைப்படுத்தும் நிலையையும், தீண்டாமைக் கொடுமையையும் பாப்லோ அறிவுக்குயிலின் கதைகளில் காணமுடிகிறது. மேலும் தலித் மக்களைத் தண்டித்தல், குழந்தைத் தொழிலாளர் நிலை, தலித் பெண் மீதான வன்முறை போன்றவற்றையும் தமது கதைகளில் புலப்படுத்தியுள்ளார். சமூகத் தளங்களில் தலித் மக்களுக்கு எதிரான கொடுமைகள் இன்றும் நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கின்றன. அதை நேரடியாக எதிர்க்க முடியாத நிலையில் இருப்பதை பாப்லோ அறிவுக்குயிலின் சிறுகதைகள் உணர்த்துகின்றன.

# காலந்தோறும் இலக்கியங்களில் நிலவு

சு.முத்துக்கருப்பையா
இளநிலை ஆய்வாளர்
செந்தமிழ்க்கல்லூரி
மதுரை

## முன்னுரை

புலவர்கள் தம் கவிதைக்குப் பாடுபொருளாக அமைத்துக் கொள்ளும் பல்வேறு பொருள்களில் இயற்கைப் பொருளான நிலவு சிறப்பிடம் பெறுகின்றது. நிலவைப் பற்றிச் சங்ககாலம் முதற்கொண்டு தற்காலம் வரை கவிஞர்கள் அழகுப்பொருளாகவும் தாம் சொல்ல வந்த கருத்தை விளக்குவதற்காகவும் பயன்படுத்தி வருணித்துப் பாடியுள்ளார்கள். அதோடு மட்டுமின்றிக் காதலுணர்வின் பல நிலைகளை குறிப்பிட்ட நிலப்பகுதிகளுக்கும் பருவங்களுக்கும் நேரங்களுக்கும் வகுத்துள்ளனர். இம்மரபு பண்டைத் தமிழிலக்கியங்களில் அதிக அளவில் காணப்படுகிறது.

## நிலவும் புலவர்களும்

இயற்கையை வாழ்க்கையோடு ஒப்பிட்டுக் காட்டுவதில் சங்ககாலப் புலவர்கள் சிறந்து விளங்குகின்றனர். அன்றிலிருந்து இன்றுவரை புலவர்கள் காணும் பொருள்கள் ஒன்றாக இருந்தாலும் நோக்கும் போக்கு வேறாக அமைந்திருப்பதைக் காணலாம். அதிலும் தமிழ்ப் புலவர்கள் நிலவினைக் கண்டு மகிழ்ந்து கற்பனைச் சிறகு விரிந்து பறந்தனர்.

புறநானூற்றுப் புலவருக்கு உண்கலமாக வெண்ணிலவு காட்சிதருகின்றது. அகநானூற்றுப் புலவருக்குக் காதல் ஒழுக்கத்திற்கு இடையூறாகத் தோன்றுகிறது. ஆற்றுப்படை ஆசிரியரோ தேர்ச் சக்கரமாக நிலவினைப் பார்க்கிறார். மாதர் தம் முகத்தை மதிக்கு இணையாகக் கூறி மயங்குகிறார் பாரதியார். நீலவான் கடலில் செல்லும் கோலமிகு ஓடமாகக் காண்கிறார் கவிமணி.

## சங்க இலக்கியத்தில் நிலவு

அக்காலச் சமுதாயத்தினை அறிந்து கொள்ளவும், அறம், தத்துவம், முதலிய கருத்துக்களை நிலைநாட்டவும், சங்க காலப் புலவர்கள் நிலவினைக் கொண்டும், நிலவை உவமையாகக் கொண்டும் பாடல்கள் அமைத்துள்ளனர். மேலும் இவர்கள் சமுதாயக் கருத்துக்களுக்கு மட்டுமல்லாது இலக்கிய இன்பம் நுகர்வதற்கும் நிலவினை உவமையாகப் பயன்படுத்திப் பாடல்களைப் பாடியுள்ளனர்.

## காதலும் நிலவும்

மனித உணர்வுகளில் காதலும் ஒன்றாகும். சங்க இலக்கியங்களில் அகப்பாடல்கள் காதலை மையப்படுத்தி அமைகின்றன. காதலுக்கும் நிலவுக்கும் தொடர்பு இருப்பதால் புலவர்கள் தலைவன் தலைவி காதல் வாழ்க்கையில் நிலவினைப் பெரிதும் தம் பாடல்களில் இடம்பெறச் செய்துள்ளனர். தலைவியானவள் தான் விரும்பும் தலைவன் மேல் மிகுந்த

காதல் கொள்கிறாள். தலைவன் தொழில் காரணமாகவும் வேறு சில காரணங்களுக்காகவும் பரிய நேரிட்டால் தலைவி மிகுந்த வேதனையடைகிறாள்.

"திங்களும் திகழ்வான் ஏர்தரும்., இமிழ் நீர்ப்
பொங்கு திரைப் புணரியும் பாடு ஓவாதே.,
. . . . . . . . . . . . . . . . . .
காமம் பெரிதே களைஞரோ இவரே"[1]

எனும் நற்றிணைப் பாடல் வரிகளில், தலைவன் பிரிவதால் தலைவியின் காதலை மிகுதிப்படுத்தும் பொருட்களுள் ஒன்றாக நிலவு பேசப்படுகின்றது. திங்கள் எனும் நிலவை பார்க்கும் போது தலைவிக்கு காமமானது பெருகிக் கொண்டு செல்வதாகவும், அதைக் களைக்கின்றவர் யர் ஒருவரும் இல்லை என்று தலைவர் வருந்துகிறாள். இங்கு தலைவியின் காமத்தைப் பெருக்குவதற்கு நிலவும் ஒரு காரணமாக அமைகிறது.

நிலவும் போரும்

தமிழர்கள் காதலைப் போன்று வீரத்தையும் போற்றி வாழ்ந்து வந்தனர். சங்க காலத்தில் போரில் வெற்றி பெறுவதற்காக நல்லநாள் பார்த்துச் செல்வது உண்டு.

"உலவுத் தலை வந்த பெருநாளமயத்
திருசுடர் தம்முணோக்கி யொருசுடர்
புன் கண் மாலை மலைமறைந் தாங்குத்
தன் போல் வேந்தன் முன்புகுறித் தெறிந்த
புறப்புண்ணாணி மறத்தமை மன்னன்
வாள்வடக்கிருந்தன னீங்கு
நான்போற் கழியல ஞாயிற்றுப் பகவே"[2]

என்ற புறநானூற்றுப் பாடல் வரிகளில், முழுமதி நாளான பெருநாளில் ஞாயிறும் மதியமும் தம்முன் நோக்கிக் கொள்ள. அவற்றுள் ஒன்றாகிய ஞாயிறு புல்லிய பொழுதுடைய மாலைக் காலத்தில் மலையிடத்து மறைந்தது. அதுபோல சேரமான் பெருஞ்சேரலாதன் கரிகாற்பெருவளத்தானுடன் போரிடும் போது சேரமான் மார்பில் தைத்த வேல் முதுகில்ப்புண் உண்டானதால் வடக்கிருந்தார் என்ற செய்தி காணப்படுகிறது. இப்பாடலில் பௌர்ணமி வந்து கூடிய நாளில் போர் செய்ததாகக் கூறப்படுகிறது.

நீதி இலக்கியங்களில் நிலவு

நீதி இலக்கியங்களை திருக்குறள், நாலடியார் போன்ற நூல்களிலும் நிலவு பாடுபொருளாக அமைவதைக் காணமுடிகிறது. நிலவும் மனிதத் தூய்மைகளும், நீதி இலக்கியக்கால கட்ட பழக்கவழக்கங்கள், தத்துவ வாழ்க்கை, காதல் வாழ்க்கை போன்றவை நிலவு என்னும் பாடுபொருளுடன் தொடர்புபடுத்திக் காட்டப்படுகிறது.

"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு"[3]

என்பது திருக்குறள்.

"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நற்தும் - வரிசையால்
வானூர் மதியம் போல் வைகலுந் தேயுமே
தானே சிறியோர் தொடர்பு"[4]

என்கிறது நாலடியார். இவ்விரு பாடல்களிலும் நிலவானது நட்புக்கு உவமையாக வருகிறது. பெரியவர்களின் நட்பு வளர்பிறையாகவும், சிறியோரின் நட்பு தேய்பிறையாகவும் உவமிக்கப்படுகின்றன.

பக்தி இலக்கியங்களில் நிலவு

நிலவு பற்றிய புராணக்கதைகள் பக்தி இலக்கியங்களில் சிறப்பிடம் பெறுகின்றது. நிலவினை இறைவனின் தோற்றமாகவும், அணிகலனாகவும் வருணித்தனர். சிவபெருமான் தலையில் கங்கையுடனும் பிறையினையும் அணிந்துள்ளார். ரோகிணி முதலிய இருபத்தேழு நட்சத்திர மனைவிகளுக்கு கணவனாகவும் நிலவு அமைகின்றது. அத்திரி முனிவருக்கும் அநுகயைக்கும் பிறந்த மகனாகவும் புராணங்களில் கூறப்படுகின்றான்.

"வேயுறு தோளி பங்கன் விடம் உண்ட கண்டன்
மிக நல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிவேல் அணிந்து
என் உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்
வியாழன் வெள்ளி சனி பாம்பு இரண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே"[5]

என்ற வரிகளில் இறைவன் கங்கையுடனும் பிறையினையும் தலையில் அணிகலனாகச் சூடிய செய்தியும் சூரியன், செவ்வாய், புதன், வியாழன், சனி முதலானவற்றோடு நிலவு எனும் சந்திரனும் சேர்ந்து நவக்கிரகத் தெய்வங்களாக போற்றப்படுகிறது.

காப்பியங்களில் நிலவு

காப்பியங்களிலும் இயற்கைத் தரும் இன்பத்தைக் காணமுடிகிறது. காப்பியங்களில் இருசுடர் வர்ணனை முக்கிய இடத்தைப் பெறுகின்றது. காப்பியங்களில் நிலவு தூதுப் பொருளாகவும் பயன்பட்டு வருகின்றது. நோய்தந்து, நோய்கு மருந்து தரும் மடவார் போல காதலர்களுக்கு நிலவின் ஒளி அமைகின்றது.

"திங்களைப் போற்றதும் திங்களைப் போற்றதும்
கொங்கு அலர்தார்ச் சென்னி குளிர்வண் குடை போன்று
அங்கன் உலகு அளித்தலான்"[6]

என்று இளங்கோவடிகள் தனது காப்பியத்தின் தொடக்கத்தை இயற்கையை வாழ்த்தித் தொடங்குகிறார். இதன்மூலம் தமிழர் வாழ்வியலில் இயற்கை பெற்ற இடத்தைக் காட்டுகின்றார்.

"கலந்தவர்க்கு இனியது ஓர் கள்ளும் ஆய் பிரிந்து
உலர்ந்தவர்க்கு உயிர் சுடு விடமும் ஆய் உடன்

புலந்தவர்க்கு உதவி செய் புதிய தூதும் ஆய்
மலர்ந்தது நெடு நிலா மதனன் வேண்டவே"[7]

என்ற வரிசைகளில் பெரிய நிலவு காதலால் கூடியவர்க்கு இனிமைதரும் கள்ளைப் போலிருந்தது. பிரிந்து வருந்துபவர்க்கு உயிரை வருத்தும் நஞ்சு போலிருந்தது. கணவர் அருகே இருந்தும் கூடாமல் ஊடியவர்களுக்கு, ஊடலைப் போக்கும் புதிய தூது போலிருந்தது. இவ்வாறு விளங்குகிறது நிலவு என்று புலவர் கூறுகிறார்.

சிற்றிலக்கியங்களில் நிலவு

அம்புலியாம் வெண்ணிலவைத் தன் குழந்தைத் தலைவி அல்லது தலைவனுடன் விளையாட அழைப்பதாகப் பாடுவது பிள்ளைத்தமிழ் இலக்கிய மரபு. நிலவைக் காட்டிச் சிறுகுழந்தைகளுக்குச் சோறூட்டும் தாய்மார்களின் பழக்கம் இன்றும் காணப்படுகிறது. இப்பழக்கம் அன்றுமுதல் இன்றுவரை காணப்படுவவையாக அமைகிறது.

"அன்பர் என்புருக் கசிந்திடு பகந்தேனோடு
அம்புலி யாடவாவே
அணிப்பெண் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலியானவாவே"[8]

என்ற வரிகளில் மீனாட்சியம்மை குழந்தை பருவத்தைக் கூறி அம்புலியை குழந்தையுடன் விளையாட வருமாறு அழைக்கின்றார் குமரகுருபரர்.

முடிவுரை

இவ்வாறு மனித வாழ்வில் இயற்கை பெற்ற இடமும், இயற்கையுடன் புலவர்கள், கொண்ட தொடர்பும் விளக்கப்படுகிறது. எனவே சங்க காலத்திலிருந்து இன்று வரை நிலவ பாடுபொருளாக அமையும் பாங்கினை காணமுடிகிறது.

அடிக் குறிப்பு

1.நற.பா.எ.. 335, வரி 1-2, ப.619.
2.புறம், பா.எ., 65, வரி 1-5, ப.212.
3.திருக். பா.எ.1116, ப.234.
4.நாலடியார், பா.எ., 125, ப.56.
5.திருஞான சம்பந்தர் தேவாரம் -2, கோளறுபதிகம், பா,எ., 221.
6.சிலப்., மங்கலவாழ்த்து., வரி. 1-3, ப.14.
7.கம்பராமாயணம், 118:2 (பாலகாண்டம், உண்டாட்டுப் படலம்), ப.234
8.மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், பா.எ.69, ப.89.

# தத்துவ ஞானி பாரதியின் கடவுட் கொள்கை

சி.மகேஸ்வரி
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை ஆய்வு மையம்
அமெரிக்கன் கல்லூரி, மதுரை

முன்னுரை

"உய்வ தனைத்திலு மொன்றாய் - எங்கும்
ஓர்பொரு ளானது தெய்வம் - என்று

பாரதியின் கடவுட் கொள்கை பற்றிப் பேசியவர் மிகக்குறைவு. பாரதியின் தோத்திரப்பாடல்கள், தத்துவப்பாடல்களில் மட்டுமின்றி அவருடைய பிற பாடல்களிலும், வசன கவிதை உரைநடை எழுத்துக்களிலும் ஊடுருவி நிற்கும் கடவுட் கொள்கையைக் கண்டுணர்ந்து ஆராய்ந்தவர் மிகமிகக் குறைவு. பாரதியின் பரந்து நிற்கும் ஆளுமையில் அவரைத் "தத்துவ ஞானி" என்ற கோணத்தில் கண்டு அவருடைய கடவுட் கொள்கையை ஆராய்வது பெரும் முயற்சி.

அறிவே தெய்வம்

"அறிவே தெய்வம்" என்பது பாரதியின் தெய்வக் கொள்கைக்கு அடிப்படை கடவுளை அறிவின் விளக்கமாய்க் கண்ட சான்றோர், தம்மிடமுள்ள அறிவும் திறனைக் கொண்டு, முழு அறிவாய் விளங்கும் இறைவனை அறியும் முயற்சியில் ஈடுபட்டனர். அறிவை அறிவால் அறிதலாகிய இறைவழி பாட்டைக் கைக்கொண்டன.

"உயிர்க்கெலாம் தெய்வமன்றிப் பிறவொன்றில்லை
ஊர்வனவும் பறப்பனவும் நேரே தெய்வம்
பயிலும் உயிர் வகை மட்டுமின்றி இங்கு
பார்க்கின்ற பொழுதெல்லாம் தெய்வம் கண்டீர்"

என்ற அத்வைத அடிப்படையாக கொண்ட சர்வமத சமரசத்தை பாரதி தம் பாடல்களில் வலியுறுத்துவதைக் காணமுடிகிறது.

உண்மையே தெய்வம்

"உண்மையே தெய்வம்" என்று கூறும் பாரதி எல்லாச் சமயங்களும் மெய்ப் பொருளையே தெய்வமாக உருவகப்படுத்தி வழிபடுகின்றன என்று கருதுகிறார். கடவுள் வழிபாடு என்பது மெய்யுணரும் முயற்சி. இந்த உண்மையை இந்து சமயம் தவிர்த்த பிற சமயக் கோட்பாடுகளில் இருந்தும் அவர் எடுத்துக்காட்டுகிறார்.

"உண்மை என்ற சிலுவையிற் கட்டி
உணர்வை ஆணித்தவங்கொண்டடித்தால்
வண்மைப் பேருயிர் யேசு கிறிஸ்து
வான மேனியில் அங்கு விளங்கும்"[1]

என்பது விவிலியத்துக்கு அவர் கூறும் விளக்கமாகும்.

உண்மை, நாட்டம் என்னும் சிலுவையில் உணர்வைத் தவமுயற்சியாகிய ஆணியால் பிணித்து வைத்தால், பேருண்மையாகிய ஒளி புலனாகும் என்று ஏது தத்துவத்தை விளக்குகிறார் பாரதி. "ஓம்" என்றும் உண்மையின் முழுமையை உள்ளத்தில் நிறுத்தி உணர்ச்சிகளை ஒருமுகப்படுத்தி ஒளி காணும் வேத ரிஷிகளின் வழி. ஏசுவின் சிலுவைத் தத்துவத்திலிருந்து வேறுபட்டதன்று. எல்லாச் சமயங்களையும் ஒன்றாகக் காணும் பாரதி. "இஸ்லாம்" பற்றிச் சொல்வதும் இச் கருத்தையே வலியுறுத்துகிறது. முகமது நபிகளின் உபதேசம் ஒன்றைப் பற்றி பாரதி கூறும் பொழுது,

"நான் அல்லாவை நேரே பார்த்திருக்கிறேன். அவர் எல்லாவற்றையும் படைத்து, எல்லாவற்றையும் இயக்கிக் காத்து. எல்லாவற்றையும் வடிவு மாற்றிக் கொண்டிருக்கிறார். அவர் எல்லாவற்றையும் தம்முடைய உடம்புகளாகவும், தம்முடைய ஸ்வருபங்களாகவும் உடையவர். அறிவு வடிவமாக நிற்பவர். அருள் வடிவமாக நிற்பவர். அவரை மனமாகிய கோயிலிலே நிறுத்தி, வீரியம், பக்தி என்ற பூக்களால் அர்ச்சிப்பதே சரியான பூசை. இடைவிடாமல் அசையாமல் அவரிடம் மாறாத பக்தி செலுத்துங்கள். அவ்விதமான பக்தி, "இஸ்லாம்" எனப்படும். இந்த "இஸ்லாமைத் தரித்திருப்போர் வாடிக்கையாகிய முக்தி வாழ்க்கையை எய்துவார்கள்".[2]

எல்லாச் சமயங்களும் வெவ்வேறு வடிவங்களிலும், வெவ்வேறு முறைகளிலும் கடவுளை வழிபட்டபோதிலும் அவையெல்லாம், எல்லாமறிந்த, யாவும் எல்ல, எங்கும் நிறைந்த முழுமையை நாட்டமாகக் கொண்டவைதாம். எல்லாச் சமயங்களும் அடிப்படையாய் அமைந்த இறைவுணர்வை பாரதி தெளிவாகக் குறிப்பிடுகிறார்.

"உள்ளும் புறமுமாயுள்ள தெலாந் தானாகும்
வெள்ள மொன்றுண்டாமதனைத் தெய்வமென்பார் வேதியரே..
எங்குமுளான் யாவும் வலான் யாவுமறிவானெனவே
தங்குபலமதத்தோர் சாற்றுவது மிங்கிதையே"[3]

மனிதன் பெற விரும்பும் முழு நிலைக்கு ஒரு வடிவமே கடவுள் அவரவர் கற்பனைக்கு ஏற்ற வகையில் பற்பல வடிவங்களில், பற்பல பெயர்களில் கடவுள் என்னும் முழுமையை எண்ணிய எண்ணங்களின் விளைவே, பற்பல சமயங்களின் தோற்றத்துக்குக் காரணமாகும். எனவே. எல்லாச் சமயங்களும் கடவுள் என்று வழிபடுகின்ற முழு முதற்பொருள் ஒன்றே, என்னும் இக்கருத்தை,

"பூமியிலே கண்டமைந்து மதங்கள் கோடி
யாமறிந்த மதங்கள பல உளவாம் அன்றே
யாவினுக்கும் உட்புதைந்த கருத்திங் கொன்றே"[4]

என்று வலியுறுத்துகிறார்.

"பல மதத்தினர்
உருவகத்தாலே உணர்ந்துணராது
பலவகை யாகப் பரவிடும் பரம்பொருள்

ஒன்றே; அதனியல் ஒளியுறும் அறிவாம்"[5]

சமயங்கள் யாவிலும் பரவி இருக்கின்ற பரம்பொருள் ஒன்று., அதன் இயல்பு அறிவாகிய ஒளி. அறிவே புலன்கள் அனைத்திற்கும் ஒளி தருகிறது.

பல பெயர்களிட்டு நாம் அழைக்கும் தெய்வம், ஒரு பெயருமில்லாததோர் ஒண் பொருள்., பெயரின்றி எப்பொருளையும் மனத்தில் புரிந்து கொள்ளும் வழியறியாத நமது சிறுமையால், எண்ணற்ற பெயர்களிட்டே அதை உருவகப்படுத்தி உணர வேண்டியிருக்கிறது. ஆயின் அப்பெயர் இறைவனை உணருவதற்குரியதொரு வாயில்தான் என்பதை மறந்துவிடக்கூடாது என்று பாரதி விளக்குகிறார்.

வடிவத்தையும் பெயரையும் உண்மை என்று கருதி உட்கருத்தான ஒண்பொருளை இழந்து விடுவது பேதைமை என்று பாரதி பாடுகிறார். பல்வேறு சமயத்தினரும் தமக்குள் முரண்பட்டுத் தத்தம் சமயமும் கடவுளுமே முழுமையென்று மயங்குவது ஒரு புறமிருக்க, இந்து மதத்தார்களே, தமக்குள் வேறுபட்டுப் பல பிரிவுகளை வகுத்துக் கொண்டு அல்லற்படும் நிலையை பாரதி கடிந்து கூறுகிறார்.

"மூவகைப் பெயர் புனைந்தே - அவன்
முகமறியாதவர் சண்டைகள் செய்வார்
தேவர் குலத்தவன் என்றே - அவன்
செய்தி தெரியாதவர் சிலர் உரைப்பர்"[6]

இறைவனின் முழுமையை, முழு வடிவை விளக்கமொழி எதுவுமில்லை. சிற்றறிவின் நிலைகளைக் கடந்து பேரறிவு நிலையை மானிட அறிவு எய்தும் போது, அதில் துலங்குவது உண்மை. எனவே, அறிவே தெய்வமென்று கூற வந்த பாரதி உண்மையே தெய்வமென்று மேலும் விளக்குகிறார்.

# "கோவேறு கழுதைகள்" சித்தரிக்கும் தலித் சமூக மாற்றம்

மு.பாக்கியலட்சுமி
முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர் (தமிழ்)
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி
தன்னாட்சி
சிவகாசி.

## முன்னுரை

இமையம் எழுதிய "கோவேறு கழுதைகள்" என்ற புதினத்தில் சித்தரிக்கப்பட்டுள்ள நசுக்கப்பட்ட, வஞ்சிக்கப்பட்ட மக்களில் ஏற்படும் மாற்றங்களையும் அதற்கான காரணங்களையும் ஆராய்ந்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## மாற்றம் வரையறை

மாற்றம் என்பது நகர்வைக் குறிக்கும் சொல்லாக அறிஞர்கள் விளக்குவர். "மாற்றம்" பற்றி தமிழரசன் என்பவர் "ஒரு சமூகத்தின் வளர்ச்சிக்குத் தடைக்கற்களாக நிற்கும் பழைய கருத்துக்கள், மதிப்பீடுகள், வாழ்க்கைப் போக்குகள் அகியவற்றிலிருந்து புதிய ஒன்றினை நோக்கி நகர்ந்ததையே மாற்றம்"[1] என்று வரையறுத்துக் கூறுகிறார். இதன்வழி மேலாதிக்க சாதியினரால் ஒடுக்கப்பட்ட மக்களின் சமூகத்தினர்களிடையே நிகழ்ந்த மாற்றங்களுக்கு முதன்மைக் காரணமாகத் தொழில் முறை மாற்றம் உள்ளது.

## தொழில் மாற்றம்

தொழிற்புரட்சியின் காரணமாக கிராமத்தில் விவசாயத் தொழிலில் மாற்றம் ஏற்பட்டது. தொழில் நுட்ப வளர்ச்சியால் பம்புசெட், ட்ராக்டர் போன்ற புதிய கருவிகளின் வருகையால் தண்ணீர் இரைத்தல், உழுதல், புனையடித்தல் அகிய தொழில் முறையில் மாற்றம் ஏற்பட்டது. மேலும் விவசாயத்தில் தானியங்கள் பயிரிடுவது குறைந்து பணப் பயிர்களான தென்னை, தேக்கு, போன்ற மரங்களைப் பயிரிட்டனர். விவசாயத்தை மேற்கொண்ட மேல்தட்டு மக்கள் உழைக்கும் மக்களுக்குக் கொடுக்க வேண்டிய கூலியைக் குறைத்துக் கொடுக்களாயினர். இந்த உழைப்புச் சுரண்டலைத் தடுக்க தன் கூலியைப் பணமாகப் பெற தலித் மக்கள் முனைந்தனர். இக் கருத்தைச் சுட்டிக்காட்டும் வண்ணம் சகாயம் தன் மாமியாரான ஆரோக்கியத்திடம், "நாம்ப இதவுட்டுத்தான் தொலஞ்சா என்ன? இப்ப இதுக்கென்னவாம்? இது வேண்டாம் கூலியாய் பணம் கொடுக்கச் சொல்லலாம்"[2] என்றுரைக்கும் இடத்து நமக்குப் புலனாகிறது.

## இடம் பெயர்தல்

ஒருவன் தான் பிறந்து வாழ்ந்த ஊரில் உழைத்துப் பிழைக்க

வழியில்லா நிலையில் நகரம் நோக்கி அவர்களின் இடம் பெயர்வு அமைகிறது. இடம் பெயர்வு காரணமாக கிராமத்தில் வயதானவர்களும் பெண்களும் மட்டுமே இருப்பதாகவும் திருவிழா போன்ற முக்கிய நிகழ்வுகளுக்கு மட்டும் ஆண்கள் கிராமத்திற்கு வந்து செல்கின்றனர் என்பதை "இப்பொழுது சென்னை, பெங்களூர் என்று ஆண்கள் மட்டும் கிளம்பி விட்டனர். ஊரில் கிழடுகளும் சிறுவர்களும் பெண்களும் மட்டும் தான் இருக்கிறார்"[3] என்று ஆரோக்கியத்தின் கூற்றுவழி அறிய முடிகிறது. முந்தைய காலக்கட்டத்தில் நெல் அறுக்கவும், கம்பு அறுக்கவும், சிதம்பரம் பக்கம் சென்றதுண்டு என்றும் இப்பொழுது குடும்பத்தோடு நகரத்திற்கு இடம் பெயர்கின்றனர் என்பதையும் இப்புதினம் காட்டுகிறது.

குடும்ப அமைப்பு கெடல்

நம் சமுதாய நிறுவனத்தின் ஆணிவேராக என்றும் இருப்பது குடும்ப அமைப்பேயாகும். அம்மா, அப்பா, அண்ணன், தங்கை, அண்ணி, அத்தை போன்ற பல உறவுகளால் பிணைக்கப்பட்ட ஒரு அமைப்பாகும். இடம் பெயர்வின் காரணமாக இந்த உறவுகளுக்கிடையே பிரிவும், பிணைப்பும் அற்று அன்பிற்கு ஏங்கித் தவிக்கும் நிலையும் காண முடிகிறது. கோவேறு கழுதைகள் புதினத்தில் ஆரோக்கியத்தின் குடும்ப உறுப்பினர்களான பீட்டர் சென்னைக்கும், மூத்த மகன் ஜோசப் சின்ன சேலத்திற்கும் மகள் திருமணம் முடித்து கணவன் ஊருக்கும் சென்றுவிட்டதால் ஆரோக்கியம் தனிமையை உணர்கிறாள். ஆகையால் அன்புக்கும் பேச்சுத்துணைக்கும் ஆளில்லா நிலையை எண்ணி வருந்துவதை "கேப்பாரத்தப் போனேன். வா வாத்தக்கி ஆளில்லாமல் போனேன். துங்கி நிக்க நெய இல்லாம ஆயிட்டன்"[4] என்று ஆரோக்கியத்தின் முனங்கல் மூலம் புலப்படுத்துகிறார்.

சடங்கு முறையில் மாற்றம்

நாளுக்கு நாள் தொழில் மற்றும் பொருளாதாரம் வளர்ந்து வருகிறது. அதே போல் சில சடங்குகளும் சம்பிரதாயங்களும் புதிய வடிவு பெற்று பெருகிக் கொண்டுதான் உள்ளது. தலித் சமூகத்தினரிடையே சடங்குகள் அதிகமாகவே காணப்பட்டாலும் சமூகத்தின் இயந்திரத் தன்மையினால் சில சடங்குகள் காலப்போக்கில் மறைந்து விடுவதையும் காண முடிகிறது. "கோவேறு கழுதைகள்" புதினத்தில் ராமசாமி செய்யும் தன் தாயின் இறப்புச் சடங்கான "வய்யீ உடுதல்" என்ற சடங்கு முறையில் பங்காளி இரண்டு பேர் நின்று செய்ய வேண்டிய ஒன்று ஆனால் ராமசாமி காலம் கருதி சவுரியையே செய்து முடித்துவிடு என்று கட்டளையிடுவதை "வய்யீவுடும் போது ரண்ட ஆள் இருக்கணுமுங்க அங்கம் பங்காளியா இருக்கணும் அதாங்க மொற" "முண்டப்பயல, செத்தவளுக்குப் பங்காளியென்ன, பகையாளி என்னடா? காரியத்த முடி சீக்கிரம்"[5] என்று விரைவுப் படுத்துவதிலிருந்து கால வேகத்தின் காரணமாக சடங்கு முறையில் மாற்றம் ஏற்படுவதை விளங்கிக் கொள்ள முடிகிறது இறப்புச் சடங்கு, திருமணச் சடங்கு வயதுக்கு வந்த பெண்ணிற்குச் செய்யும் "திரட்டி" போன்ற சடங்கு முறையில் கூட மாற்றம் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது.

### கல்வி வளர்ச்சி

மேல்வர்க்க சமுதாயத்தினால் ஒடுக்குதலுக்கு உட்பட்ட மக்கள் தங்களின் உண்மை நிலையை உணர வேண்டும் என்று எண்ணிய அம்பேத்கார் முதலில் கல்வியைப் பெற வேண்டும் என்று வற்புறுத்துகிறார். கற்பி! ஒன்றுபடு! போராடு! என்பதே அவரின் மந்திரம். அதற்கேற்ப தலித் மக்கள் கல்வியின் அவசியத்தை உணர ஆரம்பித்துவிட்டனர்.

"இனியாவது பெயரைச் சேர்க்க வேண்டுமென்று சகாயம் சொன்னாள் ஓட்டில் பேர் சேர்ப்பவர்கள் சக்கிலியக்குடிப் பெயரியான் குடும்பத்தையும், ஆரோக்கியம் வீட்டையும் இதுவரை விட்டுப் போய்விட்டது"[6] என்ற செய்தியின் மூலம் தங்களுக்கும் ஓட்டுரிமை உண்டு என்பதையும் தம்முடைய உரிமை மறுக்கப்பட்டுள்ளது என்பதையும் அவர்களுக்குத் தெரிய வருவதை நமக்கு சுட்டிக் காட்டத் தவறவில்லை.

### தீண்டாமைத் தளர்வு

தொழில், கல்வி மற்றும் பொருளாதார வளர்ச்சியின் காரணமாக மேலத்தட்டு மக்கள் தீண்டாமை என்ற செயலில் சற்று தளர்வு ஏற்படுகின்றது. காரணம் கல்வி வளர்ச்சியின் காரணமாக தலித் மக்கள் தங்கள் உரிமைக்காக போரிட முனைந்தனர். வகுப்பில் ஒரே பெஞ்சில் அமர்தல், நட்பாக பழகுதல், போன்ற நிகழ்வுகளில் தீண்டாமைத் தளர்வு உள்ளது போல் இருந்தாலும் மனதில் என்றும் சாதிய ஊடுருவலின் கிளை இருந்துக் கொண்டே தான் இருப்பது போல் உள்ளது. "கோவேறு கழுதைகள்" புதினத்தில் சாதி வித்தியாசம் இல்லாமல் டீக்கெடுத்தல் தலைமுடி சீர்திருத்தல் போன்றவற்றைச் சான்றாகக் காட்டுகிறார்.

### முடிவுரை

கால மாறுபாட்டிற்கேற்ப மானிட சமூகத்திலும் வளர்ச்சி நிகழ்ந்த வண்ணம் தான் இருக்கிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் செங்கதிராய் எழுந்தது தலித்தியக்கம். அதன் காரணமாகக் கல்விப் பரவல், போக்குவரத்துப் பரவல், ஊடகப் பரவல், மார்க்சியத்தின் எழுச்சி, காலனியாதிக்கங்களின் எதிர் விளைவுகள் போன்றவற்றினால் தலித் மக்கள் வாழ்விலும், பரவலான மாற்றம் நிகழ்ந்தது. அம்மாற்றம் இன்னும் புலர் விடியலாகத் தான் இருக்கிறது என்பதை "கோவேறு கழுதைகள்" புதினத்தின் ஆசிரியர் சித்தரித்துக் காட்டுவதைக் காணலாம்.

### அடிக்குறிப்புகள்

1.பொதிகைத் தமிழரசன், தமிழர் சமூக நிலை, ப.1.
2.இமையம், கோவேறு கழுதைகள், ப.6.
3.மேலது., ப.179.
4.மேலது., ப.175.
5.மேலது., ப.15.
6.மேலது., ப.166.
7.மேலது., ப.180.

# சொப்பன பூமியில் பெண் சிக்கல்கள்

ம.பானு
முனைவர் பட்ட ஆய்வாளர்
ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி. மயிலம்.

பெண்களுக்கு எதிராகப் பாலியல் வன்முறைகளைக் கையாளுவது எந்த ஓர் இடத்தில் மட்டுமோ எந்த ஒரு கால கட்டத்தில் மட்டுமோ நடப்பதல்ல. இந்த அநீதியினால் சமூக ரீதியிலும் பாதிக்கப்படுபவள் பெண்தான்... வரலாற்று ஆவணங்கள் இருந்துள்ள காலந்தொட்டு இன்றுவரை பெண் சிசுக்களைக் கொல்வதற்கு ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு விதமான முறைகள் கையாளப்பட்டு வருகின்றன.

மானிட இன வளர்ச்சிக்குப் பெண்களின் பங்கு அளவிடற்கரிய ஒன்று. தொடக்க காலத்தில் அறிவாற்றல் பெற்ற பெண்டிரும் அவர்களது பணிகளும் அச்சமூகத்தில் மிகவும் போற்றப்பெற்று வந்துள்ளன. அதற்கும் பிற்பட்ட வரலாற்றுக் காலத்தில் பெண்களுக்கு எதிரான அச்சுறுத்தல்கள் மிகுதியாக தொடரலாயின.

புரட்சிகள் பல ஏற்பட்ட போதும் அதில் விஞ்சி நின்றவை ஆணின் இயற்கையான ஆதிக்கமும் அது தொடர்பான கருத்தியல்களுமே ஆகும். தற்போது நாட்டில் பெண்கள் பல துறைகளில் நுழைந்துள்ள போதும் அவர்களின் திறமைக்கேற்ற வாய்ப்புகள் அளிக்கப்படுவதில்லை. மேலும் கிராமப்புறங்களில் பெண்களால் நடத்தப்படும் சுயசார்புக் குழுக்கள் வேலைவாய்ப்பு, கல்வி, மருத்துவம் ஆகிய வசதிகள் செய்து தருகின்றன. இந்தக் குழுக்கள் நாடு முழுவதும் அமைக்கப்பட வேண்டும். கிராம மகளிர் சங்கங்கள் சரியான முறையில் இயக்கப்பட வேண்டும்.

புதிய சமுதாயத்தை உருவாக்குவதற்கும் பெண்களிடையே எழுத்தறியாமையை அறவே ஒழிக்க வேண்டும். பெண்கள் சுயமதிப்பும், பொருளாதாரம் சுயசார்பும் பெற்றுவிட்டால் மட்டுமே சமுதாயத்தில் முழுமையான மாற்றம் தோன்றும் 1840இல் இலண்டனில் உலக அடிமை ஒழிப்பு மாநாடு நடத்தப்பட்டது. அம்மாநாட்டில் பெண்களை உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளவில்லை. முதன் முதலில் இதைப் பெண்ணியவாதிகள் வன்மையாகக் கண்டித்து அறிக்கைகள் வெளியிட்டனர். "ஆண், பெண்- எல்லோரும் சமமாகவே படைக்கப்பட்டுள்ளனர்" என்ற கருத்து அவ்வறிக்கைகளில எடுத்துறைக்கப்பட்டது. பெண்கள் ஒடுக்கப்படுவதை முழுவதுமாக அழிப்பது என்பது அடிமைத்தனத்தை ஒழிப்பதைவிடக் கடினமானதாகும் என்றும் மற்றும் சில பெண்ணியவாதிகள் அப்போது கருத்துத் தெரிவித்தனர். 1848ல் அமெரிக்காவில் நியூயார்க்கில் உள்ள செனகா பால்ஸ் (Seheca Falls) என்ற இடத்தில் நடந்த மாநாடு உலகப் பெண்ணிய வரலாற்றில் ஒரு மைல் கல்லாகும். லுக்.கிரியாமாட் (Lucretiamott) எலிஸபெத், கேடின்ஸ்டான்டன் (Elizabeth, Cadystronton) என்ற இரு பெண்மணிகள் அம்மாநாட்டை நடத்தினர்.

மேலும் இங்கிலாந்தில் மேரி வோல்ஸ்டன் கிரஸ்ட் என்ற பெண் எழுதிய "பெண்ணுரிமைக் கொள்கை நிறுவீடு" (The Subjection of Women) என்ற நூலும் பெண்ணிய வளர்ச்சியில் பெரும் பங்கு வகித்தது.

இவ்வாறு பல சிந்தனையாளர்கள் பெண்ணியக் கருத்து சுதந்திரம் பேசினாலும் இன்னும் சமூகத்தில் பெண் என்பவள் நசுக்கப்படுகிறாள். ஏச்சுக்களைப் பெறுகிறாள். துன்பப்படுகிறாள். இனி எத்தனை எத்தனை பாரதியார், பாரதிதாசன் போன்ற கவிஞர்கள் பிறந்தாலும் பெண் அடிமை, பெண் சிக்கல்கள் தீருவதாக இல்லை. பெண்ணியச் சிந்தனையாளர் திலகவதி அவர்களின் நாவல்களில் ஒன்றாகிய சொப்பனபூமியில் புதுமை பெண் சிக்கல்களை மையப்படுத்தியதே. அது அச்சகத்தொழிலாளர் பற்றியது. அவருள்ளும் பெண்களே அதிகம்.

**உழைப்பாளரைத் துன்புறுத்துதல்:**

அச்சக உரிமையாளர், மேனேஜர் விநாயகம் ஆகியோர் அச்சகத்தில் பணிபுரியும் பெண்களை சொல்லாலும், செயலாலும் துன்புறுத்துகின்றனர்.

விநாயகம் அவன் சொன்னதை காதிலே போட்டுக் கொள்ளாமல் "நீயே ஒரு கேஸ். அதுக்குள்ள இன்னொரு கேஸ் தேடுற? வேலையைப் பாரு" என்று கேட்கச் சகிக்காத கெட்ட வார்த்தைகளை அள்ளி இறைத்தபடி "ஏய் நீ! வா! ஆபிஸ் ரூமுக்கு" என்றாள் மரகதவல்லியைப் பார்த்து (பக்.40) என்று வார்த்தைகளால் மரகதவள்ளியை துன்புறுத்துகின்றனர். ரூபாயை எண்ணி அவளிடம் கொடுக்கும் போது தேவையில்லாமல் அவள் கைகளில் விநாயகத்தின் கரங்கள் படிந்தன மேரியின் மனதுக்குள்ளே அருவருப்பும், கோபமும் பொங்கின. "கிழட்டு பயலே சரியான முறையில் ஒரு நாளைக்கு உனக்கு பாடம் புகட்டுகிறேன் (பக்.64) இவ்வாறு முதலாளி வர்க்கம், சொல்லும் செயலும் துன்புறுத்துவதைக் காணமுடிகிறது.

**பெண்களின் வேலை:**

அச்சகப் பெண்களுக்ககு வீட்டு விலக்கு நேரங்களிலும் நின்று கொண்டே பணிபுரியும் கட்டாயத்தில் இருக்கிறார்கள். மாலை ஏழரை மணிக்கு பிரஸ்ஸில் இருந்து புறப்படும் போது கலாவுக்கு மனது சரியாக இல்லை. வழக்கத்தைவிட அதிகச் சோர்வாக இருந்ததுகூட அந்தத்தினங்களில் விலக்கி உட்காரவைத்து ஒரு வகை நன்மை கருதியே என்றுபட்டது. நின்றபடியே செய்கின்ற வேலை கால் உளைச்சலை அதிகப்படுத்தியது. வீட்டு விலக்கு நேரங்களில் பெண்களுக்கு அதிகமாகக் கோபம் வரும் என்பது இயல்பானதே. எரிச்சல் மண்டியது ராதாவும், பானுமதியும் தங்களுக்குள் ஏதோ பேசி கிசுகிசுத்துச் சிரித்தார்கள். இவ்வாறு உடல்ரீதியான பிரச்சனைகளில் பெண்கள் அலுவல் செய்கின்றனர்.

**பெண்களின் வேலைச்சுமை:**

குறைந்த சம்பளம் என்றாலும் வேலையை சரியாக செய்பவர்கள் பெண்கள். ஆகையால் பெண்களையே வேலைக்கு அமர்த்துகிறார்கள்.

"எவ்வளவு வேலை இருக்கு! இந்த நேரத்துல போயி சனியன் ஆஸ்பத்திரிலே இருக்கு வேறயாராவது பொம்பளைங்க நல்லா கம்போஸிங் பண்ணத் தெரிஞ்சவங்களா கிடைச்சா தேவலாம்" என மேனேஜர் புலம்புதல் (பக்.63) உடல் ரீதியான பிரச்சினைகளை புரிந்துகொள்ளாமல், தன் தேவைக்கு பயன்படும் ஒரு பொருளாகவே கருதுகிற தன்மையை காணமுடிகிறது.

பெண்களின் ஆற்றலும் நிர்வாகத் திறமையும்

பெண்களின் மிகுந்த ஆற்றலும் தன்னம்பிக்கையுடனும் நிர்வாகத் திறமையும் உடையவர்களாக இருக்கின்றனர்.

மேனேஜர் கலாவைப் பார்த்து "இந்த பிரஸ்ஸிலேயே எல்லா வேலையும் தெரிஞ்ச பொண்ணு இவதான்" எப்படின்னாலும் பிரிண்டிங் டெக்னாலஜி படிச்சவன்னா அப்படித்தான் இருப்பா (பக்.81) என மேனேஜர் வாய்விட்டு புகழும்படி இருந்தது கலாவின் வேலைதிறமை.

பெண்களின் தன்னம்பிக்கைத் திறன்

வாழ்க்கையில் எதிர்நீச்சல் போட்டாலும் அந்த எதிர்நீச்சலில் முக்கியமானது தன்னம்பிக்கை இப்புதினத்தில் தன்னம்பிக்கையின் சுவடுகளைப் பார்க்கும் போது கமலாவும், கலாவும் ஒன்றாக ஒரே அச்சகத்தில் வேலை பார்த்தவர்கள். கமலா ஒரு அதிசயமான பெண். எவ்வளவு பெரிய சிக்கலான பிரச்சனைகளையும் சரியான முறையில் தீர்வு காணும் மனப்போக்கு உடையவள். கலா! நம்மாளே தீர்க்க முடியாத சிக்கலோ, கஷ்டமோ உலகத்துல எதுவுமே இல்லை. எந்த கஷ்டத்தோட கனத்திலேயும் அழுத்திலேயும் நொறுங்கிப் போயிடக்கூடாது. மனத்தில் துணிச்சலும், நேர்மையும் மட்டும் இருந்தால் எல்லாப் பிரச்சனைக்கும் தீர்வு கண்டு விடலாம். என கமலாவின் துணிச்சலான பேச்சு கலாவின் மனதிற்கு அடிக்கடி ஒரு தெம்பை ஊட்டிவிடும்.

ஆணாதிக்கப் போக்கு

பெண்கள் எவ்வளவுதான் உழைத்து ஓடாய் தேய்த்தாலும் அவளுக்கு சமூகத்தில் இரண்டாமிடம்தான் கிடைக்கிறது. ஊதாரித்தனமாய் ஊர்சுற்றும் ஆணுக்கு முன்னுரிமைக் கிடைக்கிறது.

மகன் குடிகாரனாகவும், சம்பாதிக்க துப்பற்றவனாகவும், இருந்தாலும் கை நெறைய சம்பாதிக்கிற மருமகள்களை கொண்டு வந்து சந்தோஷம் போக, அவள் மற்றவர்களால் வெறுக்கப்படுகிறாள். ஊதாரியாய் சோம்பேறியாய் ஊர் சுற்றும் தம்பி ஆதரிக்கப்படுகிறான். இதை தட்டிக்கேட்கும் பெண்ணிடம், அதே பெண் இனத்தை சேர்ந்த கற்பகம் ஆத்திரத்தோடு "என்னத்துக்கு சாபம் உடுற" ஆம்பிள பிள்ளனா ஆயிரம் பண்ணும், இந்த வயசுல இப்படித்தான் இருப்பான். நீ, பொட்டச்சியா இலட்சணமாய் பேசுடி! அம்மா ஒவென்று கத்தி இலக்கணம் பாடினாள். தோலுக்கு மிஞ்சினா தோழன். ஜான்பிள்ளை ஆனாலும் ஆண்பிள்ளை அதிலும் ரோஷக்காரன். அளந்து பேசுடி என்றால் தாய் கற்பகம் (பக்.159) இவ்வாறு திலகவதியின் நாவலில் சொப்பன பூமியில் பெரும்பாலும்

கட்டமைப்பில் பெண் எழுத்தாளர்கள் படைத்தளிக்கும் நிகழ்ச்சிகளும் பொருட்கூறுகளும் சூழ்நிலைக்கேற்ப கதைகருவிற்கு வலிமை சேர்த்தன. பெரும்பாலும் நடைமுறை நிகழ்ச்சிகளை கருவாகக் கொள்ளும் போக்கு கடைபிடிக்கப்பட்டுள்ளது.

முடிவுரை

அச்சகத் தொழிலில் மகளிர் சிக்கல்கள் இங்கு தெளிவாக படைப்பில் பதிவு செய்யப்பட்டுள்ளது அதே புதினத்தில் அச்சிக்கல்களிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ளவேண்டிய விதிமுறைகளும் மிக அழகாக சித்தரித்து தரப்பட்டுள்ளது.

அடிக்குறிப்புகள்:

1.பெண்படைப்பாளர்கள் - முனைவர். சா.வளவன்.
2.கவிஞர் வைரமுத்து கவிதைகளில் பெண்ணியம் - அந்தோணி அலெக்ஸாண்டர்
3.புவியரசுவின் புல்லாங்குழலில் பெண்ணியச் சிந்தனைகள் - சு.அழகிய நம்பி
4.கவிஞர் வைரமுத்துவின் இன்னொரு தேசிய கீதத்தில் பெண்கள் நிலை - தா.க. அனுராதா.
5.மாய எதார்த்தவாதத்தில் பெண்ணியம் - நா. அனுராதா
6.Feminism in the Modern Short Stories - S.Andal
7.கனாக்காலம் படைப்புவழி பெண்ணியப் புரிதல்கள் - க.உமாமகேஸ்வரி
8.இந்தியப் பெண்ணியம் ஒரு வரலாற்று கண்ணோட்டம் - க.கல்யாணசுந்தரி
9.உலக வரலாற்றில் பெண்கள் - தமிழாக்கம் வி.இராதாக்கிருஷ்ணன்.
10.கதாநாயகி புதினத்தில் பெண்ணியச் சிந்தனைகள் -கோ.கணபதி.

# "உப்பு வயல்" - நாவல் உணர்த்தும் உப்பளத் தொழிலாளர் வாழ்வியல்

த.இருளப்பன்
பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்
அய்யநாடார் ஜானகிஅம்மாள் கல்லூரி
சிவகாசி.

ஸ்ரீதர கணேசன் அவர்கள் எழுதிய "உப்பு வயல்" என்னும் நாவலில் காணப்படும் உப்பளத் தொழிலாளர்களின் வாழ்வியலை ஆய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

## உப்பளத் தொழிலாளர் வாழ்வியல்

நாவலாசிரியர் தூத்துக்குடிக்காரராக இருப்பதால் தூத்துக்குடி வட்டார உப்பளத் தொழிலாளர் வாழ்வியலைத் தெளிவாகத் தம் "உப்பு வயல்" நாவலில் எடுத்துரைத்து உள்ளார்.

உப்பளத் தொழிலாளர்கள் காலை எட்டு மணிக்கெல்லாம் வேலைக்குச் சென்று விடுகிறார்கள். அந்தி சாயும் வரை பாத்தி மிதித்தல், உப்பு வாருதல், உப்புப் பெட்டி சுமத்தல் ஆகிய வேலைகளைச் செய்கின்றனர். மழைக்காலங்களில் அம்மக்கள் படும் சிரமத்தை "மழைக்காலம் வந்துட்டா, அவுங்க படுகிற கஷ்டத்தைப் பார்க்க பொறுக்காது. சொல்லமுடியாது. அடுப்புல உலைப் பானை ஏறாது. மூணு நாளு நாலு நாளு என்று பொங்காமல் கிடப்பார்கள். ஒட்டோ ஒட்டு என்று வயிறு ஒட்டிப்போகும்" (ப.9) என்று கூறுவதிலிருந்து அவர்களின் அவலநிலையை அறிய முடிகிறது.

மேலும் "விடாதே விடாதே என்று வேணா வெயில்லே ஓடி ஓடி உப்புப் பெட்டி சுமந்தால் பிட்டி எலும்பு உடைஞ்சு போன மாதிரி வலிக்கும்.. சோர்ந்து போய் வீடு திரும்பும் போது 10 ரூபாய் காசு கிடைக்கும் (ப.10) என்பது அவர்களுக்கு உழைப்புக்கேற்ற ஊதியம் கிடைக்காத யதார்த்த நிலையைக் காட்டுகிறது.

## உணவு

உணவு, உடை, உறைவிடம் ஆகிய மூன்றும் மனிதனுக்குரிய அடிப்படைத் தேவைகளாகும். அவற்றுள் மனிதன் உயிர் வாழ்வதற்கு உணவு மிகவும் இன்றியமையாததாகும். உப்பளத் தொழிலாளர்கள் சோறு, கஞ்சித் தண்ணி, பழைய சோறு ஆகியவற்றைச் சாப்பிட்டனர். மிளகாய் தொவையல் ஆகியவற்றைக் கஞ்சிக்குத் தொட்டுக்கப் பயன்படுத்தினர். மேலும் தங்கள் வாழ்வியலோடு தொடர்புடைய கருவாடு, மீன் ஆகியவற்றை உணவில் சேர்த்து வந்தனர். "மத்தியான சாப்பாட்டுக்கு மேல் கொஞ்சம் தெம்பாக இருந்தது. மிளகாயையும் தொவையலையும் தொட்டு கஞ்சியை குடித்தோம்" (ப.19) என்பதிலிருந்து மதிய உணவு முறை அறியப்படுகிறது.

கஞ்சித் தண்ணியையும் அவர்கள் உணவாகக் கொள்கின்றனர்.

இதனை, "அம்மா வருவதற்குள் உலை கொதித்து விட்டது. ஏம்மா, வடி தண்ணி வேணுமா? என்று கேட்டேன். ஊத்திக் கொடு என்றாள். குண்டாள அலுமிய சட்டியில் கஞ்சித் தண்ணியை கொதிக்க கொதிக்க ஊத்தி ரெண்டு உப்புக்கல் போட்டுக் கொடுத்தேன் கண்ணாப்பையை வைத்து ஆத்தி ஆத்திக் குடித்தாள்" (ப.45) என்று ஆசிரியர் கூறியுள்ளார்.

"இன்று ஞாயிற்றுக்கிழமை சமையல் முடிப்பதற்குள் பதினொரு மணியைத் தாண்டி விட்டது. சாப்பிடும் போது நாளைக்கு எப்படியிருக்கும் என்று நினைத்துக் கொண்டே சாப்பிட்டேன். சுடச்சுட நெல்சோறு, வாளை மீன் குழம்பு நாவுக்கு ரொம்ப ரொம்ப சுவையாக இருந்தது" (ப.47) என்பதிலிருந்து ஞாயிற்றுக் கிழமைகளில் மட்டுமே அவர்கள் சுவையான உணவுகளைச் சமைத்துச் சாப்பிடுகின்றனர் என்பதை நாவல் உணர்த்துகிறது.

உடை

நாகரிகம் தோன்றிய காலத்திலிருந்து உடைகளுக்கும் அணிகலன்களுக்கும் மதிப்பும், மரியாதையும் காணப்படுகின்றது. இந்நாவலில் ஆசிரியர் உப்பளத் தொழிலாளர்களின் உடைகளைப் பல இடங்களில் எடுத்துக் காட்டுகிறார்.

பழக்க வழக்கம்

"நாகரிக வளர்ச்சி பெற்ற மக்களிடையே எச்சங்களாக நிலவுவன பழக்க வழக்கங்களாகும். பழக்க வழக்கங்கள் பண்பாட்டு வளர்ச்சியின் படிக்கற்கள்"[1] என்பர். வேலைக்குச் சென்று வரும்போது சந்தைக்குச் சென்று தேவையான பொருள்களை வாங்கி வருவது உப்பளத் தொழிலாளர்களின் வழக்கமாகும். இதனை "அளத்தில் இருந்து வரும் போதே மார்க்கெட்டுக்குப் போய் சாமான்கள் வாங்கி வந்து... இரவு எட்டு, ஒன்பது மணி வரை வேலை, வேலை, ஓயாத வேலை. அம்மாவோடு என்னை ஒப்பிடும்போது எனக்கு வெக்கமாக இருந்தது" (ப.1) என்பதன் மூலம் அறியலாம்.

அதனைக் "காலையில் இருந்து சாயங்காலம் வரைக்கும் உப்புப்பெட்டி சுமக்கணும். இதற்குள் நூறு தடவையாவது கங்காணி ஏச்சையும் பேச்சையும் கேட்டாகணும்" (ப.8.) என்ற வரிகளும், நோட்டு எழுதுவான் கங்காணி. ஓடிப்போய் மனுஸ்டாம்பு வாங்கிக்கொண்டு வருவாள். சாட்சி கையெழுத்துக்கு ஓராளை தேடணும். முதலாளி, கங்காணி கையில்ல ஐன்னூறு ரூபாய் கொடுத்தால் அதுல அதுக்கு இதுக்கு என்று அம்பது ரூபாய், நூறு ரூபாய் என்று பிடித்துக் கொண்டு, மீதி பணத்தை கையில் கொடுப்பான்" (ப.9-10) என்று ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார். இது அம்மக்களின் அவல நிலையினை வெளிக்காட்டுகிறது.

அளத்திற்கு வேலைக்குச் செல்லும் தொழிலாளர்கள் மத்தியான சாப்பாட்டு நேரத்தில் சாப்பிட்டு முடிந்தவுடன் ஏதாவது கதைகளைப் பேசி மகிழ்வது வழக்கமாகும். இதனை "உடமரத்து நிழலில் கால்களை நீட்டி,

வெற்றிலை போட்டுக் கொண்டார்கள். கதைகளைப் பேசினோம். அந்த ஒன்றரை மணி நேரம் போன போக்கு தெரியவில்லை", (ப.99) என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

அளத்திற்கு வேலைக்குச் செல்லும் பெண்களைக் கங்காணி மடக்குவதும், இல்லையென்றால் முதலாளி மடக்குவதும் வழக்கமாகக் கொண்டுள்ளனர். இதனால் பெண்கள் படும் பாடு பெரும்பாடாகும். இதனை பொதுவாக அளத்து நிலைமையே இப்படித்தான். ஒன்று கங்காணி மடக்குவான். இல்லை என்றால் முதலாளி மடக்கிக் கெடுப்பான். இதை எல்லாம் விட சில பொம்பளைகள் கொஞ்சம் பல்லை காட்டினாலும் தானாகவே போய்விடுவார்கள். எங்களை மாதிரி பெண்கள் பாடு படுமோசம். மான ரோசத்தோடு அடி கொடுத்துக்விட்டு. வெளியில் திரிகிறது. பிரச்சினைகளை தாங்க வேண்டியது இருக்கிறது" (ப.64-69) என்று பெண் தொழிலாளர்களின் மோசமான வாழ்க்கை நிலையினை ஆசிரியர் கூறுகிறார்.

நம்பிக்கைகள்

நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டு, அம்மக்கள் காலம் காலமாக ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினர்க்குப் பரவி வருகிறது"[2] நம்பிக்கைகள் பொதுவாக இரு வகைப்படும். ஒன்று தன்னம்பிக்கை மற்றொன்று நம்பிக்கை ஆகும். நாவலாசிரியர் உப்பளத் தொழிலாளர்களின் தன்னம்பிக்கைகளைக் குறிப்பிடுகிறார்.

"கொட்டங்காட்டில் இருந்து சடையன் மாமா வரும்போது நான் விபரத்தைச் சொன்னேன். உடனே மாமா தான் உடங்குடிக்குக் கூட்டிக் கொண்டு போனார். ஹாஸ்டலில் அவன் மார்க்கைப் பார்த்ததும் எடுத்துக் கொண்டார்கள். அவன் ஒரு மாதிரி முன்னுக்கு வந்து விடுவான் என்ற நம்பிக்கை" (ப.2) என்ற வரிகளும்,

உப்பளத் தொழிலாளர்கள் தங்களின் வருமானத்திற்கு ஏற்றவாறு தங்களது உணவு வகைகளைச் சமைத்து உண்கின்றனர். வாரத்தில் ஞாயிற்றுக் கிழமைகளில் மட்டும் சுவையான உணவுகளைச் சமைத்து உண்கின்றனர். உடைகளும் எளிமையான உடைகளையே பயன்படுத்துகின்றனர். மண்குடிசைகளை இம்மக்கள் உறைவிடமாகப் பயன்படுத்துகின்றனர். முதலாளிக்கு அடிமைப்பட்டு, உழைத்து வந்தாலும், தன்னம்பிக்கை கொண்டவர்களாக வாழ்ந்து வருகின்றனர். இவ்வாறு உப்பளத் தொழிலாளர்களின் வாழ்வியல் நிலையினை உப்பு வயல் நாவல் சிறப்பாகப் படம் பிடித்துக் காட்டுகிறது எனலாம்.

அடிக்குறிப்புகள்

1.சக்திவேல் சு.நாட்டுப்புறஇயல் ஆய்வு, ப.7.

2.மேலது, ப.153.

பயன்பட்ட நூல்கள்

1.ஸ்ரீதர கணேசன் - உப்பு வயல், நியூ செஞ்சுரி புக் "வுஸ் (பி) லிட்., சென்னை - 1995.

2.சக்திவேல். சு.நாட்டுப்புற இயல் ஆய்வு மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1983.

# சில பாதைகள் சில பயணங்கள் நாவலில் சாதியும் சமுதாயமும்

செ.உமாதேவி
விரிவுரையாளர்.
தமிழ்த்துறை
வே.வ வன்னியப் பெருமாள்
பெண்கள் கல்லூரி, விருதுநகர்.

முன்னுரை

சமுதாயம் என்பது பல்வேறு காரணங்களால் பிளவுபட்டு இருப்பதில் சாதியும் ஒரு முக்கிய காரணமாகும். தொழில் அடிப்படையில் உருவாக்கப்பட்ட சாதிப்பிரிவுகள் காலப்போக்கில் சமுதாயத்தில் பெரும் ஏற்றத்தாழ்வுகளை ஏற்படுத்தி விட்டன. அது ஆலமரமாகிய நம் சமுதாயத்தின் ஒற்றுமை, தேசபக்தி, பண்பாடு. மனிதாபிமானம், கடமையுணர்வு என்று பலவாறாகப் பிரிந்து வளர்ந்துள்ள வேர்களை அசைத்து நம்மை நிலைகுலையச் செய்துள்ளது. சமுதாயத்தின் முன்னேற்றத்தினை அது அதிக அளவு தடைப்படுத்துகிறது என்று கூறலாம். ஆசிரியர் சுப்ரா அவர்கள் (சுப்புலட்சுமி, நடராஜன் - தம்பதியர்) தமது சில பாதைகள் சில பயணங்கள் நாவலில் இருவேறு சாதியில் திருமணம் செய்து கொண்ட தம்பதியரும் அவர்களுக்குப் பிறக்கும் குழந்தையும் இந்தச் சமுதாயத்தில் படும் துன்பங்களைத் தம் நாவலில் எடுத்துக் காட்டியுள்ளார்.

விஞ்ஞான அறிவும், வசதிகளும் பெருகிய இக்காலத்திலும் கிராமப்புறங்களில் ஒவ்வொரு சாதியினர் வாழும் பகுதியும் தனித்தனியாகவே உள்ளது. கிராமத்திற்குக் கட்டுப்பாடுகள் இருப்பதைப் போல சாதிகளுக்கும் கட்டுப்பாடுகள் உள்ளன. ஒருவர் தமது சாதிக் கட்டுப்பாட்டையோ, ஊர்க்கட்டுப்பாட்டையோ மீறும் போது அவர் அச்சாதியிலிருந்து ஒதுக்கி வைக்கும் நிலையே இன்றும் உள்ளது. இதை சின்னத்தேவரின் காதல் திருமணம் மூலம் ஆசிரியர் விளக்குகிறார்.

இரத்தினத் தேவரின் தம்பி சின்னத்தேவர் வேறு சாதியில் திருமணம் செய்து கொண்டதால், வீட்டாராலும், ஊராராலும் ஒதுக்கி வைக்கப்படுகிறார். மகன் ஒளியினைத் தன் மனைவி பெற்றெடுக்கும் போது இறந்து விடுகிறாள். பிள்ளையை வளர்க்க இயலாமல் தவிக்கும் சின்னத்தேவர் தன் அண்ணன் இரத்தினத்தேவரிடம் சொத்தில் பங்கு கேட்டு நிலத்தைப் பிரிக்கச் சொல்கிறார். தம்பியின் இத்தகைய மூன்று நடவடிக்கைகளினாலும் இரத்தினத்தேவர் கோபம் கொண்டு கிட்ணசாமி என்பவர் மூலம் தம்பி சின்னத்தேவரை வெட்டிச் சாய்க்கிறார்.

ஒளியால் தன் தாயைப் போட்டோவில் கூட காண முடியவில்லை. அவனுடைய பிறப்பிற்குப் பின் உறவினரும், குடும்பத்தாரும் விலகுகிறார்கள். ஒளியின் தந்தையும், அவனை விட்டு விலகிச் செல்கிறார். அதனால் அவன் "அநாதை" என்ற சொல்லின் பொருளை உணர்கிறான். கோடிக்கணக்கான

மக்கள் உள்ள இவ்வுலகத்தில் இம்மண்ணுக்கும், வானுக்கும் இடையில் தான் மட்டும் தனித்து நிற்பதாக உணர்கிறான். இத்தகைய உணர்வு குழந்தைப் பருவத்திலிருந்தே அவனை வேதனைப்படுத்தத் தொடங்கி விடுகிறது.

இருவேறுபட்ட சாதியினருக்குப் பிறந்த ஒரே காரணத்தால் ஒளி இரு சாதியினராலும் ஒதுக்கப்பட்டு "அநாதை" என்ற உணர்வில் வாழ்கிறான். அவனால் எந்தச் செயலிலும் முழுமையாக ஈடுபட முடியவில்லை. தன்னைப் பெற்ற தாய் வீட்டினரிடையே உறவை ஏற்படுத்த முடியாத நிலையில் இருக்கிறான். பெரியம்மா குடும்பத்தில் இருந்து (இரத்தினத்தேவர் வீட்டில்) பெரியம்மாவின் அரவணைப்பில் வளர்ந்து வருகிறான். அவன் மனவேதனைக்கு பெரியம்மாவின் மகன் குரிசில் மருந்தாகத் தோன்றுகிறான்.

"இந்தப் பரந்த உலகில் கால்பதிக்க இடமின்றி.... புறந்தள்ளப்பட்டு ஊசலாடும் சமூக அந்தஸ்து, வெடிப்பு விழுந்த வறண்ட நிலத்தில் விழும் மழைத்துளியைப் போல குரிசில் என்ற மழையின் ஒவ்வொரு துளியையும் வெறியுடன் உள்வாங்கிக்கொண்டார். முகமற்றவர்களுக்குக் கிடைத்த அந்தச் சின்னஞ்சிறு முகத்தை, தாயின் வாஞ்சையோடு தன்னுடன் இறுக்கி அணைத்துக் கொண்டார்" (ப.30) என்பது தனிமைப்படுத்தப்பட்ட ஒளியின் நிலையினை உணர்த்துகிறது.

இருவேறு சாதியினருக்கு இடையில் தோன்றிய குழந்தைகள் நல்ல பண்புள்ள குழந்தைகளாக இருந்தாலும் இந்தச் சமுதாயம் அவர்கள் பிறந்த தன்மையை மறப்பதில்லை. "ஆனாலும் அவனது அடையாளச் சின்னங்கள் அழிந்து விடவில்லை. பதினெட்டு வயதான பின்னரும் பறச்சி மவென்" என்ற பட்டமும் "அநாதைப்பய" என்ற அடைமொழியும் பின் தொடர்ந்தன" என்பதால் அத்தகைய குழந்தைகளுக்குச் சமுதாயத்தில் உள்ள நிலையினை உணர முடிகின்றது.

தந்தையைக் கொன்ற போது ஏற்பட்ட கலவரத்திலிருந்து தப்பித்து குரிசிலும் ஒளியும் 27 நாட்கள் காட்டில் வாழ்கின்றனர். அங்கு குரிசிலுக்கு ஏற்படும் பலவிதமான சந்தேகங்களை நீக்குகிறான். ஒரு முறை குரிசில் ஒளியிடம் வாழ்க்கையைப் பற்றிய விளக்கம் கேட்ட போது "இந்த மண்ணுல பொறந்த ஒவ்வொரு ஜீவனும் வாழத்தான் வேணும். வாழறத்துக்காகப் பிள்ளை குட்டின்னு தழைக்க வைக்கணும். எல்லோரும் உன்னை மாதிரி பேச ஆரம்பிச்சா .... நாளைக்கு ஏது உலகம்?" (ப.23) என்று ஒளி வினா எழுப்புவதன் மூலம் குரிசிலின் வினாவிற்கு விடையளிக்கிறான். இது ஒளிக்கு வாழ்வு மேலுள்ள பிடிப்பையும் தாகத்தையும் புலப்படுத்துகிறது.

ஒளி, பெரியம்மாவின் உதவியால் பத்தாம் வகுப்பு வரை படித்து முடிக்கிறான். வகுப்பில் முதல் மாணவனாகத் திகழும் அவனுக்கு உயர்கல்வி கற்க ஆசை தோன்றுகிறது. ஆனால் படிப்பதற்கு அவனுக்கு வாய்ப்பு இல்லை. வருங்காலத்தில் ஏதோ சாதிக்க நினைத்த அவன் சூழ்நிலையின் காரணமாக உப்பளத்திற்கும், புகையிலைக் கம்பெனிக்கும் சோற்றுப் பாத்திரத்தைக் கையிலெடுத்துக் கொண்டு வேலைக்குச் செல்கிறான். தனக்குக்

கிடைக்காத உயர்கல்வி குரிசிலுக்குக் கிடைக்க வேண்டுமென்று எண்ணுகிறான். அதனால் தான் பெறும் தினக்கூலியில் வீட்டுக்குக் கொடுத்தது போக மிச்சத்தில் தம்பியின் படிப்பிற்காகச் செலவழிக்கிறான்.

குரிசில் கிராமத்தில் வாழப்பிடிக்காமல் நகரத்திற்குச் செல்கிறான். ஆனால் ஒளி தான் விரட்டப்பட்டு ஓடி ஒழிந்த அதே கிராமத்தில், அந்த மக்களுடனேயே வாழ வேண்டும் என்று எண்ணி ஆசிரியராகப் பணியாற்றிக் கொண்டே அக்கிராமத்து மக்களுடன் பழகுகிறான். அது குரிசிலுக்கே வியப்பைத் தருகிறது.

ஒளி கிராம மக்களிடம் பணம் வாங்காமல் அவர்களுக்கு சோசியம், சாதகம். மனையடி சாஸ்திரம், மருத்துவம் என்று பலவற்றிற்கும் கருத்தினைக் கூறுகிறான். வீடு கட்ட நாளும் இடமும் பார்த்தல், கல்யாணம் செய்ய நாள் குறித்தல், புதுக்கணக்கு தொடங்கும் நாள். வீட்டிற்கும் வாசல் வைக்கும் திசையைக் கூறுதல் இவற்றிற்கெல்லாம் சோசியம் பார்க்காமலேயே பதில் கூறுகிறான். ஒளிக்கு சோசியமோ, சாதகமோ முறைப்படி பார்த்துக் கூறத் தெரியாது இருந்தாலும் இதற்கெல்லாம் மூளை இருந்தால் போதும் என்பது ஒளியினுடைய எண்ணம். தன்னுடைய கணக்குப் போடும் திறமையால் அக்கிராம மக்களின் குடும்ப நிலையினை மனதில் கொண்டு அறிவுப்பூர்வமாகப் பதில் கூறுகிறான். தன்னுடைய செயல் மூலம் மக்களை ஒன்றுபடுத்த முயன்று அந்த முயற்சியில் பெருமையும் மனநிறைவும் அடைகின்றான்.

மேற்கண்ட முயற்சிகள் அனைத்தும் மேற்கொண்ட ஒளி, நிலப்பிரச்சினையினால் இருவேறு சாதியினர்க்கு இடையே ஏற்பட்ட கலவரத்தில் சமாதான்ம் கூற முற்படும்போது எதிர்பாராதவிதமாக ஒருவர் ஏந்திய அறுவாள் ஒளியின் கழுத்தில் பட ஒளியின் உயிர் பிரிகிறது.

மணிமேகலையில் சாலி எனும் அந்தணப்பெண் தவறிழைத்ததன் காரணமாகப் பிறந்த ஆபுத்திரன் (ஆவினால் வளர்க்கப் பட்டவன்) "உலக உயிர்களுக்கெல்லாம் பசிப்பிணியினைப் போக்கும் ஆவினை வருத்தாதீர்கள்" என்று எடுத்துரைத்த போது அந்தணர்கள் அனைவரும் அவன் பிறப்பினை எடுத்துரைத்து அவன் கூறும் கருத்தினை ஏற்க மறுக்கின்றனர்.

"தெருமரல் உள்ளத்துச் சிறியை நீயவ்
வாமகன் ஆதற்கு ஒத்தனை., அறியாய்
நீமகன் அல்லாய் கேள்" என இகழ்தலும் (60-62)

என்று ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை சுட்டுகிறது.

மகாபாரதத்தில் கிருஷ்ணன் தூதுச் சருக்கத்தில் (உத்யோக பருவம்) கிருஷ்ணன் பாண்டவர்களுக்காக துரியோதனனிடத்தில் தூது செல்கின்றார் தூதுப் பணியை முடித்த பின் கிருஷ்ணன் விதுரரின் மாளிகைக்குச் சென்று அங்கு அஉணவருந்துகின்றார். அதனால்

வெகுண்ட துரியோதனன் விதுரரின் பிறப்பினை இங்கே இழிவாகச் சுட்டுகிறான்.

"முதல் விழைந் தொருவனுட னியைந்த பொருள்பற்றி
இன்புற முயங்கினும்
அதிகமென்ற பொருளொருவன் வேறுருதரின்
அவனையே யொழிவறிவரோ
பொதுமடந்தையர் தமக்கு மண்ணிலிது
புதுமையல்ல அவர்புதல்வனாம்
விதுரனின்று அவனொடுறவு கொண்டதோர்
வியப்பையென் சொலிவெறுப்பதே" (பா.எண்.128)

விலைமகளிர்க்குரிய பொதுவான இயல்புகளை இப்பாடலில் சுட்டிக்காட்டி அத்தகைய தன்மையுடைய ஒரு பெண்ணின் புத்திரனாகிய விதுரனிடம் கண்ணன் நட்புப் பாராட்டிய விந்தைச் செயலை "எந்தச் சொற்களைக் கூறி வெறுத்து ஒதுக்குவது" என்று துரியோதனன் வெறுப்புடன் கடிந்து கூறுகின்றான். இங்கே தாயின் குணம் மகனையும் தொடர்கிறது என்னும் பொருளில் பழித்துரைக்கின்றான்.

இருவேறுபட்ட நிலையிலுள்ள தாய் தந்தையர்க்கு மகனாகப் பிறந்து உயர்ந்த பண்புகளோடும், புத்திக் கூர்மையோடும் வாழ்ந்தாலும் இந்தச் சமுதாயம் அவர்களை இழிவானவர்களாகவே காணுகின்றது. அவர்களின் பிறப்பினை அவ்வப்போது சுட்டிக்காட்டி அவர்களின் மனதைத் துன்புறுத்துவதோடு செயல்பட முடியாமலும் செய்கின்றது.

மேற்கண்ட சூழ்நிலையில் வாழ்பவர்கள் காலம் காலமாக இப்படித் தனிமைப்படுத்தப்பட்ட நிலையில் வாழ்வதை ஆபுத்திரன் மற்றும் விதுரன் பாத்திரங்களும் நமக்கு விளக்குகின்றன. காலங்கள் மாறினாலும் இத்தகையோரின் நிலை என்றும் மாறாது என்பதனை ஆசிரியர், இந்நாவல் முழுவதும் சாதியில் ஏற்படும் பல சிக்கல்களைக் காட்டி அதில் ஒன்றாக இதனையும் இழையோடச் செய்திருக்கிறார்.

முடிவுரை

குழந்தைச் செல்வம் முறைதவறிப் பிறந்தாலும், இருவேறு சாதியினர்க்குப் பிறந்தாலும் தாய் தந்தையர் இல்லாமல் கைவிடப்பட்டிருந்தாலும் இவ்வுலகத்தாரால் ஒதுக்கப்படும் நிலையே உள்ளது. மிகுந்த வறுமை நிலையிலும் பல சமுதாயச் சிக்கல்களுக்கு இடையிலும் குறிப்பிட்ட சாதிக் கட்டுப்பாடுகளின் முட்டுக்கட்டைக்கு இடையிலும் காலூன்றி தங்களுடைய தனிப்பட்ட திறமையால் வெளிப்படும் சிறந்த மனிதர்கள் உண்டு.

# நில்லாவுலகம்

த.காவேரி
வே.வ.வ.பெண்கள் கல்லூரி
விருதுநகர்.

முன்னுரை

தமிழ் இலக்கியப்போக்கு காலந்தோறும் மாறி வந்தாலும், அதில் அடிநாதமாக சில அறக் கருத்தக்கள் சங்ககால இலக்கியம் முதல் இன்று வரையிலும் அமைந்து உள்ளதை நாம் காணலாம். அவற்றுள் நிலையாமையை உணர்த்தும் கருத்துக்கள் காலந்தோறும் அமைந்துள்ளதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். தொல்காப்பியர் காஞ்சித் திணையைப் பற்றிக் கூறுமிடத்து,

"பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற்றானும்
நில்லாவுலகம் புல்லிய நெறித்தே"

-

தொல்.புறம்.நூ.எ.23

எனக் கூறியுள்ளார். இந்நில்லாவுலகின் இயல்பு தமிழ் இலக்கியத்தில் காலந்தோறும் வெளிப்படுகிறது என்பதை இனிக் காணலாம்.

சங்க காலம்

புறநானூற்றுப் பாடலொன்று நில்லாவுலகின் நிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

"குன்று தலை மணந்த மலை பிணித்தியாத்த மண்
பொதுமை சுட்டிய மூவர் உலகமும்
பொதுமை இன்றி ஆண்டிசினோர்க்கும்
மாண்டவன்றே வெறுக்கை வித்தும்
அறவினையன்றே விழுத்துணை யத்துணைப்
புணை கை விட்டோர்க்கு அரிதே துணை ஆழத்
தொக்கு உயிர் வெளவுங்காலை
இக்கரை நின்று இவர்த்து உக்கரை கொளலே"

- புறநானூறு - பா. எ.357

செல்வம் நிலையற்றது. மன்னர்களும் மரணத்தைச் சந்திக்க வேண்டும். அறச் செயல்கள் மட்டுமே மறுமைக்குத் துணையாகும். அத்தகைய செயல்களைச் செய்வதே வீட்டுலகைச் சென்றடையத் தெப்பமாக உதவுமெனப் பிரமனார் தமது பாடலில் செல்வம், வாழ்க்கை இவற்றின் நிலையற்ற தன்மையைக் கூறியுள்ளார்.

சங்கம் மருவிய காலம்

சங்கம் மருவிய காலத்தில் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் தோன்றி நிதிக் கருத்துக்களைக் கூறின. அவற்றுள் முதன்மையான நூலாகிய திருக்குறள்,

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்து இவ்வுலகு"

- திருக்குறள் எண்: 336

என உலகின் நிலையாமையைக் கூறுகிறது. நாலடியார் நூலில்,

"வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணராதார்
வைகலும் வைகலை வைகுமென்றின்புறுவர்
வைகலும் வைகல் தம் வாழ்நாள் மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்"

-நாலடியார் -

அறன்வலியுறுத்தல் - பா.எ.39

என்னும் பாடல் இடம் பெற்றுள்ளது. இதில் அன்றாடம் மனிதனின் வாழ்நாளில் ஒருநாள் குறைவதை அறியாது, மனிதன் நாளை வரும், என் வாழ்நாள் வளரும் என அறியாமையில் மூழ்கி இருப்பதைப் படம் பிடித்துக் காட்டுகிறார் ஆசிரியர்.

பக்தி இலக்கியம்

பக்தி இலக்கியங்கள் பல்லவர் காலத்தில் அதிகமாக வெளிவந்தன எனலாம். அவற்றுள் தேவார, திருவாசகப் பாடல்களும், திவ்வியப் பிரபந்தப் பாடல்களும் குறிப்பிடத்தக்கச் சிறப்புடையனவாகும். சுந்தரர் தேவாரத்தில்,

"வாழ்வாது மாயம் இது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்த பறிதான்
தாழாது அறஞ்செய்மின் தடங்கண்ணான் மலரோனும்
கீழ் மேலுற நின்றான் திருக்கேதார மெனீரே"

-

திருக்கேதாரப் பதிகம் - பா.எ.1

என்ற பாடல் காணப்படுகிறது. இதில் வாழ்வின் நிலையாமையும், அறஞ்செய்ய வேண்டிய அவசியமும் கூறப்பட்டுள்ளன.

காப்பிய இலக்கியம்

இரட்டைக் காப்பியங்களில் ஒன்றான மணிமேகலையில் சாதுவன் அறங்கூறும் பகுதி "ஆதிரை பிச்சையிட்ட காதையில்" இடம் பெற்றுள்ளது. அதில்,

".... பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையின்
நல்லறஞ் செய்வோர் நல்லுலக கடைதலும்
அல்லறஞ் செய்வோர் அருநரகடைதலும்..."

- மணிமேகலை - ஆதிரை பிச்சையிட்ட
டி காதை - வரிகள் 86-89

என்ற பாடலடிகள் இடம் பெற்றுள்ளன. இவ்வரிகளிலும் வாழ்வின் நிலையாமை மற்றும் அறம் செய்வதன் முக்கியத்துவம் ஆகியன

கூறப்பட்டுள்ளன.

குண்டலகேசி என்ற காப்பியம் கி.பி.10 ஆம் நூற்றாண்டில் நாதகுத்தனார் என்பவரால் இயற்றப்பட்டது. இதில் நிலையாமையை உணர்த்தும் பாடல் சொற்சுவையும், பொருட்சுவையும், நிரம்பியது.

"பாளையாந் தன்மை செத்தும் பாலனாந் தன்மை செத்தும்
காளையாந் தன்மை செத்தும் காமுறும் இளமை செத்தும்
மீளுமிவ்வியல்புமின்னே? மேல்வரு மூப்புமாகி
நாளு நாம் சாகின்றோமால் நமக்கு நாம் அழாததென்னே"!

என்ற பாடலில் ஒவ்வொரு நொடியும் சாவு நிகழ்ந்து கொண்டிருக்க, மனிதன் அதை அறியாதிருப்பது குறித்து வியப்பை வெளிப்படுத்தகிறார் ஆசிரியர்.

சித்தர் இலக்கியம்

சித்தர்கள் வரிசையில் முதலாவதாக வைத்து எண்ணப்படும் திருமூலம்,

"தன்னை அறியாது தான் நல்லார் என்னாது இங்கு
இன்மை அறியாது இளையர் என்று ஓராது
வன்மையின் வந்திடும் கூற்றம்., வருமுன்னர்
தன்மையும் நல்லதவம் செய்யும் நீரே"

- திருமந்திரம் -

பா.எ.112.

என்ற பாடலில் கூற்றுவன் எப்போதும் வரலாம் அதற்கு முன் நல்ல வாழ்க்கை நெறிகளைக் கடைபிடிக்க வேண்டுமென அறிவுறுத்துகிறார்.

சிவவாக்கியர் என்ற சித்தர் தமது பாடலில்

"வீடெடுத்து வேள்வி செய்து மெய்யோடு பொய்யுமாய்
மாடு மக்கள் பெண்டிர் சுற்றமென்றிருக்கும் - மாந்தர்காள்
நாடு பெற்ற நடுவர் கையிலோலை வந்தழைந்திடில்
ஓடு பெற்றதவ்விலை பெறாது காணுமுடலமே"

- சிவவாக்கியர் பாடல்கள் -

பா.எ.26

கூற்றுவனின் மரண ஓலை வந்த போது இவ்வுலகச் செல்வம் எதுவும் பயன்தராது. இவ்வுடல் ஓடு பெறும் விலைகூட பெறாது என எச்சரிக்கிறார்.

திரையிசை

இன்று செல்வாக்குப் பெற்று விளங்குபவை திரையிசைப் பாடல்களே ஆகும். கவிஞர் கண்ணதாசன்

"வீடுவரை உறவு வீதிவரை மனைவி
காடுவரை பிள்ளை கடைசிவரை யாரோ?

எனக் கேள்வி எழுப்பி நம்மைச் சிந்திக்க வைக்கிறார்.

என்ன தீர்வு?

இந்த நில்லாவுலகிலிருந்து விடுதலை பெற்று நிலைத்த இன்பம் பெற நாம் என்ன செய்ய வேண்டும் என்ற வினாவிற்கும் இலக்கியம் விடை இயம்புகிறது.

"நிலையாமை நோய் மூப்புச் சாக்காடென்றெண்ணித்
தலையார் தங்கருமம் செய்வார் - தொலைவில்லாச்
சத்தமு சோதிடமும் என்றாங்கு இவை பிதற்றும்
பித்தரின் பேதையார் இல்"

- நாலடியார் - 6

துறவு - பா. எ.52

என்ற பாடலில் நிலையாமையுடைய உலகிலிருந்து விடுபட விரும்பும் தலையாய பண்புடையார் தம் கருமம் செய்வார் எனக் கூறுகிறது. தம் கருமம் என்றால் என்ன, இதோ வள்ளுவர் அதற்கு விடை தருகிறது.

"தவம் செய்வார் தங்கருமம் செய்வார் மற்றல்லார்
அவம் செய்வார் ஆசையுட் பட்டு"

- திருக்குறள் எண்

: 266

எனவே உயிர்கள் தங்களுக்குரிய கருமமாகிய தவம் செய்தால் நில்லாவுலகை வென்று நிலைத்த வீடுபேற்றினை அடையலாம்.

நிறைவுரை

தமிழ் இலக்கியத்தில் காலந்தோறும் புதுமை, வளர்ச்சி ஆகியன புகுந்த போதிலும் வாழ்க்கையின் இலக்கை எடுத்தியம்பும் போக்கு என்றென்றும் அமைந்துள்ளது. இலக்கியம் வாழ்க்கையின் உண்மையான நிலையை எடுத்துக் கூறி மனிதனை அச்சம் கொள்ளச் செய்யாமல், நிலையில்லா வாழ்க்கையில் எதைச் செய்து நிலைபேறு அடையலாம் என வழியினையும் காட்டித் தருகிறது. இதுவே தமிழ் இலக்கியத்தின் தனிச் சிறப்பெனவும் கூறலாம்.

# பலாமரம் நாவலில் இளையோர் குற்ற நடத்தைகள்

செல்வி மு.இறைவாணி எம்.ஏ.,பி.எட்., எம்.பில்
தமிழ் விரிவுரையாளர்
எஸ்.எப் ஆர் மகளிர் கல்லூரி ,
சிவகாசி

மக்கள் ஒன்று கூடி ஒரு சில திட்டவட்டமான உறவுமுறைகளின் படி வாழ்க்கை நடத்தும் அமைப்பினை சமுதாயம் என்கிறோம். ஒவ்வொருவரும் சமுதாயத்தின் அங்கமாக விளங்குகின்றனர். அதுபோல் சமுதாயமும் ஒவ்வொருவரது உளவாழ்விலும் பெரும் பங்கு வகிக்கின்றது. இவ்வாறு தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் இடையே மிக நெருங்கிய உறவு காணப்படுகிறது. இவ்வுறவு தனிமனிதனது உளநலத்திற்கு அடிப்படையாக இருக்கிறது. தனிமனிதர்களுக்கிடையே இசையான சமூக உறவு நிலவும் பொழுது உளம் நலமிக்கதாக அமைகின்றது. ஆனால் இவ்வுறவு முறைகளில் ஏற்படும் பிணக்குகளும் சிக்கல்களும் உளநலத்தைப் பாதித்து பலவகைச் சமுதாயக் கோளாறுகளுக்கும் வழிகோலுகின்றன.

சமுதாயம் சீராக இயங்க ஒவ்வொரு உயிரும் அன்புடன் வாழ்தல் அவசியம். ஒவ்வொருவரும் தான் பிறர் மீது அன்பு செலுத்துவதும் தன் மீது பிறர் அன்பு செலுத்த வேண்டும் என்று எதிர்பார்ப்பதும் இயல்பான ஒன்று. எனவே குழந்தையாக இருந்தாலும் அன்பால் அதனைத் திருத்த முடியும் என்கின்றனர். குழந்தைப்பருவத்தில் பெற்றோரிடமிருந்தும் வளரும் பருவத்தில் நண்பர்களிடமிருந்தும் சமுதாயத்திடமிருந்தும் அன்பை எதிர்பார்க்கும் மனித மனம் அது கிடைக்காத பொழுது மனபிறழ்ச்சி ஏற்படுகிறது. அன்பும் உரிமைகளும் மறுக்கப்படும்பொழுது மனம் பிறழ்ச்சி அடைகிறது. இதுவே சமுதாயக் குற்றங்களுக்கு அடிப்படையாக அமைகின்றது.

இவ்வாறு சமுதாயமும் மனிதர்களும் பிணைந்து செயல்படும் சூழலில் ஏற்படும் பிறழ்ச்சியை தன் பலாமரம் நாவலில் படம் பிடித்துக் காட்டுகிறார் பாலகுமாரன்.

இளையோர் உளவியலை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட இந்நாவலில் இளைய சமுதாயம் தவறு செய்வதற்கும் இளம் குற்றவாளிகள் உருவாகுவதற்கும் குடும்பமும் சமுதாயமும் எவ்வாறு காரணமாகின்றன என்பதைத் தெளிவாகச் சுட்டுகிறார். அதே நேரத்தில் அதற்குத் தீர்வையும் கூறுகிறார்.

"பலாமரம்" நாவலில் குற்றப்பள்ளியில் உள்ள நாற்பத்தியெட்டு குற்றவாளிகளின் வாழ்வில் நடைபெறும் நிகழ்ச்சிகள் கதையின் அடிப்படைக் கருவாக அமைகின்றது. குற்றங்கள் செய்த இவர்கள் சிறைச்சாலை போன்ற குற்றப்பள்ளியில் இருப்பதை வெறுப்பவர்களாக இருக்கின்றனர். குடும்பமும் சமுதாயமும் ஒதுக்கிய நிலையில் மேலும் தவறான செயல்களுக்கு இட்டுச்

செல்லக் கூடியவையாகவே அமைகின்றன. இந்நேரத்தில் சரவணன் என்ற நேர்மையான காவல் அதிகாரி குற்றப்பள்ளிப் பொறுப்பேற்று வருகிறார். இவர் மற்றவர்களைக் காட்டிலும் எண்ணத்தில் மாறுபட்டவராகவும் நேர்மையாகவும் இருக்கிறார். அதனால் அவருக்குத் தண்டனையாக குற்றப்பள்ளிப் பொறுப்பைத் தருகின்றனர். அவர் இங்கு உள்ள நாற்பத்தியெட்டுப் பேரையும் குற்றவாளிகளாகக் காணாமல் மனிதர்களாகக் காண்கிறார் அவர். அன்பால் வழிநடத்த முடியும் நற்பழக்கங்களைச் சொல்லித் தர முடியும் என்ற எண்ணத்தோடு நல்வழிப்படுத்த முயற்சிச் செய்து வெற்றி பெறுகிறார். குற்றவாளிகளாக மட்டும் நினைக்கப்பட்ட இளையோரை கட்டுப்பாடுகள் உள்ளவராக சமூகப் பொறுப்புடையவராக மாற்றியவர் சரவணனே.

இந்நாவலில் சொல்லப்பட்ட இளையோர் குற்ற நடத்தைகளையும் அதற்குக் குடும்பச் சூழலும் காரணமாகும் விதத்தையும் அதற்கானத் தீர்வையும் காண்போம்.

அன்பு மறுக்கப்படல்:

எந்த ஒரு பிரச்சனையையும் இளங்குற்றவாளிகள் முறைப்படி அணுகுவதில்லை. இவர்கள் பிறழ்வான சமூக பண்பாட்டுச் சூழ்நிலையினின்று வருபவர்களாகக் காணப்படுகின்றனர். இவர்கள் குடும்பங்களில் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வதில்லை. அன்பு என்பதே இல்லை. பலாமரம் நாவலில் பதினேழு வயது ஆறுமுகம் தன்னுடைய தாய் தந்தை இருவரையும் கொலை செய்ததற்காக ஆறு வருடச் சிறை தண்டனை அவனிடம் சரவணன் காரணம் கேட்கும் பொழுது,

"நான் விரும்பற பொண்ணைக் கெட்ட வார்த்த சொல்லித்
திட்டினாங்க கட்டிக்கக் கூடாதுன்னட்டாங்க"

என்று சொல்கிறான். மேலும் மாடசாமி என்பவன் பதினேழு வயது மனைவியைக் கொலை செய்ததாக குற்றம் சாட்டப்பட்டவன்,

"எனக்குக் கல்யாணம்னு சொல்லி எங்கைய்யா ராத்திரி
அந்தப் பெண்ணைக் கூட்டிட்டுப் போயி . . . ."
"எங்கய்யாவை என்னால் அடிக்க முடியலியே சார்"

என ஒவ்வொருவருடைய குற்ற நடத்தைக்குக் காரணம் அன்பு இல்லாத பெற்றோர்களே இவர்கள் பெற்றோர்கள் இச் சிறுவர்களுக்கு ஓர் முன் மாதிரியாக நடந்து கொள்ள அருகதையற்றவர்களாக இருக்கின்றனர்.

மனிதநேயமற்ற சுயநலவாதிகள்

தனது இயலாமையை மாணவர் மீது காட்டுகிறார்கள். பெரியோரின் நடத்தைத் தவறுகளே சிறியோரை நடத்தை மாறச் செய்கிறது. குற்றப்பள்ளியில் இருக்கும் இம்மாணவர்களைச் சுற்றி மனிதநேயமற்ற சுயநலவாதிகளே சூழ்ந்திருக்கின்றனர். மாணிக்க வேலரின் மனைவி இவர்களை குற்றம் உடையவர்களாகவேப் பார்த்து பார்த்து எப்பொழுதும் திட்டிக் கொண்டே இருக்கிறார். மனைவியைக் கண்டிக்க இயலாத மாணிக்க வேலர் தன்னுடைய கோபங்களை மாணவர் மீதே காட்டுகிறார். அங்கே உள்ள மாணவர்களும் சிறைக்குள் இருந்தும் சாராயம். கஞ்சா

விற்கக் கூடிய சமூக விரோதிகளிடம் தொடர்புடையவர்களாக இருக்கின்றனர். சமூக விரோதிகள் மாணவர்களைத் தன் சுய வேலைக்குப் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

குற்றவாளிகளைச் சீர்திருத்துதல்:

குற்றவாளிகளை உளவியல் ரீதியான முறையில் பயன்படுத்தி தங்கள் முயற்சிகளில் வெற்றிபெற முடியும். இதனை சிறை அதிகாரியாக புதிதாக வரும் சரவணன் செய்ய முயற்சிக்கிறார் அவர்.

"எனக்குப் பிரம்புல நம்பிக்கை இல்லை. அதே சமயம் ஏதோ போகட்டும்னு பெரும்போக்கா போறதுக்கும் நான் வரலை. குடிசைக்குள்ள நுழையணும்னா குனிஞ்சு தான் போகணும். கோயிலுக்குள்ள போறபோது அதுக்கேத்த படி போகணும். மதில் தாண்டிப் போகக்கூடாது".

என தண்டனைக்காலத்தை குற்றவாளியைத் தண்டிப்பதற்கான காலம் என்பதை மறுத்து அவர்களைச் சீர்திருத்த முயற்சி செய்கிறார்.

குற்றவாளிகளின் சொந்த வாழ்க்கை வரலாற்றையும் கவனத்துடன் சேகரித்து அலசி ஆராய்ந்து குற்ற நடத்தையின் அடிப்படைக் காரணத்தைக் கண்டு கன்ளய பெருமுயற்சி செய்தல் வேண்டும். இதனையே சரவணன் செய்கிறார்.

குற்றவாளி ஆறுமுகத்தைத் தேடி வந்த அவனது காதலிக்கு நம்பிக்கையூட்டி அனுப்பிகிறார். அந்தப் பெண்ணிடம் சரவணன்,

"மூணு வருஷம் ஓடியே போயிடும் போய் வயல் வரப்புல வேலை செஞ்சு நாலு காசு சேர்த்து வை. பெரிய ஆளா அவனை மாத்தி நான் அனுப்பறேன். ஊருக்கு போயிருக்கறதா நினைச்சுக்க. இனிமே தப்பு பண்ண மாட்டியே! சாகற நினைப்பு வராதுல்ல உனக்கு?"

எனச் சொல்வதைக் கேட்கும் அவர்களுக்கும் வாழ வேண்டும் என்று நம்பிக்கை ஏற்படுகிறது.

மேலும் இது அவர்களுக்குச் சிறை அல்ல அவர்களையும் சீர்திருத்தும் பள்ளி என்பதை உணரும் விதமாக கல்வி, தொழில், பொழுது போக்கு அகியவற்றை ஏற்படுத்தி அவர்கள் மீண்டும் சமுதாயத்தில் வாழத் தகுதியுள்ளவர்களாக மாற்ற முயற்சிக்க வேண்டும்.

இதனை உணர்ந்த சரவணன் வேலையற்றவன் மனது சாத்தான் தேவையற்றவைகளை எண்ணச் செய்யும் எனவே தக்க வாய்ப்பினை ஏற்படுத்த நினைக்கிறார்.

"பையன்களுக்கு நிறைய ஒய்வு இருக்கிறது. இதுவே தவறான வழிகளுக்கு அழைத்துப் போகிறது"

என்பதை உணர்ந்து கராத்தே, யோகா, ஆங்கில வகுப்பு, தோட்ட வேலை போன்றவைகளைச் செய்ய வைக்கின்றார். அவர்கள் இருக்கும் கட்டிடம் சிதைவுற்றதை அம்மாணவர்களை வைத்தே புதுப்பொலிவு பெறச் செய்கிறார். சரவணனுடன் வசந்தகுமார் என்ற காவல் அதிகாரியும் இணைந்து மாணவர்களின் நலனில் அக்கறை காட்டுகிறார். மாணவர்களுக்கு பொழுது போக்காகவும்,

"டிவியில் இரண்டாம் உலகப்போர் பற்றி படம் காட்டிய போது வசந்தகுமார் அது பற்றி அதிகம் விளக்கினார்.

"சிறையிலிருந்த பன்னிரெண்டு கொலைகாரர்களைப் பொறுக்கி, அவர்களை ட்ரெய்ன் செய்து ஒரு ராணுவச் கூட்டத்தை அழிக்கும் படம் படம் பார்த்து விட்டுப் பையன்கள் உணர்ச்சி வசப்பட்டார்கள் பன்னிரெண்டு பேரில் பத்து பேர் ஒவ்வொரு விதமாய் செத்துப் போன

போது அழுதார்கள்."

இவ்வாறு அங்குள்ள மாணவர்களை நல்வழிப்படுத்தும் விதமாகவும் செயல்பட்டனர். மாணவர்களை விரக்தி மனப்பான்மையிலிருந்து மீட்டு வாழ முடியும் என்ற நம்பிக்கையை ஊட்டினர்.

சத்யம் வெல்லுமா?

நாவலில் சரவணன் கதாப்பாத்திரம் நேர்மையான காவல் அதிகாரியாக செயல்படுகிறார். அவர் செய்யும் செயல்கள் மற்றவர்களுக்கு நன்மையான அமைய அவருக்குக் குடும்பத்தில் அமைதியாக வாழ முடியாத சூழலே.

சிறுவர்களைச் சீர்திருத்த அவர் செய்த முயற்சிகள் அனைத்தும் இறுதியில் வெற்றி பெற்றன. நாற்பத்தியெட்டு மாணவர்களும் அவர் நமக்கு நன்மையே செய்கிறார் என்பதை உணர்ந்து நல்லவர்களாக மாறுகிறார்கள். சமூக விரோதிகளால் அவர் கொல்லப்பட்டப் போது யாரும் நம்மை கவனிக்க இல்லை தப்பிச் செல்லலாம் என எண்ணாமல் அவரின் எண்ணத்தைச் செயல்படுத்தினர். செய்தித்தாளில்,

"சிறுவர் குற்றப் பள்ளியில் மாறுதல் இனி அவை மாதிரிப் பள்ளிகளாக இயங்கும் தனிப்பட்ட சீருடை இல்லாது சிறைவாசம் என்கிற உணர்வு தராது, ஏனைய பள்ளிகள் போல இயங்கும். இது மத்திய அரசின் புதிய உத்தரவு"

என்று போடப்பட்டிருந்தது. இதற்கெல்லாம் காரணம் சரவணன் என்கிற நேர்மையான காவல் அதிகாரியே. எனவே சத்யம் வெற்றி பெற்றது. ஆனால் சத்யவான் வாழ முடியவில்லை.

இவ்வாறாக பாலகுமாரன் அவர்கள் தன்னுடைய பலாமரம் நாவலில் இளையோர் குற்றங்களுக்கான காரீணங்கள் அதற்குரிய தீர்வினை நன்கு கூறியுள்ளார். ஒருவரை ஒருவர் மதித்து அன்புடன் செயல்பட்டால் நல்ல சமுதாயம் உருவாகும் என்கிறார்.

## "புதிய சிறுகதைகளில் சிக்கல்கள்"

முனைவர் இரா.சு.முருகன்
துணை நிலை விரிவுரையாளர்
தமிழ்த்துறை, தியாகராசர் கல்லூரி
மதுரை - 625 009.

மனிதனுடைய வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களே இலக்கியங்களுக்குக் கருப்பொருளாய் அமைவன ஆகும். ஒரே வகையான சிக்கல்கள் வெவ்வேறு காலங்களில் மீண்டும் மீண்டும் எழுவதைக் காணலாம். இச்சிக்கல்களுக்கு மனிதர்களின் எதிர் விளைவுகள் எல்லாச் சமயத்திலும் ஒரே விதமாக இருப்பதில்லை. ஒரு குறிப்பிட்ட சிக்கல்கள் அடிப்படையில் மனிதர்கள் எவ்வாறு நடந்து கொள்கின்றார்கள் என்பதை உளப்பாங்கிற்கும் சமுதாய நிலைமைகளுக்கும் ஏற்ப இலக்கியப் படைப்புகள் வெவ்வேறு நிலைகளில் படைக்கப்படுகின்றன.

இதிகாச புராணங்களில் இடம் பெற்றுள்ள சில சிக்கல்கள் இக்கால எழுத்தாளர் சிலராலும் கையாளப்பட்டுளளன. புராணப் பாத்திரங்களையே கதை மாந்தராகக் கொண்டு, சிறிய நுணுக்கமான வித்தியாசங்களுடன் புதிய உருவத்தில் சில எழுத்தாளர்கள் எழுதுவதுண்டு. சிலர் கதைக்கும் கருவாக அமையத்தக்க சிக்கல்களை மட்டுமே புராணங்களிலிருந்து பெற்று இக்காலச் சூழல்களின் அடிப்படையில் பாத்திரங்களை உருவாக்கி எழுதுவார்கள் எழுத்தாள்ர்கள் தம் உளப்பாங்கிற்கேற்பவும் காலத்திற்கேற்பவும் மாற்றங்களைச் செய்யவும், சேர்க்கவும் வாய்ப்புக்கள் அதிகம் கிடைக்கிறது. இலக்கியம் மற்றும் புராணங்கள், இதிகாசம் போன்றவைகளில் ஏற்படும் புதிய சிக்கல் எழுத்தாளர்களுக்கு எவ்வாறு உருவாகின்றன என்பதனை கண்டறிய முற்படுவதே இக்கட்டுரைகள் நோக்கமாக அமைந்துள்ளது.

அகலிகையின் கதை கம்பராமாயணத்தில் ஒரு கிளைக் கதையாக இடம் பெறுகிறது. அகலிகை கோளதம முனிவரின் மனைவி, அவள் மீது விருப்பம் கொண்ட இந்திரன் முனிவர் இல்லாத பொழுது அவரைப் போல உருவம் கொண்டு சென்று அவளைக் கூறுகிறான். நடந்ததையறிந்த முனிவர் சினங்கொள்கிறார். அகலிகையைக் கல்லாகுமாறு என்று சபிக்கிறார். இந்திரனும் முனிவரின் சாபத்திற்கு உள்ளாகிறான். அகலிகை பணிந்து வேண்ட இராமபிரான் காலடி பட்டதும் மீண்டும் பெண் ஆகுமாறு சாபவீடு தருகிறார் இராமபிரான் வருங்காலத்து அவன் கால்துகள் பட்டு முன்னைருப் பெற்ற அகலிகை முனிவர் பால் சேர்க்கப்படுகின்றாள். இக்கதைச் சிக்கலைச் சிற்சில மாறுதல்களுடன் வெ.ப. சுப்பிரமணிய முதலியார் ச.து.சு.யோகியாா. புதுமைபித்தன் எம்.வி.வெங்கட்ராம் போன்ற எழுத்தாளர்கள் தம் கதைகளில் விவரித்துள்ளனர்.

"சிறை" (ஆனந்த விகடன் 09.11.1980) என்னும் சிறுகதையில், ரகுபதி குருக்களின் மனைவி பாகீரதி குருக்கள் இல்லாத போது அந்தோனி என்னும் முரடன் அவளைக் கெடுத்துவிடுகிறான். இதை அறிந்த குருக்கள் கோபமடைகிறார். மனைவியை வீட்டை விட்டு வெளியேறச் சொல்கிறார். தாமும் வீட்டைப் பூட்டிக்கொண்டு ஊரைவிட்டு சென்றுவிடுகிறார். பாகீரதியின் கெஞ்சல்கள் பயனற்றுப் போகின்றன, கோளதமருக்கு இருந்த இரக்கமும் குருக்களுக்கு இல்லை. முனிவர் இந்திரனைக் கண்டித்தது போல் அந்தோனியைத் தண்டிக்க அவர் நினைக்கவும் இல்லை. இனி நிகழ்ச்சிகள் புதிய திருப்பம் பெறுகின்றன. பாகீரதி அந்தோனியின் வீட்டுக்கே செல்கிறாள். அவனது வீட்டிலேயே வசிக்க முடிவு செய்கிறாள். அந்தோனி தன் தவற்றுக்கு வருந்துகிறான். "இருவரும் எந்த பந்தத்திலும், சிக்கிக் கொள்ளாமலேயே ஒருவருக்கொருவர் கட்டுப்பட்டாற் போல வாழ்கின்றனர்.

ஊர் பழி பேசுகிறது தன் கணவன் கொல்லையில் ஒரு குடிசை போட்டுத் தந்திருந்தால் கூட இந்தப் பழி வந்திராதே என்று எண்ணுகிறாள் பாகீரதி ஆண்டுகள் கழிகின்றன. இப்போது அந்தோனிக்கு எழுபது வயது நோயாளியான அவள் இருமி எச்சில் துப்பக் குவளை எடுத்துத் தருகிறாள். பாகீரதி கழிவிரக்கம் அந்தோணியை வாட்டுகிறது. தன் சொத்தில் ஒரு பகுதியை அவளுக்கு எழுதி வைத்துவிட்டுச் சாகிறான்.

"ஆறு மாசம் என்னோட வாழ்ந்துவிட்டு ஒரே நொடியிலே உதறி எறிஞ்ச என் ஆத்துக்காரரைவிட ஒரு நாள் செஞ்ச தப்புக்காக வாழ்நாள் முழுக்க என்னைத்தான் பாதுகாப்புல எந்தப் பிரதிபலனும் எதிர்பாக்காம வச்சுண்டிருந்த இவன் எத்தனை. பெரிய மனுஷன்" என்று எண்ணுகிறாள் பாகீரதி. ரகுபதியின் மனைவியாக வாழ்வதைவிட அந்தோனி சாமியின் விதவையாக வாழ்வதே நியாயம் எனக் கருதித் தன் மங்கலக் கோலத்தையே மாற்றிக் கொள்கிறாள் அவள். இந்திரன் தன் சாபத்துக்கு வருந்தினான். அகலிகையின் நிலை குறித்து வருந்தவில்லை. தன் தவற்றுக்காக வருந்தி வாழ்க்கை முறையையே மாற்றிக் கொள்ளும் அந்தோனியிடம் மானுடப் பண்பை ஒரு புதிய கோணத்தில் வெளிப்படுத்துகிறார் எழுத்தாளர்.

திலகவதியாரின் வாழ்வில் நேரிட்ட சிக்கல் பெரிய புராணத்தில் இடம் பெறுகிறது. இவரது பெற்றோர் அவரைக் கலிப்பகையாருக்குத் திருமணம் செய்ய இசைந்தனர். திருமணம் நிகழுமுன் கலிப்பகையார் வடபுலப் போருக்குச் சென்றார். போர்க்களத்தில் உயிர் கொடுத்துப் புகழ் கொண்டார். திருவினைய திலகவதியார் இச்செய்தி கேட்டார். இந்த உயிர் அவர் உயிரோடிசைவிட்டன் எனத் துணிந்தார். பின்னர், தம்பியார் புலம்பி வேண்ட அம்பொன்மணி நூல் தாங்காது அனைத்துயிருக்கும் அருள் தாங்கி இம்பார் மனைத்துவம் புரிந்து திலகவதியார் இருந்தார்.

அனுராதா ரமணனின் "அந்தரங்கம் புரிவதில்லை" (கல்கி, 21.2.82) என்ற சிறுகதையில் இதே போன்ற ஒரு சிக்கல் கதைக் கருவாகக் கையாளப்பட்டிருப்பதைக் காண்கிறோம். சியாமாவுக்கும் ராஜா ராமனுக்கும் திருமணம் நிச்சயமாகிறது. ராஜா ராமன் அமெரிக்கா செல்கிறான்.

திருமணத்துக்காகத் திரும்பும்போது விமான விபத்தில் இறக்கிறான். சியாமாவின் பெற்றோர் எப்படியாவது பிறிதொரு மணமகனைத் தேடி அவளுக்கு மனம் செய்ய முயல்கின்றனர். அவளது உள்ளத்தை ராஜா ராமனை எண்ணித் தீயாகக் கொதிக்கும் அவள் நினைவை யாரும் பொருட்படுத்த வில்லை. அவளது தாய்க்குப் பிடித்தமான எழுத்தாளர் (ஜெயகாந்தன்) எழுதிய கதையில் வருவதுபோலத் தனக்கு மணாளனாய் வர இருந்தவனின் உடல் மீது விழுந்து அழுது பூவையும் பொட்டையும் உதறி விட்டு வரத் தனக்குத் துணிவு இல்லையே என்று சியாமா வருந்துகிறாள்.

இறுதியில், அவளுக்கும் பரசுராமனுக்கும் மணம் ஆகிறது. ஏழெட்டு மாதங்கள் கழிகின்றன. தினத்தாளிலே ராஜாராமனின் ஐந்தாவது ஆண்டு நினைவு நாளுக்காக அவனது பெற்றோர், நண்பர்கள் வெளிபாட்ட புகைப்படம் அவள் கண்ணிலே படகின்றது. அவளால் வெளிப்படையாக அழவும் முடியவில்லை. அரிசி உளுந்து ஊறப்போட்டு கணவனின் எச்சில் தட்டைக் கழுவி டிபன் கட்டிக் கொடுத்து, நாத்தியின் யூனிபாரத்தில் விட்டுப்போன தையலைத் தைத்துவிட்டுக் கடமைகளில் ஈடுபட்டும் ராஜாராமனின் நினைவை விலக்க முடியாமல் வருந்தகிறாள் சியாமா. அவளது புகைப்படத்தை தானும் தினத்தாளில் வெளியிட்டு நாலு வரி எழுதித் தவிப்பைத் தீர்த்துக் கொள்ள முடியவில்லையே எனக் கலங்குகிறாள்.

ஆனால் இந்த உணர்வில் சிறிதளவு அவளால் வெளியில் காட்ட முடியாது. கணவன் வற்புறுத்தலால் கடைத்தெரு வருகிறாள். ராஜாராமனுக்காக ஒரு நாள் துக்கம் அனுஷ்டிக்கக்கூட முடியாமல் தவிக்கிறாள் படுக்கையறையில் தன்னையறியாமல் கன்னத்தில் இறங்கிய சூடான கண்ணீர் கணவனின் தோளில் பரவ தலைவலி என்ற பொய்க் காரணத்தால் புகலடைந்தும் பயனின்றிக் கணவனின் அணைப்பைத் தவிர்க்க இயலாதவள் ஆகிறாள். நிச்சயித்த மணமகன் இறந்த நிலையில் அவனை மறக்க முடியாது தவிக்கும் ஒரு பெண்ணின் மனப்போர் கதையில் சித்தரிக்கப்படுகிறது.

அடிக்குறிப்புக்கள்

1. அனுராதா ரமணன் "சிறை" ஆனந்தவிகடன் (09.11.1980) சிறுகதை
2. அனுராதா ரமணன் "கல்கி" "அந்தரங்கம் புரிவதில்லை" (21.02.1982) சிறுகதை
3. சுஜாதா, "வந்தவன்" ஆனந்தவிகடன், (17.08.1980) ஓரங்க நாடகம்.

## "கதவு" நாவலில் காணப்படும் குடும்ப உறவுகளில் சிக்கல்கள்

சகோ - வெர்ஜின் விமலாபாய்
தமிழ்த்துறை
J.A. மகளிர் கல்லூரி
பெரியகுளம்

**முன்னுரை:**

இலக்கியம் என்பது வாழ்க்கையைக் காட்டும் கண்ணாடி என்ற கூற்றிற்கு இணங்க நாவல்களிலும் யதார்த்தமான வாழ்வைக் காட்டும் நாவல்கள் தான் சிறப்பிடம் பெறுகின்றன. அவ்வகையில் கமலாக சடகோபன் அவர்களின் கதவு நாவல் குடும்பத்தைப் பின்னணியாகக் கொண்டு அமைந்துள்ளது. குடும்பத்தில் காணப்படும் பலவிதமான சிக்கல்கள் யதார்த்த நிலையில் காட்டப்பட்டுள்ளன. குடும்பத்தில் நடந்து முடிந்த நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டு பிரச்சனைகள் உருவாவதை இந்நாவலால் அறிய முடிகிறது. பொதுவான எல்லாக் குடும்பங்களிலும் சிக்கல்கள் ஏற்படுவதுண்டு. அச்சிக்கல்களுக்குப் பல்வேறு காரணங்கள் இருக்கின்றன. குறிப்பாகப் பணம், பாலுணர்வு, ஒத்துப்போகாமை, வரதட்சணை, மாமியார் மருமகள் கொடுமை போன்ற காரணங்களால் கூட்டு குடும்பத்தில் சிக்கல் எழுவதுண்டு. இவற்றை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**நாவலில் காணப்படம் உறவு நிலைகள்:**

கூட்டுக் குடும்பத்தில் தாய்-மகன்., தாய் - மகள்., தந்தை - மகள்., மாமியார் - மருமகள், மாமனார் - மருமகள், அண்ணன் - தங்கை, மதனி - நாத்தனார் முதலிய உறவு நிலைகளைக் காணலாம்.

**நாவலில் கூறப்படும் சிக்கல்கள்**

பெரும்பாலான குடும்பங்கள் பிரச்சனைகள் நிறைந்ததாகவே இருக்கின்றன. மாமியார் - மருமகள் ஒத்துப்போகாத் தன்மை, வரதட்சனைக் கொடுமை, அன்பற்றத் தன்மை போன்றவைகள் குடும்ப உறவுச் சிக்கல்களுக்குக் காரணங்களாக இருக்கின்றன. கதவு நாவலில் காணப்படும் குடும்ப உறவுச் சிக்கல்களை, 1.கூட்டுக் குடும்பச் சிக்கல்கள், 2.கணவன் - மனைவி உறவுச் சிக்கல்கள், 3.பாலுணர்வினால் ஏற்படும் சிக்கல்கள், 4.தம்பதியார் பிரிந்து வாழ்வதால் ஏற்படும் சிக்கல்கள் என்னும் நான்கு வகைகளாகப் பிரிக்கலாம்.

**கூட்டுக் குடும்பச் சிக்கல்கள்**

"ஒரே மரபு வழிச் சார்ந்த இரத்த உறவுடைய இருவரோ அல்லது அதற்கு மேற்பட்டவர்களோ ஒரே வீட்டில் ஒரே தலைமையின் கீழ் தங்கள் மனைவியர்களுடனும், குழந்தைகளுடனும் கூடி வாழ்தலையே கூட்டுக் குடும்பம் என்கிறோம். சான்றாக ஒருவன் தன் மனைவியுடனும், மணமான மகன்கள் அவர்தம் மனைவியர், அவர் தம் குழந்தைகள் ஆகியோருடனும் ஒரே வீட்டில் வசித்தலைக் கொள்ளலாம்"[1] (ஆறு. இராமநாதன், நாட்டுப்புறப்

பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், ப.58) என்று ஆறு. இராமநாதன் கூட்டுக் குடும்பம் பற்றிக் குறிப்பிடுகிறார்.

பெரும்பாலான கூட்டுக் குடும்பங்கள் சிக்கல்கள் நிறைந்ததாக இருப்பதனை இன்றைய நடைமுறை வாழ்க்கையில் காணமுடிகிறது. கதவு நாவலில் காணலாகும் கூட்டுக்குடும்பச் சிக்கல்களை 1.அன்பற்றத் தன்மை, 2.புரிந்து கொள்ளாமை என வகைப்படுத்தலாம்.

அன்பற்றத் தன்மை:

மனிதன் உயிர்வாழ இன்றியமையாத ஒன்று அன்பே ஆகும். அன்புக்காக மனிதன் ஏங்குகிறான். அன்பு ஒரு வழிப்பாதை அல்ல, மாறாக அன்பைக் கொடுத்து அன்பைப் பெற்றுக் கொள்ளும் இருவழிப்பாதை ஆகும்.

மாதவன்-மாலதியின் அன்பற்றத் தன்மை தான், இக்கூட்டுக் குடும்பப் பிரிவுக்குக் காரணமாக இருக்கிறது. இவர்களின் அன்பற்ற உறவு வீட்டில் அனைவரையும் மன அமைதி இழக்கச் செய்கிறது. மாதவனைத் தன் வாழ்க்கையில் சந்திக்கும் துரோகியாக மாலதி கருதுகிறாள். இதனால் அவனைச் சந்திக்கும் போதெல்லாம் அவளுக்கு வெறுப்பு ஏற்படுகிறது. மாலதி மாதவனை வெறுத்து ஒதுக்குவதும், மரியாதைக் குறைவாகப் பேசுவதும் மனப்போராட்டத்தை ஏற்படுத்துகிறது. இருவரும் இருவேறு நிலைகளில் மனப்போராட்டத்தில் வாழ்க்கை நடத்துகிறார்கள். மாதவன் தனது மனப்போராட்டம் நீங்கும் வழியாகவும், மாலதியைத் திருத்தும் வழியாகவும் இருக்கும் என்று நினைத்துத் தனிக்குடித்தனம் சென்று விடுகிறான். தான் மாலதியை அன்பு செய்தல், அதனை வெளிப்படுத்த இயலா நிலை இருப்பதால் மனதில் மிகுந்த வேதனை அடைகிறான். இருவரும் ஒருவரையொருவர் சந்திக்காமல் இருந்தால் இருவருக்கும் மன அமைதி ஏற்படும் என்ற மாதவனின் எண்ணம்தான் தனிக்குடித்தனம் செல்லக் காரணமாய் அமைகிறது.

புரிந்து கொள்ளாமை

ஒருவரையொருவர் புரிந்து கொள்ளாத நிலை குடும்ப உறவுகளில் குறிப்பாகக் கூட்டுக் குடும்பத்தில் சிக்கலை ஏற்படுத்தும் என்பதை நாவலில் தெளிவாகக் காணமுடிகிறது.

மாலதி இஸ்திரி போடும்போது ஷாக் ஆகி நினைவிழந்த நிலையில் இருக்கிறாள். பக்கத்து வீட்டு சந்துரு உடனடியாக மெய்னை நிறுத்திவிட்டு டாக்டரை அழைத்து வருகிறான். மாதவன் அந்தச் சமயத்தில் மாடியில் இருக்கிறான். இது மாலதியின் தற்கொலை முயற்சியாக இருக்கும் என்று நினைத்து அவன் கீழே இறங்கி வந்து அவளைப் பார்க்கவில்லை. ஆனால், லட்சுமி இதனைத் தவறாகப் புரிந்து கொள்கிறாள். அவன் வேண்டுமென்றே இப்படி இருப்பதாக நினைத்துக் கோபப்படுகிறாள். "என்னதான் பொல்லாதவளாக இருந்தாலும் கட்டின மனைவி உயிருக்கே ஆபத்தாகத் துடிக்கும் போது பதறிக்கொண்டு ஓடிவர வேண்டாமா? மாடியிலேயே உடம்பு

அசையாமல் உட்கார்ந்திருக்க எவ்வளவு நெஞ்செழுத்தம் வேண்டும்"[2] (கதவு, ப.206) என்ற லட்சுமியின் கூற்று அவளுக்கு மருமகன் மீதிருந்த கோபத்தைக் காட்டுகிறது. லட்சுமியின் இக்கூற்றினால் கனமும் வேதனைப் படுகிறாள். கண்களில் நீர் நிரம்பியிருக்கிறது.

கணவன் - மனைவி உறவுச் சிக்கல்:

"ஒரு குடும்பத்திலுள்ள அன்புறவுகளில் கணவன் - மனைவி உறவே தலையாயது. "அம்படையான் - பெண்டாட்டி" என்றும், "புருஷன் பெண்சாதி" என்றும் இவர்கள் சுட்டப்படுவர். மனைவி கணவனை மாமா என்றும், மச்சான் என்றும் விளிப்பதைக் காணமுடிகிறது". (ஆறு.இராமநாதன், நாட்டுப்புறப்பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், ப.94) என்று ஆறு.இராமநாதன் கணவன் - மனைவி உறவு பற்றிக் குறிப்பிடுகிறார்.

கணவன் - மனைவி இருவரும் விட்டுக்கொடுத்து வாழவேண்டும். ஒருவர் மற்றவரை நிறை குறைகளோடு ஏற்று அன்பு செய்ய வேண்டும். இத்தகைய பண்புகளில் சிறந்திடாத குடும்ப வாழ்வு நரக வாழ்வாக மாறிவிடும். கதவு நாவலில் கணவன் - மனைவி உறவுச் சிக்கலை 1.கணவனை மதிக்காமமை, 2.கருத்துப் பகிர்வின்மை, 3.அன்புப் பகிர்வின்மை, 4. சந்தேக மனப்பான்மை, 5.பிடிவாதப் போக்கு என்னும் ஐந்து வகைகளாகப் பிரிக்கலாம்.

கணவனை மதிக்காமமை

மரபு என்ற ஒன்று நமது சமுதாயத்தில் தொன்று தொட்டு இருந்து வருகிறது. எந்த உறவுநிலையாக இருப்பினும் அந்தந்த உறவு நிலைக்கேற்ற மரபுகளைக் கடைப்பிடிக்க வேண்டும். அந்த அடிப்படையில் கணவனுக்கு மனைவி எப்போதும் மதிப்பு கொடுத்து வாழ வேண்டும். இந்த மரபினை மீறும் போது குடும்ப வாழ்வில் கணவன் - மனைவிக்கிடையே சிக்கல் ஏற்படுகிறது.

மாலதி தன் கணவனை மதிப்பது இல்லை. திருமணத்திற்கு முன்னும் திருமணத்திற்குப் பின்னும் மாதவனை இழிவாகவே நடத்துகிறாள். அவள் தன் கணவனை "அவன்" என்ற மரியாதைக் குறைவான சொல்லால் குறிப்பிடுகிறாள். மாதவன் அவளை வெளியில் சென்றுவரக் கெஞ்சினால் அவள் புரிந்து விழுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறாள். மாலதி அவனை மரியாதைக் குறைவாகப் பேசுவதைக் கேட்க நேர்ந்தபோது ராகவன் அதிர்ச்சி அடைகிறார். இன்றைக்கும் கிராமங்களில் கணவன் பெயரை மற்றவர்களிடம் உச்சரிப்பது மதிப்புக் குறைவு என்றே பெண்கள் கருதுகிறார்கள். அப்படிச் சொல்ல வேண்டிய கட்டாயச் சூழ்நிலை ஏற்படும்போது, குழந்தைகளிடம் தந்தையின் பெயரைச் சொல்லும் படி கேட்கிறார்கள். ராகவனும் இதனைத் தெரிந்தே வைத்திருந்தார்.

"மாதவனிடம் கணவனுக்குரிய மரியாதை காட்டாத வரையில் இந்த வீட்டில் உனக்கு இடமில்லை. முதலில் அவனிடம் மன்னிப்புக்கேள்" (கதவு, ப.164) என்ற ராகவன் கூற்று, கணவனை மதிப்பது மனைவியின் கடமை

என்பதைச் சுட்டிக் காட்டுகிறது.

கருத்துப் பகிர்வின்மை

மாதவன் - மாலதி உறவுச் சிக்கலுக்குக் கருத்துப் பரிமாற்றமின்மையே முதன்மைக் காரணமாகும். மாதவன் அவளை முதலிலிருந்து இறுதிவரை அன்பு செய்கிறான். ஆனால், தன் எண்ணத்தை வெளியிடவில்லை. மாதவன், தான் அவளைக் காதலித்த எண்ணத்தை வெளியிட்டவுடன், மாலதி தானும் அவனுக்காக அவள் இதயக் கதவைத் திறந்து வைத்திருந்ததை அவளிடம் வெளியிடத் தவறியதை நினைத்து வருந்துகிறாள். இறுதியில் நடந்த அவர்களின் கருத்துப் பரிமாற்றம் அவர்களின் சிக்கலுக்குத் தீர்வாக இருந்ததைக் காணமுடிகிறது. இதிலிருந்து அவர்களின் சிக்கல் தொடர்ந்து நடந்து கொண்டிருந்ததற்குக் காரணம் அவர்களின் கருத்துப் பகிர்வின்மை ஆகும் என்பது தெரிகிறது.

அன்புப் பகிரிவின்மை

மாதவன் மாலதி இருவரும் ஒருவரையொருவர் நேசிக்கிறார்கள். ஆனால், அதனை இருவரும் பகிர்ந்து கொள்ளவில்லை. இதுவே அவர்களின் உறவுக்சிக்கலுக்குக் காரணம் பொருந்தா மனமே என்பதைத் தந்தையிடம் சுட்டிக் காட்டுகிறாள். ராகவ் மகளிடம், "பொறு மாலதி, அவசரப்படாதே இன்னும் ஏதாவது விஷயம் உனக்கு இப்போது தெரியாமல் மறைந்திருக்கும். அது வெளியானால் உன் வேதனைகள் தீர்ந்து விடும். அதுவரையில் தைரியமாகக் காத்திரு" (கதவு, ப.390) என்று கூறுவதிலிருந்து மாதவன் அவளை அன்பு செய்கிறான் என்பதைத் தெரிவிக்கிறார். மேலும் அவளிடம், "இதோ பார் மாலதி ... நீ விரும்பாத மாதுவை உனக்குக் கணவனாகத் தேர்ந்தெடுத்தேன் என்று கூறுகிறாயா? (கதவு, ப.388) என்று கூறி, மாலதியும் மாதவனை அன்பு செய்கிறாள் என்பதை மறைமுகமாகத் தெளிவுபடுத்தி அவர்களுக்குள் அன்பு இருந்தும், பிரச்சினைக்குக் காரணம் கருத்துப் பகிர்வின்மை தான் என்பதைத் தெளிவாக்குகிறார்.

முடிவுரை:

கூட்டுக்குடும்பச் சிக்கலுக்குக் கணவன் - மனைவியின் சுமூகமான உறவின்மை காரணம் என்பது கதவு நாவலில் மாதவன், மாலதி பாத்திரங்கள் வாயிலாகக் காணமுடிகிறது. கணவன் - மனைவியின் உறவுச் சிக்கலானது கணவனை மதிக்காமை, கருத்துப் பகிர்வின்மை, அ ன்புப் பகிர்வின்மை, சந்தேக மனப்பான்மை, பிடிவாதப் போக்கு போன்ற காரணங்களால் ஏற்படும் என்பதைக் கதவு நாவலால் அறியமுடிகிறது. கணவனைப் பிரிந்து வாழும் பெண்கள் ஊராரின் ஏளத்திற்கும், பெற்றோரின் புறக்கணிப்புக்கும் ஆளாக நேரிடும் என்பதை மாலதி பாத்திரம் வாயிலாக அறிய முடிகிறது.

# 'தமிழச்சியின் கத்தி' - ஒரு வீர உணர்ச்சிக் காப்பியம்

முனைவர் மு.பிளாரன்ஸ்,
மகளிர் கிறிஸ்தவக் கல்லூரி
சென்னை - 6

பாரதிதாசன் திராவிட இயக்கத்தின் கொள்கைகளை எதிரொலிக்கும் வகையில் வடவரைத் தாக்கி, ஆரியரைப் பழித்து குறிஞ்சித் திரட்டு, தமிழச்சியின் கத்தி முதலான சிறுகாப்பியங்களைப் படைத்தார். தமிழச்சியின் கத்தி படைக்கப்பட்ட காலம் தமிழர்களிடையே தமிழுணர்வு தலைதூக்கி நின்ற காலம். பெரியாரின் கொள்கைகளுக்கு இலக்கிய வடிவம் கொடுக்க பாரதிதாசன் மேற்கொணட முயற்சிகளுள் ஒன்றுதான் தமிழச்சியின் கத்தி. இக்காப்பியம் முழுவதிலும் தமிழர்களின் மேண்மைமிக்க பண்பாட்டையும் வீரமிக்க பாரம்பரியத்தையும் எடுத்துரைக்கிறார். வடக்கர்கள் தமிழர்களை வஞ்சகமாக அரசாண்டதையும், தமிழர்கள் அனுபவித்த தொல்லைகளையும் துயரங்களையும் விளக்கியுள்ளார். ஒரே உணர்ச்சிக் காப்பியமாகவே தமிழச்சியின் கத்தி படைக்கப்பட்டுள்ளது என்பதை ஆய்வதே இக்கட்டுரை.

கதை சுருக்கம்

கி.பி.18ஆம் நூற்றாண்டில் டில்லியில் பாதுஷா ஆட்சி செலுத்தினான். அவனது ஆட்சியின் கீழ் நவாப் ஆர்க்காட்டுப் பகுதியை ஆண்டு வந்தான். ஆர்க்காடு 172 பாளையங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அதன் தலைவர்கள் பாளையப் பட்டுகள் என்று அழைக்கப்பட்டனர். செஞ்சி பாளையப் பட்டாகத் தேசிங்குராசன் சிலகாலம் ஆட்சி புரிந்தான். அவன் தமிழரை இகழும் தன்மை வாய்ந்தவன். அவனிடம் சிப்பாய் தலைவன் சுபேதார் - சுதரிசன் சிங் என்பவன் பணிபுரிந்து வந்தான். ஒரு நாள் சுதரிசன் சிங் கடற்கரை ஓரமாகச் செல்லும் வழியில் வளவனூர் என்னுமிடத்தில் தென்னந்தோப்பில் "திடம்மன்" என்பவனைக் காண, அவனுடன் அவன் வீட்டிற்குச் சென்றான். திம்மன் மனைவி சுப்பம்மா பெற்ற பிள்ளைகளுக்கு உணவு பரிமாறுவது போல உள்ளன்போடு உபசரித்தாள்.

சுதரிசன் சிங் சுப்பம்மா மீது தகாத எண்ணம் கொண்டான். உண்ட வீட்டிற்கே இரண்டகம் நினைத்தான். அவளைத் தன் பார்வையால் களங்கப்படுத்தினான். பல ஆசை வார்த்தைகளைப் பேசி அவளை தன்வசம் இழுக்க முயன்றான். முடியாததால் திம்மனிடம் சிப்பாய் வேலை வாங்கித் தருவதாகவும், உடனே சுபேதாராகச் செய்யலாம் என்றும் ஆசை காட்டினான். சுப்பம்மா எவ்வளவோ தடுத்தும் அதைக் கேட்க விரும்பாத திம்மன் இரு தினங்களில் தன் மனைவியையும் அழைத்துக் கொண்டு அவனுடன் சென்றான். செல்லும் வழியில் சிலர் அவன் வண்டியைச் சூழ்ந்து கொண்டனர். சுதரிசன் சிங் மாயமாய் மறைந்து விட்டான். வண்டியைச் சூழ்ந்து கொண்ட தமிழர்கள் திம்மனிடம் எவ்வளவோ சொல்லியும் கேட்காமல்

விடை தருவீர் என்றான். அது கேட்டு அவர்கள் வருந்தினர். சுப்பம்மா "கத்தி ஒன்று கொடுங்கள்" என்று தற்காப்புக்காகக் கேட்டு வாங்கிக் கொண்டாள். அவர்கள் அவளை வாழ்த்தி, கத்தி தந்து அனுப்பினர். போகும் வழியில் சுதரிசன் வந்து சேர்ந்தான். செஞ்சிப் புறத்தில் உள்ள குடிசை ஒன்றில் இருவரையும் தங்க வைத்தான்.

மறுநாள் காலையில் சிப்பாய்க்குரிய ஆடைகளுடன் வந்து திம்மனை அழைத்துச் சென்றான். குப்பு, முருகி என்னும் இரு பெண்களைச் சுப்பம்மாவுக்குத் துணையாக வைத்தான். திம்மனைக் கூட்டிச் சென்று கோட்டை அறை ஒன்றில் அடைத்து வைத்தான். திம்மனுக்கு நல்ல வேலை ஏற்பாடு செய்ததாற்காகவேனும் தன்னை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினான். அடுக்காத நினைவு கொண்டீர், எனது கற்பு நிலை கெட்ட பின்னர் இந்த நீனில் வாழ்வை வேண்டேன், கொண்ட எண்ணத்தை மாற்றிக்கொள்வீர்" எனச் சீறினாள் சுப்பம்மா, உடனே சுதரிசன் "நான் உந்தன் வளம் சோதித்தேக், இன்றிங்கு நடந்தவற்றைத் திம்மன்பால் இயம்ப வேண்டாம்" என்று கூறிவிட்டு அங்கிருந்து நழுவினான். கணவன் வரவில்லையே என்று கலங்கினாள். சுப்பம்மா, திம்மனும் அவ்வாறே சுப்பம்மாவை எண்ணி தவித்துக் கொண்டிருந்தான்.

அன்று இரவில் சுப்பம்மா இருந்த குடிசையைத் தீக்கிரையாக்கினான். சுதரிசன், சுப்பம்மா தப்பி வெளிவே வந்து அருகிலிருக்கும் சேரிக்குச் சென்று நடந்தவற்றைக் கூறி, தனக்கு உதவுமாறு வேண்டினாள். சேரியில் செங்கான் வீட்டில் தங்கியிருந்த சுப்பம்மாவுக்கு குப்புவும் முருகியும் சோறு சமைத்து செங்கான மூலம் கொடுத்தனுப்பினர். உணவை உண்ட சாப்பாமா தன் நன்றியைத் தெரிவித்தான். இரவுச் சாப்பாட்டில் மயக்கப் பொடியைத் தூவினர். ஏதுமறியாத செங்கான் பரிமாறினான். சுப்பம்மா உணர்விழந்தாள். மயங்கிக் கிடந்தவளைக் கற்பழித்தான் சுதரிசன். சுதரிசனின் ஆவியைப் போக்கவே அவள் தன் ஆவியைப் போக்கிக் கொள்ளவில்லை. சேரி மக்களோடும் செங்கானோடும் சென்று சுதரிசன் வீட்டுக் கதைவைத் தட்டினாள். கதவைத் திறந்த சுதரிசனின் நடுமார்பில் கத்தியை நாட்டினாள். செங்கான் குப்பு, முருகியை வெட்டி சாய்த்தான். சுதரிசன் கொல்லப்பட்ட செய்தி மன்னனுக்கு எட்டியது. மன்னன் திம்மனை விசாரித்தான். சுதரிசனின் சூழ்ச்சியையும் அதனால் அவன் பலியானதையும் அறிந்து கொண்டான். திம்மனை நெடு நீதியில் இழுத்துச் சென்று அவன் மனைவியையுமே கொலைக்கு உதவிய பிறரையும் பிடித்துவரக் கட்டளையிட்டான். திம்மனைச் சிப்பாய்கள் இழுத்து வருவதைக் கண்டனர். செங்கானும் சுப்பம்மாவும், "அத்தனா" என்று எதிர்வந்தாள் சுப்பம்மா. நடந்ததைக் கூறினாள். திம்மனும் செங்கானும் சிப்பாய்கள் மேல் பாய்ந்து இருவரைக் கொன்றனர். செய்தி கேட்டு தேசிங்கு ராஜனின் சிப்பாய்கள் நூறு பேருக்கு மேல் வந்தனர். ஒரு வீரன் வெள்ளைக் குதிரையின் மேல் வந்தான். அவனைத் தேசிங்குராஜன் எனத் தவறாக நினைத்து திம்மன், தன் வாளால்

வெட்டினான். சிப்பாய்கள் சிலர் திம்மனைக் கொன்றனர். சுப்பம்மாவை மன்னனிடம் இழுத்து வந்து நடந்தவற்றைக் கூறினர் சிப்பாய்கள். கோபம் கொண்டான் மன்னன்., சுப்பம்மா தியாக நின்றாள். குமுறினாள், சபித்தாள். நீசன் கையால் சாவது கூடாது என்றெண்ணி குரல்வளையின் கீழ் நோக்கி மூச்சை இறுக்கினாள். நிலத்தில் சாய்ந்தாள் இதுவே தமிழச்சியின் கத்தி விளக்கும் கதைச் சுருக்கம்.

பாரதிதாசன் சுப்பம்மாவை அறிமுகப்படுத்தும் விதமே பண்டைத் தமிழ்ப் பெண்களின் தாய்மைக் குணத்தை வெளிக்காட்டுவதாக உள்ளது விருந்தோம்பும் பண்பு சுப்பம்மாவிடம் இருப்பதைப் பாரதிதாசன்,

"திம்மன் மனைவி சுப்பம்மா என்பவள்
எம்மனி தனையும் ஈன்ற பிள்ளையாய்க்
கொள்ளும் உள்ளம் கொண்டவள் - (தமிழச்சியின் கத்தி, பக்.2)

என்று கூறி அறிமுகப்படுத்துகின்றார். சிப்பாய் வேலையில் அமர்த்துவதாகக் கூறித் திம்மனைத் தன்மீது மதிப்பு கொள்ளச் செய்கிறான் சுதரிசன். அவனது வஞ்சத்தைப் புரிந்து கொண்ட சுப்பம்மா,

என்ன இருந்தாலும் சுபேதாரை நான்
என் வரைக்கும் நம்பமுடியாது - (தமிழச்சியின் கத்தி - பக்.5)

என்று எடுத்த எடுப்பிலேயே தனது ஐயப் பாட்டைத் தன் கணவனிடம் தெரிவித்து விடுகிறாள்.

சுப்பம்மா இருந்த குடிசையைத் தீக்கிரையாக்கி, அந்தக் குழப்ப நேரத்தில் அவளை அடையவதற்கு முயல்கிறான் சுதரிசன்சிங். அஞ்சவில்லை அவள், "தீ என்னை வாட்டினும் கையைத் தொடாதேயடா. இந்த முத்தமிழ் நாட்டுக்கு மானம் பெரிதன்றி மூச்சுப் பெரிதில்லை காண்" என்றாள். தன்னுடைய உயிரைக் கொடுத்தேனும் உயிரினும் மேலான கற்பைக் காப்பதில் மிகக் கவனமாக இருப்பதாகப் படைக்கப்பட்டுள்ளாள் சுப்பம்மா. அவளை எவ்விதமான நேரடி வன்முறைகளாலும் அனுபவிக்க முடியாது என்பதை சுபேதார் உணர்ந்து கொள்கிறான். அதனால்தான் அவளை உணர்விழக்கச் செய்து உறவு கொள்கிறேன். அவள் மயங்கி விழும்போது கூடத் தான் ஏதோ சூதுக்குப் பலியாகிவிட்டதை உணர்ந்து கத்தியைத் தொட்டுப் பார்த்தாள். சொற்களில் தீயைக் கலந்து வீரசபதம் செய்கிறாள் சுப்பம்மா. மயக்கம் தெளிந்து எழுந்ததும் தன் கற்பு பறிபோனதை உணர்ந்தாள். ஐயோ என்று தலையில் அடித்து அழவில்லை. மாறாக,

"போயிற்று மானம் உணர்ந்தாள் - உடல்
போயிற்று! நல்லுயிர் தானும்
போயிற்று போவதன் முன்னே சென்று
போக்கிடுவேன் அவ னாவி" - (தமிழச்சியின் கத்தி, பக்.43)

என்று மீண்டும் வீர சபதத்தையே முழக்குகிறாள்.

# பாரதியின் ஆளுமைப் பண்புகள்

மு.ருக்மணி
ஸ்ரீஆதி சுஞ்சுனகிரி மகளிர் கல்லூரி, கம்பம்.

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்களுள் தனித்திறனும் சிறப்பும் வாய்ந்தவர் சுப்பிரமணியபாரதி ஆவார். பாரதி தமிழ்க் கவிதையுலகில் பல புதுமைகளையும் புரட்சிகளையும் செய்து "பாரதி யுகம்" என்னும் ஒரு புது யுகத்தினைத் தோற்றுவித்துள்ளார். பாரதியின் இத்தகுச் சிறப்பிற்கு அவரது ஆளுமைப் பண்புகளே அடிப்படைக் காரணமாய் அமைந்துள்ளன. எனவே பாரதியின் ஆளுமைப் பண்புகளைக் காண்பதாக இக்கட்டுரை அமைகின்றது.

## ஆளுமைப் பண்புகள் விளக்கம்

ஒரு மனிதனிடம் காணப்படும் "நிலையான நடத்தைக் கூறுகளே" ஆளுமைப் பண்புக்கூறுகள் எனப்படும். ஒவ்வொரு மனிதனும் தனக்குத்தானே சில சிறப்புப் பண்புகளைப் பெற்றிருப்பர். இப்பண்புகள் ஆளுமையுடன் பெரிதும் தொடர்புடையனவாகும். மேலும் இப்பண்புகளே, ஆளுமையினைப் பிரதிபலித்துப் பொலிவுறச் செய்கின்றன. ஆளுமைப் பண்புகளாக ஊவியலறிஞர்கள் பின் வருவனவற்றைக் குறிப்பிடுகின்றனர். அவை, பிறரிடமிருந்து ஒருவரை வேறுபடுத்திக் காட்டக்கூடிய தனிச்சிறப்புப் பண்புகள், முழு மூச்சுடன் செய்படல், மனவெழுச்சி முதிர்ச்சி, நம்பிக்கையுணர்வு, தோழமை, எதிர்ப்பாற்றல், அழகுணர் ஆற்றல், போன்றவை ஆகும். (சந்தானம் எஸ். கல்வி உளவியலின் அடிப்படைகள், ப.446) ஏ.ஜெ.ஜோன் என்பவர், ஒருவர் பார்க்கும்முறை, உடை உடுக்கும் முறை, நடக்கும் முறை போன்றவற்றினை பேசும்முறை பண்புகளாகச் சுட்டுகின்றார். (இராஜமாணிக்கம், மு.ஆளுமை உளவியல் துறைகள், ப.151).

## பாரதியின் ஆளுமைப் பண்புகள்

உளவியலார் குறிப்பிடும் ஆளுமைப் பண்புகள் பாரதியினிடம் பொருந்தி காணப்படுகின்றன. அவை பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

### நிலையான நடத்தைக் கூறுகள்

பாரதியினிடம் விடுதலை வேட்கை, நாட்டிற்குழைத்தல், இமைப்பொழுதும் சோராதிருத்தல், அஞ்சாமல் எதனையும் சொல்லுதல், சொன்னதைச் செய்யும் செயல்திறன், கடவுள் நம்பிக்கையும் வழிபாடும் போன்றவைகள் நிலையான நடத்தைக் கூறுகளாக அமைந்துள்ளன.

### தனித்திறன்

பாரதி பிறரிடமிருந்து வேறுபட்டுத் தனிச்சிறப்புடன் விளங்கியவர். பாரதியின் தோற்றம், நடை, உடை, பாவனை, சிந்தனைகள் மற்றும் செயல்கள் ஆகியவை பாரதியைப் பிறரிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவனவாகும். மேலும் பாரதியின் சர்வதேச சிந்தனைத்திறல், மேதாவித்தனம், தீர்க்கதரிசனம் ஆத்மஞானம் போன்றவை பாரதியின்

தனிச்சிறப்புப் பண்புகளாகும்.

மனவெழுச்சி முதிர்ச்சி

தன்னை எல்லையற்ற பரம்பொருளாக நினைத்த பாரதி எங்கெங்கு காணினும் தன்னையே. தன் இனத்தையே. எல்லையற்ற தனது விரிவையும் விளக்கத்தையுமே கண்டார். பாரதியின் புதிய அத்வைதம் "காக்கையும், குருவியையும், நீள்கடலையும், உயர்மலையை மானித்தோடு இணைந்த புதிய சகோதரத்துவம் ஆத்மீகக் குடியரசாக மலர்ந்துள்ளது எனலாம். பாரதியின் பறவைக் காதல் அவரது வேதாந்தத்தின் விளைவு எனலாம். காக்கை - கண்ணனின் கரிய உருவத்தையும் குருவி - ஆத்ம விடுதலையையும், குயில் - ஆத்மாவின் காதலையும் குறிப்பாக உருவகிக்கின்றன. இந்தக் குறியீடுகளின் வழி மானுடர் பறவைச் சங்கமத்தையும், தெய்வத்தின் சாதாரன அவதாரத்தையும் கண்டு தரிசிக்க முடிகின்றது. இவை ஆத்மாவுக்கும் பரம்பொருளுக்கும் இணைச்சங்கிலியாகத் திகழ்கின்றன (செல்லப்பா, சி.சு.பாரதியம், பக்.121, 122) இங்ஙனம் பாரதியின் மனவெழுச்சி முதிர்ந்து அவரை ஆத்மஞானியாகத் திகழ வைத்தள்ளது எனலாம்.

நம்பிக்கையுணர்வு

பாரதி நாட்டு மக்களுக்கு நல்லன செய்வதிலும், தான் எண்ணியதை எண்ணியாங்கு எய்தலிலும் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தார். நாட்டில்

"பெயாக்குங் கலியை நான் கொன்று
மெய்க்குங் கிருத யுகத்தினையே கொணர்வேன்"
(பாரதியார் கவிதைகள், ப.17)

என்றும்,

"மண்ணில் யார்க்கும் துயரின்றிச் செய்வேன்
வறுமை என்பதை மண்மிசை மாய்ப்பேன்"
(பாரதியார் கவிதைகள், ப.73)

என்றும் கூறி நம்பிக்கையுணர்வின் உச்சநிலையை அடைந்தவர் பாரதி. பாரதிக்கு முன் யாரிடமும் இவ்வளவு அழுத்தமான நம்பிக்கையைக் காணமுடியவில்லை என்கிறார் மீனாட்சி முருகரத்தனம். (மீனாட்சி முருகரத்தனம், பாரதியியல், ப.87)

தோழமை

பாரதி உயர்ந்தவன் - தாழ்ந்தவன் என்ற பேதமின்றி அனைவரிடமும் தோழமை கொண்டு வாழ்ந்துள்ளார். பாரதி பாண்டிச்சேரியில் வாழ்ந்த போது அரிசன இளைஞன், ரா.கனகலிங்கம் என்பவருக்குப் புணூல் அணிவித்து அவருடன் தோழமை கொண்டுள்ளார். "தம்பேலா" என்ற தோட்டிகளின் தலைவனின் இல்லத்திற்குச் சென்று அவருடைய இல்லத் திண்ணையில் அமர்ந்து அவருடன் பேசித் தோழமை கொண்டுள்ளார். மேலும் அரவிந்தர், வ.வெ.சு.ஐயர், குவளையூர் கிருஷ்ணமாச்சாரி போன்றவர்களுடனும் தோழமை கொண்டுள்ளார். இதற்கும் மேலாக அஃறிணைப் பொருள்களான காக்கை, குருவி, கடல், மலை போன்றவற்றுடனும் பாரதி தோழமை கொண்டு வாழ்ந்துள்ளார். இதனை,

"காக்கை குருவி எங்கள் சாதி - நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்"

(பாரதியார் கவிதைகள், ப.119)

என்பதன் வழி அறியலாம். பாரதி அஃறிணைப் பொருள்களுடன் கொண்டுள்ள தோழமையே அவரது தனித்துவ ஆளுமைப் பண்பாக வெளிப்படுத்துகின்றது எனலாம்.

எதிர்ப்பாற்றல்

பாரதி அநீதிகளையும், கொடுமைகளையும் எதிர்த்துள்ளார். சமுதாயத்தில் காணப்பட்ட சாதிக் கொடுமைகள், சமயப்பூசல்கள். பெண்ணடிமைத்தனம், இளமை மணம் போன்றவைகளைப் பாரதி எதிர்த்துள்ளார். மேலும் நடிப்புச் சுதேசிகளையும், தமிழிசைப் புறக்கணித்து ஆங்கில மோகங் கொண்டு அலைபவர்களையும் பாரதி எதிர்த்துள்ளார். இவை பாரதியின் எதிர்ப்பாற்றலை வெளிப்படுத்துவனவாகும்.

அழகுணர் ஆற்றல்

பாரதி தெய்வீக மணங்கமழ இயற்கையினை பாடியுள்ளார். சிட்டுக்குருவியைப் பற்றி பாரதி தீட்டும் சித்திரம் அவரது அழகுணர்ச்சியை வெளிப்படுத்துகின்றது. "சிறிய தானியம் போன்ற மூக்கு. சின்னக் கண்கள், சின்னத்தலை, வெள்ளைக் கழுத்து, அழகிய மங்கல் நிறமுடைய பட்டுப்போர்த்த வயறு கருமையும் வெண்மையும் கலந்த சாம்பல் நிறுத்தலாகிய பட்டுப் போர்த்த முதுகு, சிறிய தோகை, துளித்துளிக் கால்கள் (சுப்பிரமணிய பாரதி. சி., பாரதியின் கட்டுரைகள் (கலைகள்), சிட்டுக்குருவி). சிட்டுக்குருவியின் அழகிய சின்னஞ்சிறிய வடிவம் பாரதியின் உள்ளத்தில் எல்லையற்ற அழகுணர்ச்சியைத் தோற்றுவித்துள்ளது எனலாம்.

முடிவு

பாரதியின் அகமும் புறமும் ஒன்றிணைந்து அவரது ஆளுமைப் பண்புகளாக வெளிப்பட்டுள்ளன. பாரதியின் தூய எண்ணம், தெளிந்த சிந்தனை, அஞ்சாமை போன்ற அகப்பண்புகள், நேர்கொண்ட பார்வை, நிமிர்ந்த நன்னடை, மிகச் சாதுரியமாகப் பேசும் ஞானச் செருக்கு போன்ற புறப்பண்புகளாக வெளிப்பட்டுள்ளன. மேலும் பாரதி தான் எண்ணியதை சொல்லியும், சொன்னதைச் செய்தும் வாழ்ந்து காட்டித் தன் தனித்துவ ஆளுமைப் பண்புகளை வெளிப்படுத்தியுள்ளார் எனலாம்.

துணைநூல்கள்

1.சுப்பிரமணிய பாரதி, சி.பாரதியார் கவிதைகள் (செம்பதிப்பு) மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1987.

2.சந்தானம், எஸ்., கல்வி உளவியலின் அடிப்படைகள் (முதற்பதிப்பு), பழனியப்பா பிரதர்ஸ். சென்னை, 1973.

# சல்மா கவிதைகளில் அழகியல் மொழி

சா.ஆரோக்கியம்
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை
அமெரிக்கன் கல்லூரி மதுரை.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேலை நாடுகளில் தோற்றம் கொண்ட இலக்கிய வகைமைகளில் ஒன்றானது அழகியல். இத்தகு வெளிகளை வாழ்க்கையின் பல்வேறு தளங்களிலிருந்தும் உணர்ந்து கொள்ளலாம். சங்க இலக்கியங்களில் இதற்கு முக்கியத்துவமளித்து படைக்கப்பட்டிருக்கிறதை பனுவல்கள் வழியாக வரையறை செய்ய முடிகின்றது. உணர்ச்சிகளின் அழகுகளே அழகியலாக வடிவம் பெறுகின்றன என எண்ணலாம். கவி அழகியல் நூல் பிடித்து கூர்மையாக பதிவு செய்திருக்கிறார்.

கவிதாயினியின் அழகியல் வெளிகளாக ஆளரவமற்ற நடுக்கடலில் பயணிக்கும் பறவையின் சுதந்திரமான வெளிகளையே அனுமானிக்கலாம். புனைவாக்கங்களிலிருந்து தென்னை தமக்கான வெள்ரியை கண்டடைதல். ஆண்கள் கைக்கொண்டு உற்பத்தி செய்ததிலிருந்து மொழியை பெண்களே ஆளுமைக் குள்ளாக்கப்பட்டு அவற்றினூடாக தாங்களது மொழியை அறியச் செய்கிறார்கள். உதாரணமாக அடிமைப்படுத்தப்படுதல், ஒடக்கப்படுதல் இவற்றிலிருந்து விடுதலை மனக் கிளர்வுகள், வேட்கைகள், அனுபவ வலிகள், துக்கங்கள், தரபங்கறை இன்றைக்கு பெண் கவிகளது பிரிவுகளில் வருகின்றன. இதில் அழகியல் தளமென்று பார்க்கும் போது மேலான பெண்களது இருப்புகளிலிருந்து வெளிவரும் பதிகளில் அழகியலை நாம் பார்க்கலாம்.

சல்மாவின் கவிதைகளில் அழகியலின் தளங்களாக எனது வரையறை நோக்கில் கட்டமைக்கப்பட்ட வெளிகளிலிருந்து நிமிறி பிரிந்துருகின்றன. பெண்களது இருப்பு சார்ந்தும் வெளி சார்ந்தும் பதிவாகியிருக்கின்றன. இவ்வெளி கவிதைகளில் ஒரு தனி மயிரினது எண்ணங்கள் கனவுகள் கூட ஆண்களால் செதுக்கப்பட்டதாக இருக்கின்ற நிலையின் எல்லைகளே வாழ்வியல் நீரோட்டத்தில் எல்லா சந்தர்ப்பங்களிலும் எல்லோரும் பல்வேறு விதமான துன்பங்களை, ஏக்கங்களை பயணித்து தான் வருகிறேர். ஜனநாயகத்தால் சக மனுஷிகளை பெண்களது அனுபவங்கள் பின்பது.

சுடுமணலில் பச்சிளம் குழந்தை இட்டு செல்லும் மனத்தின் வலிகளை உள்ளடக்கிய நிலையாக உணரலாம். கபி பெண்களது இடுப்பின் மீதான ஊழங்கற்களை செதுக்குகின்ற கனம் (பதிவாக்குகின்ற கனம்) அதாவது அழகியல் வெளிகளையும் தாண்டிய பெண்ணிய சிந்தனை உலகமாக ஒளிக்கின்ற இடங்களிலே அனேக இடங்கள் வந்திருக்ன்றன. தேர்ந்தெடுக்கப்படுகின்ற அடிப்படை தேவைகள் சுதந்திரம் என்பது ஒருவர் தீர்மானிக்கின்ற கனமாக பெண்களது வெளி அமைந்திருக்கின்றன.

அனைத்து தளங்கள்

பெண் கவிதைகளில் அழகியல் போக்குகள்

சுடப்பட்ட கனியின் இன்சுவை உணர்திற்று பார்வையின் தீட்சண்பிற்கை

ஒரு சாமத்தில் சிறு நரம்போடு பொழிந்த மழை இலைச் சூட்டின் விளிம்பில் சொட்டுவது போல் இளமை களவாடப் பட்டிருக்கிறது.

கு. உமாதேவி - திசைகளை பருகியவள்

பறவையொன்று மற்றொரு பறவைக்கு பருவமொன்றைப் பரிசளிக்கிறது என்பது சோம்பிற் திரியும் மனிதர்களையும் இரவின்நீள அகலங்களையும்
இறந் தொகையின் பாடல்களையும்
பருவங்கள் நகரும் ஒலிகளையும் தான்.

குட்டி ரேவதி - முதுவேனிலும் பறவைகளும்

உனது குரலை
என் உடல் முழுதாலும் அணைத்து
ஒரு நம்பிக்கையைப் பரிசளிக்க முடியும்
புறாவின் நெஞ்சைத் தடவுவது போலவா
கன்றுக் குட்டியின் தலையை
வுருடுவது போலவோ அதைத் தொட இயலும்
இதலின் நாக்கு
ஒரு பகலின் விளிம்பிலிருந்து
மறு பகலின் கைப்பிடிச் சுவருக்குத் தாவுகிறது

அனைத்து தளங்களிலிருந்தும் பெண்கள் எதிர்கொள்கின்ற வலிகளை வெளிப்படுத்தும் கனம் அடக்குகிறது. கவி சொல்லியின் இவ்வெளி அழகியலாக தாய் சேய் உறவு, நட்பு, அனைத்து வெளிகளிலிருந்தும் பெண் மொழி அழகியலாக வெளிவருகிறது.

பெண் மொழியின் தருணங்களை மிக கவனமாக கவர்ந்து சொல்ல முனைந்திருக்கிறார்.

தொலை பேசியில் அழைக்க
நீண்ட நாட்களாய் கூப்பிடுகிறது
சினேகிதனின் நினைவு
மழையில்
மண் நம்முடன் கரைகிறது
தன் அர்த்தமிழந்து நிறம் மங்கிய இளமை

தனது உணர்வேட்டத்தின் எல்லைகளானவை மாறுதலிக்கப்படும் கனம் இவ்வெளி அழகியலாக வெளி கொணர்கிறார்.

தொன்மையான
செவி வழிக் கதைகளால்
நிரப்பப்பட்ட மூளையில்
ஒலிக் குறிகளாய் மாறிய

கர்ட்சிகள் நிரம்பி வழிகின்றன.

கட்டமைக்கப்பட்ட பெண்ணிய வெளிகளின் உறைந்த நிலைகளை புனைந்து அவ்விடத்தின் நன்மையையம் நுட்பமாக கையாண்டிருக்கின்றன:

பெண்ணிய இடுப்பின் மீது நிழலாய் பின்தொடர்ந்து வருகின்ற போக்கை தனக்கான அன்றாட ஒரு சிறு அசையின் பொருட்டாக அத் தருணத்தை வெளிகொணரும் முகமாக

எனது உதடுகளிலிருர் து சிதறும்
வார்த்தைகளை பொறுக்கி
நிழலாய் பின் தொடரும் செவிகள்
இவ் வரிகளை உள்வாங்கலாம்.

பெண்ணின் ஆழ்மன அவசங்களை புழுக்கமாக வெளிப்படுத்தும் கனம்.

அழகியலின் முகங்களை தனக்கான ஞாபகங்கள், கனவுகள், துன்பங்கள், அவஸ்தைகள், எவ்வாறெல்லாம் பிறர் கொள்ள முடிந்திருக்கிறதை காட்சி படுத்தி தன்மை வழி உணர முடிந்தாகிறது. பெண்ணிய சிந்தனை முறைகளை வாழ்வியரல் சலனங்களிலிருந்து வெளிப்படுத்தி அவ்வகைகளை அடக்க முயன்றிருக்கிறார். சிறப்பாக மனஅவஸ்தைகளின் கட்டமைப்பு வெளி, இடுப்பு இருக்கைகளில் நுழைந்து தனது கவிதையை பொறுக்கி வடிவத்தை அழகிய வடிவத்தால் அழகாக கொடுக்க முனைந்த தருணங்களை உள்வாங்க முடிந்தன இவ் சிறு முயற்சியில்.

# தற்கால இலக்கியத்தில் பெண்மொழி - கவிதையை முன் வைத்து

ஞா.குருசாமி, இளநிலை ஆய்வாளர்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

தமிழ் இலக்கியம் பல நூற்றாண்டு கால கவிதை மரபைக் கொண்டிருக்கிறது. ஔவையார் தொடங்கி இன்றுவரை பல பெண் கவிஞர்கள் தங்கள் பதிவுகளை நிகழ்த்தி இருந்தாலும் பெரும்பகுதியான படைப்புலகம் ஆண்களிடமே இருந்து வந்திருக்கிறது. பெண்களின் வாழ்க்கைய வரையறுத்த மரபுகளும், அவை சார்ந்த சமூக நிகழ்வுகளும் இலக்கியத்தினூடே காணப்பட்டாலும் அவையாவும் பெண்ணின் வாழ்க்கையைப் பற்றி ஓர் ஆண் இன்னொருவருக்கு சொல்வது போலவே பெரும்பாலும் அமைந்திருக்கிறது. அம்மாதிரியான மொழியமைப்பில் அடிபட்டு அழுபவனுக்கும், அடிபட்டவனைப் பார்த்து அழுபவனுக்குமான வேறுபாடு தெளிவாகப் புலப்படுகின்றது. இதனாலேயே பெண் கவிஞர்கள் எங்களுக்கான கருத்தாடல்களை நாங்களே சொல்வதென்று அவர்களுக்கான மொழியமைப்பை உருவாக்கத் தொடங்கி, குறிப்பிடத்தக்க வளர்ச்சியும் வெற்றியும் பெற்றிருக்கின்றனர்.

## பெண்மொழி விளக்கம்:

கருத்துப் பறிமாற்றத்திற்கே பயன்படும் மொழியமைப்பில் ஆண்மொழி, பெண்மொழி என்ற பாகுபாடு இருக்காது எனினும், ஆணுக்கான பதிவுகளை பெண் நிகழ்த்தும் போது புலனாகும் வேறுபாடு, பெண்ணுக்கான பதிவுகளை ஆண் நிகழ்த்தும் போதும் புலனாகும். பெண்ணியக் கவிஞருள் ஒருவரான மாலதி மைத்ரி, "பெண்மொழி என்பது அரசியல். பெண் இருப்பைப் பற்றியும், பெண் உடலைப் பற்றியும், மொழி மற்றும் சமூக, குடும்ப, நிறுவன வெளிகளில் உருவாக்கப்பட்டுள்ள அவளுக்கெதிரான கருத்தாக்கங்களையும், மதிப்பீடுகளையும் சிதைப்பதும் அவற்றின் வன்முறைக்குஎதிராகக் குரல் எழுப்புவதும்தான் பெண்ணின் மாற்று அரசியல்" என்கிறார்.

## கவிதைகளில் பெண்மொழி அமைப்பு

பெண் கவிஞர்கள் பெண்களுக்கான பிரச்சினைகளை படைப்புக்குள் கொண்டு வரும்போது, அவற்றில் அமையும் மொழியமைப்பை நான்காக வகைப்படுத்தலாம். அவை பின்வருமாறு:

1. மரபுகளை மீறும் விருப்பத்தை முன் வைத்தல்
2. மரபுக்குள் வாழ்ந்ததால் உண்டான வலிகளைப் புலப்படுத்துதல்
3. அவையல் கிளவி என ஒதுக்கிய சொற்களைக் கையாளுதல்
4. சமூகச்சாடல் மூலம் வெளிப்படுத்தும் புரட்சிக் குரல்.

(1) மரபுகளை மீறும் விருப்பம்:

*"அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த*
*நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப"* (தொல் 1045)

என்பதால் தொல்காப்பியக் காலம் முதலே பெண்களுக்கான மரபுக் கட்டுமானம் இருந்து வந்திருப்பது அறியப்படுகிறது. இதன் தொடர்ச்சியாகவே இன்றைய 'சமுதாயத்தில் பெண் வாய்விட்டு சிரிக்கக்கூடாது'. 'அடக்க ஒடுக்கமாக இருக்க வேண்டும்', 'கால்களை விரித்த நிலையில் தூங்கக்கூடாது' என்ற மரபுக் கட்டுமானங்கள் இருந்துவருகின்றன. இம்மாதிரியான மரபுப்பிடிகளில் இருந்து விடுபடவேண்டும் என்ற விருப்பம் அனைத்துப் பெண்ணிய கவிஞர்கள் கவிதைகளிலும் காணப்படுகிறது. ஒவ்வொரு பெண்ணும் சுயமாகச் சிந்திப்பதை வலியுறுத்தி, சமூகத்தின் சரிபாதி மதிப்பைப் பெறுவதற்கான முயற்சியாகவே இவ்வகை மொழிஅமைப்பு அமைகிறது எனலாம்.

*"என்னிடமும் உண்டு*
*இசைவின்மையைப் பிரதிபலிக்கும்*
*இந்த இரவுக்கான பாடல்*
*அது மொத்த உலகையும்கூட*
*அபத்தத்திற்குள்ளாக்கலாம்"*

என்னும் சல்மாவின் கவிதை ஆணாதிக்கப் போக்கிற்கு எதிராகப் பெண் தன் குரலை முன்வைப்பதற்கான விருப்பத்தைக் காட்டி நிற்கிறது.

(2) வலிகளைப் புலப்படுத்துதல்:

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்ற வள்ளுவரின் கருத்துப்படி சமூகம் இருந்திருந்தால் ஏற்றத்தாழ்வும், பால்வர்க்கப் போராட்டமும் இருந்திருக்க வாய்ப்பில்லை. தனக்கான தேவையை ஒவ்வொருவரும் பூர்த்தி செய்து கொள்ளத் துவங்கும் போது இயல்பாக அவரவர்க்குள் எழும் சுயநல உணர்வே போட்டிக்கும் பொறாமைக்கும் வழிவகுத்துவிடுகிறது. ஆண் சமூகம் மரபுக்கட்டமைப்பின் வலிமைகொண்டு பெண்ணை வரையறைக்குள் வைத்திருந்தபோது பெண்கள் உணாந்த வலி அவர்கள் தம் கவிதைகளில் பல்வேறு கோணங்களில் பதிவு செய்யப்பட்டு இருக்கிறது.

பெண்ணின் வாழ்வெளி நான்கு சுவர்க்குள்ளாகவே அமைந்திருந்ததினால் உணரப்பட்ட வலி,

*"எண்ணற்ற ஜடப்பொருட்களுடனும்*
*ஒரு மனிதனோடும்*
*தொடரவியலா வாழ்க்கை*
*தொடர்கிறது அதே அறையில்"*

எனும் சல்மாவின் கவிதையில் பிரதிபலிக்கிறது. கண்ணீர் நிரம்பிய வாழ்வை, மழை, அருவி, நதி, கடல் என பல நிலைகளில் பதிவு செய்த மாலதி மைத்ரி, நீரின்றி அமையாத உலகம் போல பெண்ணின்றி உலகம் இல்லை என்பதை,

"மழைத்துளிகளெனக் கண்களிரண்டும்
உருண்டு கொண்டிருக்கின்றன
அருவியெனக் கூந்தல்
வழிந்து கொண்டிருக்கிறது
நதியென உடல்
வாழ்வைக் கடந்து கொண்டிருக்கிறது
கடலடைந்த கணத்தில்
எல்லையற்றதாகிச் சுழல்கிறது
உடலுலகு"

எனும் கவிதை வரிகளில் குறியீடாக்கிப் புலப்படுத்துகிறார்.

(3)_ஒதுக்கிய சொற்களைக் கையாளுதல்

பேசும்போது கவனத்தில் கொள்ளப்பட்ட அவையல் கிளவி, எழுத்திலும் பரவலாகக் கையாளப்பட்டது. அதைச் சமூகம் நாகரிகம் என்று கருதியது. யோனி, முலை, ஆண்குறி, போன்ற சொற்கள் பலபெண் கவிஞர்கள் கவிதைகளில் எடுத்தாளப்பட்டு இருக்கின்றன. சான்றாக, சல்மாவின் "விரிகிற தென் யோனி", என் மீது நீளும் ஓர் ஆண்குறி என்னும் கவிதைத் தொடர்களையும், குட்டி ரேவதியின் கவிதை நூல்களுள் ஒன்றான "முலைகள்" என்பதையும் குறிப்பிடலாம். இவ்வகைச் சொற்கள் நவீன கவிதைகளைவிட புதுக்கவிதைகளில் விரல்விட்டு எண்ணிவிடக்கூடிய அளவிலேயே இருந்தன எனலாம். இதைப் பெண்ணியத் திறனாய்வாளர்கள் "மாறுதலான போக்கு எனக் குறிப்பிடுகின்றனர்.

முடிவு:

(1) ஆணாதிக்கச் சமூகத்தில் பெண்களுக்கு எதிராக ஆண்கள் உருவாக்கி வைத்திருக்கும் மரபுகளைத் தகர்ப்பதற்குக் குரல் எழுப்புவதாகவும், மாற்று அரசியல் உருவாக்குவதாகவும் அமையும் மொழி அமைப்பை பெண்மொழி எனலாம்.

(2) கவிதைகளில் பெண்மொழி, மரபுகளை மீறும் விருப்பத்தை முன் வைத்தல், வலிகளைப் புலப்படுத்துதல், அவையல்கிளவி என ஒதுக்கிய சொற்களைக் கையாளுதல், சமூகச்சாடல் மூலம் வெளிப்படுத்தும் புரட்சிக்குரல் என்னும் நான்கு வகையில் அமைந்திருக்கிறது.

பார்வை நூல்கள்:

1.எம்.ஏ.சுசீலா - "தமிழிலக்கிய வெளியில் பெண்மொழியும் பெண்ணும்"
2.சல்மா - "ஒருமாலையும் இன்னொரு மாலையும்".
3.சல்மா - "பச்சைத் தேவதை"
4.மாலதி மைத்ரி - "நீரின்றி அமையாது உலகு"
5.மாலதி மைத்ரி - "நீலி".

# மீராவின் கவிதைகளில் மார்க்சீயத்தாக்கம்

ச.மணிமேகலை
ஆய்வாளர்
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை-21.

**முன்னுரை:**

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளின் எல்லையானது ஃப்ராய்டிசம், மார்க்சீயம் முதலான கொள்கைகளின் தாக்கத்தால் விரிவடைந்துள்ளது. மீராவின் கவிதையானது மார்க்சீயத் தாக்கத்தால் எல்லை விரிவடையவில்லை என்றாலும் ஒருசில கவிதைகளுக்குள் பொதுவுடைமை குறித்துப் பேசியுள்ளார். இக்கட்டுரையானது மீரா வர்க்க முரண்பாடுகளை எடுத்துக்காட்டி, சமுதாயம் ஏற்றத்தாழ்வு இல்லாமல் இருக்க வேண்டும் என்ற எண்ணத்தை கவிதைகளில் வெளிப்படுத்தியுள்ள முறை குறித்து ஆய்வதாக அமைந்துள்ளது.

**மார்க்சீயம் - விளக்கம்**

செர்மானிய பேரறிஞர்களான கார்ல் மார்க்சும், பிரெடெரிக் எங்கெல்சும் இணைந்து உருவாக்கிய சமூகவியற் கருத்துக்களின் கோவை மார்க்சீயம் என்று வழங்கப்படுகிறது. மனிதனது நலத்துக்கும், உயர்வுக்கும், உலக அமைதிக்கும் துணையாகவும், அடக்குமுறைக்கும் அடிமைத்தனத்துக்கும் சுரண்டலுக்கும் எதிராகவும் பயன்படும் தத்துவம் மார்க்சீயம் ஆகும்.

சோவியத் புரட்சியின் வெற்றிக்குப் பிறகு மார்க்சீய நெறியின் தாக்கம் உலக இலக்கியங்களில் மிகுதியானதுடன் தமிழ்க்கவிதைகளிலும் காணப்பட்டது.

இருபதாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட காலகட்டத்தில் எழுந்த இலக்கியங்களில் பொதுமைச் சிந்தனைகள் இருந்தாலும், உலகம் எந்த நிலைக்கு மாற வேண்டும் என்ற குறிக்கோள் உணர்வு இல்லை. முதன் முதலில் மார்க்சு உலகை எப்படி மாற்றியமைப்பது என்று அறிவியல் அடிப்படையில் விளக்கினார். கார்ல் மார்க்சுக்கு முந்திய காலப்பகுதிக்குரிய நிகாமை நெறியானது. "கற்பனா சோசலிசம் என்று அழைக்கப்படுகின்றது. மார்க்சுக்குப் பிற்பட்ட நிகாமை நெறியானது "விஞ்ஞான சோஷலிசம்" என்று கூறப்படுகின்றது.

சமத்துவம் வரவேண்டும் என்று உணர்ச்சி வசத்தால் எழுப்பப்படுகின்றன குரல்கள் மார்க்சீயத்தின் தாக்கம் பெற்றது என்று கருத முடியாது. இயக்கவியல் விதிகளைப் புரிந்து கொண்டு, சுரண்டலை ஒழிப்பதற்கு வர்க்கப் போராட்டம் தீர்வு என்பதை ஏற்றுக் கொண்டு அறிவியல் வழிப்பட்ட நிகாமை நெறியே அடைய வேண்டிய குறிக்கொள் என்பதை

உணர்த்துவோர் மார்க்சீயக் கொள்கையால் நெறிப்படுத்தப்பட்டவர்களாவர். இத்தகைய முற்போக்குவாதிகளிடம் நிலவக்கூடிய சமுதாய ஈடுபாட்டை கா.சிவத்தம்பி,

"...முற்போக்குவாதியினிடத்து, அறிவு பூர்வமான ஓர் சமூக அர்ப்பணநிலையும், சமூகத்தின்பால் வரிப்புக்கடப்பாடும் காணப்படுமென்பது தெளிவாகிறது". (கா.சிவத்தம்பி, இலக்கியத்தில் முற்போக்குவாதம், ப.25) என்கிறார். மீரா கவிதைகளில் அமைந்துள்ள மார்க்சீயச் சிந்தனையானது என்கிறார்.

அ)சுரண்டலுக்கு எதிர்ப்பு
ஆ)உழைப்புக்கும், பாட்டாளிக்கும் பாராட்டு
இ)வர்க்கப் போராட்டத்துக்கும், சமுதாய மாற்றத்துக்கும் வரவேற்பு
ஈ) பொதுவுடைமைச் சமுதாயத்திற்கு ஆதரவு

என்ற நான்கின் அடிப்படையில் பிரிக்கப்பட்டுள்ளது.

மேதினம்:

உழைப்பாளிகளின் வேகத்தைப் புயலுக்கு இணையாகக் கூறி அவர்களது முயற்சியால் உருவான முறையை,

"பதினெட்டாம் நூற்றாண்டில்
சிகாகோ நகரத்தில்
பதினெட்டாம் பெருக்கான
பாட்டாளி இதயம்
புதுத்திட்டம் தீட்டியதால்
புயல்வேகம் காட்டியதால்
பொன்னான மேநாள் - இப்
பூதலத்தில் உதயம் !"

(மீரா கவிதைகள், ப.134.)

என்று கூறி மே தினத்தைப் பொன்னான நாளாகக் கருதுகின்றார்.

ஏற்றத்தாழ்வினைச் சுட்டிக்காட்டும் முறை

மீரா, பொதுவுடைமையில் கொண்ட ஈடுபாடு காரணமாக நாட்டில் நிலவும் ஏற்றத்தாழ்வுகளைக் கவிதையில் தந்துள்ளார். மீராவின் "கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்" என்ற புதுக்கவிதை நூல் காதல் பற்றிய ஆற்றாமையைக் கருப்பொருளாகக் கொண்டு திகழ்ந்தாலும் மார்க்சீய நெறிப்பட்ட சிந்தனைகளும் ஊடாடியுள்ளன.

"உலகப்பன் பாட்டைப் படித்துவிட்டு
நிலத்தை மீட்கப் போனேன்"

(கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள், ப.7)

என்று பாரதிதாசனின் பொதுவுடைமைப் பாட்டால் ஏற்பட்ட தாக்கம் மீராவின் கவிதையில் வெளிப்படுகின்றது.

"என் எழுதுகோல்
வெறும் எழுதுகோல் அல்ல

தேசம் தழுவும்
பொதுவுடைமைக்கு
வரவேற்புரை எழுதும் போதும்"

கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள், ப.21

என்கிறார் மீரா. மீரா சமுதாய அமைப்பு மாற்றப்பட வேண்டும் என்ற கருத்தைப் பரவலாக வெளியிடுகின்றார். ஏழை, பணக்காரன் என்ற வேறுபாட்டை

"ஒரு பக்கம்
விக்ஸ்டப்பியின் அடிப்பாகம் போல்
ஒட்டிய வயிற்றுடன்
உலாவும் ஒரு ஜீவன்
ஒரு பக்கம்
வெடிக்கப்போகும்

பலூன் போல்
வீங்கிய வயிற்றுடன்
வீற்றிருக்கும் குபேரன்"

(கோடையும் வசந்தமும், ப.143)

ஏழையின் வயிற்றுக்கு விக்ஸ் டப்பியின் அடிப்பாகத்தையும், பணக்காரன் வயிற்றுக்கு வெடிக்கப் போகும் பலூனுக்கும் உவமையாக்குகின்றனர். காதலியைக் காதலன் பார்க்கும் போது ஏற்படக்கூடிய உள்ளக்கிளர்ச்சியை

"ஏகாதிபத்தியத்தின்
கொடுமைக்கு இரையாகும்
ஒரு சிற்றரசைப் போல்
வாடி வருந்தும் என் மேனியைப்பார்
முதலாளித்துவத்தின்
வெந்து பொசுங்கும் என் வாழ்வைப் பார்"

(கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள், ப.69)

என்று ஏகாதிபத்தியத்தின் கொடுமைக்கும், முதலாளித்துவச் சுரண்டலுக்கும் இணையாக வெளிப்படுத்துகின்றார். மேலும் இன்றிருக்கும் சமூகத்தில் நிலவும் சுரண்டல்களையும், அவைமாற வேண்டும் என்ற ஏக்கப் பெருமூச்சு விடுவோரின் ஆவலையும் மீரா வெளிப்படுத்திக்காட்டியுள்ளார்.

சமூகத்தின் நிலை

உழைப்பாளிக்கு உழைப்பிற்கு ஏற்ற கூலி கிடைப்பதில்லை. காலம் முழுவதும் உழைத்தாலும் வாழ்வில் முன்னேற்றம் ஏற்படுவதில்லை. இந்த நிலையினை மீரா,

"இனிக்கும் கரும்பை கொடுக்கின்றான்
அவன் வாழ்க்கை வேம்பாய்க் கசக்கிறது
வேதனையில் துடிக்கிறது

வாழை இலையில்
வரிசையாய்ப் பரிமாறுகின்றான்.
அவன் வாழ்க்கை
வெற்றிலை போல்
மென்று விழுங்கப்படுகிறது"

(கோடையும் வசந்தமும், பக். 74-75)

என்று எடுத்தரைக்கின்றார்.

பொதுவுடைமைக்கு ஆதரவு

பொதுவுடைமையால் ஏற்படக்கூடிய நன்மையை எடுத்துரைக்கும் வகையில்,

"எல்லார்க்கும் எல்லாம்
என்கின்ற திட்டத்தால்
இலட்சியச் சட்டத்தால்
மட்டுமே இந்த
அகிலம் தழைக்கும்
ஆம்... அகிலம் தழைக்கும்!"

(கோடையும் வசந்தமும், ப.175)

என்று மொழிகின்றார். மக்களாக மனிதாபிமானம் கொண்டு ஏழை எளியவர்களை ஆதிக்க மிட்டார்கள். பணம் ஒரு சார்பாகச் சேர்ந்து கொண்டும், எளியவர்கள் வறுமையால் வாடிக் கொண்டும் இருக்கின்றனர் என்ற நடப்பியலை மீரா எடுத்துக்காட்டி, இத்தகைய நிலை மாற வேண்டுமானால் "எல்லார்க்கும் எல்லாம்" என்ற சட்டம் கொண்டு வர வேண்டும் என்கின்றார். சட்டம் இயற்றினால் சமூகம் தழைக்கும் என்ற கருத்தானது வலியுறுத்தப்பட்டுள்ளது.

"பாடுபடும் வல்லத்தோள்
படைதிரண்டால் இங்கென்ன
பாடுபடும் தனியுடைமை
பட்டுவிடும் மண்ணில்!"

(மீரா கவிதைகள், ப.135)

என்று பாடுபடுபவர்கள் ஒன்று சேர்ந்தால் உலகில் தனியுவமையை அழித்து விடலாம் என்கிறார்.

முடிவுரை:

மீரா கவித்துவத்தைக் குலைய வைக்காமல், காதல் கவிதைக்கு நடுவிலும் மார்க்சியக் கருத்துக்களைத் தந்துள்ளார். இவரது கவிதைகளில் மென்மையான, ஆனால் இயைபு பிசகாத மார்க்சிய கொள்கையின் தாக்கம் நிலவுகிறது.

# உலகியல் வாழ்க்கையில் இலக்கியங்களின் பங்கு

சு.யோகநாதன்
விரிவுரையாளர்
தமிழ்த்துறை
செல்வம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
நாமக்கல்

வாழ்வாங்கு வாழ்ந்த மொழிகளுள் வளம் பல கண்ட உயர்தனிச் செம்மொழி தகுதி பெற்றுத் தன்னிகரற்று விளங்கும் மொழி தமிழ் எனில் மிகையன்று. காலவரையறைக்கு உட்படாத பழமையான தமிழ்மொழி வளமான இலக்கியங்களையும் பண்பட்ட இலக்கணத்தையும் பெற்றுச் சொற்பொருள் சிறப்புடன் முதன்மையுற்றுத் திகழ்கின்றது. அவ்வகையில் தமிழ் இலக்கியங்கள் மொழி, இனம், சமயம் கடந்து உலக முழுமைக்கும் ஒத்த கருத்துக்களைக் கூறிவருகின்றன. தமிழிலக்கியங்களின் சிறப்புக்கு அதன் பொதுமை நோக்கும் உலகளாவிய பார்வையுமே காரணமெனலாம்.

ஒரு மனிதன் மற்றொரு மனிதனிடம் செலுத்துக்னிற அன்பு, இரக்கம், பரிவு. பாசம் ஆகியவற்றை மனித நேயம் என்கிறோம். மனித நேயம் இருந்தால் ஒருவன் மகாத்மா நிலைக்கு உயரலாம். 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்' என்று ஓரறிவுயிர்களிடம் அன்பு பூண்டு உயிர்நேயத்தை உலகுக்கே கற்றுக்கொடுத்தவர் வள்ளலார்.

"எல்லோரும் ஓர்குலம் எல்லோரும் ஓர் நிறை
எல்லோரும் இந்நாட்டு மன்னர்"

என்று மனித நேயத்தின் உச்சத்தைத் தொட்டுக் காட்டுகிறார் பாரதி.

"பெண்கட்கு கல்வி வேண்டும்
குடித்தனம் பேணுவதற்கே
பெண்கட்கு கல்வி வேண்டும்
கல்வியைப் பேணுவதற்கே" என்கிறார் பாரதி.

பெண்கள் அறிவை வளர்த்தால் தான் வீடு மட்டுமல்ல நாடே சிறப்பையும் என்கிறார். ஆணையுயும், பெண்ணையும் பிரிக்க வேண்டாம் அவர்கள் ஒன்றே எனக் கொள்வோம். பெண்ணினம் சிறப்படைவதற்கு எது அவசியம் என்பதையும் குறிப்பிட்டுச் சென்றார்.

இந்திரர் தம் அமிழ்தம் கிடைத்தாலும் தாமே உண்ணாத தகைமையாளர்கள் நம் புறநானூற்று மாந்தர்கள்.

"உண்டால் அம்ம, இவ்வலகம் - இந்திரர்
அமிழ்தம் இயைவது ஆயினும் இனிது எனத்
தமியர் உண்டலும் இலரே"

(புறம் - 182)

புறநானூற்றுப் புலவர் தாம் பெற்ற பரிசினை தங்கள் நலனுக்காக மட்டும் பயன்படுத்திக் கொள்ளவில்லை. தங்களைச் சூழ்ந்திருந்த

அனைவர்க்கும் பகிர்ந்தளித்தனர்.

மாவட்டம் என்பது மக்கட் பண்பு. உலகில் மனிதராகப் பிறந்தவர் மக்களுக்குரிய பண்புகளைப் பெற்று வாழ வேண்டும். மக்களைப் போன்று உருவ ஒப்பும் அறிவு நுட்பமும் பெற்றிருப்பின் பண்பு உள்ளவர்களே மக்கள் எனப்படுவர். மக்கட் பண்பு இல்லாதவரை வள்ளுவர் மரம் என்றே கூறுகின்றார்.

"அரம் போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லாதவர்" (குறள் - 997)

"நாணகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர் மருட்டிற்று"

மண்ணோடு இயைந்து நிற்பது மரம் பண்போடு இணைந்து நிற்பவன் மனிதன். மரத்திற்கு உயிரோட்டமுண்டு. ஆனால் இயக்கம் இல்லை. மனிதன் இவ்விரண்டுமுடையவன். மனிதன் "நாண்" உடையவன். அது அவனுக்குச் சிறப்பு. அந்நாணைய அவன் இழக்கும் போது நாண் பெற்ற மரப்பாவை ஒதுக்கின்றான். அறிவும் பண்பும் இணைவதால் மரத்தினின்று வேறுபடும். அவன், நாணின்மையால், உயிரிருப்பினும் மரத்தை ஒத்தவன்.

மக்கள் இன்புற்று வாழ வேண்டுமெனில் அந்நாட்டின் ஆட்சிமுறை சிறந்து விளங்க வேண்டும். அக்கால ஆட்சிமுறை குடிதழுவிய தேனாட்சி முறையாகத் திகழ்ந்தது. மக்களால் விரும்பப்பட்டு மக்களுக்காக மன்னர்கள் அரசாண்டனர். மன்னன் தன் கீழ் வாழும் குடிமக்களைத் தழுவிக் கொண்டு அவர்களுக்கு வேண்டியதைச் செய்யும் பண்புள்ளவனாகத் திகழ வேண்டும். இதனை,

"குடிதழீஇ கோல்லுச்சும் மாநில மன்னன்" (குறள் 544)

திருமூலர் யாவர்க்கும் எளிதாகச் செய்யக்கூடிய அறச் செயல்களைப் பற்றிக் குறிப்பிடும்போது,

"யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்கின்னுவரை தானே"

என்று கூறுவர். சமுதாயத்தில் உயிர்களின் பசியைப் போக்குவது என்பது சிறந்த அறமாகக் கொள்ளப்பட்டது. இதைத்தான் அடியவர்கள் செய்தனர். இறைழி தொண்டு என்பது சமுதாயத் தொண்டில் தான் அடங்கியிருக்கிறது என்பதை அடியவர்கள் உணர்ந்தார்கள். அகத்திருக்கு உணவு கொடுப்பதும், வந்த விருந்தினரை உபசரிப்பதும் சிறந்த அறமாக கூறுகிறார்.

உழைப்பின் வழி செல்வத்தை தீயகுணங்களின்றி இருந்தால் மட்டுமே சேர்க்க முடியும். தற்பெருமை பணிந்து செல்லும் பண்பில்லாமை, பேராசை, கோபம், ஆகிய பண்புகள் இல்லாமல் உழைத்தால் மட்டுமே

உழைப்பின் பயனை அடைய முடியும். இதனையே நல்லாதனார்,

"தன்னை வியந்து தடுக்கலும் தாழிவின்றி
கொன்னே வெகுளி பெருக்கலும்-முன்னிய
பல்பொருள் வெஃகும் சிறுமையும் இம்மூன்றும்
செல்வம் உடைக்கும் படை"

என்று தீய குணங்களினால் செல்வம் சேர்வது இல்லை என்பதைக் குறிப்பிடுகின்றார். மனித மனத்தை ஒருநிலைப் படுத்தும் உலகியல் வாழ்க்கைக்கு உகந்த கருவூலமாக உழைப்பு உள்ளது.

"மனத்தில் உறுதி வேண்டும்
வாக்கினில் இனிமை வேண்டும்
நினைவு நல்லது வேண்டும்
நெருங்கின பொருள் கைப்பட வேண்டும்".

மனதில் கொள்ளும் உறுதி எதையும் சாதிக்கும் தன்மையைக் கொடுக்கிறது. உறுதியுடன் இருந்தால் மட்டுமெ செயலில் தெளிவு இருக்கும். உலகியல் வாழ்வியல் மனிதன் முன்னேற்றப் பாதையில் செல்லக் கொள்கைப் பிடிப்புடன் கூடிய உறுதி அவசியமாகின்றது. சோர்வு இன்றி எத்தகைய சூழலிலும் முன்னேற மனவுறுதி திணை செய்கிறது. மனவுறுதி அளித்திடும் மாட்சிமை உலகியல் வாழ்விற்கும் சமுதாய மேம்பாட்டுக்கும் இலக்கியங்கள் உதவி வருகின்றன.

தீயச் செயல்களில் ஐந்து குற்றங்களை மிகவும் கொடியதாகச் சான்றோர்கள் குறிப்பிடுவார்கள். கொலைகளவு, கள்ளுண்ணல், காமம், பொய் ஆகியவை. பொய் என்பது பஞ்சமா பாதங்கள் என்று குறிப்பிடப்படுகின்றது. உண்மையென்பது உலகியல் வாழ்க்கையில் அறங்கள் பலவற்றைச் செய்து பெறும் பலனைவிட அதிகம். பொய், குடி கொண்ட உள்ளத்தில் இறைவன் குடிகொள்ளமாட்டான். அது நன்மையைத் தருகின்ற தெளிந்த உள்ளமாக அமையாது. மாசு கொண்ட உள்ளமாகவே இருக்கும் என்பதைப் பக்தி இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இதனை அப்பர், பொய் சேர்ந்த சிற்தைபுகாதாய் போற்றி! போகாது என் உள்ளத்து இருந்தாய் போற்றி!

என்று பொய் குடிகொண்ட உள்ளத்தில் இறைவன் சேரமாட்டான் என்று குறிப்பிடுகின்றார்.

தமிழ் இலக்கியங்கள் உலகியல் இயல்பு கூறும் தன்மை வாய்ந்தவை. உலகஞ்சார்ந்த பொதுமை நோக்கோடு, அறக்கருத்துக்களை வலியுறுத்தும் விதத்தில் அமைந்துள்ளமையால் தமிழிலக்கியங்கள் இன்றும் சிறப்புற்று விளங்குகின்றன. இந்த அனைத்து கருத்திலும் பொதுவாகக் காணப்படக்கூடிய அன்பு, அறம், உண்மை, உழைப்பு, உறுதி மனிதநேயம், ஈகை போன்ற கூறுகளை இலக்கியங்கள் அறிவுறுத்தும் நோக்கில் அமைந்து விளங்குகின்றன. இலக்கியமே வாழ்க்கை என்பது அனைவரின் கூற்று.

# தமிழ் நாடகங்களின் அண்மைக் காலப்போக்கு

திருமதி. ஜா.ஜுலிபிரதிபா
விரிவுரையாளர்
தமிழ்த்துறை
டோக் பெருமாட்டி கல்லூரி
மதுரை.

முன்னுரை

உலக நாடக வரலாற்றைக் காணும் போது. பிரச்சனைகளின் தேவைகளே நாடக வகைகளை உருவாக்கியுள்ளன. சமூகத் தேவைகளே கலை, இலக்கியம், அரசியல், பொருளாதாரம், பண்பாடு போன்ற காரணிகளைக் கட்டமைக்கின்றது. கிரேக்கம், சமஸ்கிருதம், போன்ற மொழிகளுக்கு இணையான தொன்மை கொண்ட தமிழில் நாடகப் பிரதிகள் கிடைக்கப் பெறவில்லை. மாறாக - "கண்ணுளர்" (மலைபடுகடாம் - 50) "ஆரியர்" (அகநானூறு - 7, குறுந்தொகை - 7) "கோடியர்" (புறநானூறு - 114) "வயிரியர்" (அகம் -82) எனக் கலைஞர்கள் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் சுட்டப் பெறுதல் காண்கிறோம். தவிரவும், தொகையும் பாட்டுமான சங்க கால இலக்கியங்களில் துணங்கை, குரவை, வெறியாட்டு போன்ற கூத்துக்கள் மிக விரிவாகப் பேசப்படுகின்றன.

"உய்த்துணர்வின்றித் தலைவரு பொருளின் மெய்ப்பது முடிப்பது மெய்ப்பாடாகும். (செய்யுளியல்) மெய்யின் கண்படுகின்ற உணர்ச்சிக் குறிப்புகள் எனும் வரிகளை எடுத்துக்காட்டி (தொல், மெய்ப்பாட்டியல்) நடிப்பு பற்றிய அறிவியல் பூர்வ முதல் பதிவு எனச் சுட்டுவர்".[1] மு.இராமசாமி. இவ்வாறான நாடகங்களுக்கு அரசியல் குழந்தைத் தொழிலாளர் வாழ்க்கைப் பிரச்சினைகள், மது வொழிப்பு, சுற்றுப்புறச்சூழல் பாதுகாப்பு முதலான சமுதாயத் தொடர்புடைய செய்திகள் பொருளாகின்றன. இன்றைய தமிழ் நாடகங்களின் அண்மைக் காலப் போக்கினைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைகின்றது.

நாடகக் குறிப்புகள்:

1980-களின் இறுதியில் நவீன நாடகக் குழுக்கள் பரீக்ஷா, வீதி நாடக இயக்கம், கூத்துப் பட்டறை, நிஜ நாடக இயக்கம் ஆகியவை பல நாடகக் குழுக்கள் உருவாகும் அளவுக்கு மிகுந்த அக்கறை ஏற்பட்டது. 1980-களில் தொடங்கிய கூத்துப் பட்டறை கூத்தின் அம்சங்களைக் கொண்டு நவீன நாடகங்களை உருவாக்குவதும், எளிமையும், எழிலும் கொண்ட தெருக்கூத்தைத் தமிழர்களின் தியேட்டர் எனும் கருத்தைப் பரவலாக்குவதும் ஆன நோக்கங்களில் இது செயற்பட்டது. ந.முத்துச்சாமியின் முயற்சியில் உதித்த கூத்துப்பட்டறை தற்போது ஃபோர்டுஃபவுண்டேசன், நிறுவன உதவியுடன் பல புது முயற்சிகளைச் செய்து வருகிறது.

தமிழகத்தின் முதல் பெண்கள் நவீன நாடகக் குழுவாகத் தோன்றியது. பரீக்ஷாவின் துணைவியரான பத்மாவின் பூமிகா பெண்கள் நாடகக்குழு. இது சுஜாதாவின் சரளா, இருகடிதங்கள், அம்மையின் பயங்கள், அம்பையின் நீ ஆண் நீ பெண். இராமானுஜம் இக்கத்தில் உருவான மௌனக்குறம் இவ்வமைப்பின் ஔவை போன்றவை பெண்ணிய நாடகங்களாகும்.

நாடகக் குழுக்களின் வகைகள்:

உளவியல் மற்றும் உறவு முறை அத்தோடு, அதீத கற்பனை கொண்டமைந்துள்ள நாடகக்குழுக்கள், மொழிபெயர்ப்பு நாடகங்கள் நடத்தும் குழுக்கள், மரபு வழிக் கூத்தினை அடிநிலையாகக் கொண்டு இயங்கும் நாடகக்குழுக்கள், மக்கள் பிரச்சனைகளைக் கொண்ட வீதி நாடகக் குழுக்கள், தலித் மக்கள் பிரச்சனைகளைப் பேசும் நாடகக் குழுக்கள் எனப் பலவகை நாடகக் குழுக்கள் இன்றைய சூழலில் இயங்கி வருகின்றன.

அ.உளவியல் உறவு முறைச்சிக்கல்கஙள மையமிட்டவை:

கனவுகளையும் கனவுநிலைப் படிமங்களையும், உள்மன ஏதார்த்தங்களையும் (உருவங்கள்) உடல் சார்ந்த பிரதிமைகள் உடைபடும் தன்மைகளையும், கடந்த காலத்திலும் நிகழ்காலத்திலும் ஊடாடிய நிலையில் பயணங்கள் மேற்கொள்ளப்படும். இயற்கையில் முரண்பட்ட மனித உறவுகளில் சிக்கலையும், தன்மைகளையும் பேசும் நாடகப் பிரதிகளைக் கொண்டு நாடகங்கள் நிகழ்த்தும் குழுக்கள் தமிழகத்தில் அண்மைக் காலத்தில் உருப் பெற்றுள்ளன. எஸ்.ராமகிருஷ்ணனின் சூரியனின் அறுபட்ட சிறகுகள், பிரேமின் அமீபாக்களின் காதல் ஆகிய நாடகங்கள் மேற்கூறிய கருத்துக்களை மையப்படுத்தியவையாகும்.

ஆ.மொழிபெயர்ப்பு சார்ந்தவை:

கிரேக்க மொழி நாடகங்கள், பிரெஞ்சு மொழி பெயர்ப்பு நாடகங்கள், ஆங்கில நாடகங்கள், ஜெர்மன் மொழிபெயர்ப்பு நாடகங்கள், இந்திய மொழிகளின் மொழிபெயர்ப்பு நாடகங்கள் எனப் பல நிலைகளிலும் இவ்வகை நாடகக் குழுக்கள் தம் நாடகச் செயற்பாடுகளில் செய்து வருகின்றன.

அல்லயன்ஸ் பிரான்ஸ்செய்ஸ் ஜெர்மன் கலாச்சார நிறுவனம் சாப்வோர் ஃபவோர் ஃபவுண்டேசன் போன்றவை தமிழில் மரபு வழிபட்ட நாடகங்கள் மலரத் துணைநின்றன. மேலும் பாளையங்கோட்டை நாட்டார் வழக்காற்றியல் தலைக்கோல் அகியவை பிறமொழி நாடகங்களைத் தமிழ்வழிச் செய்யத் தூண்டுகோலாக அமைகின்றன.

ஆங்கிலப் பேராசிரியரான பரசுராமமூர்த்தி சேக்ஸ்பியரின் மேக்பாத், கிறீஸ்தர் வாடிக் "யவதனா நாடகங்களை ஆங்கிலத்தில் மேடையேற்றினார். மோலியர் நாடகத்தை ஏமாளிக்கணவன் அல்லது நாராயணன் எனும் பெயரில் கூத்தாக வ.ஆறுமுகம் அலயன்ஸ் பிரன்ஸ் செய்ஸ் ஆதரவில் நடத்தினார்.

இ.மக்கள் பிரச்சனைகளை மையமாகக் கொண்டவை:

மாநகரம், ஐ.எம்.எஃப் ஜேம்ஸ்பாண்ட் போன்ற நாடகங்கள்

சென்னைக் கலைக்குழு நடத்தி வருகின்றது. இது அவ்வப்போது உருவாகும் மக்கள் பிரச்சனைகளை மையக் கருவாகக் கொண்டு இயங்கி வருகின்றது. கேரள சாஸ்திர சாஹித்ய பரிஷத் எனும் கேரள அமைப்பில் பயிற்சி எடுத்துக் கொண்டதன் பயனாய் அறிவொளி இயக்கம் நடத்தி வரும் வேளையில், சரஸ்வதி, பெண் ஊர்கூடி போன்ற நாடகங்களைத் தமிழகமெங்கும் பல்லாயிரக்கணக்கில் மேடை ஏற்றி வந்துள்ளனர். இதன் தாக்கத்தில் மாவட்டந்தோறும் நூற்றுக் கண்க்கான இளைஞர்கள் வீதி நாடகங்களை நடத்துவோராக வளர்ந்துள்ளனர். தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தினர் கடந்த சில ஆண்டுகளாகக் கலை இரவு நடத்தி வருகின்றனர். இவர்கள் நடத்தும் கலை இரவுகளில் தவறாது வீதி நாடகங்களையும் நிகழ்த்தி வருகின்றனர். இவர்களின் நாடகங்களில் புதிய கல்விக்கொள்கை, உலக வங்கியில் கடன்பட்டுள்ள பிரச்சனைகள், பெண்கல்வி, பெண்ணியப் பிரச்சனைகள், முதியோர் கல்வி, எழுத்தறிவு குறித்த நாடகங்களை நடத்தி வருகின்றனர்.

கடந்த நான்கைந்து ஆண்டுகளாகத் தொடர்ந்து தஞ்சையில் மக்கள் கலை இலக்கியக்கழகம் தமிழ் மக்கள் இசைவிழாவின் போது தவறாது வீதி நாடகங்களை மேடையேற்றி வருகின்றனர். கல்வி, அரசியல், எதிர்ப்புணர்வு. தமிழ் இயக்க உணர்வு ஆகிய பொருள்களை மையப்படுத்தி நாடகங்களை நடத்திட வழி செய்கின்றனர்.

ஈ.சாதிப் பிரிவினையை மையமிட்டவை:

இந்தியா சாதிப்பிரிவினைக் கொண்ட நாடு. இந்துத்துவச் சாதியத்தை ஏற்கும் மனு சாஸ்திர விதிகளை ஏற்கும் நாடு. சமூகத் தேவைதான் கலை இலக்கியங்களைப் படைக்கின்றது. சிறுபான்மை மக்கள் மீதும், ஆதிவாசிகள் மீதும் இன்றளவும் தொடர்ந்து ஆதிக்கச் சாதிகளின் தாக்குதலும், அடக்குமுறைகளும், தொடர்கின்றன. இந்தப் பின்னணியில் இன்று தலித் அரசியல், தலித் கலைகள், தலித் படைப்புகள் பரவலாகத் தோன்றி வருகின்றன. தமிழகத்தின் முதல் தலித் நாடகமான பலிஆடுகள் என்பது கே.எ.குணசேகரன் இயக்கத்தில் உருவானது. சிபு செம்மணி கலைக்குழு போன்றோர் வீதி நாடக வடிவத்தில் 150-க்கும் மேற்பட்ட இடங்களில் மேடையாக்கி வருகின்றனர். ஜீவாவின் கருத்துப்போனமக்கள், சேரியின் தாலாட்டு போன்றவை தலித் பிரச்சனை பேசுகின்றன. பிரேமின் மண்ணிலிருந்து எனும் நாடகம் தலித் வரலாற்று நாடகமாக அமைந்துள்ளது.

உ.பெண்ணியம் சார்ந்தவை:

மங்கை, ஜீவா, பிரசன்ன ராமசாமி, மீனா சுவாமிநாதன், பகீரதி போன்றோர் அண்மையில் பெண்ணிய நாடகம் குறித்துச் சிந்திக்கவும், செயற்படவும், பயிற்சிப் பட்டறைகள் வழி செய்து வருகின்றனர். ஜீவாவின் கொந்தளிப்பு, பச்சைமண், மௌனக்குறம், இன்குலாபின் ஔவை, வெள்ளாவி போன்ற நாடகங்கள் மௌனக்குரல் எனும் அமைப்பு வழியே

நடத்தி வருகின்றனர். பெண் விடுதலை குறித்துப் பேசும் அமைப்பு "குலவை" எனும் பெயரில் 1996 முதல் ஆண்டுதோறும் பெண்ணியச் சிந்தனைகளைக் கொண்ட பயிற்சிப் பட்டறைகளை நடத்தி வருகின்றது. எனினும் பெண்ணிய நாடகப் பிரதிகள் பெண்களே செய்ய வேண்டிய முயற்சிகள் தேவையாயுள்ளன.

உறவு முறைச் சிக்கல்கள் பெண் அடிமை முறை. அலுவலகப் பெண்கள் பிரச்சனை, தலித் பெண்கள் பிரச்சனைகள், தொழிலாளர் பெண்கள் பிரச்சனை எனவும். அரசியல் விழிப்புணர்வு அணுகுண்டுப் பிரச்சனை, உலகமயமாதல் என இன்னும் பலவகை குறித்துப் பெண்ணிய நாடகங்கள் பேசவும், நிகழ்த்தவும் பிரதிகள் செய்யவும் வேண்டிய தேவைகள் உள்ளன.

முடிவுரை:

பெண்ணியம், தலித்தியம் எனும் படியான அரங்க முயற்சிகளில் தமிழகச் சூழலில் பலர் முன் வருவது குறைவாக உள்ளது. சமூகப் பங்களிப்புச் செய்ய சமூகப் புரிதல் குறைவாயுள்ள காரணத்தாலும் தடங்கல் அல்லது தேக்க நிலையுள்ளது. பெண்ணிய நாடகங்கள், தலித் அரங்கு என்பன சமூக எதார்த்தத்தை எதிர் கொண்டு புரட்டிப் போட்டு கேள்விக்குள்ளாக்குபவையாக விளங்கும். மரபுகளைக் கேள்விக்குள்ளாக்கி விடை காணும் போது தான் புதிய கலை இலக்கிய வகைகளும், அரசியலும், தத்துவங்களும் கூடக் கிளர்ந்தெழுவதைச் சமூகச் சிந்தனையாளர்கள் உணர முடியும். தமிழ் நாடகப் பிரதிகள் உருவாகாத தேக்கம் இன்று உடைந்து வருகிறது. பலரும் நாடகம் செய்ய, எழுத முனைந்து முன்வரும் காலமாக உள்ளது. அரவாணிகளுக்கான நாடகப் பயிற்சிகளும், நாடகங்களும் கே.ஏ.குணசேகரன், மீனா சுவாமிநாதன் போன்றவர்களால் அண்மைக் காலங்களில் நிகழ்த்தப் பெற்று வருகின்றன. எனவே தமிழ் நாடகங்களினால் அண்மைக்காலப் போக்கு செுவாய் கிளைத்து வளர்ந்து வருகிறது என்பதில் ஐயமில்லை.

அடிக்குறிப்பு:

1.தமிழ் நாடகம் நேற்று இன்று நாளை, ப.12.

# பாரதியின் பின்காலனித்துவச் சிந்தனை

ந.கோவிந்தராஜன்
ஆய்வாளர், தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை-21.

## முன்னுரை

இருபதாம் நூற்றாண்டின் கவிதை பரப்பில் அழுத்தமான இடத்தைப் பிடித்தவர் பாரதி. தேச பக்தி உணர்வுடைய கவிதை முதல் தமிழ் மரபின் அகக்கவிதைகள் வரை தனது பரிணாமத்தை விரிவுபடுத்தியவர். இதழாசிரியராக இருந்தபோது, இந்தியா விடுதலை அடைந்தபின் அதன் சமூகம், இலக்கியம், பண்பாடு போன்றவற்றைப் பற்றி அவர் கொண்டிருந்த கருத்துக்கள் கவனத்திற்குரியன. அவற்றைப் பற்றி இக்கட்டுரை ஆராய்கிறது.

## பின்காலனித்துவம்

ஒரு நாடு காலனிய நாடாக உள்ளபோது அதன் பல்வேறு அம்சங்கள் மாற்றமடைகின்றன. குடியேறியின் பண்புகள் அந்நாட்டில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்துகின்றன. சுதேசிக்கும் குடியேறிக்கும் கருத்தியல் ரீதியான போராட்டம் நடக்கிறது. சுதேசி குடியேறியைப் போல இருக்க முயல்கிறான். சுதேசியின் கீழ்நிலை தொடர்ச்சியாக அறிவுறுத்தப்படுகிறது (பனான் 2002-41-45). நாடு காலனித்துவக் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டவுடன் அதன் நோக்கங்கள் அதை சீர்செய்வதாயும் மேலை நாடுகளின் கருத்தியல் ஆக்கிரமிப்புகளிலிருந்து விடுபடுவதாயும் தன் நிலையின் உண்மைத் தன்மையை உணர்ந்த இலக்கியப் பரப்பை உடையதாயும் இருக்க வேண்டும். இதை அறிவுறுத்துவதே பின் காலனித்துவச் சிந்தனை எனலாம்.

## பாரதியின் சிந்தனை

பாரதி நாடு காலனிய பிடியிலிருக்கும் போதே இதை பற்றி சிந்தித்தவர். பாரத சமுதாயம் (1920) என்னும் பாடல் அதற்கு நல்ல எடுத்துக்காட்டாகும்.

"முப்பது கோடி ஜனங்களின் சங்கம்
முழுமைக்கும் பொது உடைமை
தனியொருவனுக்கு உணவில்லையெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்"

இவ்வாறான கருத்துக்கள் இந்தியக் கவிதை இலக்கியத்தில் 1947-1950க்கு முன் இல்லை என்கிறார் இ.பி. செலிஷேல் என்னும் சோவியத் அறிஞர் (பாரதி 1982:17) பாரதியின் தடை செய்யப்பட்ட இலக்கியங்களான கனவு (கவிதை), ஆறில் ஒரு பங்கு (சிறுகதை) போன்றவற்றில் எதிர்காலச் சிந்தனை வலுவாக உள்ளது. அரச துவேசக் கருத்துக்கள் உள்ளன எனக் குற்றம் சாட்டப்பட்டு தடை செய்யப்பட்ட நூல்கள் இவை (வெங்கட்ராமன்

2004:336-365). வெள்ளையர் எதிர்ப்பு என்பது தேசத்தின் எதிர்காலம் பற்றிய சிந்தனையாகவே அமைகின்றது என்பதையும் இங்கு நாம் குறிப்பிட வேண்டும் இரண்டிலும் சில பகுதிகள் மட்டும் தான் அரசுக்கெதிராக உள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. கனவு ஒரு சுயசரிதை கவிதை. அதன் தன்மை எதிர்காலச் சிந்தனையைப் பற்றியது என்று கூறினாலும் மிகையாகாது.

அரசியல்

சுதந்திரத்தின் தாகத்தை மேலும் விரிவுபடுத்த பல காரியங்கள் நடந்தன. அவை கொள்கைகள் பல கொண்டதாக அமைந்திருந்தன. அதற்காக அமைப்புகள் பல உருவாயின. அவை இருபெரும் பகுப்புகளாகப் பகுக்கப்பட்டன. அன்னிய தேசிய அரசியல் உணர்வு மற்றும் சுயதேசிய அரசியல் உணர்வு என்பவை அவை. இதில் இரண்டாவது, கிராமங்களையும் மையமாகக் கொண்டது. சிறு உற்பத்தியாளர், கைவினைஞர்கள், கம்மியர்கள் போன்றவர்களும், குத்தகை விவசாயிகளும் சிறு விவசாயிகளும் இவற்றில் பங்கு கொண்டு இந்த உணர்வை வெளிப்படுத்தினர் (கேசவன் 1999:166-167). பாரதி இதை மையப்படுத்தினார் எனலாம். பாரதியின் செயல்பாடுகளை அவர் கடிதங்கள் வாயிலாக நாம் அறியலாம். அவர் இதழ்களில் எழுதிய பல கட்டுரைகள் இதை பற்றிக் கூறுகின்றன. பாரதியின் விடுதலை என்பது தேச விடுதலை என்பது மட்டுமல்ல, மாறாக அது முன் வைக்கவிரும்புவது மற்றத் தேசத்தின் முன் இந்தியத் தேசத்தின் நிலை பற்றியது. அவர் பார்வை பாரத கல்வியின் பால் விழுந்து அதன் பரப்பை ஆராய முற்படுகிறது. இந்தியா கட்டுரையில் "ாரிசன் என்பவர் இந்திய ஆங்கிலக் கல்வி முறையைப் பற்றிப் பேசியவற்றைப் பற்றி பாரதி கூறுவது கவனத்திற்குரியது (விஸ்வநாதன் 2003:318)

"ஐரோப்பியரின் ஆராய்ச்சி நூல்களும் தொழில் நூல்களும் நமக்கு இன்றியமையாதன. அவற்றை நாம் எந்த விதத்தினாலெனும் கற்றுக்கொண்டே தீரவேண்டும். இந்தியனாகப் பிறந்திருப்பதே பெரிய பாக்கியம் என்னும் கட்டுரையில் பாரதி கூறுவது அவரின் எதிர்பார்ப்புகளைக் கூறுகிறது. அதில் அப்பரின் தேவாரத்தை மாற்றி அவர் கவிதை பாடியுள்ளார் (விஸ்வநாதன் 2004:201-202).

ஒற்றுமை

பாரதியின் எழுத்துக்கள் கடுமையான சட்டத்திற்கு உள்ளாகக்கப்பட்டிருந்தபோது அவரின் எழுத்துக்கள் தேச உணர்வினை கொண்டே தொடர்ந்து எழுதப்பட்டு வந்துள்ளன. அந்த வகையில், "இந்திய மக்களிடையே தேசிய ஒற்றுமையை கொண்டு வருவது எப்படி?" என்ற பிரசுரம் முக்கியமாகிறது. இது புதுவையில் வெளியிடப்பட்டுள்ளது. இது அரசாங்கத்தால் தடை செய்யப்பட்டுள்ளது. இந்த பிரசுரத்தை பாரதி தான் எழுதினாரா என்று பாரதி ஆய்வாளர்களிடம் சர்ச்சைகள் உண்டு. ஆனால் இதை பாரதி தான் எழுதினார் என்று வெங்கட்ராமன் கூறுகிறார்

(வெங்கட்ராமன் 2004:398-399). இந்த பிரசுரத்தின் சாரம் மட்டுமே தெரியவருகிறது. அதன்படி அது தொலைநோக்கு பார்வை கொண்டதாக உள்ளது என்பதை நாம் காணமுடிகிறது. அந்த பிரசுரம் தேசத்தின் நிலையைப் பகுத்து ஆராயும் முறையில் அமைந்துள்ளது. இந்துக்களிடமும் முகமதியர்களிடமும் உள்ள வேற்றுமைக்கான காரணங்கள் எவை அவற்றை மாற்றி அமைப்பது எப்படி என்ற முறையில் அந்த பிரசுரம் அமைந்துள்ளது. இதில் பாரதியின் பின் காலனித்துவச் சிந்தனை தெரிகிறது. மதம் என்பது என்ன என்பதைப் பற்றி அதில் ஆராய்கிறார். இந்த அடிமைத்தனத்திற்குக் காரணம் என்ன என்பதைப் பற்றி விரிவாகப் பேசுகிறார். அதற்கான தீர்வினைக் காண முயல்கிறார்.

முடிவுரை

பாரதியின் எழுத்துக்கள் முழுவதும் ஒற்றைத் தன்மைக் கொண்டவை அல்ல. அதன் பல பரிமாணங்கள் சரியாக உளவாங்கப் படவேண்டும். பின் காலனித்துவம் என்பது வெறும் தத்துவம் அல்ல. அது வளர்முக நாடுகளுக்கான ஒரு புதிய ஆயுதம். வளரும் நாடுகள் தன்னை தகவமைத்துக் கொள்வதற்கான வழிகளை ஆராய்கிறது. பாரதி பாடல்கள் மட்டுமன்றி தன் எழுத்துக்களில் இந்திய தேசத்தின் நிலை பற்றி சிந்தித்துள்ளார். அதிலும் குறிப்பாகத் தமிழகம் பற்றிய அவர் சிந்தனை காலனியத்திற்குப் பிறகு அதன் நிலை பற்றியது. அதன் அம்சங்கள் மேலும் ஆராயப்பட வேண்டும்.

துணைநூற்கள் :

1.கேசவன். கோ. 1999. இந்திய தேசியத்தின் தோற்றம் விழுப்புரம். சரவண பாலு பதிப்பகம்.

2.பனான் பிரான்ஸ். நடராஜ். வி.(மொ.பெ). 2002. ஒடுக்கப்பட்டவர்கள் விடுதலையின் வடிவங்கள். கோயம்புத்தூர். விடியல் பதிப்பகம்.

3.வெங்கட்ராமன்.வி.2004. பாரதிக்குத்தடை இராஜபாளையம் சுதந்திரா வெளியீடு.

4.விஸ்வநாதன். சீனி. 2003. கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள் தொகுதி நான்கு. சென்னை.

5.விஸ்வநாதன் சீனி. 2004. கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள் தொகுதி ஐந்து. சென்னை.

6.............................1983. மகாகவி பாரதி பற்றி சோவியத் அறிஞர்கள். சென்னை. NCBH.

# கவிஞர் குலோத்துங்கன் கவிதைகளில் காணலாகும் ஆளுமைக் கூறுகள்

ப.கௌரி
முனைவர் பட்ட ஆய்வாளர்
எத்திராஜ் மகளிர் கல்லூரி,
தமிழ்த்துறை
சென்னை - 600 008.

## நுழைவாயில்

தனிமனித வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாத ஒன்றே ஆளுமைத்திறன். மானுடம் போற்றும் மகத்தான பண்பிற்கு ஆளுமை வளர்ச்சி அடிப்படைத் தேவை. தனிமனித வளர்ச்சியே சமுதாய வளர்ச்சிக்கும் மலர்ச்சிக்கும், எழுச்சிக்கும் ஏற்றத்திற்கும், வித்தாய் விளங்குகிறது. அதற்கு அடிப்படையாய் ஆதார கருதியாய் திகழ்வது ஆளுமை வளர்ச்சிப் பயிற்சியே!

ஆளுமை என்னும் சொல்லாட்சி மிகுந்த பொருள் மிக்கது. ஆளுமை-ஆள்-உமை அதாவது உமை+ ஆள் என்று உணர்த்தும் பொருண்மை மிக்க சொல்லே ஆளுமை உம்மை - உன்ன ஆளுவதே ஆளுமை. அந்த ஆளுமை ஒருமுக வளர்ச்சியாக மட்டுமில்லாமல் பன்முகமாகப் பல்வேறு திறன்களைப் பெற்று விளங்குவதே ஆளுமை வளர்ச்சி ஆகும்.

தனிமனிதன் தன் எதிர்கால வாழ்விற்காக தன் செயல் சிந்தனைகளை மாற்றி அமைத்துக் கொண்டு செயல்படுவதே இங்கு ஆளுமை எனப்படுகிறது. குறித்த செயலைச் செய்ய ஈடுபாடும், உடல் உழைப்பும், உண்மையும், குறித்த காலமும் உள்ளழகு போன்றவை ஆளுமையைக் குறிக்கிறது.

தன் ஆளுமை என்பது தனி மனிதனது திறமையை வெளிப்படுத்துகிறது. ஒவ்வொருவரும் நேர் சிந்தனையுடன் இளமை முதற்கொண்டே குறிக்கோளுடன் திட்டமிட்டு, இலக்குகளை நோக்கி பயனளித்தால் முழுமையான ஆளுமை வளர்ச்சி பெற்ற பன்னோக்குத் திறன்மிக்க சான்றோர்களாய் பரிணமிப்பா; அத்தகையோரையே தெய்வப்புலவர் திருவள்ளுவர் உலகத்தார் எனப் போற்றுகிறார்.

"உலகத்தார் உண்டு என்பது இல்எனப்பான் வையத்து
அலகையா வைக்கப்படும்" (குறள் : 850)

## முன்செல முயல்வேன்

முயன்றால் முடியாதது எதுவுமில்லை. சுய முயற்சியினால் மட்டுமே எதையும் அடைய இயலும். தன்னம்பிக்கை அடிப்படையாகவே, தனி மனித வாழ்வில் வளர்ச்சியில் பெரும் பங்கு வகிக்கிறது. எதையும் ஈடுபாடுடன் உற்சாகமாக செய்யும் போது தான் வாழ்வில் எடுத்த காரியம் வெற்றி பெறும். இதை நன்கு உணர்ந்த கவிஞர் குலோத்துங்கன் தன் கவிதையில்,

"எழுவையேல் எய்துவதற்
கியலாத தேதுமிலை
எழுவமேல் எய்துவதற்
கியலாத தேதுமிலை" (கு.க.ப.380)

என்று கூறுகிறார். மேலும்,

"மூச்சுள வரையும்
முன்செல முயல்வேன்" (கு.க.ப.83)

"நாளையும் முயல்வோம்
. . . . . . . . . . . . . . . . .
கருத்திற் கொண்டனம்" (கு.க.ப.97)

என்று இன்று இல்லையேல் நாளை முயற்சித்து வெற்றி காண்போம் என்கிறார்.

மனத்தெளிவு

மனதில் தெளிவு இருந்தால் தான் எவ்வகையான பணியையும் எளிதில் செய்ய இயலும். தனி ஒருவன் தன் மனதில் தெளிந்த அறிவை பெறாவிட்டால், தான் செல்லும் திசையறியாதவனாவான்.

"நெஞ்சத்தில் தெளிவறியார்; செல்லுகிற திசையறியார்"

என்று இயம்புவதோடு,

"விழிப்பு வேண்டும், மானிடர் முன்னேற்றம் பெற வேண்டும்"

என்று கூறும் கவிஞர், ஆளுமைக்கு மனத்தெளிவு தேவை என்பதை அழகாக வெளிப்படுத்துகிறார்.

தன்னம்பிக்கை

முயற்சி திருவினையாக்கும் என்ற பாடல்வழி உடல் அனைத்திலும் ஊக்கம் மிகுந்து காண வேண்டும். அவையே மனித மனத்தின் மிகப்பெரிய ஆற்றலாகிய தன்னம்பிக்கை என்னும் மாபெரும் சக்தி எனலாம்.

தன்மீது முதலில் நம்பிக்கை வைத்தல் அவசியம். திறமைகள் மட்டுமே நம் முன்னேற்றத்திற்கு வழி வகுக்கும். "திறமையானவர் தம் இனத்தை பெருக்கினர்", தன் திறமைகளை முழுமையாகச் செலுத்தி தன் இனத்தைப் பெருக்கிக் கொள்ள இயலும் என்பதையே உணர்த்துகிறார் கவிஞர் குலோத்துங்கன்.

"…. வாழ்வில்
. . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . .
திறனுடையோன்;" (கு.க.ப.161)

என திறமை கூறி,

"கோரிக்கை ஒன்றை எழுப்பி விட்டேன் - அது
. . . . . . . . .
. . . . . . . . .
மன்றம் திறக்குமுன் ஓய்வதிலேன்" (கு.க.ப.72)

முயன்று வெற்றி பெறுவேன், அதுவரை மனம் ஓய்வதில்லேன், என தன்னம்பிககை ஊட்டுகிறார்.

எண்ணக்குவியல்

தன் எண்ணத்தை ஒன்று திரட்டி செயல்படுத்தும் போது தான், இலக்கினை அடைய இயலும். உயர்ந்த இலக்கு அடையும் ஒரே சிந்தையுடன் செயல்பட வேண்டும். இதையே பாரதி தன் 'புதிய ஆத்தி சூடியி'ல், "ஐம்பொறி ஆட்சி கொள்!" என நினைவை அடக்கி செயல்பட வேண்டும் எனும் கருத்தை கவிஞர் குலோத்துங்கன்

"மானிட உள்ள ஆற்றல் வெள்ளத்தை மிஞ்சும்" (கு.க.ப.648)

மேலும்,

"எண்ணப் படிகளில் மேலே செல்லத் தக்க வண்ணத்தவர் மானிடர்" (கு.க.ப.574)

என்று கூறுகிறார்.

மன வலிமை விந்தையானது. எதனையும் எதிர்த்து போராடும் திறன் நிறைந்தது என்கிறார். இதனையே மனிதன் தன் மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகள் வழி மனம்போன போக்கில் புலன்களைத் தடுத்து, செல்ல விடாமல் தீமையிலிருந்து விலக்கி நல்வழியில் ஆற்றுப்படுத்துவதே அறிவு.

"சென்ற இடத்தால் செலவிடா தீதுஒரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு" (குறள் - 422)

சிந்தையை ஒருமுகப்படுத்தி, செயல்படவேண்டும் என்பதை குலோத்துங்கன்.

"மன வலிமை விந்தை, காலனை வழி அனுப்புவோம்" என உறுதிப்படக் கூறுவதால் அறியலாம். மனித வாழ்வில் சிகரத்தை நோக்கிச் செல்லும் வேள்வி உள்ளத்தில் உயரும் எண்ணம் கொண்டோர் உயர்வர் (கு.க.ப.267) என்றும்,

"மானிடத்தின் மதியை போற்றுவோம்
புகழ்பெறுவது மனிதனின் உரைகல்
வேள்விகளை ஏற்கும் நெஞ்சில்
திண்மையைப் பாடுவேன்" (கு.க.ப.272)

என மானிடத்தின் மதியைப் போற்றி புகழ்கிறார்.

சக்தி

விவேகானந்தர் இளைய சமுதாயத்தினரிடம் மட்டுமே சக்தி இருப்பதை உணர்ந்தார். வாழ்வில் ஆளுமைக் கூறுகளில் சக்தியும் தேவையான ஒன்றாகும். பெரிதினை தாங்கும் சக்தி தேவை என்கிறார். தன் ஆளுமையில் வளர்ச்சி காண, கவிஞர்

"பெரிதினைத் தாங்கும் தோள்கள்
அரிதினைத் தேடும் நெஞ்சம்
பொலிவினை விழையும் ஞானம்" (கு.க.ப.67)

இவை மூன்றும் பெற்றவன் எளிதில் உயர்வடைவான் என்கிறார்.

தன்னைத்தான் உணர்ந்தால், தான் சக்தியின் புதையல் என அறிவான் என்று இயம்புகிறார் குலோத்துங்கன்

"பனிமலர்த் தன்மையோடு
பரிதியின் கனலும் கொண்ட
புனிதனு மவனே சக்திப்
புதையலு மவனே யன்றோ? (கு.க.ப.192)

கடினமாக உழைப்பவர் எதையும் அடைய இயலும். நிமிர்ந்து நின்று முயல்வது மனிதம், சக்தி மனிதன் என்கிறார்.

"நாளும்
அயர்விறந் துழைப்போர் யாவும்
அடைகுவர் நிமிர்ந்து நின்று
முயல்வது மனிதம் சக்தி (கு.க.ப.200)

மனித வளர்ச்சிக்கு தேவையான ஆளுமைக் கூறுகளை தன் கவிதைகளில் இயல்பாகக் கூறி, தன் சக்தியை பயன்படுத்தி வாழ்வில் வெற்றி பெற மானுடர்களுக்குரிய அறிவுரைகளைக் கூறியுள்ளார். தன் ஆளுமையை வளர்த்து. சமுதாயத்தில் உயர்ந்த நிலையை அடைய வேண்டும் என்னும் கருப்பொருள் இவரது கவிதைகளில் காண முடிகிறது.

தொகுப்புரை

முயன்றால் முடியாதது எதுவுமில்லை என்பதை உறுதிப்படுத்துகிறார்.

மனத்தெளிவு, விழிப்பு ஆளுமையில் அடிப்படைக் கூறுகள்.

எண்ணங்களை ஒன்றுபடுத்திச் செறிவான செயலில் ஈடுபடும் போது வெற்றி நிச்சயம்.

தன் நினைவுகளைக் கட்டுப்படுத்தி ஆளும் திறன் வேண்டும்.

தான் நினைத்த நற்செயலை அடையும்வரை ஓயாது உழைக்க வேண்டும் என தன்னம்பிக்கையை வலியுறுத்துகிறார்.

தனி மனித சக்தியை உணர வேண்டும்.

# பாரதியாரின் படைப்புகளில் பேரிலக்கியப் பண்புகள்

முனைவர் அர.செயச்சந்திரன்,
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
மாநிலக்கல்லூரி
சென்னை - 600 005.

முன்னுரை

மகாகவி பாரதியாரின் பாடல்களைப் பல்வேறு கோணங்களில் அணுகிக் கட்டுரைகள், நூல்கள், ஆய்வேடுகள் பல வெளிவந்துள்ளன. இந்நிலையில் பாரதியார் பாடல்களில் அமைந்துள்ள பேரிலக்கியப் பண்புகளை இக்கட்டுரையில் காணலாம். ஒரு பேரிலக்கியத்திற்கு இருக்க வேண்டிய பண்புகள் எனப் பலவற்றைக் கூறலாம் என்றாலும் காலமும் இடமும் கருதி அடிப்படையான சில பண்புகளை எடுத்து விளக்கலாம்.

மரபு நோக்கு

பாரதியார் வாழ்ந்த காலத்தில் அடிமைப்பட்டிருந்த இந்திய நாடு, விடிவுக்காகக் காத்திருந்த மக்கள் எனும் சூழல் நிலவியது. அந்நிலையில் நமது பண்டைய மரபுகளை நமது மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டிய தேவை இருந்தது. அந்த மரபுகளில் நமது வீழ்ச்சிக்குக் காரணமானவற்றை விலக்க வேண்டிய தேவையும் இருந்தது. சமுதாயத்தில் நிலவிய சிக்கல்களைக் கூறுவதோடு தீர்வுகளைக் கூற வேண்டிய தேவைகளும் இருந்தன. ஆகவே,

1.தேவையான சிறந்த மரபுகளை நினைவூட்டல்,
2.சமுதாயச் சிக்கல்களைத் தெளிவாக எடுத்துக்கூறல்,
3.சிக்கல்களுக்கான தீர்வுகளைக் கூறுதல்

எனும் மிகவும் அடிப்படையான மூன்று பண்புகளை இங்குப் பேரிலக்கியப் பண்புகள் என்று குறிப்பிடலாம். இம்மூன்று பண்புகளை நிறைவு செய்யும் விதத்தில் தமிழில் மொழி, கருத்து, உத்தி, வடிவம் ஆகிய நான்கு இலக்கியக் கூறுகளிலும் பாரதியார் குறிப்பிடத்தக்க மாற்றங்களைச் செய்துள்ளார்.

சிறந்த மரபுகளை நினைவூட்டல்:

"மன்னும் இமயமலை எங்கள் மலையே" எனத் தொடங்கும் பாட்டில் நாட்டிற்குப் பெரிய அரணாக விளங்கும் இமயமலை, பெரிய நீர்ப் பரப்பாக விளங்கும் கங்கை ஆறு என நிலம், நீர், ஆகியவற்றில் பாரத நாட்டிற்குப் பெருமை தரும் இருபெரும் செல்லங்களை எடுத்துரைத்தார். வேறிடத்தில் காவிரி, தென்பெண்ணை, பாலாறு, வைகை, தாமிரபரணி ஆகிய ஆறுகளின் பெருமைகளையும் கூறுகிறார். இவை எக்காலத்திலும் நாம் நினைவில் வைத்துப் போற்றிப் பாதுகாக்க வேண்டிய இயற்கைச் செல்வங்கள் எனும் அடிப்படையில் மரபுகளை நினைவூட்டுகிறார். "மாமுனிவர் பலர் வாழ்ந்த பொன்னாடு" எனக்கூறி தன்னலமற்ற துறவுமனப்பான்மை தொண்டுக்கு

வித்திடும் என்கிறார். தமக்கு முன் வாழ்ந்த ஞானிகளில் புத்தரையே அவர் மரபின் நினைவுச் சின்னமாக விளங்கிய பெரும் சான்றோராகக் கருதியுள்ளார்.

எனவேதான், "புத்தர்பிரானருள் பொங்கிய நாடு" என்றார். அறவழி நடத்தல் என்பது புத்தர் மரபின் சாரம். இயற்கை என்னும் பரம்பொருளின் மீதான ஆழ்ந்த ஆராய்ச்சிகளின் விளைவால் உருவான கம்பர், இளங்கோ, காளிதாசர், திருவள்ளுவர் இலக்கியங்களையும் நமது பெருமைக்குரிய மரபார்ந்த அறிவுச் செல்வங்கள் என நினைவுபடுத்தினார். "நாரத கானம் மாரதவீரர்" எனக் கூறி நமக்கென்றே உரிய இசைச் செல்வத்தையும் படைத்திறத்தையும் நினைவுபடுத்துகிறார். எல்லாவற்றுக்கும் மேலாக "நல்லன யாவையும் நாடும் நன்னாடு" என்பது ஆழ்ந்து ஆராயும் நினைவில் வைத்து எடுத்துரைக்கத் தக்க பொன் மொழியாகும். வேதகாலம் புத்தர், மகாவீரர் வருகை, சைவத்தின் எழுச்சி, வள்ளலாரின் ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை ஆகிய அனைத்தின் சாரமும் நல்லனவற்றையே நாடுதல் என்பதாகும். உலகில் நல்லனவற்றை மட்டுமே நாடவும் அதனை உலகிற்கு எடுத்தரைக்கும் தகுதி மிக்கதும் நம் நாடே. என்னும் கருத்தினைப் பெறலாம். இங்கு விடுதலைக்குப்பின் நேரு அவர்கள் பஞ்சசீலக் கொள்கையை அறிவித்ததை நினைவுகூரலாம். உள்நாட்டவரும் வெளிநாட்டவரும் உண்பதற்காகக்

"கன்னலுந் தேனும் கனியுமின்பாலும்
கதலியும் செந்நெலும் நல்கு மெக்காலும்
உன்னத ஆரிய நாடெங்கள்நாடே"

எனக் கூறுகிறார்.

சிக்கல்களைக் கூறுதல்:

பாரதியார் காலத்தில் அரசியல், பொருளாதாரம், சமுதாய வாழ்க்கை முறை ஆகிய அனைத்திலும் அடுக்குமுறையும் அடிமைத்தனமும் நிறைந்திருந்தன. அது சொந்த நாட்டு வீரர்களைக் கொண்ட சொந்த நாட்டுக் குடிமக்களைக் கொல்லும் அளவிற்குத் தெளிவற்ற மனப்பான்மையை உருவாக்கி இருந்தது. இதனை,

"நெஞ்சில் லுரமம்மின்றி
நேர்மைத் திறமுமின்றி
வஞ்சனை சொல்வாரடீ - கிளியே
வாய்ச்சொல்லில் வீரரடீ
சொந்தச் சகோதரர்கள்
துன்பத்திற் சாதல்கண்டும்
சிந்தை யிரங்காரடீ - கிளியே
செம்மை மறந்தாரடீ"

எனும் பாட்டில் கூறியுள்ளார்.

செம்மை என்பது கருணைப்பண்பைக் குறிக்கும் என்று அன்று அடக்குமுறைகளில் பங்கேற்ற இந்திய நாட்டில் வெள்ளையரிடம்

பணியாற்றிய வீரர்களின் செயல்களை விளக்கிப் பாடினார். பொருளாதார ஏமாற்றத்தை எடுத்துக் காட்டும் விதத்தில்,

"உப்பென்றும் சீனியென்றும்
உள்நாட்டுச் சேலையென்றும்
செப்பித் திரிவாரடி - கிளியே
செய்வ தறியாரடி"

என்றார். அக்காலத்தில் வ.உ.சிதம்பரனார் என்னும் கப்பலோட்டிய தமிழன் தலைமையில் அந்நியத் துணிகளை எரித்துப் போராட்டம் நடத்தியபின்னர் வெள்ளையர்கள் உள்நாட்டுப் பொருள் எனத் தங்கள் பொருள்களை விற்கத் தொடங்கினர் என்பதை இப்பாட்டால் அறியலாம்.

"மாதரைக் கற்பழித்து
வன்கண்மை பிறர்செய்யப்
பேதைகள் போலுயிரைக் - கிளியே
பேணி யிருந்தாரடி"

எனும் அடிகள் அன்று நிலவிய பெண்களின் மீதான கொடுமைகளை எடுத்துரைக்கின்றன. பெண்களைப் பாதுகாக்க வேண்டிய அண்கள் அஞ்சி நடுங்கி இருந்தமையால்தான் அவர் பெண்களையே போருக்கு அழைத்தார். இதனாலேயே பாஞ்சாலியைச் சபைக்கு இழுத்துப் போவதைத் தடுக்காத மக்களை நெட்டை மரமென நின்ற நாய்கள்" எனச் சாடினார். நாய்கள் எனக் கூறியது அக்காலத்து ஆண்களையும், பாஞ்சாலியாக உருவகித்தது பாரதத் தாயினையும் ஆகும். சபைக்கு இழுத்துப்போனவன் வெள்ளையனாவான். இவ்வாறு பாரதியாரின் பாடல்கள் அன்று நிலவிய வெளிப்படையாகத் தெரிந்த அனைத்துச் சிக்கல்களையும் தம் பாடல்களில் ஆழமாகப் பதிவு செய்துள்ளார். சிக்கல்களைக் கூறியமையில் கவிமணி தேசிக விநாயகம்பிள்ளையும் சமபங்கேற்பாளராகவே தெரிகிறார். எனினும் சிக்கல்களைக் கூறும்போதும் அதனைக் கருத்தாக மட்டும் கூறாமல் சொல்லாட்சித் திறனைப் பயன்படுத்திச் சிக்கல்களுக்குத் தீர்வு காணும் எண்ணத்தை ஏற்படுத்துமாறு பாரதியார் பாடினார்.

தீர்வினைக் கூறுதல்

பாரதியார் பாடல்களில் மக்கள் மனத்தில் பதிந்தவை தீர்வுகளைக் கூறிய பாடல்களே ஆகும். "மாதர்தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்., "சுதந்தர தேவி நின்னைத் தொழுதிடல் மறக்கிலேனே"; "கனியும் கிழங்கும் தானியங்களும் கணக்கின்றி தரும் நாடு" என்பன போன்ற பாடல்கள் மக்களை அன்று முதல் இன்று வரை தீர்வுகளை நோக்கி அழைத்துச் செல்கின்றன. ஒரு பொருளாக நாட்டைப் பார்க்காமல் பண்பு நிறைந்த அறிவும் பொருளாதார வளமும் நிறைந்த நாடாக இந்தியாவைக் கற்பனை செய்து பார்த்தார்.

"உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" எனும் பொன்மொழியில் இந்தியாவின் அடிப்படைத் தொழில் உழவாகவும் அதனை

மையமாகக் கொண்டு மற்ற தொழில்களும் அமைய வேண்டும் என்று விரும்பினார்.

"விழலுக்கு நீர்பாய்ச்சி மாயமாட்டோம்; வெறும் வீணருக்கு உழைத்து ஓயமாட்டோம்" எனக் காலம், உழைப்பு, பொருள் எதனையும் வீணுக்குப் பயன்படுத்தக் கூடாது என எண்ணினார். ஒவ்வொரு தொழில் வளர்ச்சியிலும் பண்பாட்டுச் செழுமை இணைந்தே செல்ல வேண்டும் என்று விரும்பியதால்தான்" கலை வளர்ப்போம்., கொல்லர் உலை வளர்ப்போம்" என்றார். எத்தொழிலைச் செய்தாலும் தொழிலாளர்கள் கலை உணர்வு மிக்கவர்களாக இருக்க வேண்டும் என்று விரும்பினார்.

"வாழின் முப்பது கோடியும் வாழ்வோம். வீழின் முப்பது கோடியும் வீழ்வோம்" என்று ஒன்றுபட்ட இந்தியர்களின் மனப்பான்மை எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு மிகச் சிறந்த கட்டளை ஒன்றினை வழங்கினார்.

"வங்கத்தில் ஓடிவரும் நீரின் மிகையால் மையத்து நாடுகளில் பயிர் செய்குவோம்" எனத் தேசிய நதிநீர் இணைப்புத் திட்டத்தைக் குறிப்பாகக் கங்கை, காவிரி இணைப்புத்திட்டத்தை முன்வைத்தார்.

"கனியும் கிழங்கும் தானியங்களும் கணக்கின்றித் தரும் நாடு என்று" கூறினாரே அன்றிக் கணக்கின்றி பெறும் நாடு" என்று கூறவில்லை. நமது பொருளாதாரத்திற்கு ஏற்றம் தரும் ஏற்றுமதியினை முன்னிறுத்த வேண்டும் என்று அன்றே கூறினார்.

"ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா! உறுதிகொண்ட நெஞ்சினாய் வா வா வா" எனும் அவரது பாடல்கள் ஒளிமயமான பாரதத்தை உருவாக்கும்.

முடிவுரை:

நமது நாட்டின் நிருமாணப் பணிகள் குறித்துப் பாரதியார் கூறிய அனைத்துத் திட்டங்களையும் ஒன்றாகத் தொகுக்க வேண்டும். அவற்றில் நிறைவேற்றப்பட்டவை, நிறைவேற்றப்படாதவை, நிறைவேற்ற வேண்டியவை, உடனடியாக நிறைவேற்றக் கூடியவை, பின்னால் நிறைவேற்றக் கூடியவை எனத் தனித்தனியாக வகைப்படுத்தித் திட்டங்களை உருவாக்கிச் செயல்படுத்த வேண்டும்.

பேரிலக்கியம் படைக்க விரும்புவோர் பாரதியாரின் வழிநின்று முப்பெரும் பேரிலக்கியப் பண்புகளைக் கொண்ட இலக்கியங்களை உருவாக்க வேண்டும். அப்பேரிலக்கியப் பண்புகளாவன சிறந்த மரபுகளை நினைவூட்டல், சிக்கல்களை எடுத்துரைத்தல், தீர்வுளைத் தெளிவாகக் கூறுதல் என்பன.

# எம்.ஏ. சுசீலாவின் சிறுகதையில் பெண் சித்தரிப்பு

ந.காவேரி
இளநிலை ஆய்வாளர்
தமிழியற்புலம்
ம.கா.பல்கலைக்கழகம், மதுரை

## முன்னுரை

ஒரு படைப்பாளி ஓர் படைப்பை படைக்கின்ற போது அப்படைப்பில் தம் மன உணர்வுகளையும் சமூகச் சீரழிவுகளையும் ஏதேனும் ஒரு கதாப்பாத்திரத்தின் மூலம் எடுத்துக் கூறுகிறார். அந்த வகையில் மக்களின் வாழ்க்கைப் போராட்டங்களை படைக்கின்ற பொழுது அப்படைப்பாளி ஓர் குறிப்பிட்ட இடத்தைப் பெறுகின்றான். இதன் அடிப்படையில் சமூகத்தில் பெண்களின் நிலையை எடுத்துக் கூறும் விதமாக பேராசிரியை எம்.ஏ. சுசீலாவின் படைப்புக்கள் அமைகின்றன. இவரது சிறுகதைத் தொகுப்புக்களில் ஒன்று "புதிய பிரவேசங்கள்" என்பதாகும். அதில் "கன்னிமை" என்ற ஒரு சிறுகதையினை மட்டும் எடுத்துக்கொண்டு அதில் பெண் எவ்வாறு சித்தரிக்கப்பட்டுள்ளாள் என்பதை இக்கட்டுரையின் வாயிலாக அறியலாம்.

## கன்னிமை

"கன்னிமை" முதலாக பன்னிரெண்டு சிறுகதைகள் அடங்கிய சிறுகதைத் தொகுப்பு "புதிய பிரவேசங்கள்" ஆகும். இத்தொகுப்பு 1994-ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டது. இந்த சிறுகதைத் தொகுப்பு வாழ்க்கை நீரோட்டத்தின் இயல்பான கதகதப்பான வெளிப்பாடு கொள்கிற சமூகப் பார்வையே ஆகும். இதில் படைப்பாளியினை சமூகப்பார்வை முரணின்றி மலரின் மணமாய் வெளிப்பாடு கொள்கிறது.

## பெண் சித்தரிப்பு

மனித உறவுகளில் முதன்மையானது தாய்மை கன்னிமை கதையில் வலம் வரும் கல்யாணி என்ற பெண் தான் தாய்மைத் தன்மை அடைந்த நிலையை உணருகின்ற தன்மையினை "இனம் புரியாத இனிமையான ஓர் உணர்வு". அடிவயிற்றிலிருந்து பீறிட்டுக் கிளம்பி ... உடல் முழுவதும் வினோதமாக ... வித்தியாசமாக வியாபிப்பதை உணர்கிறாள்... கல்யாணி பரவசமா ... பயமா... அதிர்ச்சியா ... ஆனந்தமா ... என்று பிரித்துப் பார்க்க முடியாதபடி தன்னை ஆட்கொண்டு கிளர்ச்சியூட்டும் அந்த உணர்வுக்குக் காரணம் அதுதானா? அதுவே தானா?... என்ற வரிகளின் வாயிலாக விளக்குகிறார்.

மேலும் "நீயே ஒரு குழந்தை .. உனக்கு அதுக்குள்ளே ஒரு குழந்தையா? ... காதருகே அம்மா முணுமுணுப்பது போன்ற கற்பனையில் ... அகம் மலர்ந்து போய் முகத்திலும் புன்னகைப் பூவை அரும்ப விடுகிறாள்" என்று கூறுவதன் மூலமும் பெண் தாய்மைக்கு தனி மதிப்பு தந்து அந்த உணர்ச்சியை இனிமையுடையதாக பெண் ஏற்று மகிழ்வதை விளக்குகிறார்

ஆசிரியர்.

கல்யாணி கர்ப்பமான விஷயத்தை வீட்டில் உள்ளவர்களிடம் கூறுவதற்குத் தயங்கியநிலையில் மாமியாரே கல்யாணியிடம் "ஆமாம் ... நீ இந்த வீட்டுக்கு வந்தப்புறம் ஒதுங்கவே இல்லையோ...? என்பதிலும், "என்ன கல்யாணி...? எனக்கு மருமகனா மருமகளா? என்ன தரப்போறே ...? என்று அவள் எதிர்பார்க்கின்ற கேள்வியை மட்டும் உதிர்க்காமலேயே தன் வீட்டுக்குப் போகிற நாத்தனாரும் அவளது சிறு சந்தோசத்தைக் கூட தராத நிலையினைச் சுட்டுகிறார்.

கல்யாணி சீக்கிரம் உண்டாகியிருப்பதை கணவன் வீட்டார் சந்தேகப்பட்டு அவள் ஏற்கனவே கெட்டுப் போனவள் என்றும் "அந்தக் குழந்தையைக் கலைத்து விட்டுத் தன் வீட்டில் கொண்டு வந்து விடும்படி அவள் மாமியாரும் நாத்தனாரும் கூறுகின்றனர். பெண்ணாக இருந்து கொண்டு மற்றொரு பெண்ணின் மன உணர்வினை அறிந்த கொள்ளாதவர்களாக மாமியாரும் நாத்தனாரும் படைக்கப்பட்டிருக்கின்றனர்.

பொறுமையுடைய பெண்:

ஒரு மாதத்திற்கு மேலாகியும் கல்யாணி வீட்டாரிடமிருந்து எந்தப் பதிலும் வராததால் அன்று அவள் கணவன் ரகுவே வீடு தேடி வந்து அவளிடம் பேசுகிறான். அவன் "கல்யாணி... உனக்கு என் மேலே கோபம் இருக்கும். இந்த விஷயத்தைப் பொறுத்த வரைக்கும் நான் நம்பறதோ... நம்பாததோ பிரச்சனையில்லை. சின்ன வயிசிலிருந்தே எங்கம்மா, அக்கா பேச்சை தட்டி நடந்து எனக்குப் பழக்கமில்லை. இதிலேயும் அப்படித்தான் இப்படியும் ... நாங்க ஒண்ணும் உனக்குக் கொடுமை செஞ்சிடலை! இதை ஊரறியச் சொல்லி உன் மானத்தை வாங்கறதோ... உன்னைத் தள்ளி வைக்கிறதோ எங்க நோக்கமில்லை. இந்தக் குழந்தை மட்டும் வேண்டாம். அவ்வளவுதான் என்கிறான்.

இதுவரையும் பொறுமையாக இருக்கிறாள் கல்யாணி. இதில் ஆணின் பொறுப்பற்ற தன்மையும் கையாலாகாத தனமும் சுட்டப்படுகிறது.

பெண்ணின் மனஉறுதி

கணவன் பேசிக் கொண்டே போக கல்யாணி எழுந்து "வில் யூ ஸ்டாப் திஸ் நான்சென்ஸ். அக்கினி சாட்சியா ... இன்பத்திலேயும் துன்பத்திலேயும் துணையிருப்பேன்னு கைபிடிச்ச மனைவிகிட்டே இப்படிப்பேச உங்களுக்கு வெட்கமாயில்லை ... குழந்தை நம்முடையது தானங்கிற நம்பிக்கை மட்டும் உங்களுக்கு இருந்தா ... நான் நரகத்திலே கூட உங்களோட வாழ்க்கை நடத்தத் தயாரா இருக்கேன். ஆனா ... அது ... உங்க கிட்ட இல்லாதப்ப ... நான் அந்தக் குழந்தையைக் கலைச்சுக்கறதும் ஒண்ணுதான்... நான் கெட்டுப்போனவதான்ங்கிற உங்க குற்றச்சாட்டைப் பகிரங்கமா ஒத்துக்கிறதும் ஒண்ணுதான்".

அம்மா "சும்மா இரு கல்யாணி! என்கிறாள். "சும்மா இருந்ததெல்லாம் போதும்மா? ... இவங்க வீட்டிலே குனிஞ்ச தலை நிமிராமக்

கர்ப்பமானதைச் சொல்றதுக்குக் கூடக் கூச்சப்பட்டுக்கிட்டு இருந்தவ தான் நான். ஆனா...இப்போ... என்னை இப்படி விஸ்வரூபம் எடுக்க வச்சியிருக்கிறதும் இவங்கதான். ஒரு பொண்ணு கணவன் வீட்டிலே நுழைஞ்சதும் ... முதல்ல தன்னோட கன்னித் தன்மையை நிரூபிச்சிட்டு அப்புறம் தான் கருவையே ஒத்துக்கணும் போலிருக்கு... இல்லேன்னா காண்டக்ட் சர்ட்டிபிகேட் கொடுக்கிற மாதிரிக் கல்யாணம் ஆகும் போது "வர்ஜினிடி சர்ட்டிபிகேட்" கொடுக்கணும் .. என்கிற கல்யாணியின் ஆவேசக் குரல் வழியாக ஒட்டு மொத்த ஆணாதிக்க சமுதாயத் திற்கும் சரியான சவுக்கடியாக இப்பதில் அமைகிறது.

மேலும் கல்யாணி "மிஸ்டர் ரகு கடைசியாக... இதையும் கேட்டுட்டுப் போயிடுங்க! எங்கம்மா உங்க வீட்டிலே இருந்து திரும்பி வந்து அந்த விஷயத்தை என்கிட்ட சொன்ன அன்னிக்கே அந்த அதிர்ச்சியிலேயே எனக்கு "அபார்ஷன்" ஆகிக் குழந்தை உருக்குலைஞ்சு போயிடுச்சி. அதை உங்ககிட்ட மறுநாளே சொல்லியிருந்தால் கூட ... நீங்க சொன்ன "ஸோ கால்ட்" வாழ்க்கை எனக்கு அப்பவே கிடைக்சுருக்கும். ஆனா சந்தேக நெருப்பிலே ஒவ்வொரு நிமிஷமும் குடியிருந்து உங்களோட சம்சார வாழ்க்கை நடத்தறதை விடத் தனிமைத் தவத்திலே என்னையே நெருப்பாக்கிக்கிறதைத்தான் நான் விரும்பறேன்... என்ற கல்யாணியின் பதிலில் பெண் உயர்ந்து நிற்கிறாள்.

முடிவுரை:

இவ்வாறு "கன்னிமை" சிறுகதையில் பெண்ணைப் பற்றிய சித்தரிப்பு அடங்கியுள்ளது என்பதை மேற்கூறிய வாறு அறியலாம்.

அடிக் குறிப்பு

1.புதிய பிரவேசங்கள் - எம்.ஏ. சுசீலா

2.தமிழியல் ஆய்வு

# கவிஞர் தமிழ் ஒளியின் காவியங்களில் உவமை நலம்

க.ஜனசக்தி
முனைவர் பட்ட ஆய்வாளர்
ஸ்ரீமத் சி.பா.க.தமிழ்க்கல்லூரி,
மயிலம்

கவிஞனின் படைப்பாற்றலை விளக்கும் இலக்கிய உத்திகளில் தலைசிறந்து விளங்குவது உவமையாகும். "கவிஞனின் சிறப்பை அவன் கூறும் உவமைகள் மூலம் அறிந்து கொள்ளலாம். சிறந்த நோக்குடையார்க்கே இத்திறம் உண்டு"[1] என்பர்.

தமிழ் ஒளியின் உணர்வையும் தெளிவையும் படைப்பாற்றலையும் கற்பனைத் திறனையும் வெளிக்காட்டுவதாக இவர்தம் படைப்புகளில் உவமையாகாது இடம் பெற்றுள்ளது.

**ஆய்வுக் களம்**

கவிஞரின் படைப்புகள் முழுவதும் உவமை. பரவிக் கிடப்பினும் இவ்வாய்வின் களமாக, நிலைபெற்ற சிலை, கவிஞனின் காதல், வீராயி என்ற மூன்று காவியங்கள் மட்டும் எடுத்தாளப் பெறுகின்றன.

**ஆய்வின் நோக்கம்**

கவிஞர் தமிழ் ஒளியின் மூன்று காவியங்களில் இடம்பெற்றுள்ள சிறந்த உவமை நலன்களை ஆராய்வதே இவ்வாய்வின் நோக்கம் ஆகும்.

**கவிஞரின் படைப்புகளில் இயற்கை - உவமை நலம்:**

கவிஞர் தன் படைப்புகளில் இயற்கை நிகழ்வுகளுக்கு சேரிவாழ் ஏழை மக்களின் துன்பங்களை உவமைப்படுத்தி, இயற்கை சீற்றத்திற்கு காரணம் "தலைவிதியே" என்று சொல்லும் காரணங்களுக்கு அழகான உவமை மூலம் சாட்டையடியும் கொடுக்கிறார்.

**விண் மீன் கள் :**

இரவில் தலைவனை எண்ணி விழித்திருக்கும் காவியத் தலைவியின் கண்களில் தெரியும் விண்மீன்கள் "பசிகொண்டோர் கண்க ளென்ன"[2]

இரவில் பசியோடிருக்கும் ஏழையின் கண்களைப் போன்று துடிக்கின்றன என்ற உவமையால் ஏழையின் துயர நிலையைச் சுட்டுகிறார்.

**மழைநீர் :**

இயற்கையாக மழைபொழிகிறது. இதனைக் கவிஞர் ஏழையின் கண்களினின்று நீர் வழிவது போல் மழைபெய்தது என

மிடிமைக்குள்ளே வீழ்ந்தவரின் கண்ணினின்றும்
வீழ்கின்ற நீர் போல"[3]

என்ற உவமை வரிகளால் விளக்குகிறார்.

**இடி :**

சேரியில் மழை இடியுடன் பெய்கிறது. இக்காட்சியைக் கவிஞரின்

மனம்

"ஏழை மனங்குமுறும் விதம் போலும் இடிக்கிறது வானில்"[4]

என சிந்தனை செய்கிறது.

சேரியின் நிலையும் கவிஞரின் உவமையும்:

சிதைந்த சேரியின் காட்சி

மழை வெள்ளத்தால் சிதைந்த சேரியின் துயரக்காட்சியை

"புல்பூண்டும் மண்ணுக்குள்ளே போய் மறைந்து கொண்டு
பொங்கிவரும் துக்கத்தை அடக்குவன போலும் !
நல்லவரின் மரணம்போல் வருத்தமிகு தோற்றம் !
நலமிக்க பெரு நாடு பேரடிமையுற்றுச்
செல்வத்தை இழந்தது போல் நெஞ்சுருகுந் தோற்றம் ![5]

என இயற்கை சீற்றத்தால் சிதைந்த துயரத்திற்கும் சிறந்த உவமைகளை அடுக்கிக் காட்டுகிறார்.

சேரி சிதைந்ததற்கு காரணம்:

மழை வெள்ளத்தால் சேரி சிதைந்தது. அந்நிலைக்கு "தலைவிதி" தான் காரணம் என்பவரின் பேச்சிற்கு

................"மேற்பூச்சு பூசி
சீழொழுகுங் கட்டியினைச் சீலையினால் மூடுஞ்
செயல் போன்று நியாயங்கள் ஏதேதோ சொன்னார்"6

என்று சீழொழுகுங் கட்டியினை துணியில் மூடிமறைக்கும் நிலையினை உவமையாக கூறுகிறார்.

உதய ஞாயிறும் உவமை நலமும்:

இயற்கையான ஞாயிறு உதிக்கும் காட்சிக்கு இரண்டு வகையான உவமைகளைச் சுட்டுகிறார் கவிஞர்.

கொலையையே என்னும் இவ்வுலகின் நிலையைக் கொடிதென்று சொல்வது போல் உலகின் இருளைக் கலைத்து கதிரவன் உதித்தான் என,

......."கீழ்த்திசையின் இருள் கலைத்து
கொலை எண்ணும் உலகத்தின் நிலைமை தன்னைக்
கொடிதென்று சொல்வான் போல் கதிர் எழுந்தான் !"[7]

என்ற இவ்வரிகளில் குறிப்பிடுகிறார்.

மற்றோர் இடத்தில்,

சூரியன் தோன்றும் காட்சியிலும் முதலாளியின் ஏழைத் தொழிலாளிகள் அழித்ததனைப் போன்ற காட்சி தோன்றுவதாக உவமிக்கிறார்.

"கிழக்கிருட்டு முதலாளி தன்னை இளங்
கதிரோனின் கிரண மென்னும்
உழைப்பவர்கள் கிழித்தெறிந்து குருதியினை
ஓட விட்டார் அடடே வானம்
விழித்ததடா புரட்சியிலே..."[8]

வானம் "புரட்சியில் விழித்ததாக கவிஞர் உவமை கூறுகிறார்.

மலர்ச் சோலையின் மணமும் உவமை நலமும்:

மணம் வீசும் மலர்ச்சோலை கவிஞனின் சிந்தனையைத் தூண்டும் தூண்டுகோல் ஆகும். இயற்கையைக் காணும் போதும் சமுதாயச் சிந்தனை வளம்பெறுகிறது கவிஞர் தமிழ் ஒளிக்கு.

கொடுமையான முதலாளியினால் தண்டனைக்குட்பட்டு இறந்த ஏழைகளின் நிணம் வீசும் துர்நாற்றம் மறைக்கவே இச்சோலை மணக்கிறது என சோலையின் மணதிற்கு காரணம் கூறுகிறார்.

"மணத்தின் வத்திகளால் - மலர்
வாய்ந்திடு பன்னீரால்
பிணத்தின் துர்நாற்றம் தன்னைப்
பிறர் நுகராமல்
தணிக்கை செய்வார் போல் - கொடுந்
தண்டனைப் பட்டிறந்தோர்
நிணத்தின் துர்நாற்றம் - மறைக்க
நினைத்த மலர்ச்சோலை"[9]

என்ற வரிகளில் பிணத்தின் துர்நாற்றம் மறைக்கும் வத்தி, பன்னீர் மணங்களை சோலையின் மணத்திற்கு உவமையாக்குகிறார்.

ஏழைப்பெண்களின் நிலை - உவமை நலம்

"பெண்ணென்று பூமிதனில் பிறந்துவிட்டால் - மிகப்
பீழை இருக்குதடி . . . "[10]

என்ற பாரதியின் வரிகளுக்கு ஏற்ப, பெண்கள் அதுவும் ஏழைப்பெண்கள் படும் துயரங்களையும் அதற்கு அழகான உவமைகளையும் கவிஞர் தம் காவியங்களில் சுட்டுகிறார்.

ஏழைப்பெண் அழகு

வீராயி என்ற ஏழைப்பெண் தன் அழகு தனக்கு துன்பத்தையே தருகிறது என்பதனை

"வாழைதனிற் பாம்பு வாழ்வது இன்னழகும்
ஏழைதனை அடைந்தே இன்னல் படுத்துவதேன்?"[11]

என்ற வரிகள் மூலம் ஏழைப்பெண்களின் அழகிற்கு வாழையினிற் வாழும் பாம்பினை உவமையாக்குகிறார்.

ஏழைப்பெண்ணின் துயரநிலை

முரட்டு முதலாளியின் தீய எண்ணத்தால் அண்ணனைப் பிரிந்த வீராயி என்பவள் பட்ட துயருக்கு

"......... சிட்டொன்றின்
குஞ்சுதனைக் கூடுவிட்டுக் கீழெடுத்துப்
போட்டது போல்"[12]

என்ற வரிகளில்,
கூட்டை விட்டு எறியப்பட்ட குருவிக் குஞ்சின் நிலையினை உவமையாக்குகிறார் கவிஞர்.

கட்டாய மணம் பெண்ணின் மனம்:

வஞ்சி என்ற தன்மகளை ஆலை முதலாளிக்கு மணம் பேசிவிட்டேன் என்ற தாயின் கூற்று

. . . . . . . . . . . . . . . . . . . . தன்னைக்

கொன்றுவிட வரும் வேற்கள் போல்"[13]

தாக்கி இதயமே நின்று விடும்போல் இருந்தது என்கிறார் கவிஞர்.

ஆய்வு முடிவு

இயற்கை நிகழ்வுகளிலும் அவர் கையாளும் உவமை மூலம் கவிஞரின் சமுதாயப் பார்வை வெளிப்படுகிறது.

இருளைக் கிழிக்கும் சூரியகதிர், வர்க்க பேதம் நீக்கும் நிலை என உவமை மூலம் நிலை நிறுத்துகிறார்.

மலர்ச்சோலையின் மணமும் ஏழையின் துயரத்தை மறைக்க வீசுவதாக உவமிக்கிறார்.

ஏழைப்பெண்களின் நிலை, கட்டாயமணம் போன்ற தயரங்களை உவமை மூலம் உணர்த்துகிறார்.

இக்கருத்துக்கள் மூலம் உலக நிகழ்ச்சிகளை கவிஞர் கூர்ந்து நோக்கியுள்ளார் என்பதும்,

அதன் தாக்கமே இவரது படைப்புகளில் பெரும்பான்மை உவமைகளாக வெளிப்பட்டுள்ளன என்பதும் புலனாகின்றது.

அடிக்குறிப்புகள்

1.பாலச்சந்திரன், சு.இலக்கியத் திறனாய்வு, ப.177.
2.தமிழ் ஒளி, கவிஞனின் காதல், ப.23.
3.தமிழ் ஒளி, நிலைபெற்ற சிலை, ப.83.
4.தமிழ் ஒளி, வீராயி, ப.131.
5.மேலது., ப.136.
6.மேலது.
7.தமிழ் ஒளி, நிலைபெற்ற சிலை, ப.105.
8.தமிழ் ஒளி, வீராயி, ப.153.
9.மேலது, ப.157.
10.பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.299.
11.தமிழ் ஒளி வீராயி, ப.151.
12.மேலது., ப.151.
13.தமிழ் ஒளி, நிலைபெற்ற சிலை, ப.68.
14.மேலது., ப.103.
15.மேலது., ப.69
16.மேலது., ப.69.

# "நவீனப் புதுக்கவிதைகளுள் கஸல்"

ஜா. சலேத்
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழாய்வுத் துறை
தூய வளனாய் தன்னாட்சிக் கல்லூரி,
திருச்சிராப்பள்ளி

கஸல் என்னும் கவிதை வடிவம் தமிழில் வளர்ச்சி பெற்று வரும் முக்கியமான கவிதை இலக்கியமாகும். பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய இவ்வகைக் கவிதையின் வளர்ச்சி இன்று உலகத்தின் பலநாடுகளை, பல மொழிகளை எட்டியுள்ளது. கஸலின் வரலாறு, வரையறைகள், தமிழில் இவ்வகைக் கவிதையின் பரவலாக்கம் குறித்து இக்கட்டுரையில் ஆராயப்படுகின்றது.

## தோற்றமும் வளர்ச்சியும்

கஸல் அராபிய மொழியிலிருந்து தோன்றியதாகும்.[1] (www.answers.com) கஸல் என்றாலே காதலியுடன் பேசுதல் என்று பொருள்.[2] (அப்துல் ரகுமான், மின்மினிகளால் ஒரு கடிதம், ப.3) கஸல் பெரும்பாலும் காதலினால் ஏற்பட்ட சோகத்தையே பாடுவதாக அமையும். கஸல் பழைமையான வடிவமாகும். இது பத்தாம் நூற்றாண்டில் பாரசீகக் கவிதைகளிலிருந்து தோன்றியதாக அறியப்படுகிறது. "முன் இஸ்லாமிய அரேபிய வடிவத்திலிருந்து தோன்றியதாக அறியப்படுகிறது. "முன் இஸ்லாமிய அரேபிய வடிவத்திலிருந்து வருவிக்கப்பட்ட "கஸிதா" என்ற பாரசீக வடிவத்திலிருந்து தோன்றியது".[3] (www.answers.com).

உருதுவில் கஸல் செல்வாக்கு பெறத் தொடங்கியபின் உலக அரங்கிற்கு வரத் தொடங்கியது. "உருதுக் கவிதையில் கஜல் புகழ்பெற்ற நுணுக்கமான அழகிய யாப்பு வடிவம்"[4] (அப்துல் ரகுமான், இல்லையிலும் இருக்கிறான், ப.60) என்று அப்துல் ரகுமான் குறிப்பிடுகிறார். "12ஆம் நூற்றாண்டில் சுல்தான்களின் ஆட்சியாலும், சூஃபி தத்துவத்தாலும் இந்தியாவில் பரவியது. உருது கவிதையின் வடிவமாக கஸல் இருப்பினும் பல மொழிகளின் கவிதைகளை இது பாதித்துள்ளது"[5] (www.answers.com) உருது பாடலில் இருந்து தோன்றிய போதிலும் இதில் வசனத்திற்கு முக்கியத்துவம் அளிக்கப்படுவதாக அமைகிறது.

"கஸல்" இந்தியாவிலும், பாகிஸ்தானிலும் பொதுப்பாடலாக அமைந்துள்ளது"[6] (www.answers.com) இதன் பாடுபொருள் பற்றிப் பார்க்கும்போது, "கஸல் என்பது மது, காமம், தெய்வீகக் காதல் மட்டுமே உள்ளடக்கியதன்று. ஆங்கிலத்தைப் போல் மிகப் பரந்த பாடு பொருளைக் கொண்டது"[7](www.answers.com) என்பதை அறிய முடிகிறது. "கஸல் வடிவம் மட்டுமே எந்தவொரு மொழியிலும் தன்னிச்சையாகக் காணப்படும்"[8] (www.cs.wisc.edu.com)என்று கூறும் அளவிற்குப் பல்வேறு மொழிகளில் இது சிறப்பாகப் படைக்கப்பட்டுள்ளது.

## வரையறைகள்

கஸல் கவிதை "யாப்பில் மட்டுமல்ல உள்ளடக்கத்திலும் மரபான

வரையறைகளைப் பெற்றது"[9] (அப்துல் ரகுமான், இல்லையிலும் இருக்கிறான், ப.60) என்றுஅப்துல் ரகுமான் கூறுகிறார்.

பொதுவான அமைப்பு வரையறைகள்

"5 முதல் 15 எண்ணிக்கையிலமைந்த கண்ணிகளைக் கொண்டு அமைக்கப்பெற்றுள்ள கவிதை வடிவமே கஸல்"[10] (www.poetry.about.com.) இது தன்னகத்தே சுதந்திரமான கண்ணியாக விளங்குகிறது. "முதலிரண்டு அடிகளின் இறுதிச்சீர்கள் இயைபுத் தொடை பெற்று வரும்"[11] (அப்துல் ரகுமான், இல்லையிலும் இருக்கிறான்.ப.எ) பெரும்பாலும் காதலினால் ஏங்கிக் கிடக்கும் காதலனின் ஏக்கப் பாடலாகவே அமையும். "காதல் உணர்வு, பிரிவு, ஏக்கம் என்பவை இவற்றின் பாடுபொருள்களாகும்"[12] (www.poetry.about.com.) "இறுதிக் கண்ணியில் கவிஞரின் பெயரையோ, எழுதுகோலின் பெயரையோ பெற்று அமைதல் வேண்டும்"[13] (www.war.edu.com) என்ற வரையறை கஸல் கவிதைகளுக்கு உண்டு. இரண்டு கண்ணிகளுக்கிடையே தொடர்பு இருத்தல் கூடாது என்பது கஸலின் சிறப்பான வரையறையாக அமைகிறது. "கடைசி கண்ணியைக் கையெழுத்தைக் கொண்டு நிறைவு செய்வது புகழ்வாய்ந்தது"[14] (www.war.edu.com)என்றும் கூறப்படுவதுண்டு.

கண்ணிகளின் சிறப்பு வரையறைகள்

கஸல் என்பது மாட்லா, மக்டா, பெ"ர், காஃபியா, ராடிஃப் ஆகிய கூறுகளை உள்ளடக்கிய கண்ணிகளின் தொகுப்பு ஆகும். ஷெர் என்பது கண்ணி என்பதைக் குறிக்கிறது.

ஷெர் - இரு வரிகளாலான கண்ணி

பெ"ர் - இது கண்ணிகளின் அளவுகோல் நீளமாகக் கருதப்படுகிறது. பத்தொன்பது வகை பெ"ர் உள்ளன.

ராடிஃப் - ஒவ்வொரு கண்ணிகளின் இரண்டாம் அடி ஒரே விதமான இயைபு பெற்றிருப்பதாகும்.

காஃபியா - காஃபியா என்பது சந்த இயைபைக் குறிக்கும்

மாட்லா - கஸலின் முதல் கண்ணிகளின் இரு அடிகளில் ராடிஃப் பெற்றிருந்தால் அது மாட்லா. ஒரே கண்ணியில் ஒன்றுக்கு மேற்பட்ட மாட்லா இருக்கலாம்.

மக்டா - தன்னுடன் பேசுதல் என்ற கூறாகும்."[15] (www.cs.wisc.edu.com)

இவ்வாறு கண்ணிகள் அமையும் விதம் குறித்த வரையறைகள் கஸலுக்கு உள்ளன.

தமிழில் கஸல்

கஸல் கவிதைகளைத் தமிழுக்கு அறிமுகப்படுத்தியவர் அப்துல் ரகுமான் ஆவார். "கவிஞர்கள் காதலைப் பாடக்கூடாது என்ற வறண்ட உணர்வை உடைக்க வேண்டும். சுருக்கமான கவிதைகளை எழுதுவதற்கான வாய்ப்பு, கருத்துச் சுதந்திரத்துடன் படைப்பதற்கான சூழல் இப்படி பல்வேறு விதமான

தன்மைகளைக் கஸலில் அடையாளம் கண்டமையால் அதைத் தமிழுக்குக் கொண்டுவந்தேன்"[16] (நேர்காணல்: அப்துல் ரகுமான் 06.03.2007) என்று குறிப்பிட்டுள்ளார். தொடக்கக் காலத்தில் கஸல் கவிதைகளை அதன் வெளி அமைப்பிலே அப்துல் ரகுமான் அறிமுகப்படுத்தினார்.

தமிழில் கஸல் அமைகிற போது அதன் அக, புற வடிவம் இப்படித்தான் அமைய வேண்டும் என்பதற்குச் சிறந்த சான்றாக அப்துல் ரகுமானின் "வேதிமியல்" என்ற கவிதை திகழ்கிறது.

மின்னைப் போல் மறைய இருந்தேன்
விளக்கைப் போல் எனைச் சுடர வைத்தாய்
பொன்னைப் போல்நான் புதைந்திருந்தேன் - எனைப்
புடம்போட்டாய் நகை ஆக்கிவிட்டாய்
என்னைப் போல் நான் இருக்க நினைத்தேன்
ஏதோ வேதிமியல் செய்து விட்டாய்
உன்னைப் போல எனை மாற்றிவிட்டாய் - உன்
உருவத்தில் என்னை வார்த்துவிட்டாய்

"தமது கவிதைப்பயணத்தின் தொடக்கத்திலேயே இத்தகைய முயற்சியை மேற்கொண்ட கவிக்கோ, இன்றைய காலக்கட்டத்தில் அம்முயற்சி முதிர்வடைந்து கஜலின் புறவடிவக் கட்டுப்பாடுகளை உடைத்தெறிந்து அகவடிவத்தை மேலும் செம்மையாக்கி "பாக்யா" இதழில் ரம்மியமான கஜல் கவிதைகளைப் படைத்து வருகிறார்"[17] (அப்துல்ரகுமான் மணிவிழா மலர், பக். 193-194).

உதாரணமாகச் சில கண்ணிகள்:

இரவில் ஏன்
அத்தனை நட்சத்திரங்களால்
என்னைப் பார்க்கிறாய்?
எனக்கும் உனக்கும்
இடையில் இருக்கும்
இடைவெளி
நம் காதல் தான்

இதுவரை தமிழில் முப்பதுக்கும் மேற்பட்ட கஸல் தொகுதிகள் வந்திருப்பதாகவும், அவற்றில் கஸலின் எல்லாக் கூறுகள் இல்லையெனினும், படைப்பாளன் புரிந்த அளவில் கஸலின் தன்மை காணப்படுவதாக அப்துல் ரகுமான் குறிப்பிடுகிறார். "கஜல் தமிழில் நிலைத்த இடம் பெறும்"[18] (நேர்காணல்: அப்துல் ரகுமான் 06.03.2007) என்ற நம்பிக்கையோடு இலக்கியத் தளத்தில் அதன் வீச்சு தொடர்கிறது.

கஸலின் மன உணர்வுகள்

"நனவு மனம் ஓயும் போது நனவிலி மனம் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதைக் கனவு என்கிறது ஃபிராய்டியம்"[19] (க.பலராமன், உளவியல் நோக்கில் திருக்குறள், ப.123). மேற்கண்ட இந்த மூன்று மனங்களும் ஒன்றுக்கொன்று இணைந்து பின்னிப் பிணைந்துள்ளன என்பதைக் கஸல் கவிதைகளுள் அடையாளம் காணமுடிகிறது.

முறையற்றதைக் காதல் என ஏற்றுக் கொள்வது இல்லை. அறத்தின்படி செய்வதைத்தான் காதல் என்று ஏற்றுக்கொள்வர். அப்படிப்பட்ட காதல் உணர்வில் கஸல் கவிதைகள் அமைந்துள்ளன.

கஸல் கவிதைகளில் உள்ளத்துள் ஏற்படுகிற காதல் உணர்ச்சி கூறப்படுகிறதே தவிர விலங்குணர்ச்சி அல்லது இச்சை உண்ச்சி என்று கூறப்படவில்லை.

மனமானது பழக்கங்களின் கூட்டமைப்பு என்று கூறுவர். இத்தகைய மன உணர்வுகளின் பல்வேறு வெளிப்பாடுகளைக் கஸல் கவிதைகளில் காணமுடிகிறது

**கஸலின் கலை உணர்வுகள்**

இன்றைய வழக்கில், ஒரு கதைத் தேக்கமாக அல்லது ஒரு வரலாற்றுக் கூறு ஒன்றை நினைவுபடுத்துவதாகக் குறிப்பிட்ட சொற்கள் தேங்கி நிற்கின்றன. இத்தகைய வரலாற்று மிச்சங்கள் தொன்மங்கள் எனப்படுகின்றன. கஸல் கவிதைகளில் இலக்கியம், காதல், சடங்கு, நம்பிக்கை, புராணம், மரபு, மொழி, வரலாறு, விவிலியம் போன்ற பல்வேறுபட்ட தொன்மங்கள் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

கஸல் கவிதைகளில் படிமரத்தின் செல்வாக்கை மரபு, விலங்கியல், இயற்கை, சமூகம், கற்பனை, உளவியல், அறிவியல் போன்ற கருத்தியல் வகைப்பாட்டுக்குள் உணரமுடிகிறது. அவ்வாறே குறியீடுகளும் காதலை வெவ்வேறு முகங்களோடு அடையாளப்படுத்துவனவாகக் கஸல் கவிதைகளில் வெளிப்படுகின்றன.

வினைநிகழ்வை ஏற்படுத்தும் தன்னுள் கட்டுக்கோப்பான அமைப்புகள் ஒன்றிணையும் போது புதிய பொருண்மையியல் படைப்பாக்கங்கள் உருவாகும் என்ற அமைப்பியல் கூறுகள் இக்கவிதைகளில் காணப்படுகின்றது.

ஒழுங்கின்மை, இருண்மை, பாலுறவுச் சிக்கல்கள், மொழிச்சிதைவு, நடைமுறைக்கு ஒத்துவராதிருத்தல் ஆகிய மீமெய்ம்மையியல் கூறுகள் கண்டறியப் பெற்றுள்ளன.

**தொகுப்புரை**

கஸிதா என்னும் பாரசீக வடிவிலிருந்து தோன்றிய கஸல் கவிதைகள் உருதுவில் செல்வாக்குப் பெறத் தொடங்கியபின் உலக அளவில் புகழ்பெற்றது.

ஐந்து முதல் பதினைந்து எண்ணிக்கையிலமைந்த கண்ணிகளின் தொகுப்பாகிய இக்கவிதையில் காதலின் சோகமே பாடுபொருளாக அமைந்துள்ளது.

கஸல் கவிதைகளில் பல்வேறு வகையான மன உணர்வுகளை அடையாளம் காண முடிகிறது.

கஸல் கவிதைகளில் படிமங்கள், தொன்மங்கள், அமைப்பியல், மீமெய்ம்மையியில் கூறுகள் கலை உணர்வுகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை அறிய முடிகிறது.

# ஒரு பிடி சோறு - சிறுகதையில் தலைப்புப் பொருத்தம்

அ.சதீசுபாண்டி
விரிவுரையாளர்
தமிழ்த்துறை
நா.ம.ச.ச.வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி
நாகமலை, மதுரை-19.

ஒரு சிறுகதையின் வெற்றி அதற்குச் சூட்டப்படும் தலைப்பிலும் பொருந்தியுள்ளது. பொருத்தமான தலைப்பைத் தேர்ந்தெடுப்பதிலேயே படைப்பாளரின் கலைத்திறம் விளக்கமடைகிறது. சிறுகதையின் தலைப்பு கதையின் முழு அமைப்பையும் நிழல் வடிவில் காட்டக்கூடிய ஆற்றல் பெற்றுத் திகழ வேண்டும்., அதன் இனிமையும் கவர்ச்சியும் நம்மைச் சலிப்பில்லது கதையைப் படித்து முடித்துவிடுமாறு செய்ய வேண்டும். இலக்கியத்தின் நுதல் என்று சிறுகதையைக் கொண்டால், அதன் தலைப்போ அப்பிறை நுதலில் தரித்த நறுந்திலகம் எனக் கொள்ளலாம். அஃது அவ்வளவு அழகாக எண்ணிப் பார்த்து இடப்பட வேண்டும்." - அகத்தியலிங்கம்

தமிழ்ச் சமுதாயத்தில் சிறுகதைகளின் போக்குகளைக் கூர்ந்து ஆய்வு மேற்கொண்டு பல உள்ளீடுகளை அலசி ஆராய்ந்து அதன் மூலம், அவ்வகைமையை தெளிவுபடுத்தியும் உள்ளனர். சிறுகதைகளின் பல கோண ஆய்வுகளில் தலைப்புப் பொருத்தம் குறித்த பார்வை மிக முக்கியமானது அவற்றைப் பொருத்திக் காட்டும் உத்தியில் பல எழுத்தாளர்கள் தவறிப் போயிருக்கின்றனர் சில எழுத்தாளர்களே தடம் பதித்துப் போயிருக்கின்றனர். தடம் பதித்த சிலரும், தலைப்புக்களைக் கதையின் திருப்புமுனைகளிலோ, முடிவிலோ தொட்டுக்காட்டும் போக்கைக் காணலாம். அத்தன்மைகளிலிருந்து மாறுபட்டு, தனக்கென தனி உத்திகளைக் கையாண்டு எழுத்தாளர் ஜெயகாந்தன், தமிழ்ச் சிறுகதை உலகில் தடம் பதித்துள்ளனர். அவருடைய "ஒரு பிடிசோறு" எனும் சிறுகதையில் தலைப்பிற்கான பொருத்தத்தை ஆங்காங்கே தூவி, அக்கதைக்கு மேலும் வலு சேர்ப்பதாக அமைத்துள்ளமை பெரிதும் கதையினைக் கவரும் விதமாக அறிய முடிகிறது.

"வறுமையினால் ஏற்படும் பிணி ஒன்றுண்டு. தேவையினால் அது மனிதனைத் தீமை செய்யத் தூண்டும்" எனும் ஏ.கே.செட்டியார் காட்டும் யூரிபிடிஸ் கருத்தை நினைவூட்டுவதாக "ஒரு பிடி சோறு" கதையில் வரும் ராசாத்தி, மாரி இருவரின் குடும்பச் சூழலும் சித்திரிக்கப்பட்டுள்ளது.

வறுமையில் ராசாத்தியின் மகன், மண்ணாங்கட்டி பக்கத்து வீட்டில் வசிக்கும் மாரியாயின் கணவனுக்கு வைத்திருந்த சோற்றைத் திருடித் தின்றுவிடுகிறான். அதனைக் கண்ட மாரியாயி மண்ணாங்கட்டியை அடிக்கிறாள். அதுகாறும் ராசாத்தி மண்ணாங்கட்டியை அடிப்பதும், திட்டுவதும் இயல்பென்றாலும், மற்றவர் தன் பிள்ளையை அடிப்பதா? என சண்டைக்குப் போகிறாள். நிறைமாத கர்ப்பிணியான ராசாத்தி, மாரியாயியுடன் சண்டையிடுவது தாய்மைப் பண்பைக் காட்டுவதாக அமைகிறது. அவள் அவனுக்காக சண்டையிட்டு அன்றிரவே பேறுகால வலியினைப் பெறுகிறாள்.

மண்ணாங்கட்டியின் அப்பன் பெயர் கூட தெரியாமல், சடையம்மன் கோவில் திருவிழாவில் சந்தித்த வளையல் வியாபாரி முகம் நினைவுக்கு வருவதாக நினைவு கூர்வதும், தற்போதைய பேறுகாலத்திற்கும் அப்பனை அவளே அறியும் தன்மையில் சித்திரிக்கிறார். இத்தகைய ராசாத்திக்கு தாய்மைப் பண்பு உள்ளவளாகவும் பாதுகாப்புடன், தற்போது குழந்தையைப் பெற்றெடுக்க வேண்டும் என எண்ணுபவளாகவும் சித்திரித்துள்ளமை சிந்திக்கத் தக்கதே!.

மண்ணாங்கட்டி திருடியதாக அறிமுகமான கதை ராசாத்தி, மாரியாயி சண்டையில் வளருகிறது. சண்டையால், ராசாத்தி பேறுகால வலிபெற்று துடிக்கிறாள். மாரியாயி தன் வேலை பளுவிற்கிடையில் ராசாத்திக்கு அரிசி கொடுத்து உதவுகிறாள். அதை சமைத்து உண்டால், உடல் பசியும், பேறுகால வலியும் கொஞ்சம் குறையும் என நினைக்கிறாள். அப்போது, தன்னிலைப் புலம்பலில் தானாக வெளிவரும் வார்த்தையாக,

"ஒருவாய்க் கஞ்சி ஒருபிடி சோறு - "அப்பாடா" என்று
படுத்துக் கொள்ள வேண்டும்" எனத்

தலைப்பினைத் தன் உணர்ச்சிக் கூற்றில் தானாகக் கூறிக் கொள்வதாக அமைத்துள்ளார். அவ்வரிசி மண் களையத்தில் சமையலான பின் சரியான நேரத்தில் நுழைந்தான் மண்ணாங்கட்டி. அவன் திருடியதால் தான் மாரியுடன் சண்டையிட்டது, அதனால் உடல்வலி எடுத்தத. உண்ண உணவின்றி ராசாத்தி கொடுத்த அரிசியை சமைக்க தண்ணீர் இல்லாமல் குழாயடி சென்று தண்ணீர் சுமந்து வந்தது, அந்த உணவை சமைக்க அடுப்படியில் புகைக்கு மத்தியில் சிரமப்பட்டது, போன்ற அடுக்கடுக்கான கோபங்களுடன் புலம்பிக் கொண்டே சமைத்த உணவை எடுக்கிறாள். அந்நேரத்தில் வந்த மண்ணாங்கட்டியிடம் கோபத்தில் ஆர்ப்பரிக்கிறாள். அவனும் விடுவதாக இல்லை தொடர்ந்து வடித்த உணவைக் கேட்டு பிடிவாதம் பிடிக்கிறான்.

"உணர்ச்சி சமநிலை இல்லாத பிள்ளைகள் அதிகம் உண்மையில்லாத முறையில் நடந்து கொள்கிறார்கள்" என "குமர உள்ளம்" எனும் நூலில் மு.அறம் கூறும் கருத்திற்கேற்ப மண்ணாங்கட்டி நடந்து கொள்கிறான்.

அவன், ராசாத்தியுடன் சண்டையிட்டேனும் உணவைக் கைப்பற்ற முயல்கிறான். அவள் அடித்து விரட்டும் போது,

"முடியாது என் கையாலே ஒனக்கு ஒருபிடி சோறு போடமாட்டேன்... எங்கேயாவது ஒழிஞ்சு போ... மூஞ்சியிலே முழிக்காதே !" எனத் திட்டுகிறாள்.

உடனே மண்ணாங்கட்டி கோப்பட்டு அவள் கையில் இருந்த உணவுக் கலயத்தை தட்டிவிட்டு உடைக்கிறான். அவள் கையில் கிட்டாமல் தப்பித்தும் ஓடிவிடுகிறான் என்பதாகச் சித்திரித்துள்ளார்.

பசியின் மயக்கத்தில் ராசாத்தியின் உடல் வலிமை கொஞ்சம் கொஞ்சமாக வலிமையிழக்கிறது. இறக்கும் தருவாயில் மண்ணாங்கட்டியைத் தேடுகிறாள். மாரியாயிடம் மகனைப் பார்த்துக் கொள்ள ஒப்படைத்துவிட்ட நிலையில் கண் மூடுகிறாள். வெகுநேரம் கழித்து வந்த மண்ணாங்கட்டி ராசாத்தியின் இறப்பைக் கண்டு துடிக்கிறான்.

"ஒரு பிடி சோறு" அவள் நினைத்தபடி உண்டிருந்தாலோ அல்லது மண்ணாங்கட்டி மண்கலயத்தை உடைக்காமலிருந்தாலோ! ராசாத்தி உயிர் வாழ்ந்திருக்கலாம். ஆனால் ஒரு பிடி சோறு கூட உண்ணமுடியாமல் கர்ப்பிணியாக இருந்து உயிர்விடும் அவலப் பாத்திரமாகவே ராசாத்தியைச் சித்திரிக்கிறார். இத்துடன் கதையினை முடித்திருந்தால் தலைப்புப் பொருத்தம் ராசாத்தியின் பாத்திரம் மூலமே முற்றும் பெற்று, கதைக்கும், தலைப்பிற்கும் தீர்வின்றி அவலத்தை எதிர் நிலைப்பாத்திரமான மகன், மண்ணாங்கட்டி மூலம் கதைக்கும் தலைப்பிற்கும் தீர்வு கொடுக்கிறார்.

கதையின் தொடக்கம் தவிர்த்து வளர்ச்சி, உச்சம், வீழ்ச்சி, முடிவுகளில் தலைப்பின் பொருத்தத்தை காரண காரியங்களோடும், இடம், பொருளோடும், ஆங்காங்கே பதித்துள்ளார்.

ராசாத்தியின் பிரிவுக்குப்பின் மாரியாயி, தன் வீட்டில் சமைத்து. தன் கணவன் மாணிக்கத்திற்கு பரிமாறிக் கொண்டிருந்தாள். அப்போது, மாணிக்கத்திடம், "மண்ணாங்கட்டி பசிக்குதுண்ணு எங்க பொயி அழுவான்? என்று மண்ணாங்கட்டியை அழைத்துவர மாணிகத்தை வெண்டினாள், அப்போது மாரியாயின் கூற்றில்,

"அவனைப் பார்க்காமெ என்னாலே "ஒரு பிடிசோறு" துன்ன முடியாத" என்று இரக்ககுணம் உடையவளாக சித்திரிக்கும் போதும் தலைப்பினைக் கையாளுகிறார். ரா.பார்த்திபன் கூறும்,

"இன்னொரு மனிதன்
இருக்கும் வரை
யாருமே
அனாதையில்லை" என தம் "கிறுக்கல்கள்"
நூலில் குறிப்பிட்டது போல, மண்ணாங்கட்டியை அரவணைக்கிறாள் மாரியாயி.

மாணிக்கம் மண்ணாங்கட்டியை அழைத்து வந்த பிறகு,

"உம் சாப்பிடும்மா என்று ஒரு பிடி சோற்றை அவன் வாயருகே கொண்டு போனாள். மாரி..."

எனும் இடத்திலும்.

"அவன் கை அவள் கையிலிருந்து ஒரு பிடி சோற்றை வாங்கியது. விழிகள் அந்தக் கவளச் சோற்றை வெறித்தன. வெறித்த விழிகளில் நீர் சுரந்தது..."

என்பதாகச் சித்தரிக்கிறார்.

கதையின் முடிவில் காணப்படும் இத்தகைய வரிகளின் மூலம். மண்ணாங்கட்டி தன் தாயிடம் ஒரு பிடிச்சோற்றை பறித்ததனால் நேர்ந்த விளைவு, அதற்கு, முன் மாரியாயின் வீட்டில் திருடியதற்கு அடி கொடுத்த அவளின் கைகளில் இருந்து, இப்போது வரும் "ஒரு பிடி சோற்றை" தன் கைகளில் ஏந்திக் கொண்டு, தன் தவறுகளை உணர்ந்து திருந்துபவனாக கண்களில் இருந்து வழிந்த கண்ணீரின் மூலம் உணர்த்தி கதையினை நிறைவு செய்கிறார்.

ராசாத்தியையும், மாரியையும் வறுமையின் காரணமாக விபச்சாரத்தில் அவ்வப்போது ஈடுபடுவதாக காட்டினாலும் அவர்களுக்குள் இருக்கும் தாய்மைப் பண்பை மேன்மையுடையதாகவே சித்தரித்துள்ளார். மேலும், தாய்மைப் பேரின் போது, ராசாத்தி சமைத்த உணவை தட்டிவிட்டுச் சென்றபின் அவள் இறப்பின் போது கண்ணீர் வடித்து மீண்டும் "ஒரு பிடி சோறு" கையில் கிட்டும் போது அவனும் திருந்தி விடுவதாகவே சித்தரித்துள்ளார்.

"சிறுகதையின் முக்கியமான அம்சம், அதில் ஒரே ஒரு பிரதான சம்பவம் தான் இருக்க வேண்டும். அந்த சம்பவத்தை, வெறும் வளர்த்தல் இல்லாமல் வேறு சம்பந்தமற்ற விஷயங்களுக்குப் போகாமல் நேரே நெடுக சொல்லிக் கொண்டு போனால் அது நாலு வரியில் இருந்தாலும் சிறுகதை, தான்., நாற்பது பக்கங்கள் வந்தாலும் சிறுகதைதான்".

எனக் கல்வி கூறும் கூற்றிற்கேற்ப கதையிலே கதையின் தலைப்பிற்கேற்ப பிரதான சம்பவத்தை வளர்த்து தொடர்புடைய நிகழ்வுகளை அமைத்து தனக்கென தனி உத்திகளைக் கையாண்டு தடம் பதித்துள்ளமையை இனங்காணமுடிகிறது.

தொகுப்புரை

கதையில் "ஒரு பிடி சோறு" எனும் தலைப்பில், ராசாத்தியின் மூலம் தனக்குத்தானே ஆறுதல் கூறிக் கொள்ளும் கூற்றிலும், தன் மகனைக் கண்டிக்கும் போதும் என இரண்டு இடங்களில் பொருத்தமாக சித்திரிக்கப்பட்டுள்ளது. மேலும் துணைமைப் பாத்திரமாக மாரியாயி மூலம் தன் கணவரிடம் மண்ணாங்கட்டியினை அழைத்துவர கூறும் போதும், அழைத்து வந்த பின் மண்ணாங்கட்டியிடமே நேரடியாக கூறும் போதும் இறுதியாக கையில் வாங்கிய "ஒரு பிடி சோற்றில்" திருந்துவதாகவும் என பொருத்தமான ஐந்து இடங்களில் தலைப்பினை பொருத்தி கதையும், பாத்திரமும் வலுப்பெற்றுள்ளது.

திருடிய மண்ணாங்கட்டி கண்டிக்கப்படும் பொழுது திருந்தவில்லை. மேலும் தவறையே செய்கிறான். தாயின் இழப்பு அவனைப் பாதித்ததும் அடித்தகைகளில் உணவைப் பெறுவதும் அவனுக்கு புதுமை. தாயின் இழப்பும். பின்பு தன்னை ஏற்றுக்கொண்ட மாரியாயின் அன்பும் அவன் மனம் திருந்த காரணமாக அமைந்துள்ளது.

மேலும், ஆசிரியர் தாயின் இழப்போடு நிறுத்திவிடாமல் மண்ணாங்கட்டியை திருடுவதிலிருந்து திருத்த வேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டுள்ளார். ஆதலால் கதையினை வளர்த்து தாய்மைப் பண்பையும் திருடுவது தவறு என்பதையும் நிலைநாட்டவே ஏற்ற கதைக் களங்களை தொடக்கத்திலேயே மாரியாயி பாத்திரத்தை அறிமுகப்படுத்துவதிலும் இறுதியில் அரவணைப்பதிலிருந்தும் அறிய முடிகிறது.

தலைப்பிற்கேற்ப களம் அமைத்து அதனை ஆங்காங்கே செம்மையாக பொருத்தி கதையினையும் அதற்கேற்ப பாத்திரத்தையும் வலுப்படுத்தி, ஐந்து இடங்களில் தலைப்புப் பொருத்தத்தைக் கையாளும், புதிய உத்தியனை "ஒரு பிடி சோறு" கதையின் மூலம் புகுத்தியுள்ளமையை அறிய முடிகிறது.

# பெண் கவிஞர்களின் சுற்றுச்சூழல் சிந்தனை

இரா.தமிழரசி
விரிவுரையாளர்
ஸ்ரீமத் சி.பா.சு.தமிழ்க்கல்லூரி
மயிலம் - 604 304.

1.0. பெண் கவிஞர்களின் பாடுபொருள் பெரிதும் பெண்ணியம் சார்ந்திருப்பினும் சுற்றுச்சூழல் மாசுறுவதையும் அதனைக் காக்க வேண்டியதன் இன்றியமையாமையையும் தம் கவிதைகள் வழி புலப்படுத்தியுள்ளனர். அவ்வகையில் தாம் வாழும் வீட்டில் தொடங்கிக் காடு, நதி, தொழிற்சாலை, விசும்பு என பல்கிப் பெருகுகிறது. அவர்களின் கவிப்பார்வை அவர்களின் கவிதைகள் வழி சூழலியச் சிந்தனைகளை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

1.1. இழக்கக் கூடாதவை

மீன்கள் சுற்றித்திரியும் ஆற்றை இழந்து புட்டியில் அடைத்து விற்கப்படும் குளிர்ந்த நீருக்கு விலை கொடுக்கிறோம். அடுப்பில் எரியும் விறகுக்காகப் பசுமை கொஞ்சும் வனங்களை இழக்கிறோம் என்பதை,

"ஒரு குவளை நிரம்பும் /குளிர்ந்த தண்ணீருக்கே
மீன்களுடன் நிறைந்திருக்கும்
இந்த ஆற்றைத் தரமுடியுமா
மேலும், ஒரு விறகுக் கென
இருள் கவிழும் வனங்களை"

(அவனைப்போல் ஒரு கவிதை, ப.3)

தரமுடியுமா எனும் வினாவின் வழி, இவையெல்லாம் இழப்பதற்கு இயலாதவை என வலியுறுத்துகிறார். ஆனால் நம் அறியாமையின் விளைவாக ஆற்றை, மரங்களை இழந்துகொண்டுதான் இருக்கிறோம்.

1.2. குடிநீர் தட்டுப்பாடு

கிராமத்தில் சிறியதாயிருக்கும் குடிநீரும் குடிப்பதற்கு உதவ. பரந்துவிரிந்திருக்கும் கடல்நீரோ பார்த்துத் திரும்ப மட்டுமே பயன்படுவதை,

"வற்றிக் கொண்டிருக்கும் / வாய்க்காலின்
நாணல் புதரோரம் / ஒளிந்து கிடக்கும்
குழித் தண்ணீர் / உச்சி வெய்யிலில்
தனிமையில் / தப்புக் கதிர் பொறுக்கும்
சிறுமையின் / தாகம் தீர்க்க
குமுறிக் ... குமுறி எழுந்து வந்தும்
கரை தாண்ட முடியா / அலைகளை
நின்றோ ... அமர்ந்தோ / பார்த்துவிட்டு
வீட்டிற்குத் திரும்பும் மனிதர்கள்"

(முதல் மனுஷி, ப.50)

என்கிறார் கவிஞர் இளம்பிறை. நகரத்து மக்கள் குடிநீர் பற்றாக்குறையால் அல்லலுறுகின்றனர். மாசுற்ற சூழலால் குழாய் வழி அனுப்பப்படும் நீரிலும் கழிவுநீரும், பிற மா சுக்களும் கலப்பதற்கு வாய்ப்பு மிகுதி. தாகம் தீர்க்க முடியாத கடல் சூழ்ந்த நகரத்தில், குடிநீரைக் கவனமாகக் கையாள வேண்டுவதன் அவசியத்தை உணர்த்துகிறார்.

1.3.நதிநீர் குறைதல்

சிறுவயதில் பரந்து விரிந்து ஓடிக்கொண்டிருந்த நதி சிறிது சிறிதாகக் குறைந்து, இறுதியில் இல்லாமல் போய்விட்டதை,

"சிறுவயதில் பார்த்த போது/அம்மாவின் புடவையென
அலையோடிரந்தது / செல்லமாய் வளைவுகளில்
சேர்த்தணைக்கும் / வருடும் மெல்ல
பள்ளங்களில் கால்பட்டால் / பதறிப்பாய்ந்து மிரட்டும்
பருவ காலத்தில் / ஓரம் தைத்த தாவணிகளாய்
உருவம் மாறிக் கிடந்தது"

(கற்பாவை, ப.28)

என்றும், திருமணமாகி வேற்றிடத்தில் வாழுமிவர் திரும்பிவந்து பார்க்கையில், அடி நீரோட்டத்தோடு நூலிழைகளாய்ப் போனதைக் காட்டுகிறார். நமது தவறான செயற்பாடுகளால் இயற்கை வளங்கள் இல்லாமல் போவதைச் சுட்டுகிறது கவிதை.

2.காடுகள் அழிப்பு

"மனித சமுதாயத்திற்குப் பல பயன்களை அளித்துவரும்
காடுகள் தொடர்ந்து அழிக்கப்பட்டு வருகின்றன.
இந்தியாவில் 1930களின் இறுதியில் 33 சதவிகிதமாக
இருந்த காடுகளின் பரப்பு இன்று 23
சதவீதமாகக் குறைந்து விட்டது"

(சுற்றுச்சூழல் கல்வி, ப.16)

என்னும் புள்ளிவிவரப்படி காடுகளை அழிக்கும் மனிதனின் தவறான செயல் தெரியவருகிறது. நேரடிப் பயன்கள், மட்டுமன்றி மறைமுகமாக மழைவளம், கனிமவளம், காட்டு விலங்குகளுக்கான புகலிடம், வளி மண்டலத்தூய்மை போன்ற பயன்களையும் தருவன காடுகள்.

2.1. வீட்டுப் பயன்பாட்டிற்காக அழித்தல்

விறகுக்காக வெட்டுவது மட்டுமல்லாமல், நாம் பயன்படுத்தும் வீட்டுப் பயன்பாட்டுப் பொருள்களுக்காகவும் மரங்கள் வெட்டப்படுகின்றன. அப்படி வெட்டப்படுவதால் அதனைச் சார்ந்து வாழும் உயிரினச் சுழற்சி எவ்வாறு பாதிக்கப்படுகிறது என்பதை,

"வழக்கமாக அவன் தேடிச் செல்கிற
பழகின மரங்களை இன்று காணவில்லை
மரங்களை அறுத்து பொருத்தி
படுக்கையறை கட்டில்களாக மாற்றிவிட்டனர்
.......

நாள்பட்ட தென்னை மட்டையிலிருந்து
யாரோ தள்ளிவிட்ட பறவைக் கூட்டில்
அவன் கண்டான் ஆண்டெனா கம்பி
மற்றும் சில துருப்பிடிக்காத ஆணிகளையும்"

(அவனைப் போல் ஒரு கவிதை, ப.15)

என்கிறார் கவிஞர் கீதாஞ்சலி பிரியதர்ஷினி. பறவைக் கூட்டில் தழை, பூ, சருகு, தேங்காய்ப்பஞ்சு போன்ற மென்மையான பொருள்களுக்குப் பதிலாக ஆண்டெனா கம்பிகளையும் சில துருப்பிடிக்காத அணிகளையும் கண்டு அதிர்கிறது கவியுள்ளம். குத்தாத கூடு கட்டத் தேவையான பொருட்கள் கிடைக்காத நிலையில், இருப்பவற்றில் இடையூறு தராததாகத் தேர்ந்து கட்டியுள்ளதே என நினைத்து வருந்த வேண்டியுள்ளது.

2.2.மனித சுயநலத்திற்காக அழித்தல்

வீட்டிற்கு வெளியே வளர்ந்துவரும் மரங்களை ஏதேதோ காரணம் காட்டி வெட்டிவிடுகின்றனர். இதை,

"மின்சாரக் கம்பிக்குத் தடங்கல்
எழும் வீட்டுக்கு இடைஞ்சல்
என்றேதொ அர்த்தமற்ற காரணத்திற்காக
வெட்டப்படும் போது / இயலாமையோடு வேடிக்கை பார்க்கலாம்
விழி கசியலாம்., / இன்னுமொரு மரம் இறந்த தினம்
என்றெழுதி மூடி வைக்கலாம்"

(கற்பாவை, ப.25)

என்கிறார் கவிஞர் உமாமகேஸ்வரி. நகரமயமாதல், புதிய கட்டடங்கள் கட்டுதல், தகவல் தொடர்பு சாதனங்களுக்கான இணைப்புகள் தருதல் போன்றவற்றால் மரங்களை நாம் இழக்க நேர்கிறது. கிளைகளை நட்டுத் துளிர்க்கச் செய்வதால் இழப்பை ஈடு செய்யும் விதத்தையும் கூறுகிறார் கவிஞர்.

2.3.மரம் வெட்டுதலால் மழை பொய்த்தல்

மரமில்லா ஊரில் பொய்த்து விடுகிறது மழை. நீர்வளமின்றிக் காய்ந்துபோகும் மரங்கள். மரங்களின்றி மேகம் விலகிப் போக, வெடித்துப் பிளவுபடுகிறது பூமி என்பதை,

"வெயில் செருகும் நாளில் / இலைகள் சருகாகி
நிழல் மறுக்க / வெறும் கிளைகள்
மேகங்கள் விலகிப் போவதை / வெறித்தபடியே
வெடித்த நிலப்பிளவிற்குள்
புதைகிறாள் நிராதரவாக"

(கற்பாவை , ப.62)

என்கிறார் கவிஞர் உமாமகேஸ்வரி. மரங்களை வளர்க்கவில்லையென்றால் கருக்கொள்ளும் மேகம் கூடக் கலைத்து விடும் என்பதை விளக்குகிறது கவிதை.

3.1. வளி - மாசடைதல்

பூமியைப் போர்வையாய் மூடிப்பாதுகாக்கும் ஓசோன் படலத்தைக் கிழித்துக் கொண்டிருக்கின்றன நமது தவறான செயல்பாடுகள் என்பதை,

"ஓடிப்பிழைக்கும் மனிதன் / விளைவுகளறியாத செயல்களால்
சல்லடையானது வளி / இயற்கை இங்கே
நாய் பெற்ற தெங்கம்பழம்"

(அகத்தனிமை, ப.41)

என்கிறார் கவிஞர் ஜி. விஜயபத்மா. பயன்படுத்தும் பக்குவமறியாத நாயிடம் சீரழியும் தேங்காயாய் இயற்கை நம்மிடம் படும் பாட்டைச் சுட்டுகிறது கவிதை,

3.2.புகைப்போக்கிகள்

தொழிற்சாலைகள் வேலைவாய்ப்பு வழங்கும் அதே நேரத்தில், சூழல் கேட்டிற்கும் காரணமாகிறது என்பது மறுக்கவியலாத உண்மை.

"இயந்திரங்கள் இரைச்சலாய் சப்திக்கும்
சுவர்களுக்கு நடுவே / கொம்பொன்று முளைத்ததைப் போல
ஆங்காங்கே / புகைபோக்கிகள்
நான்கு திசைகளிலும்
நச்சுக்காற்று நெறிந்து நெற்ந்து.. ஊடுருவி
மனித நாற்றுகளை மௌனமாய்த் தலைசாய்க்க
கத்தியின்றி ... ரத்தமின்றி / யுத்தமொன்று ஆரம்பம்"

(அம்மி - ப.62)

என்கிறார் வைகைச் செல்வி. அமைதியாய் நம்மையழிக்கும் யுத்தத்தை அறியாமல் மகிழ்ந்திருக்கும் நிலையைச் சுட்டுகிறது கவிதை.

4.தோல் தொழிற்சாலை

தோல் பொருள்களின் பயன்பாடு மிகுந்துள்ள இன்றைய சூழலில், அத்தொழிற்சாலைக் கழிவுகளால் ஏற்படும் சுற்றுச்சூழல் சீர்கேடும் கவிஞர்களால் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

"நீ குடித்துக் கொண்டிருக்கிற ஒரு பானம்
போல நுரைத்து ஓடிக்கொண்டிருக்கிறது
இந்த ஆறு
காற்று நாறும் தோல் தொழிற்சாலைகளை
சுற்றிப் பார்க்க வாவென அழைத்துப் போகிறாய்"

(அவனைப்போல் ஒரு கவிதை, ப.54)

என்கிறார். தோல்கழிவு காற்றை நாறவைப்பதோடு, தலைக்குமேல் சுற்றும் மின் விசிறிகள் கூட கழுக்களாகத் தெரிகின்றன. கவிஞரின் பார்வைக்கு, ஐம்பூதங்களில் ஏற்படும் மாசனைத்தும் காற்றையே அசுத்தப்படுத்துகிறது என்பதை.

"நிலத்திலோ, நீரிலோ, வானிலோ, தீயிலோ - எங்கு
சூழலியல் கேடுகளை உருவாக்கிடினும் மாசு
படுவதென்னவோ காற்றுதான்"

(தற்காலக் கவிதைகள் ஒரு பார்வை, ப.71)

என்னும் கவிஞர் அன்பாதவனின் கூற்றும் இதையே வலியுறுத்துகிறது.

5.முடிவுரை

1.மரங்களை இழப்பதால் பொய்க்கும் மழைவளத்தை, மறுபடி ஈடுசெய்து சூழல் சீர்கேட்டைத் தடுக்கலாம்.

2.நகர்ப்புற தொழிற்சாலைக் கழிவுகளால் காற்றும், நீரும் மாசுறுவதை அறிவியல் வழிமுறைகளால் சரிசெய்து நல்வாழ்வு பெறலாம். புகைபோக்கிகளில் வடிகட்டியைப் பயன்படுத்தலாம்.

3.மழைநீர் சேமிப்பு, பாதுகாப்பான குடிநீர் வழங்கல் போன்றவற்றால் நகர்ப்புற குடிநீர் தட்டுப்பாட்டை நீக்கலாம்.

பயன்பட்ட நூல்கள்

1.கீதாஞ்சலி பிரியதர்ஷினி, அவனைப்போல் ஒரு கவிதை.
2.இளம்பிறை, முதல் மனுஷி.
3.உமா மகேஸ்வரி, கற்பாவை.
4.ஜி. விஜயபத்மா, அகத்தனிமை.
5.வைகைச் செல்வி, அம்மி.
6.சுற்றுச்சூழல் கல்வி, (அரசு பாடநூல்)
7.அன்பாதவன், தற்காலக் கவிதைகள் ஒரு பார்வை.

# புதுமைப்பித்தன் சிறுகதையில் மொழி நடையின் ஆளுமை வளர்ச்சியும் முதிர்ச்சியும்

கோ.சுஜாதா
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021.

முன்னுரை

மொழி நடைமுறை வாழ்வில் ஆற்றும் பணியிலிருந்து வேறான ஒரு பணியைப் படைப்பிலக்கியத்திற்கு ஆற்றுகிறது. சொற்கள் நடைமுறை வாழ்வில் பொருளைக் கொடுப்பதாகவும், படைப்பிலக்கியத்தில் அம்மொழியை உருவாக்கிய படைப்பாளனின் அனுபவத்தை உணர்த்துவதாகவும் செயற்படுகின்றன. மொழிக்கும் கலைஞனுக்குமான உறவு ஆழமானது. கலைஞனின் ஆளுமைப் பதிவாக அது அமைந்துவிடுகிறது. ஆளுமையை இனங்காட்டாத நடை உயிரற்ற சடலமாகவே கருதப்படும். படைப்பாளனின் ஆளுமை வடிவாகப் படைப்பு விளங்குவது போல், மற்றொரு வடிவாக நடை விளங்குகிறது. ஆளுமையின் வளர்ச்சி நிலைகளை, முதிர்ச்சியைப் படைப்பு இனங்காட்டுவது போல் நடையும் இனங்காட்ட வேண்டும். அந்த வகையில் புதுமைப்பித்தனின் படைப்புகளில் அவரது ஆளுமைத்தன்மை, அவருடைய மொழிநடையில் எங்ஙனம் வெளிப்படுகிறது என்பதனையும், அவர் தம் நடையின் வளர்ச்சி, நிலைகளையும் இக்கட்டுரையில் காணலாம்.

புதுமைப்பித்தன் படைபப்புகளின் பொதுத்தன்மை

வாழ்க்கை அனுபவங்கள் தான் படைப்பாளியின் மனத்தில் ஆழமாகப் புதைந்து அவனின் படைப்புகளில் மீண்டும் மீண்டும் வெளிப்படுகின்றன. இந்த ஆழமான பாதிப்புகளை அடிப்படையாக வைத்துத் தான் அந்த படைப்பாளியின் ஆளுமையின் அக்கறைகளை நாம் இனங்கண்டு கொள்ள முடியும். புதுமைப்பித்தன் பெற்றிருந்த பாதிப்புகளில் முக்கியமானவற்றை நாம் முதலில் தெரிந்து கொள்ளவேண்டும். "ந்து மதம் மனிதன் சுதந்திரத்தை நெரிக்கும் விதம், ஒடுக்கப்பட்ட மக்கள் படும் துயரம், கிறிஸ்துவச் சபைகளின் செயல்பாடுகள் சார்ந்த விமர்சனம், மத்தியதர வாழ்க்கையின் பற்றாக்குறை சார்ந்த இழுபறிகள், பிழைப்பின் சுழற்சி மனிதனை இயந்திரமாக்கும் கீழ்நிலை, அபலைப் பெண்கள். வறுமையின் கொடிய கோலங்கள், நினைப்புக்கும் நிஜத்துக்குமான வேறுபாடு, மனத்தை மீறும் உடல், ஆன்மீகத்தை ஏமாற்றும் போலித்தன்மை, புனிதங்களின் ஒப்பனைகள் கலையும் விதம், இன்றைய தாழ்வுகளைப் பாராது பழம் பெருமைகளில் வாழ்தல், தர்மத்திற்குப் பின் நிற்கும் பச்சை அதர்மங்கள், அவருடைய குழந்தைப் பருவம் முதல் அவர் சந்தித்த அனுபவங்கள், அவை, கற்றுத் தந்த பாடங்கள் தான் அவருடைய படைப்பின் வெளிப்பாடுகள்.

புதுமைப்பித்தன் கதைகளின் காலவரையறை

இனி புதுமைப்பித்தனின் கதைகளை காலத்தின் அடிப்படையில் மூன்று பிரிவாகக் பிரித்து. ஒவ்வொரு காலக்கட்டத்திலும் அவருடைய கதைகளின் நடையியல், ஆளுமை நிலையினைக் காணலாம்.

முதல் கால கட்டம்

புதுமைப்பித்தன் தொடர்ச்சியாக எழுத ஆரம்பித்த 1934ஆம் ஆண்டிலும் 1935-ல் முதல் இரு மாதங்களிலும் அவர் எழுதிய 63 கதைகள் ஆகும்.

இரண்டாவது காலகட்டம்

1935-ஆம் ஆண்டில் மணிக்கொடி சிறுகதைப் பத்திரிகையாக உருமாற்றம் கொண்டதிலிருந்து 1939 - வரை அவர் எழுதிய கதைகள் 22.

மூன்றாவது காலகட்டம்

1940-களில் அவர் எழுதிய 17 கதைகள்

முதல் காலகட்டக் கதைகளில் நடையின் ஆளுமைத்தன்மை

புதுமைப்பித்தன் ஆரம்பக்காலக்கதைகள் என்று சொல்லப்படுபவை 63 கதைகள். குறுகிய காலகட்டத்தில் அதிகப்படியான கதைகள் எழுதியுள்ளார். தன் மனதில் உள்ளதை. தன் அனுபவத்தை கொட்டித் தீர்த்திட வேண்டும் என்ற மன உளச்சல் காரணமாகவும், சமுதாயத்தின் வீழ்ச்சியைக் கண்டும் எழுதப்பட்டவை அக்கதைகள். அவரின் நடையில் கூட அந்த ஆவேசம் கலந்த ஒரு வித தவளைப் பாய்ச்சல் நடையினைக் காணமுடிகிறது. கதையின் இடையிடையே தானே தலையிட்டு பேசும் இடங்களும் உண்டு. இது சிறுகதையின் சிறப்பு அல்ல என்றாலும் அப்படைப்பின் அடிப்படையில் அனுபவ வாழ்வைப் படைப்பின் நோக்கமாக இனங்காட்டவும் அவர் தவறவில்லை. இக்கால கதைகள் எதிர்காலத்தில் அவருடைய வளர்ச்சி நிலைக்கு அடிப்படையாக அமைந்தன இவ்வரிசையில் பால்வண்ணம் பிள்ளை, பொன்னகரம், கவந்தனும் காமனும், தெருவிளக்கு, கொடுக்காப்புலி மரம் புதிய நந்தன் போன்ற கதைகளைக் கூறலாம்.

இவ்வாறு ஓரிரு வரிகளில் வார்த்தைகளைப் பிரயோகித்து உள்ளத்தில் ஊசி குத்துகிற மாதிரி சில உண்மைகளை உணர்த்திவிடுவார். உண்மைகளை உணர்த்துவதைவிட, படிப்பவருக்கு அதிர்ச்சியையும் தந்து அவர்களின் உணர்வைத் தூண் வேண்டும் என்ற மனப்போக்கும் அவருக்கு இல்லை.

இரண்டாவது காலகட்டக் கதைகளில் நடையின் ஆளுமை வளர்ச்சி:

கலைஞன் தான் பெற்ற எந்தப் பாதிப்பையுமே படைப்பிற்கு உந்துதலாகக் கொள்ளலாம் என்பதன் விளைவுதான் ஆரம்பக்காலக் கதைகளின் எண்ணிக்கைப் பெருக்கத்திற்குக் காரணமாக அமைந்துள்ளது. இப்போக்கிலிருந்து விடுபட்டு செழுமையான அனுபவங்களிலிருந்து வாழ்வினைப் புரிந்துக் கொள்ளும் முயற்சியை இரண்டாவது கால கட்டக்கதைகளில் காணலாம். ஒரு கலைஞனின் இயல்பான வளர்ச்சி இது.

இந்த வரிசையில் வாழ்க்கை, மனக்குகை ஓவியங்கள், வேதாளம் சொன்னகதை, காலனும் கிழவியும், பிரம்பராஷஸீ போன்ற கதைக்ளையும் அடக்கலாம்.

மூன்றாவது காலகட்டக் கதைகளில் நடையின் ஆளுமை முதிர்ச்சி

புதுமைப்பித்தன் படைப்புலக சாதனைகளின் சிகரமாவவே அவரின் மூன்றாவது காலகட்டக் கதைகள் விளங்குகின்றன. புதுமைப்பித்தன் என்ற மனிதன் உயிர் வாழ்தலுக்காகப் பல சிரமங்களை எதிரேற்ற காலம் இது. என்றாலும், புதுமைப்பித்தன் என்ற கலைஞன் படைப்புலக வாழ்வில் கீழ்மைகளை ஏற்கப்பிடிவாதமாக மறுத்துவிட்டிருந்தார்.

சாபவிமோசனம், செல்லம்மாள் போன்ற சிறந்த கதைகள் இதில் அடங்கும். சாபவிமோசனம் கதையிலிருந்து புதுமைப்பித்தனின் மொழிநடையின் முதிர்ச்சியினைக் காணலாம்.

"உள்ளத்துக்குத் தெரிந்தால் போதாதா? உண்மையை உலகத்துக்கு நிரூபிக்க முடியுமா? என்றால் அகலிகை, வார்த்தை வறண்டது. நிரூபித்துவிட்டால் மட்டும் அது உண்மையாகிவிடப் போகிறதா? உள்ளத்தை தொடவில்லையானால்? நிற்கட்டும் உலகம் எது? என்றாள் அகலிகை. வெளியில் பேச்சுக்குரல் கேட்டது. அவர்கள் திரும்பினார்கள். சீதை அரண்மைனைக்குப் போவதற்காக வெளியே வந்தாள். அகலிகை வரவில்லை.ராமன் மனதைச் சுட்டது. காலில் படிந்த தூசி அவனைச் சுட்டது. ரதம் உருண்டது. உருளைகளின் சத்தமும் ஒய்ந்தது" (பு.வி.கதைகள் முழுத்தொகுப்பு, ப.539)

இது கேலியும் குத்தலுமற்ற நடை, இருந்தாலும் உணர்ச்சிகளின் கொந்தளிப்பும், அவற்றின் வெளிப்பாடான கூர்முனை கொண்ட சொற்களும் இல்லை. ஆனால், ஆற்றொழுக்குப்போன்று வெளியே இளம்புரியாத அமைதியும், அகத்தே அழித்துக் கொண்டோடும் ஓட்டமும் இதில் காணமுடிகிறது.

தொகுப்புரை

புதுமைப்பித்தன் கதைகளின் வெளிப்பாடுகள் அவருடைய குழந்தைப்பருவத்திலிருந்து, அவர் சந்தித்த மனிதர்கள், கல்வி நிறுவனங்கள், மத நிறுவனங்கள் இவை தன் மீதும், இந்து சமுதாயத்தின் மீதும் செலுத்திய அதிகாரத்தின் மீதான வெறுப்பும் கோபமும் சேர்ந்ததுதான். அவருடைய ஆளுமைக்கு அடித்தளம் இட்டது. அவை தான்.

அவற்றின் வெளிப்பாடு தான் கதைகளின் இடையே அவரே நுழைந்து பேசிவிடுகிறார். இக்கதைகள் சிறப்புடையது. என்றோ, இல்லையென்றோ, வாதிடுவதை விட பிற்காலத்தில் அவருடைய வளர்ச்சிக்கு துணைநிற்கின்றன.

இரண்டாவது காலகட்டக் கதைகளில் முன்னர் இருந்த அனுபவத்தோடு, இலக்கிய அனுபவமும் இணைந்து வெளிப்படுகிறது. அக்கதைகளில் கேலியும் கிண்டலும் கலந்த நடையில் இச்சமூகத்தைப் பார்த்த பார்வையின் வெளிப்பாடாக அது திகழ்கிறது.

மூன்றாவது காலகட்டக்கதைகளில் அந்த கேலியும், கிண்டலும், குத்தலும் இருந்தபோதும் அதை வெளிப்படையாகக் காட்டாமல் உள்ளார்ந்த உணர்வாக வாசகனை உணரவைக்கக் கூடிய நடையினைக் காண முடிகிறது.

பார்வையிடப்பட்ட நூல்கள்

1.புதுமைப்பித்தன் கதைகள் முழுத்தொகுப்பு - பதிப்பாசிரியர் ஆ.இரா.வேங்கடாசலபதி காலச்சுவடு பதிப்பகம், முதல் பதிப்பு, ஆகஸ்ட் 2000, வி.330.

2.புதுமைப்பித்தனும் ஜெயகாந்தனும் - எம். வேதசகாயம், பதிப்பகம்: தமிழினி, 342, டி.டி.கே.சாலை, ராயப்பேட்டை, சென்னை-600 014.

3.புதுமைப்பித்தன் எனும் பிரம்மராஷஸ் - ராஜ்கௌதமன் தமிழினி பதிப்பகம், 342, டி.டி.கே.சாலை, ராயப்பேட்டை, சென்னை-600 014.

4.புதுமைப்பித்தனும் கயிற்றரவும், அ.ராஜமார்த்தாண்டம் பதிப்பகம்: தமிழினி, 342, டி.டி.கே.சாலை, ராயப்பேட்டை, சென்னை-600 014.

5.புதுமைப்பித்தனின் படைப்புகள், (2-ஆம் தொகுதி) ஐந்திணைப்பதிப்பகம், 279, பாரதி சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-5.

## புதுக்கவிதை - வடிவமைப்பு

கு.வளர்மதி, எம்.ஏ., எம்ஃபில்
தமிழ்த்துறை விரிவுரையாளர்
எஸ்.எஃப்.ஆர். மகளிர் கல்லூரி,
சிவகாசி.

முன்னுரை:

இலக்கிய வகைகளில் ஒன்று "கவிதை" ஆகும். கவிதையின் நோக்கம் ஏதேனும் ஒரு கருத்தை உணர்த்துவது ஆகும். வசனத்திற்குரிய செயற்கையான வாக்கிய அமைப்பைக் கையாளாமல், இயற்கையான பேச்சுச் சந்தத்தையும், உணர்வு நிலைக்கேற்ற அடியமைப்பையும், புதிய உத்திகளையும் கைக்கொள்வது "புதுக்கவிதை" எனப்படும்.

"எண்ணத்தை அதன் பிறப்பிடத்திலேயே
பிடித்து விடுவது புதுக்கவிதை"

என்று புதுக்கவிதையினை அடையாளம் காட்டுகின்றனர். புதுக்கவிதை வசனத்தன்மைக்கு முற்றிலும் மாறுபட்டது. இதைச் "சுதந்திர கவிதை" என்றும் அழைக்கிறார்கள் இக்கட்டுரையில் "புதுக்கவிதையின் வடிவமைப்பு" குறித்து ஆராய்வோம்.

புதுக்கவிதை - விளக்கம்

எதுகை இன்றி, மோனை இன்றி, தனிச்சொல் இன்றி, சீர்தளைக் கட்டுப்பாடின்றி உணர்ச்சிப் பிழம்பாகக் கருத்துக்குவியலாகத் தோன்றுவது "புதுக்கவிதை" என்பார்.

உண்மையில் உருவகத்தில் மட்டுமல்லாமல், உள்ளடக்கத்திலும் புதுத்தன்மை கொண்டிருப்பதையே "புதுக்கவிதை" என்று அழைக்க வேண்டும்.

புதக்கவிதை - தோற்றம்

பிரெஞ்சு, ஜெர்மனி, ஆங்கில மொழிகளில் ஏற்பட்ட புதுக்கவிதை இயக்கத்தின் பாதிப்பு, தமிழில் எல்லா இலக்கியத் துறைகளிலும் ஏற்பட்ட புத்தெழுச்சி, பழைய தடங்களில் ஏற்பட்ட சலிப்பு, இலக்கியத்திற்கென்றே தோன்றிய சிற்றிதழ்களின் வலிமையான பிரச்சாரம், இவை தமிழில் புதுக்கவிதை தோன்றக் காரணமாயின.

ந.பிச்சமூர்த்தி, கு.ப.ராஜகோபாலன், வல்லிக்கண்ணன் ஆகியோர் புதிய வழியில் கவிதை எழுத ஆரம்பித்த 1930-40களைத் தான் தமிழில் "புதுக்கவிதை தோன்றி வளர்ந்த காலம்" என்பர்.

புதுக்கவிதை - வடிவம் :

வசனத்தின் வறண்ட தன்மையையும், யாப்பின் செயற்கைச் சந்தத்தையும் உதறிவிட்டு உணர்வு வெளிப்பாட்டிற்கும், குரல் ஏற்ற இறக்கத்திற்கும் துணைபுரியும் இயற்கையான பேச்சுநிலையைப் புதுக்கவிதை மேற்கொள்கிறது. புதுக்கவிதை அகவடிவத்தையே முதன்மைப் படுத்துகிறது. உள்ளடக்கத்தையும் உருவத்தையும் பிரிக்க முடியாத,

இரண்டும் ஒன்றாகக் கலந்து நிற்கும் அங்கக்கட்டன உருவமைப்பை புதுக்கவிதை வற்புறுத்துகிறது. உள்ளடக்கத்தின் சக்திமிக்க வெளிப்பாடே புதுக்கவிதையின் உருவமாக ஆகிறது.

புதுக்கவிதை - அடி அமைப்பு

புதுக்கவிதையின் அடி அமைப்பு குரல் ஏற்ற இறக்கத்தையும், அழுத்தத்தையும் காட்டும் வகையில் அமைக்கப்படுகிறது.

"நீ நிற்கும்
சிலுவையின்
நிழலில் கூட
ஆணிகள்"

இந்தக் கவிதையின் ஒவ்வோர் அடியின் தொடக்கமும் அழுத்தம் பெறுவதால் அங்கு நிற்கும் சொற்கள் மிகுதியான அதிர்வுகளை உண்டாக்குகின்றன. புதுக்கவிதையில் குரல் ஏற்ற இறக்கம், அழுத்தம் ஆகியவற்றை உணர்த்துவதற்கு எதுகை மோனைகளும் பயன்படும்.

சொற்சிதைப்பமைப்பு

புதுக்கவிதையானது கவிஞர்களின் மனப்போக்கிற்கும், நோக்கிற்கும் ஏற்பப் புதுப்புது வடிவச் சோதனைகளை மேற்கொள்கிறது. சொற்களையும், சொற்றொடர்களையும் சிதைத்துக் கையாள்வதும் புதுக்கவிதைகளில் காணப்படுகின்றது.

"போன யுகத்தில்
படித்த தோழி
எவளா வதொருத்தீ
வரமாட்டாளா?"

சி.மணியின் இக்கவிதையில் "ஒருத்தி" என்ற சொல்லின் கடைசி எழுத்தான "தி" என்பது பிரிந்து "தீ" என நீண்டும் ஒலிக்கிறது. இதற்கு ஏற்றாற் போல பொருளும் வேறுபாடு அடைகிறது.

நாட்டுப்பாடல் அமைப்பு

நாட்டுப்புறப்பாடல்களில் காணப்படும் "திரும்பத் திரும்ப வருதல்" என்ற அமைப்பானது புதுக்கவிதைகளிலும் காணப்படுகின்றது.

"பூ க்களிலே நானுமொரு
பூ வாய்த்தான் பிறப்பெடுத்தேன்
பூ வாகப் பிறந்தாலும்
பொன்விரல்கள் தீண்டலையே;
பொன் விரல்கள் தீண்டலையே - நான்
பூ மாலை யாகலியே"

மு.மேத்தாவின் இக்கவிதை நாட்டுப்பாடல் அமைப்பில் "பொன்விரல்கள் தீண்டலையே" எனத் திரும்பத் திரும்ப வந்து முதிர்கன்னியின் நிலையினைக் கூறுகிறது.

ஏளனக் கவியமைப்பு

புதுக்கவிதை படைப்போர் அதில் சமுதாயத்தில் காணப்படும்

அவலங்களை எல்லாம் ஏளனமாகக் கூறிவிடுகின்றனர். புதுக்கவிதையின் வடிவமைப்பில் ஒன்றாகக் கருதத்தக்கது, "ஏளனக் கவியமைப்பு" ஆகும்.

"இந்த தேசத்திலேயே
மிகவும் உயர்ந்தவன்
கிராமவாசியா?
நகரவாசியா?
இல்லை
விலைவாசி"

கிழிசல்கள் என்ற தலைப்பிலான இக்கவிதை இன்று உயர்வான இடத்தில் உள்ள விலைவாசியினைக் குறித்து ஏளனம் செய்கிறது.

படிம வடிவம்

மனத்தின் வார்ப்படமாக விளங்குவது, "படிமம்" ஆகும். கவிஞன் தான் கண்ட காட்சியினை அவன் உணர்ந்தவாறே சொல்லில் குழைத்துப் பொருளை நமக்குப் புலப்படுத்திக் காட்டுவது, "படிமம்" எனப்படும்.

"அழுகி நாறும்
அரசியல் குட்டையில்
ஆளும் வர்க்க
ஆக்டோபஸ் நெளிகிறது"

தமிழவனின் இக்கவிதையில் ஆக்டோபஸ் அழகிய படிமவடிவாக இடம் பெற்றுள்ளது.

குறியீட்டு வடிவம்:

புதுக்கவிதையின் உத்தி வடிவங்களுள் ஒன்று "குறியீடு" ஆகும். ஒன்றை நேரடியாகக் கூறாமல் அடையாளம் வழியாக உணர்த்திக் காட்டுவது, "குறியீடு" எனப்படும்.

"வேலியைக் காக்க
மடிகின்ற பயிர்கள்"

சி.அரங்கநாதனின் இக்கவிதை வரிகளில் "தியாகி"க்கான குறியீடு உணர்த்தப்பட்டுள்ளது.

இருண்மை வடிவம்:

பொருள் மயங்க உரைத்தல், தெளிவான கருத்தைக் குழப்பத்துடன் "புரியாத நிலையில்" பாடுதலே "இருண்மை வடிவம்" எனப்படும். சுந்தரராமசாமி, அப்துல்ரகுமான், அபி போன்ற பல புதுக்கவிதையாளர்களின் படைப்புக்கள் இருண்மை வடிவிலேயே உள்ளன.

வினா-விடை அமைப்பு

கேள்வி கேட்பது போல் ஒன்றை வெளியிட்டு இறுதியில் பதில் தருவதாக முடிப்பது "வினா-விடை அமைப்பு" எனப்படும். இந்த அமைப்பும் புதுக்கவிதைகளில் காணப்படுகிறது.

"அது கூந்தலா?
இல்லை
இரவின் ஒரு பகுதி

இன்னும் விடியாமலே இருக்கிறது"

வைரமுத்துவின் இக்கவிதை "வினா-விடை" அமைப்பில் அமைந்துள்ளது. புதுக்கவிதையின் வடிவ அமைப்பில் இதுவும் முக்கயமானதாகும்.

தூலக்கவிதையமைப்பு

புதுக்கவிதையில் கவிதைப் பொருளை அதன் அச்சு வடிவத்தின் வாயிலாகவும் உணர்த்த இயலும். இவ்வாறு உணர்த்துவதற்குத் "தூலக்கவிதை" அமைப்பு என்று பெயர்.

"கி

யூ

வி

லே

ஒரே கூட்டம்"

எழில் முதல்வனின் இம்முயற்சியைத் தூலக்கவிதையமைப்பிற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். இதில் கவிதைப் பொருளுக்கும், கவிதையின் அமைப்பிற்கும் இடையே நெருங்கிய தொடர்பு உண்டு.

முடிவுரை:

கவிஞர்களின் இலக்கியக் கொள்கைகளுக்கேற்ப, உள்ளடக்கத்திற்கேற்பப் புதுக்கவிதையின் வடிவங்கள் மாறுபடுகின்றன., நாளுக்கு நாள் புதுப்புது வடிவங்கள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. புதுக்கவிதையின் வடிவமைப்பில் உத்தி வகைகளையும் குறிப்பிடலாம்., அதில் தவறொன்றும் இல்லை. புதுக்கவிதைக்கு வடிவம் இல்லை என்று கூறுவோருக்கு வடிவம் பற்றிய புதிய இலக்கணத்தைப் புதுக்கவிதை கற்றுத் தருகின்றது.

# நகுலன் "நினைவுப் பாதை"யின் இலக்கியப் போக்கு

இரா.சே.ராஜலட்சுமி,
விரிவுரையாளர்
இ.மா.கோ.யாதவர் மகளிர் கல்லூரி
மதுரை-14.

முன்னுரை:

நகுலன் சுமார் அரை நூற்றாண்டு காலம் தமிழிலும், ஆங்கிலத்திலும் சிறுகதைகள், நாவல்கள், கவிதைகள், விமர்சனங்கள், தொகுப்பு, மொழி பெயர்ப்பு என்று இலக்கியத்தின் பல்வேறு பிரிவுகளிலும் ஆழ்ந்த நுண்ணறிவோடும் விசேஷ சிரத்தையோடும் எழுதி வந்துள்ளனர். நகுலனின் எழுத்துக்கள் இன்று பலரையும் தன்பால் ஈர்த்து வருகின்றன. அகவுலகு சார்ந்த எழுத்துக்களாக இவரது நாவல்கள் கருதப்படுகின்றன. இவர் படைத்துள்ள நாவல்களில் ஒன்று நினைவுப் பாதை. இந்நாவல் தன்னைத்தானே விமர்சித்துக் கொள்ளும் சமகால எழுத்தாளனின் நாட்குறிப்பு என்பதற்கு மேலே வெகுவாக உயர்ந்து மிகவும் குறிப்பிட்டுச் சொல்லக்கூடியதாக அமைந்துள்ளது. இந்த நாவலின் இலக்கியப் போக்கைப் பற்றிக் காணலாம்.

நகுலனைப் பற்றி...

டி.கே.துரைசாமி என்பது இவரது இயற்பெயர். நகுலன் என்ற புனைப்பெயரில் பல படைப்புகளைப் படைத்துள்ளார். நவீனன், நாயர் என்பதும் இவரது புனைப் பெயர்கள் தான். பிறந்தது கும்பகோணம். வாழ்ந்தது திருவனந்தபுரம். திருவனந்தபுரம் இவானியர் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். இவர் பல விருதுகளையும், பாராட்டுக்களையும் பெற்றுள்ளார்.

நவீனப் படைப்பாக்கத்தில் அரவமற்று இயங்கிக் கொண்டிருக்கும் அகமனக் கவிஞன். குழந்தைத்தனமான மனோபாவத்தையும், படைப்பாளிக்கான தீவிரத்தையும் ஒரே நிலையில் வெளிப்படுத்தும் தன்மை கொண்டவர். தனிமனித நேர்மை, சகமனிதனை நேசிக்கும் பண்பு உடையவர். சுதந்திரமாய் ஒரு சித்தரின் மனப்பக்குவத்தோடு வாழ்ந்து வந்தவர். தனக்கென ஒரு வாழ்க்கை முறையும் நவீன சிந்தனையும் கவிதை ஆளுமையும் உடையவர். ஆசாரங்களிலும் சடங்குகளிலும் நம்பிக்கை இல்லாதவர். பார்ப்பனியம் குறித்து எதிர்மறையான எண்ணமுடையவர். இவரது எழுத்தில் பழமையும், புதுமையும், கிழக்கும், மேற்கும் இணைகின்ற அழகைப் பார்க்கலாம். இவரது அனுபவ உலகும், எழுத்தாக்கமும், கனவும், நனவும் கலந்து மயங்கும் கற்பனை கடந்த நிலையில் உயிர்த்தெழும். இவரது அனுபங்கள் மொழிவாரியாக எழுத்துருவம் பெறுகின்றன. நனவோட்டப் பாணி எழுத்தாளர்களில் இவரும் ஒருவர்.

கதையம்சம்

கதாநாயகன் நவீனன் எழுத்தார்வம் உடையவன். அப்பா திசையில் அவனுக்கு தவிர்க்க முடியாத கசப்பு இருக்கிறது. அம்மாவிடத்தில் ஆழ்ந்த பாசம் இருக்கிறது. இது இரண்டுமே மிகவும் பூடமாகக் கூறப்படுகின்றன. நவீனன் அறிந்தோ, அறியாமலோ வேறு இரு பெரியவர்களுக்கு நேரிடையாகவும், மறைமுகமாகவும் இணக்கம் காட்டுகின்றான். இரண்டு நண்பர்கள் வருகிறார்கள். ஒருவன் நாவலாசிரியன், மற்றொருவன் பிறவிக் கவிஞன். ஆனால், அவனுக்குத் தன்னால் எழுதவும் முடியுமா என்று தான் முதலில் தோன்றுகிறது. ஆனால், அவன் அப்புறம் படைக்கும் கவிதைகள் அவனுடைய மன ஆழத்தை, திண்மையை, கலைப்பாங்கைக் கண்டு நவீனன் திரும்பத் திரும்ப தனக்குள் வியந்து கொள்கிறான்.

நவீனத்துக்குத் தன் நண்பனுக்குத் தான் ஒன்றும் அதிகம் உதவ முடியாதபடி இருப்பதில் ஒரு வருத்தம் இருக்கிறது. ஆனால் எப்போது சந்தித்தாலும் ஒரே தொடர்ச்சியாகப் பேசிக் கொண்டிருப்பவர்கள் போல மனித உறவுப் பிரச்சனைகளைப் பொதுப்படுத்தியே பேசுகிறார்கள். ஆனால் சொந்த விவகாரங்கள் பற்றிப் பேச்சே எழுவதில்லை. இவர்கள் இருவரும் வாழ்க்கை தரும் இடி அடிகளை உணருகிறார்கள். எதிர்த்துப் போராடுவதில்லை. ஆனால் தப்பி ஓடியும் விடுவதில்லை. அவர்களுக்குள் ஒரு சிறு அடைக்கலங்களை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

வாழ்க்கையில் சூக்ஷ்ம அம்சங்களை விவாதிப்பதை அவர்கள் தங்களை மறக்கும் புகலிடமாகக் கொள்கிறார்கள். ஒரு நாளைக்குச் சில நிமிஷங்களிலிருந்து சில நாட்களில் மணிக்கணக்கில் இந்தப் புகலிடத்தில் அடைக்கலம் அடைகிறார்கள். தங்களுக்குப் புத்துயிர் ஊட்டிக் கொள்கிறார்கள். விவாதிப்பது என்னும் சொல் அவர்களுக்கு மிக முக்கியமாக, மிகவும் அவசியமானதொன்றாகப் போய்விடுகிறது.

நவீனனின் இயல்பில் இலக்கியம் படைப்பது ஆழமாக வேரூன்றியிருக்கிறது. அத்துடன் உள்ள இன்னொரு மனவிருட்சம் ஒரு பெண். அவள் பெயர் சுசீலா. சுசீலாவை ஞாபகப்படுத்த அவள் பெயர் மீண்டும் மீண்டும் வருகிறது. நவீனன், தன் மனத்தில் அவளுடன் ஏற்படுத்திக் கொள்ளும் உறவு, ஒரு ஆத்மசாசன் தன்னுடைய விடுதலைக்குச் சாதனை ரீதியில் வைத்துக் கொள்ளும் இலக்கு அல்லது தெய்வச் சின்னத்துடன் கொள்ளும் உறவு போன்றதாகும். இறுதியாக நவீனன் மன வைத்திய நிலையத்தில் அடைக்கப்பட்டு குணமாகித் திரும்பி வருபவனாக நாவல் முடிவடைகிறது.

### இலக்கியப் போக்கு

கதை சொல்லும் முறை, அனுபவ வெளிப்பாடு, பாத்திரப்படைப்பு, உரையாடல், கவிதை என ஆசிரியரின் இலக்கியத் திறன் வெளிப்படும் விதமாக இலக்கியப் போக்கு அமைந்துள்ளது.

### கதை சொல்லும் முறை:

டயரி வடிவத்தில் "நினைவுப் பாதை" அமைந்துள்ளது. கதையை ஆசிரியரே கூறுவது போல அமைந்துள்ளது. நனவோடை உத்தியில் இந்நாவல்

அமைந்துள்ளது. உத்தியில் மிகுந்த கவனமும் சொல்வதை அழுத்தி லேசில் பிடிபடாத நோக்கில் சொல்வதில் சிரத்தையும் இருக்கிறது. இவை பரந்து சமூகத்தின் பல்வேறு அம்சங்களைத் தொடாவிட்டாலும் தான் எடுத்துக்கொண்ட மனிதர்களைப் பற்றி அவர்களின் வாழ்க்கை, வாழ்க்கை இலக்கு, அதை அடைய எடுத்தக் கொள்ளும் முயற்சிகளைப் பற்றிய உணர்ச்சி வசப்படுதல் இன்றி அறிவின் தெளிவோடு மிகுந்த நேர்த்தியோடு சொல்கிறது.

தண்டவாள மாற்றங்களாக கதை சொல்லும் முறை இயற்கையாக அமைந்துள்ளது. அதாவது தன்மை ஒருமையில் நவீனன் கதை சொல்லிக் கொண்டிருக்கும்போது நடுவில் அதே தன்மை ஒருமையில் சிவன் சொல்ல மீண்டும் நவீனன் தொடர்வதாக அமைகிறது.

அனுபவ வெளிப்பாடு

நாட்குறிப்புகளைப் போல அமைக்கப்பட்ட பாகங்கள் தொடர்ந்த வளர்ச்சியினைக் காட்ட நவீனன் தனது வயதைப் பற்றி முன் பின்னாக சொல்கிறான். ஒரு இடத்தில் 45 வயதுக்காரனாகவும், ஓரிடத்தில் 50 வயதுக்காரனாகவும், ஓரிடத்தில் 75 வயதுக்காரனாகவும் என வயதுகள் குழப்பட்டு அனுபவங்கள் ஞாபகங்களாக மாற்றப்படுகின்றன.

பிரசுரமாவதற்கு முன் காலை நக்கியும் நாலு எழுத்து அச்சான பின் மேலே விழுந்து குமுறுவதுமான இலக்கியப் படைப்பாளிகளைப் பற்றிய வர்ணனையில் ஒரு பார்வையாளரின் ரியாலிட்டி தெளிவாகிறது.

நவீனன் எழுதுவதின் மூலமாக மட்டுமே உயிரைத்தக்க வைத்துக் கொண்டிருக்கிறதாகவும், நவீனனின் அனாதைத் தன்மை ஒரு இளைஞனின் நட்பு மூலம் அழிவதாகவும் சித்தரிக்கிறது.

நவீனன் பைத்தியமாக இருக்கும் காலகட்டம், அபத்தத்திற்கும், அர்த்தத்திற்கும், உணர்ச்சி நசிவிற்கும் சூழலின் கொடூரத்திற்கும் இயல்பு நிலைமைக்கும் உள்ள போராட்டமாக நினைவுப்பாதை புரண்டு மீண்டும் சீராவதை விளக்குகிறது.

நாவல் முழுவதுமே எழுதும் அந்த கணம் மனதிற்குக் கொண்டு வரும் வாக்கியங்களால் எழுதப்பட்டிருக்கிறது என்பதை உணரமுடிகின்றது. அதே சமயத்தில் எவ்வித முன் திட்டம் இல்லாமல், கோர்வையாக ஒரே மாதிரியான தரம் கொண்ட நுணுக்கமான, பூரணமான, தர்க்க ரீதியில் அப்பழுக்கு ஏற்படாத கோட்பாடுகள் இயல்பாகத் தெரிய ஒரு கலைப்படைப்பாகத் தோன்றுகிறது.

பாத்திரப்படைப்பு:

நாலவில் நினைவில் பதிபவர்கள் சிவனும், நடராஜனுமே. சிவன் கவிஞன், Pessimist. நடராஜன் நாவலாசிரியன், Optimist. இது மேன்மையான வகைப்படுத்தலை வெளிப்படுத்துகிறது. நாவலின் ஆசிரியரான கதை சொல்பவர் எதிலும் ஒட்டாமல் அலைந்து திரிபவர். லட்சியவாதி. நாவலில் நேரடியாகத் தென்படாமல் தனது அறிவுரைகளைப் பிறர்மூலம் சார்த்துபவர் சச்சிதானந்த சுவாமிகள், Indian archetype. நிழலான

இரண்டாம் வரிசைப் பாத்திரங்களான பெரும் சுடர் ஆசிரியரும், ராமநாதனும் மிகக் கச்சிதமான பாத்திரப்படைப்புகள்.

கவிதை:

நாவலில் சுசீலா பெருமளவு வரும் நான்காம் பாகம் முழுவதுமே கவிதாசம்சம் மிகுந்து இருக்கிறது. கவிதை உருவத்திலும் பல பகுதிகள் இருக்கிறது.

சுசீலா
செத்துக் கிடந்தாள்
கழுகொன்று
அவள் மார்பைக் கொத்திற்று
அவள் ...
நோக்கி எறும்புக் கூட்டம்
பிண வாடை
வயிற்றைக் குமட்டக்
கவிஞன்
கறுப்புத் தின்றான்...

என்று ஆரம்பிக்கும் கவிதை ஸ்தூலத்தில் சுசீலா சாகவில்லை. தான் அடையவில்லை என்ற வெறுப்பில் அவள் சாக வேண்டும் என்று எண்ணுபவனல்ல நவீனன். இந்தக் கவிதையை அவன் நள்ளிரவில் எழுதிவிட்டு இதற்கு என்ன தாத்பரியம் என்று எண்ணிப் பார்க்கிறான். இது மட்டுமல்லாமல் இன்னும் எவ்வளவோ உருவகங்கள், படிமங்கள், வார்த்தைச் சேர்க்கைகள், இவைகள் பலவற்றில் நமக்கு இயல்பாகிவிட்ட தாக்கம், ஒன்றைக் காரணம் வைத்து அடுத்தது மனத்தில் உதிப்பது, ஸ்தூல அனுபவ நினைவுகளுக்குள் அடங்கிப் போகுமாறு எண்ணங்கள் இவையெல்லாம் இக்கவிதைகளால் சிதற அடித்து விடப்படுகின்றன.

முடிவுரை:

டயரியான "நினைவுப்பாதை" வாழ்வின் ஒரு காலகட்டத்தின் தவிர்க்க இயலாத மனப்போக்கின் தொடர்ச்சியைச் சொல்கிறது. இது வடிவ நேர்த்தியும், முழுமையும் கூடி வந்த நாவலாகும். தமிழ் உரைநடை இலக்கியத்திற்கு "நினைவுப்பாதை" ஒரு புதுமர்பை அளிக்கிறது. இது சதையும் இரத்தமுமாக உயிர் வாழும் ஓர் எழுத்தாளரின் நினைவுப்பாதை.

துணைநூற்பட்டியல்:

நகுலன் நாவல்கள்- வெளியீடு : காவ்யா, கோடம்பாக்கம், சென்னை-24.
நகுலன் இலக்கியத்தடம் - வெளியீடு : காவ்யா, கோடம்பாக்கம், சென்னை -24.

# பாரதியார் கவிதைகளில் ஆளுமைச் சிந்தனைகள்

சு.கோமதி அழகு
இளநிலை ஆய்வாளர்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை

முன்னுரை

ஒவ்வொரு படைப்பாளியின் படைப்புகளிலும் "ஆளுமைத் திறம்" என்பது வெளிப்படுவது இயல்பு. அஃது படைப்பாளி உணராமலேயே அவர்தம் ஆளுமைத் திறத்தினைப் படைப்புகளில் பதிவு செய்கின்றார். அவ்வகையில் பாரதியாரின் படைப்புகளில் வெளிப்படும் ஆளுமைச் சிந்தனைகளைக் காண்போம்.

ஆளுமை - விளக்கம்

"ஆளுமை" என்பதனை ஆங்கிலத்தில் "Personality" என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். இ ஃது Persona - என்ற இலத்தீன் சொல்லிலிருந்து உருவானது. இச்சொல்லின் பொருள், நாடக நடிகர்கள் தங்களை அடையாளம் தெரியாமலிக்க அவர்களின் முகத்தை மறைக்கப் பயன்படுத்திய முகமூடியைக் குறித்தது. எனவே முதன் முதலில் ஆளுமை என்பது ஒருவர் மற்றவர்களுக்கு எப்படி தோற்றமளிக்கிறார் என்பதையே சுட்டியது.

"ஒருவரின் உடலமைப்பு, நடந்துகொள்ளும் பாங்கு, ஆர்வம், மனப்பான்மை, திறமை, தொழிலார்வம் ஆகியவற்றின் தனித்தன்மை வாய்ந்த ஒருங்கிணைப்பே "ஆளுமை" என்கிறார் மன். இக்கூற்றின்படி உடல் தோற்றம் மட்டுமின்றி ஒவ்வொரு தனிப்பண்பும் ஆளுமையாகும். ஒரு மனிதனின் ஆளுமையைத் தீர்மானிப்பதில் முக்கிய பங்கு வகிப்பை மரபுநிலையும் சூழ்நிலையும் ஆகும்.

சுதந்திரச் சிந்தனை:

மனிதனின் ஆழ்மனச் சிந்தனைகள், நிறைவேறாத ஆசைகள் போன்றன கனவுகளாக வெளிப்படும் என்பது ஃபிராய்டின், கனவுபற்றிய கருத்து. அவ்வகையில் விடுதலைப் போராட்ட காலகட்டத்தில் வாழ்ந்த பாரதியார், விடுதலை பற்றிய தம் கனவினைப் பாடலாகப் பதிவு செய்துள்ளார்.

"என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்?
என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்?
என்றெம தன்னையது விலங்குகள் போகும்?
என்றெம தின்னல்கள்? தீர்ந்துபொய் யாகும்?"

விடுதலையின் மீது கொண்ட வேட்கையின் காரணமாகவும் எதிர்காலத்தில் நாடு விடுதலையாகும் என்ற நம்பிக்கையிலும் ஆழ்மன உந்துலின் காரணமாக

"ஆடுவோமே - பள்ளுப் பாடுவோமே
ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று"

தம் ஆசையைக் கவியில் நிறைவேற்றிக் கொள்கிறார். இதன் வழி அவருடைய தேசம் சார்ந்த ஆளுமைச் சிந்தனையினை நாம் உணரமுடிகிறது.

குழந்தைகள் சார்ந்த ஆளுமைச் சிந்தனைகள்

வருங்காலச் சந்ததியினரான குழந்தைகளை நல்வழிப்படுத்த வேண்டுமென்ற எண்ணத்தினை அவர் தம் கவிதைகளில் பல இடங்களில் நாம் காண முடிகிறது.

"ஓடி விளையாடு பாப்பா - நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா - ஒரு
குழந்தையை வையாதே பாப்பா"

குழந்தைகள் மனத்தில் ஒற்றுமை குணத்தினையும், செயலில் சுறுசுறுப்பு வேண்டும் என்று அறிவுரையினையும் கூறி இளைய சமூகத்தினரான குழந்தைகளை நல்வழிப்படுத்தகின்றார். மேலும் ஒற்றுமையினை வலியுறுத்தும் வகையில்,

"சாம்பல் நிறமொரு குட்டி - கருஞ்
சாந்து நிறமொரு குட்டி,
பாம்பு நிறமொரு குட்டி - வெள்ளைப்
பாலின் நிறமொரு குட்டி
எந்த நிறமிருந்தாலும் - அவை
யாவும் ஒரே தரமன்றோ?"

என்று சாதி, மத, இன வேறுபாடுகளற்ற ஒரு சமூகத்தினை வலியுறுத்துகின்றார் பாரதியார்.

ஆன்மிகக் கவிஞராகப் பாரதியின் வெளிப்பாடு

வீர உணர்வும், பொதுஉடைமைச் சிந்தனையும் நிறைந்த பாரதியார் சிறந்த ஆன்மிகச் சிந்தனையாளராகவும் திகழ்ந்துள்ளார்.

"புதுவினை காட்டும் புண்ணியா, போற்றி
மதியினை வளர்க்கும் மன்னே. போற்றி"

என்று சிந்தையினை ஒருமுகப்படுத்தினால் செயலில் வெற்றி பெறலாம் என்னும் கருத்தினை உணர்த்துகின்றார் பாரதியார். தெய்வப் பாடல்கள் பலவற்றையும் பாடியுள்ள பாரதி இறைவழிபாட்டின் வழி மனஒருமைப்பாட்டினை வளர்ப்பது பற்றிக் கூறியுள்ளாா. எத்தகைய சிக்கல்களையும் மனஒருமைப்பாட்டினால் சாதித்துக் காட்டலாம் எனும் ஆளுமைத் திறத்தினை பாரதியின் தெய்வப் பாடல்கள் மூலம் நாம் அறியமுடிகிறது.

பாரதியின் மொழிப்பற்று:

பாரதியார் அடிப்படையில் வடமொழியாகிய சமஸ்கிருதத்தைத் தாய் மொழியாகக் கொண்டவராயினும்

"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்"

என்ற பாடல் அடிகளில் அவர் தமது தமிழ் மொழிப் பற்றினைப் பதிவு செய்துள்ளார். மேலும்

"தெள்ளுற்ற தமிழமுதின் சுவை கண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்" எனத்

தீந்தமிழின் திறத்தினைக் கூறுமிடத்து பாரதியின் பன்மொழிப் புலமையினை நாம் உணரமுடிகிறது.

தொழிலார்வ ஆளுமை

பாரதியார் கவிஞராக மக்களிடையே அறியப்பட்டிருப்பினும், அவர் ஓர் இதழாளராகவும் தம் ஆளுமையினைப் பத்திரிகைத் துறையில் பதிவு செய்துள்ளார். "செய்யும் தொழிலே தெய்வம்" என்னும் மொழிக்கு ஏற்ப பாரதியார் தாம் பணியாற்றிய பத்திரிகைத் துறையிலும் பல்வேறு புதுமைகளையும் புரட்சிகளையும் புகுத்தியவர் என்பதனை அவருடைய கட்டுரைகள், மடல்கள் மற்றும் பாரதியார் தொடர்பான ஆய்வுக் கட்டுரைகள் மூலம் நாம் அறியலாம். பத்திரிகைத் துறையில் முதன் முதலில் "கருத்துப்படங்களைத் தம் இதழ்களில் கையாண்ட பெருமை பாரதியாரையே சாறும். பாரதியின் இத்தகு செயல்களின் மூலம் அவருடைய தொழிலார்வம் சார்ந்த ஆளுமையினை நாம் அறிய முடிகிறது.

நிறைவுரை

பாரதியாரின் கவிதைகள் வழி வெளிப்படுகின்ற ஆளுமைச் சிந்தனைகளை நாம் இக்கட்டுரையில் சிறிதே கண்டோம். பாரதியாரின் ஆளுமைச் சிந்தனைகளை அவர்தம் கவிதைகள் வழி காணுமிடத்து அதனை ஒரு கட்டுரைக்குள்ளே அடக்குதல் என்பது கடல்நீரை நாழிக்குள் அடைத்தல் போன்றதாகும்.

# சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்

பா.சுபத்ரா
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ் உயராய்வு மையம்
மதுரைக் கல்லூரி
மதுரை-11

## முன்னுரை

உலகில் மனிதன் தோன்றிய நாளிலிருந்தே கதைசொல்லும் கலையும் தோன்றி வளர்ந்தது. இலக்கியங்கள் தோன்றுவதற்கு முன்பே குடும்ப விழாக்களில் கதை சொல்வது பொழுதுபோக்காக இருந்தது. ஆரம்ப காலத்தில் கதை சொல்வதும் கேட்பதும் எல்லா நாடுகளிலும் எல்லா மக்களிடமும் வாய்மொழியாக இருந்தன. கட்டுக்கதைகள், உவமைக்கதைகள், கற்பனைக் கதைகள் போன்றவைகள் பழங்காலந் தொட்டே மக்கள் மத்தியில் வழங்கி வந்துள்ளன. சிறுகதையானது வாய்மொழியாக தோன்றி வளர்ச்சியுற்று அதற்கெனத் தனி இலக்கணம் வகுக்கப்படும் அளவிற்கு வளர்ந்துள்ளது.

## சிறுகதையின் தோற்றம்

தொழில் வளர்ச்சியும் பொருளியல் ஆசையும் அதிகரிக்க, காலத்தைச் செலவழிப்பதில் மனிதன் சிக்கனத்தை மேற்கொண்டான். நாவல்களின் காலகட்டம் குறைய ஆரம்பித்ததன் அடிப்படையில் தோன்றியதே சிறுகதை இலக்கியமாகும். மனிதன் தன் சொந்த அனுபவத்தைக் கொண்டு தான் கண்டதையும், கேட்டதையும் விரித்துச் சொல்ல கற்றுக்கொண்டான். காலத்தின் மதிப்பைப் பொருளாதாரத்தில் மனிதன் கணக்கிட ஆரம்பித்தான். அதனால் மனிதன் தன்னுடன் வாழ்ந்த மனிதர்களோடு பேசிப்பழக ஏதாவது செய்ய வேண்டுமென எண்ணினான். அப்போதுதான் கதை சொல்லும் பழக்கம் உருவானது எனலாம்.

## சிறுகதையின் இலக்கணம்

சிறுகதை இலக்கணத்தை முதன்முதலில் வரையறுத்துக் கூறிய எட்கர் ஆலன்போ, "ஒரு பொருளைச் சொல்ல முற்படுதே சிறுகதையின் அடிப்படை இலக்கணம்"[1] என்கிறார். பிற இலக்கிய வகைகளினின்றும் பிரிந்து வருவதை இது எனச் சுட்டிக்காட்ட உதவுகின்ற முறையில் தனக்கென தனிஇடம் பிடிப்பது சிறுகதைக்குரிய பண்பாகும். "ஒரு கருத்து விளக்கம், ஒரு பாத்திரப்படைப்பு சுழற்புனைவரை என்ற மூன்றினைக் கூறி, இதில் ஏதேனும் ஒன்று சிறுகதையின் மையப்பொருளாக அமையலாம்"[2] என்றும் கூறுகிறார்.

## சிறுகதை விளக்கம்

கதை என்பது உண்மையான அல்லது கற்பனையான நிகழ்ச்சிகள் பாரம்பரியமாய் வழங்கி வரும் செய்திகள், புராணச் சிறுதுணுக்கு போன்றவைகள் உரைநடையிலோ, செய்யுள் நடையிலோ,

வாய்மொழியாகவோ இருக்கலாம் என்று விளக்கம் தருகிறது. கதை என்பதற்கு தமிழ்ப் பேரகராதி கதை, காரணம் என்ற இரு பொருட்களைத் தருகின்றது. "சிறுகதை என்பது ஒரு தடவை உட்கார்ந்து வாசிக்கக்கூடிய ஒரு தனி நிகழ்ச்சியாக இருக்க வேண்டும்"[3] என்பார். "கதை என்பது நிகழ்ச்சிகளின் தொகுப்பு. விபத்துக்கள், திடீர் திருப்பங்கள், எதிர்பாராத வளர்ச்சி, மர்மம் மூலம் உச்சக்கட்டத்தை அடைதல், நிறைவான முடிவு போன்றவை இருக்க வேண்டும்"[4] என்பர் மரியாஸ். சிறுகதையானது சிறிய அளவில் அமைந்து ஒரு பக்கம் அல்லது இரண்டு பக்கங்கள் என்ற முறையில் உருவாக்கப்படுகின்றன.

சிறுகதையின் வளர்ச்சி

ஐரோப்பியர் தொடர்பால் தமிழில் உரைநடை வளர்ச்சிக்கு நல்ல ஆக்கம் ஏற்பட்டது. வீரமாமுனிவர் இக்கதை உருவான காரணத்தைக் கூறும்போது, "தமிழ் மக்களிடையே வழங்கிவந்த நகைச்சுவைக்கதை ஒன்றினை முதலில் தேர்ந்தெடுத்தேன்"[5] என்று கூறுவதிலிருந்து அறியலாம். இதற்கு முதன்முதலில் வழிகாட்டிய இதழ் கு.ஸ்ரீனிவாசன் தொடங்கிய "மணிக்கொடி" என்னும் இதழ் சிறுகதையின் மகத்தான வளர்ச்சிக்கு ஒரு ஏணிப்படியாக அமைந்திருந்தது. இவ்விதழோடு கலைதீபம், கல்கி, ஆனந்தவிகடன், சுதேசமித்திரன் போன்ற பத்திரிகைகள் சிறுகதை விமர்சன வளர்ச்சிக்கு ஊன்றுகோலாக அமைந்திருக்கின்றன. அடுத்து இரண்டாவதாக இடம் பெறும் கு.ப.இராஜகோபாலன் அவர்களின் கதைகளிலும் சிறுகதையின் முழுவடிவத்தினைக் காண முடியும். இவருடைய "விடியுமா" என்ற கதை புகழ் பெற்ற சிறுகதையாகும். வ.வே.சு. ஐயரின் கதைகளுக்குப் பின்னர் வெளிவந்த "பாரதியார் சிறுகதைகள்" இலக்கிய உலகில் நல்ல வளர்ச்சியைப் பெற்றுத் தந்தன.

கதைமாந்தர்கள்

சிறுகதையின் அடிப்படை மூலக்கருத்தை விளக்கவரும் கதாசிரியன் ஒரு குறிப்பிட்ட சூழலில் கதைமாந்தர்களை உருவாக்குகிறான். கதைமாந்தர்கள் இயங்கும் முறை, அவர்களின் இயல்புகள், குணநலன்கள், மனநிலை, உணர்வுநிலை ஆகியவை நுட்பமாக கதைகளின் மூலம் அறியப்படுகிறது. "ஒரு கதையை சொல்லாமல் பாத்திரங்களை மட்டுமே உருவாக்கி உலவிவிட முடியும். ஆனால் பாத்திரங்களிலில்லாத கதை இருக்கவே முடியாது. ஆகவே பாத்திரங்கள் தான் சிறுகதையின் அடிப்படை நாம் அன்றாட வாழ்வில் காண்கிற மனிதரையொத்த பாத்திரங்களாக இருக்க வேண்டும்"[6] என்று இரா.இராஜதுரை கூறுவதிலிருந்து உணரலாம்.

கதைப்பின்னல்

சிறுகதையாயினும், நெடுங்கதையாயினும் கதை என்பது பெரும்பாலும் நிகழ்ச்சியின் தொகுப்பாகும். முழுவடிவம் பெற்றுவிட்ட ஒரு கதையின் நிகழ்ச்சிகளில் கூறப்பட்டுள்ள நிரல்நிரையே கதைப்பின்னலாகும். எத்தகையக் கதையானாலும் கதைப்பின்னலானது ஒரு முரணையே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது.

**மொழிநடை**

நடை என்பது இன்றைய இலக்கிய உலகில் மிகுதியாகப் பயின்றுவரும் சொல்லாகும். "நடை என்பது கவிஞனின் தனித்தன்மையை உணர்த்தும் உத்தி இலக்கிய உச்சநயம்"[7] மொழிநடை என்பது படைப்பாசிரியர்களின் சிந்தனைத் திறத்திற்கும், கற்பனை வளத்திற்கும் ஏற்றவாறு வார்த்தை வாக்கியமாக அமைகின்றன. உதாரணமாக, ஜானகிராமன், மு.வ. கலைஞர், அண்ணா, ஜெயகாந்தன் போன்றோரின் நடையை குறிப்பிடும் அளவிற்குப் படைப்பாளிகளிடம் தனிநடையும் தனிப்பண்புகளும் வெளிப்பட்டு நிற்பதை அறிஞர்கள் கூறுவர்.

**கதைக்களம்**

கதை நிகழ்ச்சியோடு தொடர்புடையதாக, தேவையானப் புனைவுரையாக அமைவது கதைக்களமாகும். அகநானூற்றுப் பாடல்களின் பின்புலத்திரையானது நாடக மேடைக் காட்சியாக உயிர்த்துடிப்புடன் விளங்குவது போல சிறுகதையிலும் அத்தகைய பின்னணி அமைவதே கதைக்களம் எனலாம்.

**சிறுகதையின் இன்றைய நிலை**

மாத இதழ்களும் வார இதழ்களும் பலவகைகளாகத் தோன்ற ஆரம்பித்த நாளில் கதை ஒன்றே பத்திரிக்கைகள் வாழ வழி செய்தது. ஏறத்தாழ பத்து ஆண்டுகளுக்குள் 1950 சிறுகதைகள் தமிழ்நாட்டில் மலைபோல் குவிந்துவிட்டன. வார மாத இதழ்களில் அதிகம் விற்பனையாகும் இதழை எடுத்துக்கொண்டு அவற்றில் வெளியாகும் கதைகளைப் பார்த்தால் உண்மை விளங்கும். "உயிருடன் இருக்கும் கதைகளே தம் இதழில் வரவேண்டும் என்று ஒரு இதழ் ஆசிரியர் முடிவு செய்வாரானால் அவருடைய இதழ் தேய்பிறை போலத்தான் வளர்ச்சியடையும்"[8] எனவே கதைகளை ஆராய்ச்சிக்கு உட்படுத்தாமல் செய்தால் சிறுகதையின் வளர்ச்சியானது நல்ல சிறப்பினை அடையும்.

**முடிவுரை**

சிறுகதையானது வாய்மொழியாக தோன்றி வளர்ந்து அதன்பின்னர் செய்யுள் வடிவிலும் உரைநடையிலும் உருவாக்கம் பெற்றன. இத்தகைய சிறுகதையினை பல எழுத்தாளர்கள் எழுதி அவர்களின் திறமையையும் காட்டி அதனோடு பல உத்திகளையும் கையாண்டுள்ளனர்.

**அடிக்குறிப்புகள்**

1.கார்த்தகேசு, சிவத்தம்பி தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், ப.17.
2.மேலது., ப.18.
3.மேலது., ப.20.
4.மேலது., ப.20.
5.மேலது., ப.21.
6.மீனாட்சி முருகரத்தினம், கல்கியின் சிறுகதைக்கலை, ப.109.
7.சுதாகரன், செ.அழகிரிசாமியின் சிறுகதைகள், ப.18.
8.அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக் கலை, ப.391.

# கவிதைகளில் பெரியாரியப் பதிவுகள்

நா.சுலோசனா
முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறைஅய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி
சிவகாசி - 626 123 விருதுநகர் மாவட்டம்

பெரியாரின் சீர்திருத்தங்களினால் சமுதாயத்தில் ஏற்படுத்தி யிருக்கிற மாற்றத்தை கவிதைகளின் வாயிலாக ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைந்துள்ளது.

## சீர்திருத்தம்

தந்தை பெரியார் அவர்கள் தொடங்கிய திராவிடர் கழகம் சமுதாயச் சீர்திருத்தக் கழகமாகும். பெரியாரின் முதல் சமுதாயப் போராட்டம் தீண்டாமை ஒழிப்பிற்காகக் கேரளத்தில் வைக்கும் மகாதேவர் கோயில் நுழைவுக்காக நடத்தப்பட்டது. அறிவுக்குத் தடையான அனைத்தும் அழிக்கப்பட வேண்டும் என்பது பெரியாரின் சீர்திருத்தக் கொள்கையாகும். சாதி ஒழிப்பு பெரியாரின் சமுதாயத் தொண்டுகளில் தலையானதாகும்.

## பெரியார் மேற்கொண்ட கிளர்ச்சிகள்:

பெரியார் மேற்கொண்ட கிளர்ச்சிகளில் பல, சாதி ஒழிப்புக்காக நடத்தப்பட்டன. மனுநீதி சாத்திர எரிப்பு (1927) பிள்ளையார் உடைப்பு (1953) சட்ட எரிப்பு (1957) தேசப்பட எரிப்பு (1960) கீழ்ச்சாதி ஒழிப்புக்காகத் தில்லி ஆதிக்கக் கண்டன நாள் (1968). 1973இல் பெரியாரின் இறுதிச் சொற்பொழிவு சாதி இழிவு நீக்கச் சொற்பொழிவாகவே அமைந்தன. சாதி, ஒழியக் கலப்பு மனமும், சீர்திருத்தமும் நடைபெற வேண்டும் என்று பெரியார் வலியுறுத்திக் கூறினார்.

## திராவிட இயக்கக் கவிஞர்கள்:

தந்தை பெரியாரைத் தொடர்ந்து திராவிட இயக்கத்தவர்கள் தம் இயக்கக் கொள்கைகளைப் பரப்புவதற்கு கலை, இலக்கிய வடிவங்களை கையாண்டுள்ளனர். அத்தகைய கவிஞர்களான பாரதிதாசன், வாணிதாசன், சுரதா, புலவர் குழந்தை, கலைஞர் கருணாநிதி, பொன்னிவளவன், ப.ஜீவானந்தம், ஆகியவர்களின் ஒரு சில கவிதைகள் மட்டும் பக்க வரையறைக் கருதி எழுத்தாளப்படுகிறது. அவைகள் சமுதாயத்தின் பிற்போக்குத் தன்மையைக் கண்டித்து முற்போக்காக சிந்திக்கவும், செயல்படவும் வழிவகுப்பதாக அமைந்துள்ளன.

## பெரியாரின் பகுத்தறிவுப் பணி:

"நாட்டு மக்களுடைய கடவுள் நம்பிக்கை, சமயப்பற்று, மூடப்பழக்க வழக்கங்கள் ஆகியவைகளுக்கும் பகுத்தறிவின்மையே காரணம் என்று பெரியார் கருதினார்". (பெரியார் ஈ.வெ.ரா.சிந்தனைகள், தொகுதி -2, பக். 1049-1053) பெரியார் "மானமும் அறிவும் மனிதருக்கு அழகு" என்கிறார். மானம் என்றால் "தன்மானம்" என்றும், அறிவு என்றால் "பகுத்தறிவு" என்றும் குறிப்பிட்டுள்ளார். பகுத்தறிவின்மைக்குக் காரணம் அறியாமையே

காரணமாகும். எப்படி? ஏன், எதற்கு? என்று கேள்வி கேட்கும் விழிப்புணர்ச்சியைப் பெரியாரின் பகுத்தறிவியக்கம் உண்டாக்கியது.

அறியாமையைப் போக்கக் கவிஞர் பொன்வளவன்

"கோவில் தொடக்கம் அறியாமை !
குரங்கே தொடக்கம் மனிதர்க்கு"
(பொன்னிவளவன் கவிதைகள், தொகுதி -2, ப.62)

உயிரினத் தோற்றத்திற்குக் கடவுள் காரணம் இல்லை என்னும் அறிவியல் கருத்தினை அறிவுறுத்தியுள்ளார்.

சமயச் சடங்குகளை எதிர்த்தல்:

சமயம் சடங்குகள் ஒழிந்தால் நாட்டில் அடிமைமுறையும் அறியாமையும் நீங்குவதோடு பொருளாதாரம் வளருவதற்கு வழி ஏற்படும் என்னும் கருத்தில் திராவிட இயக்க கவிஞர்கள் சடங்கு முறைகளைக் கண்டித்தனர்.

"அள்ளும் வறுமை அகற்றாமல் அம்புவிக்குக்
கொள்ளை நோய் போல் மதத்தைக் கட்டியழும் வைதீகத்தைப்
போராடிப் போராடிப் பூக்காமல் காய்க்காமல்
வேரோடு போக்கவந்த வீரா இளவீரர்
(பாரதிதாசன் கவிதைகள், தொகுதி -1, ப.125)

"தமிழ்க் கொடி பறந்த கோட்டை யெல்லாம்
மடியேந்தும் ஆரியர்க்கு மடங்களாய்ப் போனதய்யோ!"
(மு.கருணாநிதி, கலைஞரின் கவிதைகள், ப.20)

சமயச் சடங்கு முறைகளால் நம்நாடு அடிமையாகி விட்டதைத் திராவிட இயக்கக் கவிஞர்கள் தமது கவிதைகளின் மூலம் தெளிவுறுத்தியுள்ளனர்.

மூடநம்பிக்கை ஒழிப்பு

மூடநம்பிக்கைகள் பகுத்தறிவுக்குத் தடையாகும். "குருட்டு நம்பிக்கையும் மூடப்பழக்கங்களும் என்று ஒழிகின்றனவோ அன்றுதான் நாட்டில் சமதருமம் தழைக்கும் என்று பெரியார் கருத்துரைத்தார்". (பெரியார் சிந்தனைகள், தொகுதி-3, ப.1053) பெரியாரைத் தொடர்ந்து பாவேந்தர்,

"காக்கைசொல் நம்பிக் கரிசை மட்டும்
..........
நல்லதோ மூடநம்பிக் கையதே?"
(பாரதிதாசன், பன்மணித்திரள், ப.144)

தீண்டாமை ஒழிப்பு:

சமுதாயச் சீர்கேடுகளுள் ஒன்றான தீண்டாமை ஒழிய வேண்டுமானால் தீண்டாமையைத் தோற்றுவித்த "வருணாசிரமம்" ஒழிய வேண்டும் (1927) என்று அவர் முழங்கினார். பெரியார் அவர்களால் வருணாசிரமக் கொள்கைப்படி அமைந்த மனுதர்ம சாத்திரம் கொளுத்தப்பட்டது. "சாதியின் அடையாளமாக விளங்குகிற பட்டங்களை

விட்டுவிட வேண்டும் (1927) என்று கூறித் தம் பெயரின் பின்னாக இருந்த "நாயக்கர்" எனும் சாதிப்பெயரை விட்டொழித்தார்". (பெரியார் சிந்தனைகள், தொகுதி-1, ப.9).

தீண்டாமை வளர்வதற்கு வறுமையும் காரணமாக இருந்ததைப் பாவேந்தர் கண்டார். பொதுவாக மாட்டிறைச்சி உண்ணுவோரைத் தீண்டத் தகாதவர்களாகப் பகுத்தறிவற்றவர்கள் கருதினார்கள். பாரதிதாசன் அவர்களைப் பார்த்து,

"மாடுண்பவன் திருக்கோயிலின் வாயிலில்
. . . . . . . . . . . . .
அவனே முதற் பாத்யம்"
(பாரதிதாசன் கவிதைகள், தொகுதி-3, ப.200)

என்று தீண்டத்தகாதவர்கள் என்று சொல்கிற பகுதத்தறிவற்றவர்களைப் பார்த்து நையாண்டி செய்கிறார். மேலும், சாதியற்ற சமுதாய நிலையைப் பற்றி "கவிஞர்கள் தமது கவிதையில் பதிவுசெய்துள்ளனர்.

## கடவுள் மறுப்புத் தத்துவம்

தந்தை பெரியார் அவர்கள் "நமக்குக் கடவுள் என்பதெல்லாம் நம் நடத்தையில் சத்தியம், நாணயம், தயவு, உபகாரஞ் செயல், துரோகம் செய்யாமலிருத்தல் ஆகியவைகளாகும்" என்று கடவுள் மறுப்பினை வேறு வகையாகக் குறிப்பிட்டுள்ளார்.
(பெரியார் சிந்தனைகள், தொகுதி-3, ப. 1828)

"கல்லுக்கு ஆயிரம் வேலி
. . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . .
பாரத வீரா! நீ கேட்டதுண்டா, "
(மு.கருணாநிதி, கலைஞரின் கவிதைகள், ப.267)

என்று ஏழை எளிய மக்கள் பசியால் வாடும்பொழுது கோயிலுக்கு ஏன் நிலபுலம் என்று கலைஞர் கொதித்தெழுகிறார். பெரியாரின் பகுத்தறிவு இயக்கம் தோன்றி வளர்ந்த பின்பே இன்றைய மூடநம்பிக்கையைச் சாடும் வழக்கம் சமுதாயத்தில் தோன்றி வளர்ந்திருப்பதையும் இக்கவிதை குறிப்பாகப் புலப்படுத்துகிறது.

## புராணக் கதைகள் எதிர்ப்பு:

புராணக் கதைகளை நம்பி நம்பி வாழ்க்கையின் சுவையினை, உழைப்பின் முயற்சியினைத் தமிழர் இழந்து, பிறர்க்கு அடிமையாகிவிட்டனர் என்பதைப் பாவேந்தரின் இராமாயணக் கதைக் குறிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது. "புராணக் கதைகளில் மகளிர் இழிந்தோராகச் சித்தரிக்கப்பட்டுள்ளனர்". புராணங்கள் மக்களுக்கு நன்மையைவிடத் தீமைகளை விளைவிக்கின்றன. ஆகவே நாட்டின் நலனுக்காகப் புராணங்கள் எரிக்கப்பட வேண்டும் என்று பெரியார் முழங்கினார்" (பெரியார் சிந்தனைகள், தொகுதி-3இ பக.1473-1478).

"பொய்யிலே முக்காற்படி
புரட்டிலே காற்படி
வையகம் ஏமாறும்படி
வைத்துள்ள நூற்களை ஒப்புவதெப்படி"

(பாரதிதாசன், பன்மணித்திரள், ப.164)

பொதுவுடைமை இயக்கத் தாக்கம்

தமிழ் நாட்டில் பொதுவுடைமை இயக்கக் கருத்துக்களை மக்களிடையே பரப்பிய பெருமை பெரியாருக்கு உண்டு. சாதி வேறுபாடற்ற பொதுவுரிமை கொண்ட பொதுவுடைமைச் சமுதாயம் நம் நாட்டில் நிலவ வேண்டும் என்னும் நோக்கத்தோடு பெரியார் தொண்டாற்றினார். "நாட்டில் பொதுவுடைமை மலர தனிமனித சொத்துரிமை ஒழிய வேண்டும்" என்கிறார் பெரியார். (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி.வே. ஆனைமுத்து, தொகுதி-3, ப.1706)

சமுதாயத்தில் தனியுடைமை ஒழித்து. "பொதுவுடைமை" எனும் புதிய உலகுதனைப் படைத்து விடலாம் எனத் திராவிட இயக்கக் கவிஞர்கள் தம் கவிதைகளில் நம்பிக்கை உணர்வினை ஊட்டியுள்ளனர்.

பெரியார் இக்காலச் சீர்கேடுகளைக் கண்டித்தும் முற்போக்குச் சிந்தனைகளை நமது நாட்டில் நிலைக்கவும் அரும்பாடுபட்டார். அத்தகைய முற்போக்குச் சிந்தனைகளைத் தமது வாழ்க்கையிலும் செயல்படுத்திக் காட்டியுள்ளனர். இன்றையைக் கலை, இலக்கியங்களிலும் பொதுவுடமை போன்ற பெரியாரின் சீர்திருத்தங்களை கவிஞர்கள் தம் எழுத்துக்களில் பதிவு செய்துள்ளதை நாம் அறிய முடிகிறது. மேலும் முற்போக்கு விழிப்புணர்வு இன்றுள்ள சமுதாயத்திலும் நிலவி வருவதையும் நாம் காணமுடிகிறது.

# நா.முத்துக்குமார் கவிதைகளில் பெண்கள்

சு.சண்முக சுந்தரம்
முனைவர் பட்ட ஆய்வாளர்
தியாகராசர் கல்லூரி
மதுரை -9

மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்
- பாரதியார்

சமுதாயத்தில் ஓர் அங்கமாகப் பெண் திகழ்கிறாள். ஒரு நாட்டிற்கும், வீட்டிற்கும் ஒளி விளக்காய்த் திகழ்வது பெண்களே. ஒரு நாடு முன்னேற வேண்டுமானால் அந்நாட்டில் பெண்கள் முன்னேற்றமடைந்தவர்களாக இருத்தல் வேண்டும். ஒரு குழந்தை நல்லவனாகவும், தீயவனாகவும் வளர்ப்பதற்குத் தாயே காரணமாகிறாள். இதனால், "நல்ல தாயாரைக் கொடுங்கள் நான் நல்ல நாட்டை உருவாக்குகிறேன்" என்றார் நெப்போலியன் அத்தகையப் பெண்களை நா.முத்துக்குமார் தமது கவிதைகளில் எவ்வாறு பதிவு செய்துள்ளார் என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

நா. முத்துக்குமார் கவிதைகளில் சமுதாயத்தில் பெண்கள் நிலை.

சங்க காலம் தொட்டு இன்றைய காலம் வரை பெண்களின் முன்னேற்றம் படிப்படியாக வளர்ச்சியடைந்து வருகிறது. குடும்பம், கல்வி, தொழில், அரசியல், சமயம், இலக்கியம், விளையாட்டு சமுதாய விழிப்புணர்ச்சி என எல்லாத் துறையிலும், விழிப்புணர்ச்சிப் பெற்று வருகிறார்கள். இது உண்மையே என்றாலும், சுதந்திரமடைந்து ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகியும் இன்னும் முழுமையான சுதந்திரத்தைப் பெண்கள் அடையவில்லை என்பது சரியான உண்மையாகும்.

கணவர் மனைவி நடத்தும் இல்லற வாழ்க்கையில் கணவனுடன் கட்டுப்பட்டு வாழும் மனைவியின் நிலையை அவர்களது குழந்தையின் வாயிலாக "தூர்" என்னும் கவிதையில்,

"ஆழ்கிருக்குள்
அப்பா முங்க முங்க
அதிசியங்கள் மேலே வரும்

............

பகைவென்ற வீரனாய்
தலைநீர் சொட்டச் சொட்ட
அப்பா மேல் வருவார்
"இன்றுவரை அம்மா
கதவுகளின் பின்னிருந்துதான்
அப்பாவோடு பேசுகிறாள்
கடைசி வரை அப்பாவும்
மறைந்தே போனார்

மனசுக்குள் தூர் எடுக்க"[1]

என மனைவி கணவனுடன் நேரிடையாகப் பேசக் கூட முடியாத நிலை இன்னும் நிலவி வருவதை கவிஞர் தெளிவாகச் சுட்டிக் காட்டியுள்ளார்.

"மங்கையராய் பிறப்பதற்கு நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா?"[2]

என்றார் கவிமணி. ஆனால் சமுதாயத்தில் பெண்களின் உணர்வுகள் புரிந்துக் கொள்ளப்படுவதில்லை. அவர்களுக்கு உரிமைகள் மறுக்கப்பட்டுள்ளன. இதனால் அவர்கள் பொம்மைகளைப் போல் வாழ்கிறார்கள் என்பதை கவிஞர்,

"முந்தானையில் மூக்குறுஞ்சும்
அம்மாக்களைப் போலவே
கண்கள் சிவந்து பிறந்த வீடேகும்
அக்காக்களைப் போலவே
நான் ஏன் பெண்ணாகப் பொறந்தேன் என
பொம்மைகள் எப்போதும்
கண்ணீர் விடுவதில்லை"[3]

என்ற கவிதை வரிகளின் மூலம் பெண்ணாகப் பிறந்ததற்கு வருத்தப்படும் பெண்களின் நிலையினை வருதத்தத்தோடு வெளிப்படுத்தியுள்ளார்.

## பெண் விடுதலை:

உரிமை என்பது ஒருவர் கொடுப்பதுமன்று மற்றொருவர் வாங்குவதுமன்று அஃது எவரிடத்தும் எல்லாவிடத்தும் இயல்பாய் அமைந்து கிடப்பது "பெண் என்பவள் கல்லாகவும் மரபாகவும் இருத்தல் ஆகாது. அடிமை விலங்கு பூண்டவளாகவும் இருத்தல் கூடாது. முழு உரிமைப் பெற்ற மானுடப் பெண்ணாகத் திகழ வேண்டும்" என்கிறார் சரளா ராஜகோபாலன்.[4] சமுதாயத்தின் ஒளி விளக்காய்த் திகழும் பெண்கள் முழுமையான விடுதலை பெறவில்லை என்பதை எஃப்எம் தொகுப்பாளி என்னும் கவிதையில்,

"ஒரு குடும்பத் தலைவி
சதுர இட்லி சுடுவது
எப்படி என்று
கற்றுத் தருகிறாள்
இட்லிகளும் பெண் விடுதலையும்
வட்டத்திலிருந்து சதுரத்திற்கு
முன்னேறியது குறித்து
சினக்கிறாள் தொகுப்பாளி"[5]

வட்டக்குழிகளிலிருந்து சதுரமான குழிகளுக்கு இடலிகள் மாறியிருக்கின்றன. அதைப்போல் பெண் விடுதலையும் வட்டத்திலிருந்து சதுரத்திற்கு முன்னேறியுள்ளது என்றாலும் கட்டத்துக்குள் அடைப்பட்டே பெண்கள் உள்ளார்கள் என்பது கவிஞரின் கருத்தாகும்.

பெண் கல்வி:

"தமிழ் நாட்டில் மாதர் சம்பூர்ணமான விடுதலை பெற வேண்டுமாயின் அதற்கு கல்வித் தோணியே பெரும் துணையாகும்"[6] என்கிறார் பாரதியார். இன்றைய சமுதாயத்தில் பெண்கள் கல்வியறிவு பெற்று எல்லாத்துறையிலும் தங்களது திறமைகளை வெளிப்படுத்தி வருகிறார்கள். திருமணம், குடும்பச் சூழல் போன்ற காரணங்களால் பெண்கள் தொடர்ந்து கல்வி கற்பதில் சிக்கல்கள் ஏற்படுகின்றன. இதனை,

"முதல் பெஞ்சை
யாருக்கும் விட்டுத்தராத
கவிதாவும், வனிதாவும்
டாக்டர் என்றார்கள் கோரஸாக,
இன்று கல்யாணம் முடிந்து
குழந்தைகள் பெற்று
ரேஷன் கடை வரிசையில்
கவிதாவும்
கூந்தலில் செருகிய சீப்புடன்
குழந்தைகளை
பள்ளிக்கு வழியனுப்பும்
வனிதாவையும்
எப்போதாவது பார்க்க நேர்கிறது"[7]

படிப்பைப் பாதியிலே விட்டுக் குடும்ப வாழ்க்கையை மேற்கொண்ட சூழலை வெளிப்படுத்தியுள்ளார் கவிஞர்.

தொகுப்புரை

இன்றைய சமுதாயத்தில் பெண் விடுதலைப் பற்றி பேசிக் கொண்டே இருக்கின்றனர். முழுமையான சுதந்திரம் பெறவில்லையென்றும், சூழ்நிலைக் காரணமாக பல பெண்கள் தங்களின் படிப்பை நிறுத்திவிடும் நிலையே அதிகம் உள்ளதென்றும், வரதட்சிணைக் கொடுப்பதை மறுக்கும் பெண்களைப் போல் அவற்றைக் கேட்டு வாங்கும் பெண்களும் இருக்கிறார்கள் என்பது கவிஞர் நா.முத்துக்குமார் உள்ளக் கருத்தாக அவரின் கவிதைகள் வெளிப்படுத்துகின்றன.

# தலித் பெண்ணியப் பார்வையில் மார்க்கின் கத்தியின்றி ரத்தமின்றி

முனைவர் தமிழரசி
விரிவுரையாளர்
தமிழ்த்துறை டோக் பெருமாட்டி கல்லூரி
மதுரை -2

## முன்னுரை

"தலித்" என்பது தல் என்ற எபிரேயப் மூலச்சொல் "dal" என ஆங்கிலத்திலும் இதனைக் குறிப்பிடுவர். இதற்கு ஒடுக்கப்பட்டவர்கள், ஏழைகள், வறியவர்கள், தேவையில் உள்ளவர்கள் என்றெல்லாம் பொருள் கூறுகின்றனர். தற்காலத்தில் தாழ்த்தப்பட்டு குறிப்பதான ஒரு சொல்லாக இது உருமாற்றம் பெற்றுள்ளது. டாக்டர் அம்பேத்கார் தமது படைப்பு முழுவதும், தாழ்த்தப்பட்டவர்களைக் குறிப்பிடுவதற்கு "தலித்" என்ற சொல்லையே பயன்படுத்தியுள்ளார். தலித்துக்கள் மேல் மட்டத்தாரால் ஒடுக்கபடுவது போல தலித் பெண்கள் தங்கள் சமூகத்து ஆண்களாலும், பிற மட்டத்து ஆண்களாலும் ஒடுக்கப்படுவதும் அடிமைப்படுத்தப்படுவதும் இயல்பாகிப் போன ஒன்றாய் உள்ளது. மார்கின் "கத்தியின்றி ரத்தமின்றி" நாவல் தலித் பெண்ணியத்தை எங்ஙனம் படம் பிடித்துக் காட்டுகிறது என்பதை எடுத்துரைக்கிறது இக்கட்டுரை.

## தலித் பெண்ணியம்

சமுதாயத்தில் ஒடுக்கப்பட்ட ஒரு பிரிவினரான பெண்களின் விடுதலைச் சித்தாந்தம், பெண்ணியத்தின் பரந்துபட்ட வரையறையாக சமூகத்தில் வேலைத் தளத்திலும். குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்குமுறை, சுரண்டல் பற்றிய பெண்களின் உணர்வு நிலைகளும் இந்நிலை மாறுவதற்குப் பெண்களும் ஆண்களும் எடுக்கும் உணர்வுப் பூர்வமான நடவடிக்கைகளும் பெண்ணியத்தின் பரந்து பட்ட வன்முறையாகக் கொள்ளலாம் என்பார் முனைவர் தேவதத்தா. ஆணாதிக்கச் சமூகத்தில் ஆண்கள் பெண்களை ஆள்வது என்பது பாலியல் ரீதியான, இயற்கையான அமைந்த பிறப்புரிமை என்ற அடிப்படை தளத்தில் இயங்கும் அனைத்துப் பிரிவுகளிலும் ஆண்களின் கை ஓங்கியுள்ளது. பெண்களை ஆண்கள் அடக்குவது அடிமை கொள்வது ஒருவகை அதிகாரமெனில் பிறிதொருவகை அதிகாரத்தில் வலிய ஆண்கள் தம் கீழுள்ள ஆண்களை ஆள்கின்றனர். இவ் அதிகாரத்தின் இறுதிப்பிடியில் இருப்பவர்கள் தலித் பெண்கள். இவர்கள் இருமடங்கு அடக்கப்பட்டவர்கள். பொருளாதாரச் சுரண்டல் ஆணாதிக்க ஒடுக்குமுறை இவற்றால் அடக்கப்படுவதுடன் சாதி அடக்கு முறைக்கும் உட்படுத்தப்படும் தலித் பெண்கள் மூன்றாவதாக தம் குல ஆண்களால் மேலும் நசுக்கப்படுகின்றனர்.

தலித் பெண் சமூத்தின் பிற பெண்களைப் போல சுரண்டலுக்கு உள்ளானாலும் தன் கணவனைச் சார்ந்திராது தானே உழைத்துத் தன்

குடும்பத்தை, குழந்தைகளைப் பேணும் நிலையில் உள்ளாள். எனினும் அது அவளுக்குக் கட்டாயமாக்கப்படுகிறது. எரி பொருள், தண்ணீர், உணவு ஆகியவற்றுக்காக உழைப்பதும் அவள் தான். உழைத்தாலும் தாழ்வாகவே பார்க்கப்படுகிறாள். அவள் வருமானத்தில் அவளுக்கு முழு உரிமை இல்லை. கணவனாலேயே அளப்படுகிறாள்.

தலித் பெண்ணியம் என்பதைப் பிறபெண்ணியக் கோட்பாடுகளோடு எளிதாக எழுதிவிட முடியாது. சுருக்கிக் கூறவும் முடியாது. ஒரு தலித் பெண், பெண் என்பதால் ஆணினத்தாலும், தலித் என்பதால் ஆதிக்கச் சாதியினராலும் கூலிவேலை செய்வதால் பண்ணையாளர்களாலும் ஒடுக்கப்படுகிறாள். ஒரே நேரத்தில் இவை அனைத்தும் எதிராகப் போராடுவதுடன் ஒட்டுமொத்தமாக தலித் சமுதாய முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ள அனைத்துக் கூறுகளையும் அகற்றுதல், மீறுதல், உடைத்தல் என்பதே தலித் பெண்ணியத்தின் நோக்கமாகும். இயற்கையோடு இணைந்து வாழ்தல், அனைத்து உயிர்களையும் எதிர்காலச் சந்ததியினரை மனதில் கொண்டு பாதுகாத்தல், உற்பத்தியில் தொடர்ந்து ஈடுபடுதல், பகிர்தல் சுயமென்று இல்லாமல் இருத்தல், தனி உடைமை இல்லாதிருத்தல் போன்ற அனைத்து தகவல்களையும் உள்ளடக்கியதாகத் தான் தலித் பெண்ணியம் இங்கு இருக்கமுடியும் என்ற மோகன்லார்பீ அவர்களின் கருத்து இங்கு நினைவு கூறத்தக்கது.

தலித் பெண்ணியத்தின் முக்கிக் கூறுகள்

தலித் பெண்ணியத்தின் தம் சுதந்திரத்தையும், சுய மரியாதையையும் நிலை நாட்டிக்கொள்ள சரியான செயல் தளத்தைக் கட்டமைத்துக் கொள்ளுதல், கட்டாயமாகும். பெண்ணியச் சிந்தனையின் ஊடேயே பெண்களுக்கிடையே தலித் பெண்களுக்கான சமத்துவமின்மை நிலவுவதையும் அடையாளம் காட்டல் வேண்டும். பெண் என்ற நினைவுக்குள் தலித் பெண் ஒன்றிக்கப்படுவதே இதன் தலித் பெண்ணியத்தின் மையமாகிறது என்கிறார் அ.குணசேகரன்.

தலித் பெண்ணியம் சாதியம், பார்ப்பனீயம் ஆணாதிக்கம் ஆகியவற்றை எதிர்ப்பது, தலித் ஆணைத் தன் எதிரியாகக் கொள்வது உயர்சாதி ஆண் சமூகத்தையே இலக்காகக் கொள்வது தலித் பெண்களின் பிரச்சனைகளும் அனுபவங்களும் தலித் ஆண்களின் பிரச்சனைகளிலிருந்தும், அனுபவங்களிலிருந்தும் வேறு பட்டுள்ளதால் தான் தலித் பெண்ணியம் என்ற கருத்தாக்கமே உருவாயிற்று.

இவற்றுடன் தலித் பெண்கள், மேல்சாதிப் பெண்களிலிருந்த ஆணாதிக்கத்தின் பாதிப்பில் வேறுபட்டவர்கள் பொருளாதாரம் சமயச்சார்பு, கணவனை விட்டுப் பிரிந்து வாழ்தல், அறுத்துக்கட்டுதல், சாமியாடுதல் போன்றவற்றில் வித்தியாசப்படுவதைப் போலவே விதவைக்கோலம் பூணுதல் குழந்தைமணம், உடன்கட்டை ஏறுதல் போன்ற சாதியச் சடங்குகளைப்

பின்பற்றாத நிலையிலும் வேறுபடகின்றனர். இங்கு கற்பு கணவனின் மேலாதிக்கம் குடும்பச் சிறை போன்ற ஒழுக்க மதிப்பீடுகள் வலுவிழந்து தொடர் வாழ்வுக்கான போராட்டமே முதன்மை பெறுவதைக் காணமுடிகிறது. எனவே தலித் பெண் தனக்கென உள்ள பண்பாட்டுக் கூறுகளை உயர்த்திப் பிடித்து தன்னை அடையாளம் காட்டி நிலை நிறுத்திக் கொள்ள வேண்டும் அதற்கு உதவுவதே தலித் பெண்ணியம்.

மார்கின் கத்தியின்றி ரத்தமின்றி

மார்கு ஒரு கிறித்தவ தலித்தியப் படைப்பாளி தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளுக்காகக் கொதித்தெழுந்த தனது நேரடி அனுபவத்தின் வாயிலாக கத்தியின்றி - ரத்தமின்றி என்ற நாவலைப் படைக்கிறார். இந்நாவலின் மையப்பொருள் பெண்ணியம் அன்று தாழ்த்தப்பட்ட இனமக்களுக்கெதிராக இழைக்கப்படும் சமூகக் கொடுமைகளையும், மேல்ச் சாதியினரின் ஆணவப் போக்குக்களையுமே இவர் படம் பிடித்துக் காட்ட முற்படுகிறார். எனினும் நாவலின் கதை ஓட்டத்தில் தலித் பெண்களின் அலுவல்களைச் சுட்டுவதுடன் அவர்களது மன உணர்வுகளையும் இடையிடையே வெளிப்படுத்தகிறார். இந்நாவல் படைப்பாசிரியரின் மன உணர்வுகளை வெளிப்படுத்துவது சமூகம், குடும்பம், மதம், சாதி என்ற நிறுவனங்களும், ஆணாதிக்கமும் தலித் பெண்களின் ஆளுமையைச் சிதறடித்து பெண் பற்றிய கற்பிதங்களைப் பெண்களின் மனதில் படிய வைக்கின்ற நிலை இங்கு பேசப்படுகின்றது.

நாவலில் தலித் பெண்களின் நிலை:

தான் பெண்ணாக இருப்பதால் சமூகப் பண்பாட்டுத்தளங்களில் தனக்குச் சமஉரிமை இல்லாதிருப்பதைத் தலித் பெண் உணர்வதை இந்நாவல் வெளிப்படுத்தகிறது. முத்தம்மாளின் நடத்தை பற்றி ஊர் பொதுக்கூட்டம் கூடி பிரசிடெண்ட் அவுள் மீது குறை கூறி அவளுக்குத் தண்டனை வழங்குகிறார். இது பிரசிடெண்டின் திட்டமிட்ட சதி என்பது அனைத்தும் பெண்களுக்கும் தெரிந்த நிலையில் அதை வெளிப்படுத்த யாருக்கும் வாய்ப்பளிக்காது ஊர்க் கூட்டத்தில் முத்தம்மாளுக்கு மொட்டை அடித்து, அவள் தலையில் சாணியைக் கரைத்து ஊற்ற வேண்டுமென்று முடி வெடுக்கப்படுகிறது.

"சாமி அவள் இந்த மாதிரி கட்டி வச்சிருக்கீங்களே அவ இத்தன பேரையும் தாண்டி ஓடியா போயிறப் போறா. அவள் அவுத்துவுடுங்க சாமி.... சேலையை ஒழுங்கா கட்டிக் கிடட்டும்" - என்று கூட்டத்திலிருந்த வயதானப் பெண்மணி ஒருவர் குரல் கொடுக்கிறார். அதற்குப் பிரசிடெண்ட் "ஏய் கிழவி பேசாம இருக்கமாட்ட? எவனுக்கோ ஒருத்தனுக்கு முந்தானைய விரிக்கத் தெரிஞ்ச இவளுக்கு சேலை வேணுமாக்கும்" என்று கூறி அப்பெண்ணை அடக்குகிறார்.

முத்தம்மாவைப் பேசவிட்டிருந்தா உண்மை வெளியாகியிருக்கும் அவ வாய்த்திறந்து ஒண்ணும் சொல்ல வேண்டாம். என்று பிரசிடெண்டே

தடை விதிக்கிறார். எங்கே தான் மாட்டிக் கொளவோமோ என்ற அச்சம் அவருக்கு இது பெண்களின் உரிமையற்ற நிலையை எடுத்துக் காட்டுகிறது.

உழைக்கும் தலித் பெண்களால் தான் அவர்கள் குடும்பமே உயிர் வாழ்கிறது. ஆணுக்கு நிகரான உடலுழைப்பு, தணிவு, அஞ்சாமை, நியாயமான கர்வம் என்று இருபாலின குணங்களின் ஒருங்கிணைவைத் தலித் பெண்களிடம் காணமுடிகிறது.

மேல்சாதி ஆண்களால் தலித் பெண்கள் இழிவுபடுத்தப்படல்:

மேல்ச்சாதியைச் சார்ந்த பிரசிடெண்ட் அரிசன குல ஆண்களிடமே "இப்படிப்பட்ட தவறு செய்தவர்களுக்கு என்ன தண்டனையின்று நீயே சொல்லு" என்று கேட்கிறார். அதற்கு அவன் "சாணியைக் கரைச்சு மேலே ஊத்தணும், மொட்டை அடிக்கணும் பிறகு ஊரைச் சுற்றிவரச் செய்யணும்" என்று முத்தம்மாளின் உறவினரே கூறுகிறார். இல்லை கூறும்படி செய்யப்படுகிறார்.

"ஏண்டா பறக்கழுத! அப்படின்னா எங்க ஆண்கள்லேயும் கெட்டவங்க இருக்காங்கன்னா சொல்லுதே" என்ற பேச்சுக்கள் கட்டவிழ்க்கப்பட்ட மேல்ச்சாதியின் மேலாதிக்கப் போக்குக்குத் தக்க எடுத்துக் காட்டாய் அமைகிறது. இப்படிப்பட்ட ஆண்களிடையே தலித் பெண்களுக்கு எத்தகைய நியாயத்தை எதிர்பார்க்க முடியும்.

தன் சாதி ஆண்களின் கையாலாகத்தனம் மேல்சாதி அண்களின் அடக்குமுறை இந்த இரு கூர்முனைகளுக்குமிடையே முத்தம்மா பலிகடாவாக்கப்படுகிறாள். "தலித்தா இருக்கிறது ஒரு கஷ்டம். அதுலையும் தலித் பொம்பளயா இருக்கிறது பெரிய கஷ்டம் இன்னுஞ் சொல்லப் போனா வாக்கப்படாத தலித் பொம்பளையா தனியாளா ஜீவிக்கிறது ரொம்ப பெரிய கஷ்டம்மின்னு ஒணந்துகிட்டேன்" என்று பாமா தன்னுடைய சங்கதி என்னும் நாவில் பதிவு செய்யும் கருத்து இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

தன்னிலை உணரா அடிமை மனநிலை, நியதிகளையும் சடங்குகளையும் நம்பும் மனநிலை, தலைவிதி மனநிலை ஆணாதிக்கத்தால் மழுங்கடிக்கப்பட்ட சிந்திக்க இயலாத மனநிலைகள் தலித் பெண்களிடம் உருவாகக் காரணம் கல்வி அறிவற்றநிலையே. தலித் பெண்களின் தாழ்வு மனநிலை நீங்க அவர்களிடம் தன்னம்பிக்கை பெருக, தன் மான உணர்வுடன் குழுவாகச் செயல்பட தலித் பெண்களுக்குக் கல்வியில் அதிக வாய்ப்புகள் வழங்கப்பட வேண்டும் அவர்களிடம் சுய மரியாதையும், தன்னம்பிக்கையும் பெருக இதுவே சிறந்த வழியாகும்.

பயன்பட்ட நூல்கள்

அன்னி தாமஸ் - தமிழக மகளிரியல்
சுசீலா - பெண் இலக்கியம் வாசிப்பு
மோகன் லார்பிர் - தலித் பெண்ணியம்
தேவதத்தா - பெண்ணியக்கலைச் சொல்ல விளக்கக் கையேடு
பாண்டியன் ஐ.சு. - ஔவையின் உளவியல் பிராய்டு. லக்கானின் மன அசல்

# சிலுவைராஜ் சரித்திரம் - ராஜ் கௌதமன் பார்வையில் கிறித்தவம்

மு.குருபிரசாத்
முனைவர் பட்ட ஆய்வாளர்
கிறித்தவ இயல் துறை
ம.கா.பல்கலைக்கழகம், மதுரை-21.

**முன்னுரை:**

கலையாகட்டும், இலக்கியமாகட்டும், மொழியாகட்டும், அரசியலாகட்டும், மதமாகட்டும் இன்று எல்லாவற்றையும் மறுபரிசீலனையோடு ஒரு தலித் பார்வையிலிருந்து பார்க்கவேண்டிய அவசியம் தலித் படைப்பாளிகளுக்கு உண்டு. அவ்வகையில் கிறித்துவம் பற்றிய தலித் பார்வையை 'சிலுவைராஜ் சரித்திரம்' என்னும் தலித் தன் வரலாற்று புதினத்தில் திறனாய்வு பார்வையில் அணுகுகின்றார். அவருடைய இச்சமயம் பற்றிய கருத்தை இந்த நாவலை மட்டுமே எடுத்துக் கொண்டு ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**குழந்தைப் பருவ கண்ணோட்டம்:**

குழந்தை பருவம் முதல் தூய சவேரியார் கல்லூரியில் இளம் அறிவியல், முதுகலைத் தமிழ் படிப்பு வரை சிலுவையின் கல்விச் சூழல் கிறித்துவ சமய சார்ந்த கல்வி நிறுவனங்களிலேயே நடைபெறுகின்றது. அச் சூழலின் கிறித்துவ சமயத்தின் நம்பிக்கைகள், சமய கோட்பாடுகள் அனைத்தையும் ஆசிரியர் மறு வாசிப்புக்கு உட்படுத்துகின்றார். குழந்தை பருவத்தில் கிறித்துவ சமயத்தின் மீதான மதிப்பீடுகளை குறிப்பிடும் பொழுது கிறித்துவத்தின் நம்பிக்கைகள், புனிதம் ஆகியவை சிலுவையின் சிறு வயதிலேயே அவன் மனதில் ஆழமாக பதிவாகியிருந்தன. இந்த நம்பிக்கை, புனிதம் என்ற கட்டமைப்பினை யாராவது உடைக்கவோ, சிறுமைப்படுத்தவோ முனைந்தால் அவர்களை அவன் எதிர்க்கவும் தயங்கவில்லை என்பதனை நாவலில் குறிப்பிடுகின்றார் (பக்.35) இதற்குக் காரணம் சிலுவையின் வாழ்க்கைச் சூழல், கல்வி, விளையாட்டு அனைத்தும் சமயம் சார்ந்த அமைப்புகளிடையே சுழல்கிறது. சான்றாக சிலுவையின் அன்றாட நிகழ்வுகளில் காலையிலும் மாலையிலும் கோயிலில் நடைபெறும் செபத்திற்கு செல்ல வேண்டும் என்பது அவனது வழக்கமான கடமைகளில் ஒன்று. அங்கு நடைபெறும் பூசை, ஆசிர்வாதம், முதலான வழிபாடுகளில் தவறாமல் கலந்து கொள்ள வேண்டும். இல்லையெனில் ஞானப் பிரகாசம் வாத்தியாரிடம் தண்டனை நிச்சயம் உண்டு என்று குறிப்பிடும் ஆசிரியர் தண்டனைக்கு பயந்து சமயத்தோடு ஒரு ஒட்டுறவு இருந்தாலும் தனது தகப்பன், தாய், பாட்டி சுற்றத்தார் அனைவரும் கிறித்தவத்தில் மிகுந்த நம்பிக்கையும் விசுவாசமும் பெற்று காணப்பட்டனர் என்பதனை குறிப்பிடுகின்றார்.

வரலாற்று நிகழ்வு:

கிறித்துவம் தன்னுடைய மக்களை ஆதிக்க சாதியினரிடமிருந்து விடுவித்து அம் மக்களுக்கு முழு சுதந்திரம் அளித்து கிறித்து சமயம் என்பதனை ஒரு வரலாற்று நிகழ்வு மூலம் குறிப்பிடுகின்றார். கத்தோலிக்க சமயம் தமிழகத்தில் அறிமுகமான பதினாறாம் நூற்றாண்டில் பிராமணர், முதலியார் பிள்ளை, கவுண்டர், உடையார் போன்ற சாதியினர் தமிழக சமூக அமைப்பில் சமூக மேலாதிக்கம் செலுத்தும் சாதியினராக விளங்கினர். ஆங்காங்கேயுள்ள வளம் படைத்த சைவ வைணவக் கோயில்களும், நிலவுடமைகளும் இவர்களின் ஆதிக்கத்திற்குள்ளேயே இருந்தன. எண்ணிக்கையில் அதிகமான உடலுழைப்பை அடிப்படையாகக் கொண்ட பல்வேறு சாதிகள் இவர்களின் கட்டுப்பாட்டிற்குள் சிக்கியிருந்தனர். இசசூழலில் தலித் மக்கள் தங்களது செத்தப் பிணத்தைக் கூட நெசவு செய்யும் சாலியர்களைப் புதைக்கும் கிழக்கு சுடுகாட்டில் புதைக்கக் கூடாது என்று 1925 இல் தடை விதிக்கப்பட்ட போது சாதிக் கலவரம் வெடிக்கிறது. கலகம் செய்து நியாயத்தை நிலைநாட்டித் தனிக் கல்லறைப் பெறப் பறையர் சமூகத்தவர் கத்தோலிக்கராக மதம் மாறுகின்றனர் என்று கிறித்தவ மதத்திற்கு மாறிய நிகழ்வினை குறிப்பிடுகின்றார். சாதியத்தை எதிர்த்துப் போராடும் வடிவம் மதமாற்ற உரிமையைச் செயல்படுத்துவதில் வெளிப்படுகின்றது என்பதனை இதன் மூலம் வெளிப்படுத்தகின்றார். இதன்மூலம் கிறித்துவம் தங்களின் மூதாதையர்களுக்கு வாழ்வுரிமை பெற்று தந்த மதமாக இருந்தது என்பதனை வெளிப்படுத்தகின்றார்.

இந்த மதம் சமூக நீதியைக் கொண்டு வரும் என நம்புவது வீண், என்பதை உணர வேண்டும். அப்படியானதொரு பணி இசுலாம் மதத்திலோ, கிறித்துவ மதத்திலோ அல்லது புத்த மதத்திலோ செய்யப்படலாம். சமத்துவமின்மையும் தலித்துகளுக்கு அநீதி இழைப்பதும் இந்து மதத்தின் அங்கமாக உள்ளன என டாக்டர் அம்பேத்கார் 'தலித் மக்களுக்கு ஓர் எச்சரிக்கை' என்ற நூலில் குறிப்பிடுவது இங்கு நினைவு கூறத்தக்கது.

சிலுவையும் முரண்பாடுகளும்:

இவ்வாறு சமயத்தோடு ஒரு இறுக்கமான ஒரு உறவினை கொண்டிருந்த சிலுவை காலப்போக்கில் அதனுடன் ஒரு முரணபட்ட கருத்தினை ஏற்படுத்திக் கொள்கின்றான். அவ்வாறு முரண்பட்ட சில காரணங்களை குறிப்பிடுகின்றார். இயந்திரத்தனமான சடங்குகளையும் ஆராதனைகளையும் சிலுவையை பல கேள்விகளைக் கேட்க செய்கின்றது. சான்றாக புகைப்பிடித்தால் பாவம் என்று கூறிய பாதிரியாரிடமிருந்து சுருட்டு வாசனை வருவதைக் கண்டு அதிர்ச்சி அடைதல். மக்கள் பஞ்சத்தால் வாடிய நிலை வந்தபோது அவர்கள் பிழைப்பு தேடி கூலி வேலைக்கு செல்ல அதை கண்டு வெகுண்ட பாதிரியார், கோயிலுக்கு வராதவர்கள் அனைவரும் செத்துவிட்டார்கள் என்று சாவு மணியடிக்கும் பாதிரியாரின் செயலைக் கண்டும், தீய கனவு காணும் போது எதிரே திரு இருதய இயேசுநாதர் படம் இருந்தும் சாத்தானால் தான் சோதிக்கப்பட்டது போன்ற பல நிகழ்வுகள்

மதம் பற்றிய சிந்தனையை மறு ஆய்வு செய்ய தூண்டியத. இது தொடர்பாக எழும் சந்தேகங்களை சமய அருளார்களிடம் கேட்கும் போது அவர்களின் மழுப்பான பதில்கள் சிலுவையை சிந்திக்க வைத்தன.

கிறித்தவமும் சாதியமும்:

குழந்தை பருவம் முதல் சேவியர் வரைக்கும் தன்னை வளர்த்தது கிறித்தவம் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. ஆனால் வாழ்க்கையின் எதார்த்தத்தில் நுழையும் போது கிறித்துவத்தில் எவ்வாறு சாதியம் புரையோடி போய் இருப்பதை நாவலில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றார். "வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகளே" "விரியன் பாம்புக் குட்டிகளே" என்று புதிய ஏற்பாட்டில் எ்நாபக அருளப்பர் யூத குருமார்களைப் பார்த்துச் சத்தம் போட்ட வசனங்கள் சரிதாம்னு தோணும், படிக்கிற பசங்களை விட புரபசர்க மத்தியிலும், பெரியவங்க மத்தியிலும் தான் தாங்கள் தங்கள் சாதி ஒசந்ததுங்கிற உணர்வு ஜாஸ்தியா இருந்துச்சு தங்கள் சாதி பையன்கள் என்றால் ஒரு மாதிரிதான் கடவுளைப் போல சாதி சர்வ வல்லமை பொருந்தியதாகவும் நீக்கமற எல்லா இடங்களிலும் பரவியிருந்ததாகவும் தெரிய வந்தது. இதே சேவியர்ஸ் காலேஜில் சிலுவை ஒரு கிறித்தவ டெமோவாக வேலையில் சேர்ந்த பொழுது ரோமன் கத்தோலிக்க கிறித்தவத்தில் சாதியம் எத்தனை செல்வாக்குப் பெற்றுள்ளது என்பதை நேரிடையாகவே அவனால் உணர முடிந்தது. காலப்போக்கில் தமிழ் நாட்டில் ஒவ்வொரு பகுதியிலுமுள்ள ஆதிக் சாதியினர் கிறித்தவர்களாக மாறிய பின்னர் கிறித்துவம் ஆதிக்க உணர்வு கொண்டவர்களின் அதிகாரப் பீடமாக மாற்றமடைந்தது. அதன் வழிபாட்டுத் தலங்களில் கூட சாதிய மேலாண்மை மிக வெளிப்படையாக நடைமுறைப்படுத்தப்பட்டது. ஒடுக்கப்பட்டோருக்குத் தேவாலயங்களில் தனியாக ஒதுக்கீடும், சில இடங்களில் தனி தேவாலயங்களும் உருவாயின. சமய ஊழியர்கள் தேர்விலும், இவ்வேறுபாடு புகுந்தது. இதனால் தீண்டாமைக் கொடுமையிலிருந்து விடுபடும் வழிமுறையாக கிறித்தவத்தைத் தழுவிய தலித் மக்கள் இன்றுவரை "தலித் கிறித்தவர்கள்" என்ற முத்திரையுடன் வாழ்கிறார்கள்.

முடிவுரை:

இடதுசாரி அமைப்புகளில் தன்னை முழுமையாக ஈடுப்படுத்திக் கொண்ட பிறகு கிறித்துவத்தை திறனாய்வு செய்து பார்க்கின்றார். சமயம் என்ற அமைப்பு தனக்கு ஒரு தேவையற்ற அமைப்பு என்ற கருத்திற்கு வருகின்றனர்.

பயன்பட்ட நூல்கள்

1.கிறித்துவமும் - சாதியமும் - பெரா. ஆ.சிவ. சுப்புரமணியன்
2.கிறித்துவமும் தலித் மக்களும் - ம. அப்போலின் கிளாரட் ராஜ்.
3.தலித் மக்களுக்கு ஓர் எச்சரிக்கை - டாக்டர் அம்பேத்கார்.

# கைவினைக் கலைகளின் அடையாள கட்டமைப்பும் அடையாள அழிப்பும்

ம.இராசு
ஆய்வாளர்
நாட்டுப்புறவியல் துறை
ம.கா.பல்கலைக்கழகம்.

முன்னுரை:

"கைவினைக் கலைகளின் அடையாள கட்டமைப்பும் அடையாள அழிப்பும்" என்ற கட்டுரையில் நிலவுடமை சமூக அமைப்பில் கைவினைக் கலைகள் சாதி, சமய, வட்டார அடையாளங்களாகச் செயல்பட்ட முறை பற்றியும், இத்தகைய அடையாளங்கள் முதலாளித்துவ சமூகத்தில் அழிக்கப்பட்டு வரும் முறை பற்றியும், விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

நிலவுடமைச் சமூகத்தில் கைவினைக் கலைகள் கட்டமைக்கும் அடையாளம்

நிலவுடமைச் சமூகம் என்பது வேளாண்மை உற்பத்திச் சமூகம் ஆகும். இங்கு நிலம் உற்பத்திச் சாதனமாகும். உழைப்பாளர்களின் உழைப்பு உற்பத்திச் சக்தியாகிறது. உற்பத்திச் சாதனமாகிற நிலம் உடமையாளர்கள் அல்லது பண்ணையாளர்களிடம் சொந்தமாக இருந்தது. இவ்வுடைமையாளர்களின் நிலத்தில் தங்கள் உற்பத்திச் சக்தியைச் செலுத்தும் கூலித் தொழிலாளர்களாக இருந்தனர். இச்சமூகத்தில் கிராம அமைப்புகள் அதிகமாக இருந்தன. இந்தக் கிராம அமைப்பானது வேளாண்மைத் தொழில் மையமாக இருந்துகொண்டு, அந்தத் தொழிலில் ஈடுபடுகின்றவர்களுக்கு உற்பத்தி செய்பவர்களாக பிற பிரிவினர் இருந்தனர். வேளாண்மைத் தொழிலோடு தொடர்புடையதாக தச்சுத் தொழில், கொல்லுத் தொழில், தோல் தொழில், ஆடைத் தொழில் போன்றவைகள் இருந்தன. வேளாண்மைக்கு உதவியாக மற்ற தொழில்கள் இருந்தன. ஒவ்வொருத் தொழிலைச் செய்பவர்களும் கைவினைக் கலைஞர்களாக இருக்கின்றனர். குறிப்பாக -

| | |
|---|---|
| மண்பானை, மண்பொருட்கள் | - குயவர் (வேளார்) |
| கூடை முடைதல் தொழில் | - குறவர் |
| கயிர் திரித்தல் | - குறவர், டொம்பர் |
| கல்வேலை | - ஒட்டர் |
| மரவேலை | - தச்சர் |
| கோரைப் பாய் பின்னுதல் | - முஸ்லீம் |
| கொல்லுத் தொழில் | - தட்டர் (ஆசாரி) |
| தங்க வேலை | - பொற்கொல்லர்கள் |

போன்றவர்கள் தங்களது குலத் தொழிலைச் செய்து வருகின்றனர். வேளாண்மைத் தொழில் செய்பவர்களுக்கு உதவி செய்பவர்களாக தனித்தனியாகத் தொழிலைச் செய்து வந்தனர். ஒவ்வொரு தொழில்

செய்பவர்களும் அடையளப் கட்டமைக்கப்படுகிறது. குயவர். ஆசாரி, குறவர், ஒட்டர், டொம்பர், தட்டர் போன்றவர்கள் அடையாளப் படுத்தப்படுகிறார்கள். கைவினைக் கலைக்கும் - சாதிக்கும் தொடர்பு உண்டு. (கைவினைக் கலைகளின் வெளிப்பாடுகள் பெரும்பாலானவை சாதியமைப்பு சார்ந்தவையாக விளங்கின. கைவினைக் கலைகளைச் செய்யக் கூடியவர்களை சாதி அடையாளப் படுத்துவதாக உள்ளது.

நிலவுடமைச் சமூகத்தில் கைவினைக் கலைகளின் சமூகச் செயல்பாடும், அடையாள நிறுத்தமும்

நிலவுடமைச் சமூகத்தில் படைப்பவர்களின் அடையாளமாக கைவினைக் கலைகள் இருந்தன. செய்பவர்களின் அழகியல் ரசனை, தாங்களே வடிவம் செய்து இயற்கை மூலப்பொருட்களைப் பயன்படுத்தி உடல் உழைப்பு மூலம் கைவினைக் கலைகளைச் செய்தனர்.

குயவர் இனமக்கள் - மட்பாண்டப் பொருட்களையும், குறவர் இனமக்கள் வீட்டிற்குத் தேவையான கூடை வகைகளையும் தச்சு வேலை செய்யக்கூடிய ஆசாரி இனத்தவர்கள் - வேளாண்மைக் கருவிகளையும் - வீட்டு உபயோகப் பொருட்களையும் செய்தனர். வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களை உற்பத்தி செய்தார்கள். அதாவது தேவைக்கு ஏற்ப பொருட்களை உற்பத்தி செய்தார்கள்.

முன்பு கைவினைக் கலைஞர்கள் செய்த பொருட்களைப் பணம் பெறாமல், மற்றப் பொருட்களை மக்களிடமிருந்து பெற்று வந்தனர். சோளம், கம்பு, நெல் போன்றவற்றைப் பெற்று - தங்களது கைவினைப் பொருட்களை மக்களுக்குக் கொடுத்து வந்தனர். அதாவது பண்டமாற்று முறையில் விற்று வந்தனர். மேலும் தான் செய்த கைவினைப் பொருட்களை நேரடியாகச் சென்று சந்தையில் விற்றனர். இடைத்தரகர் என்ற நிலை இல்லாமல் நேரடியாகத் தாங்களே விலையை நிர்ணயித்து விற்பனை செய்தனர். கைவினைக் கலைஞர்கள் தங்களது வட்டார இனமக்களுக்குத் தொழில் செய்வதைச் சமூகக் கடமையாகக் கருதினார்கள்.

பயன்பாட்டுக் கைவினைப் பொருட்களைச் செய்து வந்தவர்கள் சடங்கு நிலையில் சில கைவினைப் பொருட்களைச் செய்தனர். திருவிழாக் காலங்களில் சடங்கிற்காகச் செய்யப்படும் ஐயனார் சிலை, அம்மன் சிலை, குதிரைகள், நேர்த்திக் கடன் பொம்மைகள் - அக்கினிச் சட்டி, ஆயிரங்கண் பானை, முளைப்பாரிச் சட்டி, பொங்கல் பானை, மண் கலயங்கள் போன்றவைகளையும் இறப்புச் சடங்கிற்காகக் கொள்ளிக் கலயம், சட்டிகள், போன்றவைகளும், திருமணச் சடங்கில் அரசாணிப் பானை - போன்றவற்றையும் குயவர் இனமக்கள் செய்து வருகின்றனர். இவ்வாறு சடங்குச் சூழலின் போது சில சடங்குப் பொருட்களை உற்பத்தி செய்கிறார்கள்.

சடங்கு சார்ந்த பொருட்களின் மீதான மக்களின் மதிப்பு உயர்வாகக் கருதப்படுகிறது. அந்தச் சடங்கு சார்ந்த கைவினைப் பொருட்களைப் புனிதமாக நினைத்து வணங்குவது, உடைந்து போகமால்

பாதுகாப்பது போன்றவை மக்களிடம் காணப்படுகின்றன. எனவே சடங்கு சார்ந்த கைவினைப் பொருட்களை ஒரு குறிப்பிட்ட சமயத்தில் கட்டாயம் பயன்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தின் காரணமாக உருவாக்கப்படுகின்றன. இதனால் இப்பொருட்களை இன்றும் கூட அதிகமாகச் செய்து வருகின்றனர்.

கைவினைக் கலைஞர்கள் பிற மக்களுடன் சடங்கியல் உறவு கொண்டிருந்தார்கள். கைவினைக் கலைஞர்களுக்கும் மற்ற மக்களுக்கும் இந்த சடங்கியல் உறவு நீடித்து வந்தது. இந்த சடங்கில் உறவில் தான் அடையாளம் நிலை நிறுத்தப்படுகிறது. கட்டமைக்கப்படுகிறது. தொடர்ந்து அடையாளம் உருவாக்கப்படுகிறது. நிலவுடமைச் சமூகத்தில் கைவினைக் கலைஞர்கள் தொடர்ந்து சடங்கின் மூலம் தங்களுடைய அடையாளத்தைக் கட்டமைத்துக் கொண்டு வருகிறார்கள்.

முதலாளித்துவ சமூகத்தில் கைவினைக் கலைகளும், அடையாள அழிப்பும்

நிலவுடமை சமூகத்திலிருந்த கைவினைக் கலைஞர்களின் உழைப்பு உடல் உழைப்பாகவும், மனித உழைப்பாகவும் இருந்தது. ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்னர் உடல் உழைப்பு அல்லது மனித உழைப்பானது இயந்திர உழைப்பாக மாறியது. அதாவது இயந்திரங்களைப் பயன்படுத்திப் பொருட்களைச் செய்தனர். இதனால் இயந்திர உழைப்பு பெருகியது. புதிய் உற்பத்தி முறை உருவானது. அதாவது முதலாளித்துவ உற்பத்தி முறை உருவானது. இந்த முதலாளித்துவ உற்பத்தி முறையில் இயந்திரங்களைப் பயன்படுத்தி அதிகப் பொருட்களை உற்பத்தி செய்தனர். (பிளாஸ்டிக், கண்ணாடி. சில்வர் பொருட்கள்). அதிகப் பொருட்களை உற்பத்தி செய்வதால் விற்பனைக்காக சந்தை என்ற ஒன்று உருவானது. உற்பத்தி செய்தவர் எங்கோ இருப்பர். அவருடைய உற்பத்தி பொருள் மட்டும் சந்தைக்கு வரும். இந்த முதலாளித்துவ உற்பத்தி முறையில் உற்பத்தியாளர் யார் என்றே தெரியாது. கைவினைக் கலைஞர்களிடமிருந்து இடைத்தரகர்கள் பொருட்களை வாங்கி மக்களிடம் விற்கின்றனர். இடைத்தரகர்களிடமிருந்து கடைக்காரர்களும் - கடைக்காரர்களிடமிருந்து மக்களும் வாங்குகின்றனர். உற்பத்தி செய்தவருக்கும் - பண்டத்திற்கும் - நேரடி உறவு இல்லை. இதனால் புதிய சந்தை முறை என்ற ஒன்று உருவாகுகிறது. (இந்த சந்தை முறையில் செய்த பொருட்கள் பற்றியும், அவற்றின் தரம், குணம் பற்றி எதுவும் கேட்க முடியாது. உற்பத்தி செய்பவனுக்கும் நுகர்வோனுக்கும் உள்ள தொடர்பு நேரடித் தொடர்பு இல்லாமல் போய்விட்டது.)

உடல் உழைப்பால் செய்த கைவினைப் பொருட்கள் எல்லாம் இன்று எந்திரங்கள் மூலம் செய்கின்றனர். (கைவினைக் கலைஞர்கள் skilled Labour களாக மாறினர் கலையில் இயந்திரம் புகுந்ததால் இயந்திரத்தின் மூலம் கைவினைப் பொருட்களை உற்பத்தி செய்தனர். இயந்திரத்தின் மூலம் பானை, பொம்மைகள், தட்டு முட்டுச் சாமான்கள் போன்றவற்றைச்

செய்தனர்.
உதாரணத்திற்கு மரவேலை எடுத்துக் கொண்டால் மரத்தினை அறுப்பது, கடைவது, வடிவம் செய்வது எல்லாமே இயந்திரம் தான். நிலவுடமைச் சமூகத்தில் மண்வேலை செய்யும் கலைஞர் தனது கையில் பானை, சிலை, பொம்மை போன்றவற்றைச் செய்தார். அவரது மனநிலைக்கு ஏற்ப அழகியல் உணர்வுடன் செய்தார். ஒவ்வொரு பொம்மையும் - ஒரு அழகியல் தன்மையுடன் இருக்கும். இயந்திரம் புகுந்த பிறகு அதே மண்வேலை செய்யும் கலைஞர் கை சக்கரத்திற்குப் பதிலாக மின்சார மோட்டாரை பயன்படுத்தினர். மின்சார மோட்டாரின் வேகத்தில் அதிக உற்பத்திப் பொருட்களை உற்பத்தி செய்கிறார்.

நிலவுடமைச் சமூகத்தில் மக்களுக்காகவும், மக்களின் நலனுக்காகவும், ஊர் நன்மைக்காகவும் சமூகத்திற்காகவும் - கைவினைக் கலைகளைச் செய்தனர். முதலாளித்துவ உற்பத்தி முறையில் இயந்திரங்களின் துணையால் அதிகப் பொருட்களை உருவாக்கினர். இந்த முதலாளித்துவ உற்பத்தி முறையில் கைவினைக் கலைஞர்கள் மக்களைச் சார்ந்தோ அல்லது கிராமத்தைச் சார்ந்தோ இருக்க வேண்டிய அவசியம் இல்லை. சந்தையில் என்ன தேவை இருக்கிறதோ - அப்பொருட்களை இயந்திரத்தின் மூலம் உற்பத்தி செய்கிறார்கள். எந்தப் பொருட்களை மக்கள் விரும்புகின்றனரோ - எந்தப் பொருள் அதிக வலைக்குப் போகிறதோ - அப்படிப்பட்ட பொருட்களை இயந்திரத்தின் மூலம் உற்பத்தி செய்யப்படுகின்றன.

இந்தச் சந்தை முறையில் கைவினைக் கலைஞருக்கும், மக்களுக்கும் நேரடித் தொடர்பு இல்லை. இதனால் மக்களுக்கும், கலைஞனுக்கும் - இடைவெளி உருவானது. முதலில் கைவினைக் கலைஞர்கள் தங்களது அடையாளத்தை இழந்தார். புதிய கைவினைக் கலைகள் உருவானது. புதிய உற்பத்தி முறை உருவானது. தங்களது கிராம மக்களுக்காக இவர்கள் செய்யாமல் வெளியூர், வெளிமாநிலம், வெளிநாட்டிற்காகச் செய்ய ஆரம்பித்தனர். இவ்வாறாக இவர்கள் புதிய வணிகக் கலைஞர்களான உருவாகினார்கள்.

முடிவுரை:

இவ்வாறக தனக்குள்ள அடையாளத்தை இழக்கிறது. அதாவது கைவினைக் கலைகள் தொடக்க காலத்தில் சாதி சார்ந்த நிலையாக இருந்தது. இப்போது யார் வேண்டுமானாலும் எந்தச் சாதியினர் வேண்டுமானாலும் செய்யலாம். சாதி முக்கியமில்லை. இவ்வாறாக கைவினைக் கலைகள் ஒரு பொது அடையாளமாக உருவாகிவருகிறது என்பதை அறியமுடிகிறது.

# நவீன கதைகளில் நபிகளின் வாழ்வியல் கோட்பாடுகள்

மீ.தொளலத் பேகம்

விரிவுரையாளர்

மு.சா.ச.வக்புவாரியக்கல்லூரி

மதுரை-20.

பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை கவிதை செய்யுளில் மட்டுமே இயங்க முடியும் என்ற கருத்து வலுவாக மேலோங்கி இருந்தது. பின்னர் வந்த புதுக்கவிதையாளர்களோ இக்கருத்தினை வலுவிழக்கச் செய்ததோடு கவிதை வசனத்திலும் இயங்க முடியும் என்பதை மெய்ப்பித்தனர். இதன் பயனாக மனித வாழ்க்கையின் பெரும்பகுதி புதுக்கவிதையின் பாடுபொருளாயின. "1970க்குப் பிறகு வந்த முற்போக்காளர்கள் நெடுங்கவிதை வடிவங்களை அமைத்தனர் என பாலா குறிப்பிடுகிறார். ஆனாலும் தனிம்னித வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகளையோ, கதைப்பாங்கான செய்திகளையோ புதுக்கவிதையில் நெடுங்கவிதையாகப் பாடும் வழக்கம் தொடக்ககால நவீனக் கவிதையாள்ரிடம் காணப்பெறவில்லை என்பதை புதுக்கவிதைப் பரப்பை ஆராய்சிறபோது அறிகிறோம். இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தான் தமிழில் இத்தகைய நெடுங்கவிதைத்தளம் நவீன கவிதைகளில் உருவாக்கப்பட்டது எனலாம். அவ்வகையில். "நவீன கதைகளில் நபிகளாரின் வாழ்க்கைக் கோட்பாடுகள்" அமைகிறது.

## நபிகளாரின் வாழ்வியல் கோட்பாடுகள்

நபிகளாரின் வாழ்வியல் கோட்பாட்டில் "நாயகம் ஒரு காவியம்" என்னும் பெயரில் மு.மேத்தாவும், "நாயகம் எங்கள் தாயகம்" என்னும் பெயரில் வலம்புரிஜானும், "அண்ணலே யாராஸு லுல்லாஹ்" என்ற பெயரில் அபுஉஹாஷிமா என்பவரும் இறைத்தூதல் முகம்மது நபி (ஸல்) அவர்களின் உத்தம வரலாற்றைக் காவியமாகக் கொண்டு நபிகளாரின் பிறப்பு பற்றியும், இளமைக்காலம் முதல் பிறருக்கு உதவி புரியும் பண்பு பற்றியும் சமயக்கருத்தகளிலும் இறைவழிபாட்டிலும் அதிக ஈடுபாடு உடைய காரணத்தால் தம் நாற்பதாவது வயதில் நபித்துவம் பெற்ற செய்தியும், அதன் பயனாக தம் வாழ்வின் பயனையும், தாம் நிறைவேற்ற வேண்டிய பணிகளையும் முழுமையாக உணர்ந்து கொண்டு தம் வாழ்வையும், வாக்கையும், அமைத்துர்க் கொண்டு புரிந்த செயல்களையும் நபிகள் வரலாற்றின் இறுதித்தூதராக அவதரித்த பெண்மயும், இஸ்லாம் சமயம் பூரணத்துவம் பெறுவதற்காக திருக்குர்ஆனை அல்லாவிடமிருந்து பெற்று மக்களுக்கு அறிவுறுத்திக் காட்டிய அற்புதப் பணிகள் ஆகியனவும் கூறப்படுகின்றது. அவருடைய ஒவ்வொரு அசைவும் மனித குலத்திற்கு வாழ்வியல் முன்மாதிரியாக இருந்த செயலைப் பற்றியும் இஸ்லாம் விளக்கிக் காட்டுவதை நவீனக் கவிஞர்கள் தம் கவிதைகளில் பதிவு செய்ததை பற்றி ஆராய்வோம்.

பெருமானாரின் வருகை

இஸ்லாமிய சமய வரலாற்றில் இறைததூதர்களாகிய நபிமார்கள் அரம்ப காலந்தொட்டே உலகின் பல்வேறான பாகங்களிலும் தோன்றியுள்ளனர். நபிமார்க்ளின் வரலாறு ஆதம் நபியின் காலம் முதல் பெருமனார் நபிகள் நாயகத்தின் காலம் வரையில் நீடித்துள்ளது.

"இறுதி நபியின்
வருகைக்காகவும்
ஒளிமிகு வாழ்வின்
உதயத்திற்காகவும்
காலம் அங்கே
கடுந்தவம் செய்தது"

இந்த நீண்ட வரலாற்றுப் பாதைக்குரிய இறுதி நபியாக இவ்வுலகில் அவதரித்து இஸ்லாம் சமயத்தைப் பூரணத்துவம் பெறும்படிச் செய்த சிறப்பைப் பெற்றவர் பெருமானார் முகம்மது நபிகள் நாயகம் ஆவார். ஏனைய நபிமார்களுக்கு இல்லாத இரு சிறப்புத் தகுதிகள் நாயகத்துக்கு உண்டு.

1.நபிகள் வரலாற்றின் இறுதித்தூதராக அவதரித்த பெருமை.

2.இஸ்லாம் சமயத்தைப் பூரணத்துவம் பெறுவதற்குத் தகுதியுடையதாக்கிய புர்கான் (திருக்குர்ஆன்) வேதத்தை எல்லாம் வல்ல அல்லா"விடமிருந்து பெற்று இவ்வுலக மக்களுக்கு அறிவுறுத்திக்காட்டி மிகப்பெரும் பணியை நிறைவுடையதாக்கிய பெருமை.

எனவே நாயகம் அவர்களை "நபிகள் நாயகம்" என இஸ்லாமிய சமய வரலாறு குறிப்பிடுகிறது. இஸ்லாம் சமய வரலாறு நபிகள் நாயகத்தின் வாழ்க்கை வரலாற்றை மையமிட்டதாகவே அமைந்துள்ளது.

பெருமானாரின் பிறப்பு

நாயகம் அவர்கள் கி.பி.571 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 22 ஆம் தேதி (ரபியுல் அவ்வல் பிறை 12 இல்) திங்கள் கிழமை காலை பிறந்தார். இதனை,

"வெளிச்சத்திற்கு
விலாசம் கிடைத்தது
மதங்கள் விழுந்தன
மார்க்கம் எழுந்தது"

என்று வலம்புரிஜானும்,

"இறைவன்
அகிலத்திற்கே ஓர்
அருட்கொடையாக
சாந்த நபியை
"ஜக்காத் வழங்கினான்"

என்று மு.மேத்தாவும்,

"வானுறை வேந்தன் வளமுடன் வாழ்த்த
வானவர்கூட்டம் வாழ்த்திசை முழங்க

அறநெறி வாழ்ந்தோர் அகங்கள் குளிர
புண்ணியம் ஒன்றே பொற்பெனக் கொண்ட
பூமான்நபிகள் பூமியின் பிறந்தார்.

என்று கவிஞர் அபூஉ"ஹஷிமாவும் கூறுகின்றார்.

அபூ"ஹஷிமா அவர்களும், கவிஞர் வலம்புரிஜானும் கூறுவதிலிருந்து தன் குழந்தைகளைவிட தன் மகனான முகம்மது மீது கொண்ட மிகுந்த அன்பு வெளிப்படுகிறது.

பெருமானாரின் இளமைக்காலம்

பெருமானார் இளமைக்காலம் முதல் பிறருக்கு உதவிபுரியும் பண்பு உடையவராக விளங்கினார். இப்பண்பின் காரணமாகத் தம் 16 வது வயதில் "ஹில்ஃபுல்ஃபுரூல்" என்னும் செவை மன்றத்தை மற்ற இளைஞர்களுடன் சேர்ந்து ஏற்படுத்திப் பொதுமக்களுக்குத் தொண்டு புரியத் தொடங்கினார். நபிகள் பெருமனார் அவர்களின் வாழ்வில் ஏற்பட்ட முறையான முதல் சமூகத்தொண்டு இது எனக் கூறலாம். இளமைக் காலம் முதலே வணிகத்தில் ஈடுபாடு கொண்டிருந்தவர் பெருமானார்.

பெருமானாரின் திருமண வாழ்க்கை

பெருமானார் நான்கு பெண்களை மணந்தார். அவர்களில் கதீஜா முதல் மனைவி. இரண்டாவது மனைவி அயிஷா. பெருமானார் அவர்களின் 24வது வயதில் இவரது வியாபாரத் திறமையை அறிந்து மக்காவில் "தாஉறிரா" என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றிருந்த கதீஜா பிராட்டியார் நபிகள் நாயகம் அவர்களைத் தம் செயலாளராக நியமித்துக் கொண்டார்.

"முகம்மது -
வாணிகத்தலைமையை
ஏற்கச் சென்றனர்...
கதீஜா பெருமாட்டியின்
வாழ்க்கைத் தலைமையே
வழங்கப்பட்டது"

இத்தருணத்தில் ஓராண்டு கழிந்தவுடன் அப்போது 40 வயதில் விதவையாக இருந்த கதீஜா பிராட்டியாரைத் தம் 26 வது வயதில் நபிகள் நாயகம் அவர்கள் மணம் புரிந்து, காசிம், அப்துல்லா என்ற இரு அண்மக்களையும், ஜைனப், குகையா, உம்மு., குல்தூம், பாத்திமா என்னும் நான்கு பெண் மக்களையும் பெற்றார். ஆண்மக்கள் இருவரும் இளமையிலேயே மறைந்தனர். இதன் காரணமாக கதீஜா நாயகி 8 வயது அடிமைச் சிறுவனைப் பெருமானின் பணிவிடைக்காக ஒப்படைத்தார். ஆனால் பெருமானார் அந்தச் சிறுவனுக்கு முழு உரிமையும் அளித்துத் தம்முடைய மகனைப் போல் வளர்த்த வந்தார். இவ்வாறாகப் பெருமானாரின் இளமைக்கால வாழ்க்கை கழிந்தது.

பெருமானாரின் மக்காநகர் வாழ்க்கையும் அற்புதமும்

நபிகள் மக்காநகர் மக்களின் சமய வாழ்வில் புரையோடிருந்த

மூடநம்பிக்கைகளை அகற்றப் பெரும் முயற்சி மேற்கொண்டார். "ஏக இறைவனாகிய அல்லாஹ்வை மட்டும் வணங்க வேண்டும். அவனுக்கு இணை கற்பிக்கலாகாது. நான் அவனால் நியமனம் செய்யப்பட்ட தூதுவராவேன் எனது வார்த்தைகளை நீங்கள் நம்பினால் இருவுலகிலும் ஈடேற்றம் பெறுவீர்கள். புறக்கணித்தல் பெரும் இழப்புக்கு ஆளாவீர்கள்.2 என்ற பிரச்சாரத்தைத் தொடங்கினார் நபிகள் நாயகம்.

இதன் பயனாக நாட்கள் செல்லச் செல்ல மக்கா நகரத்து மக்களிடம் நபி பெருமானாருக்கு எதிர்ப்பு எழுந்தது. இந்த எதிர்ப்பு குறைஷி மக்களுக்குத் தலைவனாக அபுஜ"ல் என்பவன் விளங்கினான். அதேசமயம் இவர்களில் பலர் நபி பிரானின் அணியில் இணைந்தும் இருந்தனர்.

"கூடியவர் நெஞ்சமெல்லாம் மெல்ல மெல்ல
இறைத்தூதர் சுமைத்தேடி ஓடும். அன்னர்
எங்கே? எங்கே? என்று கண்கள் தேடும்.

என்று மேத்தா கூறுகின்றார். மக்காநகரக் குறைஷிகள் இழைத்த கொடுமைக்கு ஆளான நபிபிரான் மக்காவிலிருந்து 73 மைல் தொலைவில் உள்ள தாயிப் நகருக்குச் சென்று இஸ்லாத்தைப் போதிக்கக் கருதினார். அங்கு அவர்தம் பெரியதந்தை அப்பாஸ் இருந்தார். ஆதலால் தம் வளர்ப்பு மகன் சையதுடன் தாயப் நகருக்குப் புறப்பட்டார். ஆனால் அங்கும் அவருக்கு வரவேற்பில்லை. முகம்மது ஒரு பைத்தியம்3 எனக் கூறி சிறுவர் முதல் பெரியோர் வரை கல்லடித்து அவரைத் துரத்தினர்.

தாயிபிலிருந்து மூன்றுகல் வரை ஓடி மக்காவாசி ஒருவரின் திராட்சைத் தோட்டத்தில் நுழைந்தார். சிலநாள் அங்கிருந்து தம் பிரச்சாரத்தை மேற்கொண்டு பின் மக்காவிற்குத் திரும்பினார். அதனால் மக்கா குறைஷிகள் ஒன்று கூடி அவரைப் பிடித்து சிறையில் அடைக்க வேண்டும் அல்லது கொல்ல வேண்டும் என்று துணிந்தனர். ஆனால் அந்த இரவு நபிபிரான் அபுபக்கருடன் யத்ரிப் நகருக்குப் புறப்பட்டார். மக்காவிலிருந்து மூன்றுமைல் தொலைவிலுள்ள தௌர் என்னும் மலைப்பொதும்பை வந்தடைந்தார். மூன்று நாட்கள் வரை அங்கு தங்கி இருந்துவிட்டுப் பின் யத்ரிபுக்குப் புறப்பட்டார். அப்பொழுது அவருக்கு பின்னால்யாரோ பின் தொடர்ந்து வரவது தெரிந்தது. சுராகா என்பவர் குதிரை ஏறி வந்து நபிபிரானைக் கொல்ல வில்லில் நான் ஏற்றிக் கொண்டிருப்பது தெரிந்தது. நபி இறைவனிடம் இருகை ஏந்தினார். அவ்வளவில் சுராகா தம் குதிரையிலிருந்து தூக்கி எறியப்பட்டார். பின் மீண்டும் தாவிக் குதிரையில் அமர்ந்தார். அப்போது குதிரையின் பின்கால் இரண்டும் மண் தரையில் ஆழமாகப் பதிந்து கொள்ள கராகா மனம் திருந்தி நபியிடம் மன்னிப்புக் கேட்டு ஓலமிட்டான். நபிபிரானும் அபுபக்கரும் கராகாவை மன்னித்தருளினர் என்ற செய்தியும் இவர்களுடைய கவிதைகள் மூலம் வெளிப்படுகிறது.

பெருமானாரின் மதினா நகர்வாழ்க்கையும் படையெடுப்பும்

நபி பெருமானாரின் மதினா வாழ்க்கை இஸ்லாம் சமய எழுச்சிக்கு அடிக்கல் நாட்டியது எனலாம். மதினா நகர முஸ்லீம்களின் சொத்துக்களில்

பெரும்பாலானவை பேரிச்சம் பழத்தோட்டங்களாக இருந்தன. மக்கா நகரத்து முஸ்லீம்கள் குறைஷி மக்களால் துரத்தப்பட்டு மதினா நகருக்கு அகதிகளாக வந்து சேர்ந்தனர். நபிபிரான் அவர்களை வரவேற்றார். மதினா நகர மக்கள் அவர்களுக்குத் தங்கள் தோட்டங்களைப் பிரித்துக் கொடுத்து ஆதரித்தனர்.

பெருமானார் மதினா நகர் வாழ்வின் பெரும்பகுதி போர்ச் செய்திகளுடன் தொடர்புடைய விதத்தில் அமைந்திருந்தது. இப்போர்கள் அனைத்து இஸ்லாமிய சமய நெறிக்கேற்ப மேற்கொள்ளப்பட்ட தற்காப்புப் போர்களாகவே விளங்கின. இப்போர்கள் பற்றிய சில செய்திகளை அறியும்போது பெருமனார் தம் வாழ்வில் எதிர்கொண்ட இன்னல்களையும் பணியையும் முழுமையாக அறிந்து கொள்ள முடிகிறது.

"பத்ரு போர்க்களம்
ஓர் அதிசயமான வயல்
அங்கே ஓர்
அறுவடைக்குப் பிறகுதான்
பயிர் செழித்தது
மார்க்கப்பயிர்"

என்று கவிஞர் மேத்தாவும்

"விளையும் கதிர்களை
அழிக்க வந்த பதர்களை
இறைவன்
களையெடுக்க
விவசாயக்களம்"

என்று வரும் பாடல் அடிகள் நபிகள் பெருமானார் மக்காவிலும் மதினாவிலும் இருந்தமையை எடுத்துரைக்கின்றன.

முடிவுரை

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் புகழ்பாடும் அரும்பெரும் பொக்கிஷங்கள் எத்தனையோ மொழிகளில், எத்தனையோ அறிஞர் பெருமக்களால் வார்க்கப்பட்டுள்ளன. தமிழிலும் அதேபோல் வந்துள்ளன. வந்த வண்ணம் உள்ளன. அவற்றுள் கவிஞர்களின் இத்தொகுப்புகள் ஒரு தனியிடத்தைப் பெறும் என்றால் அது உயர்வு நவிற்சியாகாது. அன்னாரின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் நிலையில் நபிகள் நாயகத்தின் வாழ்க்கைச் செய்திகளைத் தொகுத்து நிரல்படுத்தி வரலாறாகத் தராமல் காவியமாக வார்த்திருப்பது ஆசிரியர்களின் படைப்புத் திறனுக்குச் சான்றாகும்.

பார்வை நூல்கள்

1.இஸ்லாமும் தமிழும் ப.11 - மு.அப்துல்கரீம்.
2.இஸ்லாம் வரலாறும் தத்துவமும் ப.48, பி.மு.அஜ்மல்கான்.
3.மேலது, ப.49.
4.மேலது, ப.50.
5.மேலது., ப.47.

# சூரியகாந்தனின் கிழக்கு வானம் புதினம் ஓர் ஆய்வு

வ.திருஞான பழனியம்மாள்
தமிழ் விரிவுரையாளா
காளியம்மாள் கல்வியியல் கல்லூரி
திருமாநிலையூர், கரூர்.

## முன்னுரை

இலக்கியம் வாழ்க்கையின் பிரதிபலிப்பு ஆகும். ஒரு நாட்டின் வளர்ச்சிக்கும் மாற்றத்திற்கும் காரணமானவற்றுள் இலக்கியம் சிறப்பிடம் பெறுகிறது. புதினம் ஒன்றுதான் மற்ற படைப்பிலக்கியங்களைக் காட்டிலும் வாழ்க்கையின் அனைத்துக் கூறுகளையும் முழுமையாகப் பார்க்கிறது. தமிழ் இலக்கிய உலகில் புதினம் இலக்கியங்கள் நடைமுறை வாழ்க்கையைப் படம் பிடிக்கும் காலக் கண்ணாடிகளாகத் திகழ்கின்றன. புதினம் சமூகத்தைச் சீர்திருத்தும் நோக்கிலேயே பெரும்பான்மை படைப்பாளர்களால் எழுதப் பெறுகிறது. அவ்வாறு திறம்பட எழுதுவோர்களுள் சூர்யகாந்தனும் ஒருவர். கொங்கு மண்ணின் மணத்தை எழுத்து மூலம் தரும் இன்றைய எழுத்தாளர்களில் சூர்யகாந்தனே முதன்மையானவர் எனலாம். "சூர்யகாந்தனின் கிழக்கு வானம் புதினம் ஓர் ஆய்வு" என்னும் தலைப்பில் இக்கட்டுரையை ஆராய்வோம்.

## கதைக்களம்:

இந்நாவல் கொங்குச் சீமையில் தென்மேற்கில் அமைந்துள்ள குளத்துப் பாளையத்தைக் கதைக்களமாகக் கொண்டுள்ளது. "கிழக்கு வானம்" புதினத்தை வாசிக்கும் போது குளத்துப் பாளையமும் அதனைச் சுற்றியுள்ள இடங்களும் நம் கண் எதிரே நின்று நாமே எங்கு எல்லாம் சுற்றி வந்தது போல் ஓர் அனுபவம் உண்டாகிறது. ஊருக்குத் தென்புறமாய் தார் ரோடு ஒன்று கிழக்கு நோக்கில் குனியமுத்தூருக்குச் செல்கிறது. அந்த ரோடு ஆலோ பிளாக் இறக்கத்தில் பாலக்காடு மெயின் ரோட்டைத் தொட்டு தெற்கே போனால் மதுக்கரைக்கும் வழியாய் இருந்தது (கி.வா.ப.:3)

மலையடிவாரக் காட்டில் இருந்து வடக்கு நோக்கிப் பார்த்தால் குனியமுத்தூர் வழியாக பாலக்காடு ரோட்டில் செல்லும் வாகனங்களில் லைட் வெளிச்சம் மதுக்கரை வரையிலும் பொட்டுப் பொட்டாகத் தோன்றி மறைவது தெரியும். (கி.வா.ப.16) எனக் குளத்துப் பாளையத்தையும் அதன் சுற்று வட்டாரத்தையும் புதினம் சுற்றி வருவதோடு குளத்துப் பாளையம் நகர்மயமாக மாறி வருவதையும் எடுத்துக்காட்டுகிறது. அத்தோடு அருகே இருக்கும் கோவைப் புதூரின் வளர்ச்சியும் விரிவாகக் காட்டப்படுகிறது.

## தலைப்புப் பொருத்தம்:

மாந்தர்களின் பெயரைவிட கூடுதலான கவனமும் சிந்தனையும் புதினத்திற்குப் பெயர் வைப்பதில் படைப்பாளி எடுத்துக் கொள்கிறான்.

இப்புதினத்தில் சுப்பையன் என்ற மாந்தரின் விடியல் புலனாகிறது. கிழக்கில் உதிக்கும் சூரியனைப் போன்று புதினத்தில் வரும் சுப்பையனும் தன் நிலையில் என்றும் மாறாமல் இருக்கிறான். அவன் தன் வாழ்க்கையில் அடைந்த துன்பங்கள், அவனது குழந்தைகளின் எதிர்காலத்தைப் பற்றிச் சிந்திக்கத் தூண்டுகோலாய் இருந்தன. கிழக்கு வானம் என்பது குறியீட்டுப் பெயர். அதில் சுப்பையன் தன்பிள்ளைகளின் எதிர்காலத்தை வளமாக்க வேண்டும் என்று சிந்திக்கும் கருத்து உதயமாகிறது. கிழக்கு வானத்தின் விளிம்பில் அவன் காலூன்றி அந்தச் செஞ்சிவப்பின் ஈரத்தில் தோய்ந்து வளரும் பயிராகி அதில் விளையும் கதிராகி, உழைக்கும் குலப் பிரதிநிதியாக வெளிவரவிருக்கின்றான்" என்று ஆசிரியர் கூறுவது புதினத்துக்குப் பெயர் வைத்ததன் நோக்கத்தை வெளிப்படுத்துகிறது.

புதின மாந்தர்களின் பெயர்:

தமிழ்ப் புதினங்களில் வருகின்ற மாந்தர்களுக்குப் பெயரிடுதல், பெற்ற பிள்ளைகளுக்குப் பெயர் வைத்தலினும் கடினமானது. புதின மாந்தர் பொய்கள் இடத்துக்கும் இனத்துக்கும் காலத்துக்கும் பொருந்திய பெயராக அமைவது தலையாய பண்பு இதற்கும் மேலாகக் கதை மாந்தர்களின் பெயர் அவர் பண்பைக் காட்டுவதாக அமைதல் இன்றியமையாதது.

இப்புதினத்தில் வரும் மாந்தர்கள் கிராமவாசிகளாக இருப்பதால் அதற்கேற்றாற்போல் ஆசிரியர் பெயரிட்டுள்ளார். இதில் வரும் சுப்பைய்யன் குடும்ப ஒற்றுமைக்காகப் போராடுகிறான். சுப்பையன் என்பது ஆறுமுகம் பெருமானைக் குறிக்கும் பெயராகும். முருகன் அனைவரையும் காப்பது போல் சுப்பையனும் தன் குடும்பத்தார் அனைவரையும் காப்பாற்றுபவனாகக் கதையில் படைக்கப் பட்டுள்ளான்.

இக்கதையில் வரும் மாசய்யன் தூய உள்ளம் கொண்டவன். குற்றமற்ற நெஞ்சினன் என்பதைச் சொற்களால் வெளிப்படுத்தாது மாந்தர் தம் பெயரில் வெளிப்படுத்துகிறார் ஆசிரியர். கொங்கு நாட்டுக்குரிய வீரண்ண கவுண்டர் என்ற பெயர் இங்கு இடம் பெறுகிறது. நாகம் பிறரது உயிரைக் குடிக்கும் இயல்புடையது. அதுபோல நச்சுச் சொற்களால் பிறரது உள்ளத்தைச் சீண்டுபவளுக்கு நாகரத்தினம் என்று பெயரிட்டுள்ளார் ஆசிரியர். குடும்ப ஒற்றுமையைக் குலைத்து குடும்பத்துப் பெரியோர்களின் உயிரையே குடிப்பதற்கு வடிகாலாக இருந்தவள் இந்த நாகரத்தினம். முருகம்மாள், நமச்சிவாயம், செல்வராசு, சரோஜினி, காளியப்பன், கருப்பண்ணன், ஆறுமுகம் போன்ற பெயர்கள் தமிழகம் முழுமையும் காணக்கிடக்கின்றன.

மாந்தர்களின் பண்பு நலன்கள்

சுப்பையன் தன் பெற்றோரிடமும் அண்ணன் தம்பி இருவர் மேலும் மிகுந்த பற்றுடையவன் என்பதனைச் சொத்து பாகப்பிரிவினை செய்யும்

பொழுது தன் பாகமாக வந்த நிலப்பகுதியைத் தன் தந்தை பெயரிலேயே இருக்கட்டும். "இப்பொழுது தனக்கு வேண்டாம்" என்று சொல்வதன் மூலம் பெற்றோர்களை இருக்கும் காலம் வரையிலும், தன்னுடன் வைத்துப் பராமரிப்பதன் மூலமும் தெரிந்து கொள்ள முடிகிறது. சுப்பையன் மனைவி கண்ணாத்தாளும் அவனைப் போலவே நல்ல பண்புகளைக் கொண்ட குணவதியாக விளங்குகிறாள். தன் கணவனுக்கு நல்ல மனைவியாகவும் மாமனார், மாமியார் மதித்துப் போற்றும் பண்புகளையும் பெற்று விளங்குகிறாள்.

இவர்களும் நேர்மாறான பண்புக் கொண்ட சுயநலவாதியாக விளங்குபவர்கள் மூத்த மகனான நமச்சிவாயமும் அவன் மனைவி நாகரத்தினமும், இவர்கள் இருவருமே சேர்ந்து திட்டமிட்டு குடும்பச் சொத்து முழுவதையும் தம்பிகள் இருவரையும் ஏமாற்றித் தங்களுக்குரியதான ஆக்கிக் கொண்டார்கள். இளையவன் செல்வராசு படித்தவனாக இருந்தாலும் விரைவில் நிறைய சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசையினால் பெரியண்ணன் நமச்சிவாயத்தின் பேச்சில் மயங்கி ஏமாளியாகிறான்.

"சாதிகள் இல்லையடி பாப்பா
குலத்தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்"

என்ற பாரதியின் கருத்தை ஏற்றுக்கொண்ட ஆசிரியர் செல்வராசு, சரோஜினி ஆகியோருக்குக் கலப்புத் திருமணம் செய்து வைக்கிறார்.

தொழில் பற்று:

"சுப்பையன் தங்கள் குலத்தொழிலான ஆடு மேய்க்கும் தொழிலில் மிகுந்த பற்று உடையவனாக விளங்கினான். இதனை சிறுவனாய் இருந்த போதிருந்தே சுப்பையன் தனது அய்யன்காரனோடு ஆடுகளை மேய்க்கப் போகும் போது அக்கறையோடு சேர்ந்து கொண்டு காடு கரைகளுக்குப் போய் வருவான். "எவங்கிட்டேயும் போயி கையைக் கட்டி நிக்க வேண்டியதில்லை. நாமுண்டு வேலையுண்டு இந்த ஆடுகளைக் கருத்தா கவுனிச்சி மேய்ச்சினாப் போதும் இதுக உன்ன மேலுக்குக் கொண்டாந்திடும்டா" என மாசய்யன் இந்த மகனின் மனதில் போட்டு வைத்து தன் போக்கில் வேர் பிடித்து வளர்ந்து விட்டது. அந்த அடிவாரக் காடுகள் வரையிலும் கூட சுப்பையன் தன்னுடைய அய்யனோடு ஆடுகளை மேய்ச்சலுக்கு ஓட்டிக்கொண்டு திரிந்து இருக்கிறான். எல்லா இடங்களுமே அவன் கால்களும் அத்துபடி, "கண் கட்டிக்காட்டுல கொண்டு போய் விட்டாக் கூட வழி மாறாம வந்து சேர்ந்திருவான்" என்பார். மாசய்யன் ஆடுகளின் பின்னால் காலாற நடந்து திரிவதில் அவனுக்கும் களிப்பாகவே இருந்தது என்று சுப்பையன் குலத்தொழில் மீது கொண்ட பற்றினை ஆசிரியர் கூறியுள்ளார். ஒரு சில ஆடுகளைக் கொண்டு தொழிலை ஆரம்பித்த சுப்பையன் காலப்போக்கில் நூறு ஆடுகளுக்குச் சொந்தக்காரனாகிறான்.

பழக்க வழக்கங்கள் :

மனித சமுதாயம் நடைமுறையில், வாழ்க்கையில் செயல்படும் துறைகள் பழக்க வழக்கங்கள் எனப்படும். மக்களின் பழக்கவழக்கங்கள் நம்பிக்கைகளாக வெளிப்பட்டுள்ளன.

".......அந்தச் சாமி மட்டும் நல்ல மொறையிலெ வெள்ளைப் பூ குடுத்துச்சினா அப்புறம் அதுக்கு மேலானது எதுமேயில்லேன்று நெகாரிச்சுச் செய்யலாம்" நினைத்த காரியம் நிறைவேற அனுமதி வேண்டும் பொருட்டு அவரவர் குலத் தெய்வக் கோயிலுக்குச் சென்று பூ கேட்பது வழக்கம். அவ்வகையில் சுப்பைய்யனுக்குத் திருமணம் நடைபெற வேண்டியதாய் முருகம்மாள் வேண்டுவதை மக்களின் நம்பிக்கையை வெளிப்படுத்துவதாக இது அமைந்துள்ளது.

நம்பிக்கைகள் :

இறைவனை வேண்டுவதாலும் பூசை செய்வதாலும் படையல் போடுவதாலும் தாம் செய்யும் தொழில் சிறப்படைந்து வளர்ச்சி பெற்று வருவதாக நாட்டுப்புற மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர். சாராய வியாபாரம் செய்பவர்கள் கூட இந்நம்பிக்கையில் இருந்து மாறுபட்டவர்கள் அல்லர் என்பதை,

"வருசத்திக் கொருக்கா முனியப்பனுக்குச்
சேவல் அறுத்து பொங்கல் வெச்சு படையல்
போட்டுக் கும்புட்டுட்டு கருக்கடையா இதெச்
செய்யங்காட்டி ஏதோ பழுதில்லாம வண்டி ஒடுது"

என்னும் வரிகள் மூலம் அறிய முடிகிறது. இங்கு வண்டி என்பது சாராயத் தொழிலைக் குறிக்கின்றது.

பழமொழிகள் :

மக்கள் தம் வாழ்க்கை அனுபவங்கள் மூலம் கண்டெடுத்த முத்துக்களே பழமொழிகளை இப்புதினத்தில் பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார். பழமொழியை மையமாக வைத்துக் கதையை நகர்த்திச் செல்வது பழமொழியின் மீது அவர் கொண்டுள்ள ஈடுபாட்டை உணர்த்துகிறது.

முடிவுரை:

சூர்யகாந்தன் தனது ஒவ்வொரு புதினத்திலும், தலைப்பிற்கும், மாந்தர்களுக்கும் பெயரிட்டுள்ளமை அவரது நுண்மான் நுழைபுலத்தைக் காட்டுகிறது. இப்புதினத்தில் கதைத்தலைவனின் தொழில்பற்று, வாழ்க்கைச் சிக்கல்கள் முதலியவற்றைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார். மக்களின் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், பழமொழிகள் முதலியவற்றை ஆசிரியர் சூர்யகாந்தன் தனக்கே உரிய தனிச்சிறப்பான எழுத்தாற்றல் மூலம் எடுத்துக் கூறியுள்ளார்.

# கவிஞர் நா.முத்துக் குமாரின் "அனா, ஆவன்னா"வில் காணப்படும் எதார்த்த நிகழ்வுகள்

முனைவர் மு.சாதிக் பாட்சா,
முதுநிலை விரிவுரையாளர்
முதுகலை மற்றும் தமிழாய்வுத்துறை
ஜமால் முகமது கல்லூரி
திருச்சிராப்பள்ளி - 620 020.

இன்றைய இலக்கியப் போக்குகள் பெரும்பான்மையான நடைமுறைச் சாத்தியக் கூறுகள் அடங்கியவையாகவே உள்ளன. நடைமுறை இல்லா இலக்கியக் கூறுகள் இன்றைக்கு மக்களால் விரும்பப்படுவதில்லை. சிறு வயது முதல் இன்றைய மனிதன் எதிர்கால வாழ்வியலை நோக்கியே நகர்த்தப்படுகிறான். இன்னும் சொல்லப் போனால் பொருளாதார வாழ்வியலே இன்றைய நடைமுறை நோக்கமாகக் கருதப்படுவதால் முழுக்க வாழ்வியல் இலக்கியங்களே மக்களால் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. இச்சூழலில் ஒரு திரைப்படக் கவிஞர், சமூகத்தை உற்று நோக்குபவர் ஆகிய உள்ளடைவுகளைக் கொண்ட கவிஞர் நா. முத்துக்குமார் எதார்த்தத்தை விட்டு விலகுவார் என நாம் எதிர்பார்த்திருக்க முடியாது. இந்த நம்முடைய எதிர்பார்ப்பை அவருடைய இக்கவிதைத் தொகுப்பில் நிறைவேற்றுகிறார். இவ் எதார்த்தப் போக்கை வெளியே கொண்டு வருவதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

## பெண் வளர்ச்சி

பொதுவாக சங்க காலந்தொட்டு ஆண்களுக்குச் சமமாக வளர்ந்துவிட்ட இன்றையக் கணினி காலம் வரை பெண்கள் குழந்தையாக இருப்பதும் பள்ளிக் கல்வியை முடித்து கண்விழித்துப் பார்க்கும்போது திருமணக்கோலம் காண்பதும் மிக விரைவில் நடைபெற்று முடிந்துவிடுகின்றன (உயர்கல்வி கற்கும் பெண்களின் வாழ்க்கை முறை இதிலிருந்து இன்றைக்கு மாறுபட்டுள்ளது). இரண்டு குழந்தைகளைப் பெற்றடுத்த பின்தான் மூத்த சகோதரன் திருமணம் நோக்கி, நகர்த்தப்படுதல் கண்கூடு. இதைத் தன்னிலையில் நின்று கவிஞர் வெளிக்கொணர்கிறார்.

கவிஞர் தன் நண்பர் வீட்டுக்குச் சென்ற போதெல்லாம் தன்னிடம் உரிமையுடன் பழகிய உடன்பிறவா சகோதரியை ஒரு நாள் பிரமிப்புடன் பார்க்கிறார். அப்பெண் திருமணக் கோலத்தில் நிற்கிறாள்.

"பின்பொரு நாள்
பார்த்துக் கொண்டிருக்கையில்
சட்டென்று வளர்ந்து
சாப்பிட்டு இலைகள் நோக்கி
உடைந்து எண்ணெய் வழியும்

அப்பளங்கள்
கூடைகளில் பயணிக்கும்
ஏதோ ஒரு கல்யாண மண்டபத்தில்
தாலி கட்டிக்கொண்டு
கண் கலங்கி விடைபெறுகிறார்கள்" (ப.8)

என எழுதுகிறார். அண்ணன் அண்ணன் என நம்மைச் சுற்றி வரும் நம்முடைய நண்பனின் தங்கைகள், திடீரென்று ஒரு நாள் நம்மைவிட்டு கூச்சத்தில் ஒதுங்கி நிற்பதைப் பார்ப்பது இன்றைய நடைமுறை வாழ்க்கை. அதற்கான காரணம் அந்தப் பெண்ணுக்கு வாழ்க்கைத் துணையாக ஒரு ஆண் வந்திருப்பது தான். இந்த எதார்த்தப் போக்கைக் கவிஞர் நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறார்.

தட்டச்சுப் பயிலகம் - அழுகை

பட்டப்படிப்பு முடித்த உடன் எல்லாருக்கும் இந்திய ஆட்சிப் பணித்தேர்வு (IAS) ஒரு முறை எழுதிப்பார்த்துவிடலாமே என்ற எண்ணம் வரும். அதுபோலவே பள்ளி இறுதித் தேர்வு (SSLC) முடிந்தவுடன் அனைவரும் தட்டச்சுப் பயிலகம் செல்வது வழக்கமாக இருந்து வந்தது. (இன்றைக்குக் கணனி வந்துவிட்ட பிறகு இந்நிலை இல்லை) ஆனால், இதற்கெல்லாம் ஒரு நோக்கு இருப்பதில்லை. வயதானதால் இங்கு வரவேண்டியச் சூழல். இதன்பிறகு பெண்கள் தட்[illegible] வேலைக்குச் செல்கிறார்களா? இல்லை. இந்நிலையை ஆசிரியர் வி[illegible]கிறார்.

தட்டச்சுப் பயின்ற பெண்ணின் பின்னாளை[illegible]யை ஆசிரியர்,

"பின்னாளில் / பெருமாள் கோயில் / கு[illegible]தில் அவள் / தற்கொலை செய்து கொண்டதாக / பார்த்தவர்கள் சொன்னார்கள் / படிக்கட்டில் அவள் குழந்தை / அழுது கொண்டே இருந்ததாம் / அப்புறமும் ஒரு [illegible]ாயத்ரி / அப்பா துணையுடன் வந்து / அண்ணன் துணையுடன் திரும்புவாள் / இப்போது அவள் / கண்காணா ஊரில் asdfgf-க்குப் பதில் / கோபக்காரக் கணவனுக்குப் பயந்து / வெங்காயம் வெட்டிக் கொண்டிருக்கலாம்" (ப.10) என விளக்குகிறார்.

சினிமா மோகமும் எதார்த்தமாற்றக் காதலும்

மனிதன் எத்தனையோ மோகங்களிலிருந்து விடுபட்டு வெளியே வந்து எதார்த்த வாழ்வில் பயணித்துக் கொண்டிருக்கிறான். ஆனால், அவனிடமிருந்து சினிமா என்ற மோகம் மட்டும் இன்னும் வெளியேறவில்லை. சினிமா என்பதை பொய் என மனம் எண்ணினாலும் உடல் ஏற்றுக்கொள்ள மறுக்கிறது. காரணம் வாழ்க்கை முழுவதும் நடைபெற வேண்டிய எண்ணங்கள் மூன்று மணி நேரத்தில் நடைபெற்று முடிந்து விடுவது, மனிதனுக்குள் ஒரு பிரம்மையை ஏற்படுத்தி அவனும் அவ்வாழ்வு நோக்கி நகர ஆசைப்பட்டு அதுவே அவன் வாழ்வில் பெரும் தோல்வியாகி விடுகிறது.

அடுத்தது காதல். 13 வயதைத் தொடுகின்ற எந்த மனிதருக்கும் காம இச்சை வந்து செல்லும். பல மனிதர் அது புரிந்து உள் உணர்வுகளைக் காலம் வரும்வரைக் காத்திருக்கச் சொல்கின்றனர். ஆனால், இன்னும்

காமமே காதல் என தவறாக எண்ணி, அது ஒன்றே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு திருமணம் முடிக்கும் போது, குடும்ப வாழ்வின் எதார்த்தங்கள் முன்வந்து நிற்கின்றன. ஆனால், அதை நிறைவேற்றிக் கொள்ள இயலாமல் பலர் தோல்வியடைகின்றனர்.

மேற்கண்ட நிலைகளைக் கவிஞர் கவிதையால் உருவகப்படுத்துகிறார்.

"... ... கோவில்பட்டி அருகில் / கருப்பு எம்.ஜி.ஆர் ஒருவர் / பேருந்துகளை நிறுத்தி / எம்.ஜி.ஆர் பிறந்த நாளுக்கு / மிட்டாய் கொடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்தார் / எல்லா எம்.ஜி.ஆர்களும் / எம்.ஜி.ஆராகவே / எனக்குள் வாழ்ந்து கொண்டிருக்க / கல்லூரியில் உடன் படித்த / எம். கோவிந்தராஜன் என்கிற / எம்.ஜி.ஆர் மட்டும் / நகரிலேயே / பேரழகி ஒருத்தியை / காதலித்துக் கரம் பிடித்த போது / ஒரே இரவில் / சாயல்கள் தொலைத்து / நம்பியார் ஆனதை / யாரிடம் சொல்ல? (ப.12) என்கிறார்.

சினிமாவும் காதலும் நம்முன் நிற்கும் மாயை, தவறென்று எதையும் சொல்லிவிட இயலாது. ஆனால், மிகச் சரியாகப் புரிந்து கொண்டு வாழ வேண்டும் என்கிறார் ஆசிரியர். புரிந்து கொள்ளும் போது சினிமாவும் காதலும் நம் கைகளுக்குள் அடங்கி விடும்.

பள்ளிக்கால கனவுகள்

உலகம் பற்றியும், தாய் தந்தையர் பற்றியும், உடன் பிறப்புப் பற்றியும், குடும்பம் பற்றியும், தன் எதிர்காலம் பற்றியும் பெருமை பேசித் திரியும் காலம் பள்ளிப்பருவம். ஏதுமறியா வயது எல்லா நிலைகளையும் தனக்குச் சார்பாக பார்க்கும் மனநிலையில் இருக்கும். அந்த எதார்த்த மனநிலையை கவிஞர், படிப்பவரெல்லாம் மனம் பதறுமளவுக்குக் கவிதையாக எடுத்துத் தருகிறார்.

இருப்பினும் அறிவியலைப் பேசுமிடத்தும், அலாவுதீனின் அற்புத விளக்கோடு உரையாடும் இடங்களும், சுதந்திர தின விழாவில் மாநில முதலமைச்சர் சந்திப்பும், லப் டப் என்ற ஓசை எழுப்பும் இதய விவரிப்பும் புரியாத புதிராய் அமைந்திருக்கிறது. இருண்மைக் கவிதைகளை அகற்றி எளிய நடையில் கவிதைகளை அமைத்தால் வாசகர் உலகம் விரியும் என்பது திண்ணம்.

# சாயாவன நாவலில் மரபு சார்ந்த வேளாண்மை நசிவும், சூழல் மாறுபாடும்

கு.பெரியசாமி
விரிவுரையாளர்
தமிழ்த்துறை
அரசு கலைக்கல்லூரி
கரூர்

இயற்கை இடர்பாடுகளை எதிர்கொண்டும் இயற்கையைத் தன்வசப்படுத்தியும், நடைபெறுகின்ற வாழ்க்கை வேளாண்மை, காலந்தோறும் மனிதனின் வாழ்க்கை முறைகள், பழக்க வழக்கம், பண்பாடு. உணவு முறைகள் என யாவும் மாற்றம் அடைந்து வருகின்றது. இதற்கு வேளாண்மையும் விதிவிலக்கல்ல என்பதனை படம்பிடித்துக் காட்டுகிறார் சா.கந்தசாமி. இதனை தனது என்னுரைப் பகுதியில் "வேளாண்மை என்பது ஒரு வாழ்க்கை. அது தொழில் அல்ல. காவிரி பாயும் தஞ்சை மாவட்டத்தில் வாழ்க்கையே வேளாண்மையாக இன்னும் இசைந்து போகிறது. பல நூற்றாண்டுகளாக இழையறாமல் இருந்து வந்த அந்த முறை சுமார் எழுபதாண்டுகளுக்கு முன்னால் தன் நிலையை இழக்க ஆரம்பித்தது (ப.3) என்கிறார். மாற்றம் என்றும் மானிடத்துவத்திற்கு வேளாண்மையும் ஆட்படுகிறது. அதன் விளைவுகளை பதிவு செய்யவும் தவறவில்லை ஆசிரியர்.

## மரபு சார்ந்த வேளாண்மையின் நசிவு

மரபு சார்ந்த வேளாண்மை இயற்கை சுழற்சி முறையில் நிகழ்த்தப்பட்டது. தங்களின் நிலத்தின் தன்மைக்கேற்ப பயிர்கள் விளைவிக்கப்பட்டன. குறைந்த அளவு நீரில் விளைகின்ற கம்பு, சோளம், கேழ்வரகு, குருதவாலி, திணை, சாமை, வரகு, காடைக்கள்ளி, பயறு வகைகள் முதலியன சங்க காலம் தொட்டு ஒரு குறிப்பிட்ட காலம் வரை பயிர் செய்யப்படுகின்றன. இது நம்பு மண்ணோட நில வறட்சியைத் தாங்கி விளையக்கூடிய மரபு வழியாக நவதானியங்கள் இவைகளுக்கு அதிக நீர் தேவையில்லை. செயற்கை உரங்கள் தேவையில்லை.

இவ்வகை உணவுப்பயிர்களின் பயன்பாடு கொஞ்சம் கொஞ்சமாக நலிவடைந்து இன்று அழிந்தே போகும் காலக்கட்டத்தில்தான் சா. கந்தசாமி தன் ஆழ் மனப்பதுவாக, எண்ணங்களின் வெளிப்பாடாக உணவுப் பயிர்கள் குறைந்த பணப்பயிர்கள் ஆதிக்கம் ஓங்கியது எனக் குறிப்பிடுகிறார். இவற்றின் விளைவாக சிறு விவசாயிகள் தங்களின் நிலங்களை இழந்து வருவாய் இல்லாமல் அவதிக்குள்ளாயினர். மேலும் சூழல் மாசுபடும் வணிக மய வேளாண்மையின் பயனாக ஏற்பட்டது.

## வேளாண் நாகரிகத்தின் விளைவு

பணப்பயிர்கள் வரவு என்பது நமது மரபு சார்ந்த பயிர்களின் அழிவுக்கு காரணமாயின. இத்தகைய பணப்பயிர்களின் விதைகளைக்

கொடுப்பதும் அவர்கள் மருந்து கொடுப்பதும் அவர்கள். மூலதனத்தைச் செலவழித்து உற்பத்தி செய்து கொடுக்கும் கூலிக்காரணமாக விவசாயிகள் மாற்றப்பட்டார்கள். அவர்கள் அனுபவிக்கும் சுதந்திரம் பறிக்கப்பட்டது. இவ்வாறு முதலாளிகளின் ஆதிக்கம் ஓங்கியது. இதனை நாவலில் "விதைக்கரும்பு தரேன், முன் பணம் தரேன், கூலியாளுங்க கொண்டாரப் பணம் வேணும்ன்னா அதுவும் தரேன். ஆனா நீங்க விடாம கரும்பு போடனும்" (ப.252) அது தான் தனக்கு வேண்டியதாக சிதம்பரம் வேம்புப் படையாச்சியிடம் கூறுவதன் மூலம் வேளாண்மைத் தொழிலும் "அடிமைத் தொழிலாக" மாற்றம் அடைந்துள்ளது என உணர முடிகிறது. இவைகள் பணப்பயிர்களின் ஆதிக்கத்தால் ஏற்பட்ட மாற்றம் ஆகும். நமது மரபு, பண்பாடு சார்ந்த தொன்மையான பயிர்களுக்கு அதிக நீர் தேவையில்லை. செயற்கை உரங்கள் தேவையில்லை. இவற்றிற்கு ஆமணக்கு, நொச்சி, கொளுச்சி, ஆவரை போன்ற செடிகளை வெட்டி வேளாண்மைக்குப் பயன்படுத்தும் பழமரபுக் கலாச்சாரம் சிதைவடைந்து வருகிறது, என்பதையும் 1969களில் எழுதப்பட்ட நாவலில் பதிவு செய்திருப்பது வியப்புக் குறியாக உள்ளது.

தமிழகத்தில் ஏற்பட்ட ஒட்டு மொத்த மாற்றத்திற்கும், இந்நாவல் சான்று பகிர்வதாக கருதலாம். செயற்கை உரங்கள் அதிகமாகப் பயன்படுத்தபடுகின்றன. இயற்கை உரங்கள் மறக்கப்பட்டு வருகின்றன என்பதாக "இங்கே ரொம்ப பேருங்க, தழை போடுகிறது இல்லை (ப.74) அதற்கு காரணமாக தழைபோட்ட குச்சி குத்து மின்னு நடவுக்கு ஆரும் இறங்க மாட்டாங்களாம்" (ப.74) என்று குறிப்பிடுவதன் மூலம் நீண்ட காலம் வழக்கத்தில் இருந்த முறை மாற்றம் அடைந்துள்ளது. நெடுங்காலமாக வழக்கத்தில் இருந்த ஒரு நிகழ்வு. வழக்கம். மரபுகள், இவை நாகரிகம், புதிய செயற்கை உரங்களின் வருகை மற்றும் புதிய வணிகமய தொழில் முறைகள், இயந்திரங்களின் வருகையும் மக்கள் தொகை பெருக்கமும் உணவு உற்பத்தியின் அதிகத் தேவையும் என்பர். இவற்றின் விளைவுகளாக இன்று நிலம், மண் இவைகள் பாழ்பட்டு விட்டன. என்பதனை,

"இறக்குமதி விதை
இறக்குமதி உரம்
தாய்மண் தொலை"
"இரசாயன உரம்
விசமானது
நிலம்" - என்னும்

இத்துளிப்பாக்கள் இன்றைய நிலத்தின் சிதைவுகளை எடுத்துரைக்கின்றன. இத்தகைய தன்மையை நாவலிலும் "ஆச்சி" என்ற பாத்திரம் உறுதிப்படுத்துகிறது.

நாகரிக வளர்ச்சி, தொழில் முன்னேற்றம் அடைந்து இந்நாளில் வேளாண் நிலங்கள் தொழிற்சாலைகளாகவும், வீடுகளாகவும், மாற்றம் அடைகின்றன. காரணம் மனித சந்ததி பெருகும் போதெல்லாம் எழில் மிக்கும் பூமியின் ஒரு பகுதி தவிர்க்க எண்ணாத விதத்தில் மாற்றி

அமைக்கப்படுகிறது. சாயாவனத்திலும் சிதம்பரத்தின் மூலமாக மனிதனால் அழிக்க முடியாது என்று எண்ணப்பட்ட ஆள்நுழைய முடியாத அடர்ந்த காடு (மக்களின் வாழ்வாதாரம்) அழிக்கப்பட்டு, ஆலை அமைக்கப்படுகிறது. மேலும் சாயாவனத்தில் இம்மாற்றத்தின் விளைவாகப் புதிய புதிய வீடுகள் ஏற்படுகின்றன.

தோட்டமாய் ஒரு காலத்தில் இருந்த தன் விளைநிலம் இன்று வெறிச்சோடிக் காணப்படுகிறது. அன்று "அவரை, பாகல், மிதிப்பாகல், கொம்புப் பாகல், கொத்தவரை, கத்தரி, மிளகாய், பரங்கி, புடலை, சடைசடையாயப் பூத்துக் காய்த்ததெல்லாம் ஒரு பழங்கனவாக"த் (ப.215) தோன்றுகிறது தேவருக்கு. இந்த மாற்றங்களை ஏற்படுத்திய மந்திரவாதி யார் என்று தேவர் எண்ணுகிறார். வேளாண்மைக்காகப் பயன்படுத்தபட்ட நிலங்கள் தற்பொழுது நகரங்களின் வளர்ச்சிக்காகப் பயன்படுத்துகின்றன. இதனால் வேளாண்மை உற்பத்தி பெரிதும் பாதிக்கப்படுகின்றது. வேளாண்மை நிலங்களிலுள்ள தாவரங்கள், மரங்கள் அழிக்கப்படுகின்றன.

விளைநிலங்களில் வீடுகள் அமைந்து வேளாண்மையும் தங்களையும் பிரித்து அறிய முடியாத வண்ணம் வாழ்ந்தனர். தோட்டங்களில் வீடுகள் அமைத்து வாழ்ந்த நிலை மாற்றமடைந்து வீட்டிற்குள் தோட்டம் அமைக்கும் நகரமயத்தன்மை ஓங்கி வளர்கிறது. பழையன கழிந்து, புதியன புகுதல் என்பது வளர்ச்சியாகும். ஆனால் ஒன்றின் வளர்ச்சி மற்றொன்றின் அழிவாக அமைதல் கூடாது. அழிவின் வழியாக ஏற்பட்டது. மக்களைப் பாதிப்புக்குள்ளாகும் வளர்ச்சி தேவையற்றது எனலாம். வேளாண்மைக்காகப் பயன்படுத்தும் நிலப்பரப்பு நகர மயமாக்குதலால் அபகரிக்கப்படுகிறது. மேலும் நீர்ப்பாசன வசதி நிறைந்த மிகக்குறைந்த இறுதிநிலை வேளாண்மை நிலங்கள் அழிக்கப்படுவதால் பல விளைவுகள் ஏற்படுகின்றன.

# ஆலாபனை - சமூகப் புறைதீர்க்கும் மருந்து

ஆ.பாண்டி
முனைவர் பட்ட ஆய்வாளர்
காந்தி கிராம கிராமியப் பல்கலைக்கழகம்
காந்திகிராமம்.

## முன்னுரை

மானுடம் தன்னை ஒரு வட்டத்துக்குள் நிரப்பிக் கொள்கிறது. மனிதத் தன்மை இங்கு வியாபகப்படாமல் (Pervasiveness) உள்ளடக்கம் இல்லாத உருவங்களாக வலம் வருகிறது. சமூகம் கட்டமைத்த பொருண்மைகள் எல்லாம், இருண்மை எதிர்வுகளாகவே பிரதிபலிக்கின்றன. இவைகள் அனைத்தும் ஒரு நேர்கோட்டுப் பாதையில் முடிவு பெறா. பல குறுக்கங்களால் ஆனவை. இவற்றின் எதிர்வுகள் சமூகத்திற்கு ஏதுவாக அமைய வேண்டும். அப்துல்ரகுமானின் ஆலாபனை கவிதைத் தொகுதியில், புறையோடிக் கிடக்கின்ற சமூகத்திற்கு தேவையான அருமருந்துகள் கவிதை வடிவில் மலர்ந்துள்ளன.

## பரிசுத்தப்படுத்துதல்

ஆணாதிக்கச் சிந்தனையின் தளத்தில் பெண்மையின் குரல்வளை நெறிக்கப்பட்டு அடிமையின் பிரதிகளாகவும், உற்பத்தி இயந்திரங்களின் தொழில் முறையாகவும், ஆண்கள் கட்டமைக்கும் எழுத்துச் சொல்லாடல்களின் மொழியாகவும் பெண்ணினத்தின் பயணங்கள் இருந்து வருகின்றது.

இரண்டாம் நிலை மாந்தர்களாக வரையறுத்த முதல் நிலை ஆதிக்கம், அவளின் உடல், பொருள் மற்றும் உணர்வுகளின் வெளிப்பாடுகளை உணரவில்லை. மாறாக முழுங்கடித்து நுகரும் சதைப்பிண்டங்களாகவே காட்சிப் படுத்தப்படுகின்றன. நுகர்வின் அடையாளங்களாகத் தெரிந்த அளவிற்கு, அவளின் பெண்மை அறியப்படாமலும், போற்றப்படாமலும் புறக்கணித்து வருவதற்கு ஒவ்வொரு ஆணும் தலைகுனிந்து குற்ற உணர்வுடன் அவள் முன் நிற்பதாக ஆசிரியர் சுட்டுகிறார். மேலும் பெண்மை என்னும் தெய்வீக நெருப்பால் ஆணினத்தை பரிசுத்தப்படுத்த வேண்டுமாய் ஆலாபனை செய்கின்றனர்.

அம்மா, சகோதரி, காதலி, மனைவி, மகள்,
வைப்பாட்டி, வேசி, என்று
எங்கள் விளையாட்டிற்கான பொம்மையாகவே
உன்னை ஆக்கினோம்
இதோ ! உன் முன்னால் குற்ற உணர்ச்சியுடன்
தலை குனிந்து நிற்கிறோம்
உன் பெண்மை என்ற
தெய்வீக நெருப்பால்

எங்களைப் பரிசுத்தப்படுத்துவாயாக (ப.10)

சுவடுகளைப் பதியுங்கள்

வாழ்க்கை அனுபவங்களின் கோவை. சமூகப் பயனின்றி வாழ்த்து மடிவதில், பிறப்பின் பயன் சிறப்பில்லை. அஃறிணை ஜீவன்கள் தம் பிறப்பின் பயனை மலரச் செய்து பின் மரணிக்கின்றன. மனித உருவம் தாங்கிய நீ பிறப்பின் பயனாக ஏதாவது ஒருவகையில் சுவடுகளைப் பதித்துச் செல், உனக்காக பூமி செய்த தியாகங்களின் எண்ணிக்கை அளவிட முடியுமா?

"இறக்கப் போகிறவனே! நில்
கணக்கை முடித்துவிட்டுப் போ
வாழ்க்கையெல்லாம் பற்று எழுதியவனே
உன் பங்குக்கு ஒரு வரவாவது
வைத்துவிட்டுப் போ" (ப.30)

இவ்வரிகள், தனிமனிதனின் சிந்தனையைத் தூண்டி, நன்மை விளைவிக்க வலியுறுத்துகின்றது.

வாழ்வைத் தொலைத்தவர்கள்

அவசரமான வாழ்வின் ஊடாக, வாழ்வைத் தொலைத்து நிற்கிறது. இன்றைய உலகம், வாழ்வு என்பது செல்வமும், அவை கட்டமைக்கும் வசதிகளுக்கும் அப்பாற்பட்டது. மாறாக வாழ்வு என்பது ஒவ்வொரு நாளும் நாம் தவறிய சம்பவங்களில்தான் பொதிந்து கிடக்கிறது.

உன் மனைவியின் கொலுசில்
உன் குழந்தையின் சிரிப்பில்
உன் அண்டை வீட்டுக்காரனின்
கை அசைப்பில்
தெருவில் போகின்ற அந்நியனின்
திரும்பிப் பார்த்தலில்
வாழ்க்கையின் சங்கீதம் ஒலிக்கிறது
நீயோ கேட்பது இல்லை. (ப.40)

என்பதனை, என்ற கவிதை வரிகளின் வழியே வெளிப்படுத்துகிறார்.

ஆறாவது அறிவு

"மக்கள் தாமே ஆறறிவு வுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" நூற்பா 577.

மன அறிவுடைய மனிதர்களே ஆறு அறிவுடையவர் என்கிறது தொல்காப்பியம் மரபியல், உலகில் வாழ்கின்ற ஒவ்வொரு உயிரினங்களில் மனித இனம் மட்டும் உயர் நிலையில் வைத்தே எண்ணப்படுகிறது. அதற்காக மனிதன் பெருமைப்பட்டுக் கொள்கிறான். ஆனால் எல்லா உயிரினங்களிலும் கீழான செயல்பாடுகளைச் செய்வதினால், அஃறிணை உயிரினங்களை விட கீழான நிலையில் இருக்கிறான் என்று மனிதனின் கீழ்நிலையை எடுத்துக் காட்டுகிறார்.

"உயிரினங்களில்
மனிதன் மட்டும்தான்

சக மனிதனைத்
தீண்டத் தகாதவன் என்றவன்
ஆறாவது அறிவு என்பது
மாறு கண்ணா?" (ப.49)

மனிதனாக மாற்றம்

உயிரினங்கள் தனது தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்கு ஏற்ப, இயற்கையின் அமைப்பு அமைந்துள்ளது. அவற்றின் வழியாகவே தமது வாழ்க்கையை அமைத்துக் கொள்கின்றன. ஆனால், மனித உலகம் - இயற்கையைச் சிதைத்து அவற்றினை தனக்கானதாக தகவமைத்துக் கொண்டு இயற்கை வாழ் உயிரினங்களை அழித்து வருகின்றது. விலங்கினங்கள் எவையும் மனிதனை மாற்றம் செய்யப்படவில்லை. ஆனால், மனிதன் விலங்கினங்களை தம் விருப்பம் போல் மாறச் செய்து அவைகளின், இயற்கைச் சுதந்திரத்தினைக் கெடுத்து உலக இயற்கைக்கு தீங்கு விளைவிக்கின்றான். இந்நிலையினை ஆசிரியர்,

"அன்றொரு நாள் பார்த்தேன்
மரத்தடியில்
கூண்டுக்குள்ளிலிருந்து
வெளியே நடந்து வந்த கிளி
ஒரு மனிதனுக்கு
வருங்காலத்தை
எடுத்துக் கொடுத்துவிட்டுக்
கூண்டுக்குள் சென்றது
மற்றொரு நாள் பார்த்தேன்
என் வீட்டு வாசலில்
ஒரு "பூம்பூம் மாட்டுக்காரன்
அவன் சொல்வதற்கெல்லாம்
அந்த மாடு தலையாட்டிக் கொண்டிருந்தது
மனிதனைப் போல" ப.110

என்ற கவிதை வரிகள் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

ஆதி மனிதனின் சிரிப்பு

காடுகளில் காட்டுமிராண்டிகளாய் திரிந்த மனிதன், இயற்கையை தன் ஆடைகளாகவும், தான் பயணப்படுகின்ற இடங்கள் அனைத்தையும் தமது வீடாகவும் கொண்டு சுதந்திரமாகப் பூமியில் உலா வந்தான். அவனுக்கான நிர்பந்தம் என்பது எதுவும் இல்லை. ஆனால் அவன் வழித் தோன்றல்களாகிய இன்றைய மனிதகுலம் எல்லா வித வசதிகளைப் பெற்றும், காயங்களை இரத்தம் வடிகின்ற இரணங்களாக மாற்றி மருந்து தேடி அலைகிறது. மனிதமனம் வஞ்சனை, பொறாமை, கோபம், விரோதம், காமம் போன்றவைகளுக்குக் கைதிகளாய் கட்டுண்டு கிடக்கிறது. இதனை,

"ஆசிரியர் கிண்டல் தொனியில்,

நீ குகை இருட்டில்
வசித்தாலும்
பிரகாசமாய் இருந்தாய்
நாமோ மின்சாரப் பிரகாசத்தில்
வசித்தாலும்
இருட்டாக இருக்கிறோம்
நீ காட்டில் விலங்குகளோடு
பயமில்லாமல் இருந்தாய்
நாமோ நாட்டில்
மனிதர்களுக்கு பயந்துகொண்டு
வாழ்கிறோம்" (ப.150)

என்ற கவிதை வரிகளில் சுட்டுகின்றர்.

அதிகாரக் குவியல்

பொருளாதாரமும், ஆதிக்கமும் ஒருதலைச் சார்பான தன்மையிலேயே குவிந்துள்ளது. அதிகாரத் தன்மையில் இருப்பவர்கள் தனக்குக் கீழானவர்களை நசுக்கியும், துன்பங்களுக்குள் ஆளாக்கியும் வருகின்றனர். இச்செயல்பாடுகள் அன்றைய நிலவுடைமைச் சமூகத்திலிருந்து இன்றைய உலகமயமாதல் காலம் வரை நிகழ்த்தப்படுகின்ற ஒன்றாகவே இருந்து வருகிறது.

முடிவுரை

அக, புறவய தாக்கங்களின் ஊடாக படைப்பு என்பது படைப்பாளனுக்குச் சாத்தியப்படுகிறது. இத்தகைய வெளிப்பாடுகளில் தான் நிதர்சனமாகக் கூறுகளைக் காண முடியும். இத்தகையக் கூறுகள்தான் சமுதாயப் புறைகளுக்கான அரு மருந்துகாளகவும் செயலாற்ற முடியும். அப்துல் ரகுமானின் ஆலாபனை-கவிதைத் தொகுதியிலும் அத்தகையக் கூறுகள் காணக்கிடைக்கின்றன. அவைகள் ஒற்றைப் பாதையில் தன்னை நிறுத்திக் கொள்ளாது, சமூகத்தின் பன்முகப் பாதைகளில் உள்ள புறைகளை வெளியில் எடுத்துக் காட்டி, அவைகளைச் சீர் செய்தும், கேள்விக்குட்படுத்தியும் அவற்றிற்கான பதிலை முன் மொழிந்தும், தன்னிலை அறியச் செய்தும், புறையோடிக் கிடக்கின்றன சமூகத்திற்கு நல் மருந்தாக கவிதை வரிகள் பயணப்படுகின்றன.

# காற்சிலம்போசையிலே" - இலக்கியப் போக்கு

முனைவர் திருமதி ச.பாரிஜாதம்
இணைப்பேராசிரியை, தமிழ்த்துறை
வே.வ.வன்னியப்பெருமாள் பெண்கள் கல்லூரி, விருதுநகர்.

முன்னுரை

மனித வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை கவிஞன் அப்படியே உணர்த்தாது தான் உணர்ந்தவாறு உணர்த்த முற்படுகிறான். அந்நிலையில் அவன் அதற்குக் கலை வடிவம் கொடுக்கின்றான். அதில் அவனுடைய அனுபவம், உணர்ச்சி, கற்பனை, கலையழகு முதலியவற்றைக் குழைத்துத் தருகின்றான். அதனால் அவனடைய படைப்பு ஏற்றமும் எழிலும் பெற்றுக் கற்பவர் உள்ளத்தைக் கவரும் திறனுடையதாகத் திகழ்கிறது. இவ்வகையில் இன்றைய முன்னணிக் கவிஞர்களுள் ஒருவரான பா.விஜய்யின் "காற்சிலம்போசையிலே" எனும் நூலின் இலக்கியப் போக்கினை ஆய்வதே இவ்வாயிவின் நோக்கமாகும்.

இலக்கயப் போக்கு:

இலக்கியப் போக்கு என்பது காலத்திற்கேற்ப மாறும் இயல்பினது. சங்க இலக்கியத்தின் சாயலினையோ, பக்தி இலக்கியத்தின் சாயலினையோ, காப்பிய இலக்கியத்தின் சாயலினையோ இன்று நாம் காணுதல் இயலாது. ஏனென்றால் இன்று புதிய பிறவியெடுத்திருப்பது புதுக்கவிதை. தன் உள்ளத்து உணர்வுகளை உள்ளபடியே சொல்வதற்கு வழிவகுத்துக் கொடுப்பது புதுக்கவிதை. எனவே இன்று மக்களிடையே புதுக்கவிதை பெரியதொரு வரவேற்பைப் பெற்றுள்ளது. இந்நிலையில் கவிஞன் பாடுபொருளிலும் பாடும் முறையிலும் பல்வேறு மாற்றங்களைச் செய்கின்றான். இம்முறையில் பா.விஜய்யின் நூலும் அமைந்துள்ளது.

சிலம்பினைப் பாடுபொருளாகக் கொண்டிருப்பினும் அதைப் புதுப்பித்து மெருகூட்டுவதுடன் சமுதாயத்தைச் சித்தரித்துக் காட்டுவதே அவர் தம் அடிப்படை நோக்கமாக அமைந்தள்ளது எனலாம். சிலம்பின் நடையோ வடிவமோ எதுவும் இந்நூலில் இடம்பெறவில்லை. நடையாலும், வடிவத்தாலும், புதிய மாற்றங்களாலும் இந்நூல் சிலம்பின் போக்கினின்றும் மாறி புதிய இலக்கியப் போக்கினைக் கொண்டுள்ளது. இவ்வாய்வு நடை, வடிவம், நிகழ்ச்சி மாற்றங்கள், புதிய படைப்புகள் என்னும் நான்கு நிலைகளில் ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

நடை:

"அரியனவும் உயர்ந்தனவுமாய் பொருள்களை, கருத்துக்களைக் கூற விழுமிய சொற்களையே பயன்படுத்த வேண்டும். புல்லிய சொற்களால் புலப்படுத்த இயலாது என்று அக்காலப் புலவர்கள் கருதினர். இதற்காகப் பெருமுயற்சி செய்து சொற்களை ஆராய்ந்து கவிதையில் பயன்படுத்தினர். இவ்வாறு உணர்ச்சிப் பெருக்கில் உதித்தெழும் சொற்களை அவ்வாறே

அமைக்காது அவற்றின் பொருத்தத்தையும், பொலிவையும் எண்ணியே அமைத்தனர்." ஆனால் இன்று சொல் புதிது. சுவை, புதிதாக இருந்தால் தான் சோதிமிக்க நவகவிதை படைக்க முடியும் என்ற பாரதியின் கவிதைச் செட்டத்தைப் புலவர்கள் கையாள ஆரம்பித்து விட்டனர். கண்ணகியின் தோற்றத்தை வெளிப்படுத்தும் கவிஞர் பா.விஜய்.

"கண்ணகி
கறுப்பு நிறத்திலொரு
அலைபாய்கிற
சாந்தக் கண்கள் - ஆனால்
காந்தக் கண்கள்!
பட்டுப்பூச்சி றெக்கையாய்
படபடக்கும் வெற்றிலைகள்
அவள் இமைகள்!" (பாகம் 1, ப.49)

என்று எளிமையான சொற்களால் மனத்தைச் சுண்டிப் பிடித்து இழுக்கும் வகையில் தன் நடையினை அமைத்துள்ளார்.

மேலும் யதார்த்தத்தைப் பயன்படுத்த ஆசிரியர் பயன்படுத்தும் நடையே தனிதான்.

திருமண வீடுகளில் ஏடுகள் வைத்து மொய் வசூலிக்கும் நிலையை,

"திருமணம் முடிந்ததும்
மொய் வசூலிக்கும்
இடத்தில் கூட்டம்
மொய்ப்பது மாதிரி
ஓர் இடத்தில் மட்டும்
உயர் தரக்கும்பல்" (பாகம் 1, ப.113)

என்று ஆயிரத்தெட்டு கழஞ்சு பொன் தரும், எவருக்கும் மாதவி என்பது கேட்டு கூடிய கூட்டத்தைச் சுட்டுமிடத்து வெளிப்படுத்துகிறார். இவ்வாறு எளிய சொற்களால் சுவைபடச் செய்தியினைச் சொல்லிச் சொல்கிறார். மேலும் சில இடங்களில் சபாஷ், ஜல், மோகனாஸ்திரம் போன்ற பிறமொழிச் சொற்களையும் கையாளுகிறார்.

வடிவம்:

கவிதைக்கு வடிவமாக விளங்குவது பா அமைப்பாகும். தன் உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதற்கேற்ற பாவினைப் பாவலன் பயன்படுத்துவது மரபு.

உணர்ச்சியை வெளப்படுத்தும் கவிதைக்கு, உணர்ச்சியை எளிதில், வெளிப்படுத்துவதற்குரிய வகையில் அதன் வடிவம் அமைதல் வேண்டும். முற்காலத்தில் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா ஆகியவற்றைப் பயன்படுத்தினர். ஆனால் இன்று எதனையும் அலங்காரமாகக் கூறுவதைவிட நேரடியாகக் கூறுவதையே வாசகர்கள் விரும்புகின்றனர். எனவே இன்றைய சூழலில் புதிய தேவைகளுக்கும் ரசனைகளுக்கும் ஏற்றவாறு இலக்கியங்களை மறுபடைப்புச் செய்ய வேண்டியது

படைப்பாளியின் கடமையாக உள்ளது. எனவே கவிஞர் பா.விஜய், வெண்பா, ஆசிரியப்பா, கொச்சகக் கலிப்பாவால் இயன்ற சிலப்பதிகாரத்தை புதுக்கவிதையாக மாற்றியுள்ளார். எனவே சிலம்பினைப் போன்று இந்நூலில் காண்டங்களோ, காதைகளோ கிடையாது. இது இரண்டு பாகமாகப் பிரிக்கப்பட்டுள்ளது. சமுதாயச் சிந்தனைகளை மனதில் கொண்டு அதற்கேற்ப தலைப்புக் கொடுத்துள்ளார். "உதடுகளால் ஒரு வேள்வி", "மதுவில் குளித்த காற்று", "தீப்பிடித்த வீணை" என்பன இதற்குச் சான்று.

புதுக்கவிதை வடிவில் இயன்ற இந்நூலின் படிம உத்தி சிறப்பிடம் பெறுகிறது. படிமம் என்பது சொற்களால் தீட்டப்படும் சொல்லோவியமாகும். தூளியில் கிடந்த மணிமேகலையைப் பார்த்து.

"தூளியில் கிடந்த
தூய நிலா
எதிர்காலத்
துறவு நிலா" (பாகம் 2, ப.15)

எனத் தூயநிலா, துறவு நிலா எனும் படிமச் சொற்கள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார்.

நிகழ்ச்சி மாற்றங்கள்

நிகழ்ச்சி மாற்றங்கள் என்னும் பொழுது, கவிஞன் சிலவற்றை மாற்றியும், சிலவற்றை விரித்தும், புதியன புகுத்தியும் தன் காப்பியத்தை அமைத்துள்ளார்.

சிலம்பில் வஞ்சிக் காண்டத்தில் சேரமன்னன், இளங்கோவடிகள், சாத்தனார் ஆகியோரிடம் குறவர்கள், கண்ணகி பற்றித் தெரிவித்ததாக உள்ளது. இதில் விவசாயி ஒருவன் மூலம் தெரிவித்ததாக உள்ளது. உழைப்பாளிக்கு ஏற்றம் கொடுக்கின்ற நிலையினைக் காணமுடிகிறது.

நாட்டியம் ஆடிய மாதவிக்குப் பரிசாகக் கிடைத்த மாலையை கூனி மூலம் விற்றுவருமாறு சித்ராபதி அனுப்புகிறாள். இந்நூலில் புகார் நகரத்து வணிகர் தலைவரான தண்டநாய்கர் மறுநாள் மாதவியின் இல்லம் சென்று தனக்குச் சொந்தமான கப்பலை சித்ராபதிக்கு அளிக்கிறார். அதன்பின் மாதவி நடனமாட அனுமதிக்கப்படுகிறாள். சோழமன்னன் கொடுத்த பரிசு போதாது எனத் தண்ட நாய்கர் கூறியதும் அவரது தவறான நோக்கினைப் புரிந்து கொண்ட மாதவி அவர் மீது காறி உமிழ்கிறாள். பின் சித்ராபதி அம்மாலையை அவள் தோழி வசந்தமாலை மூலம் விற்றுவருமாறு அனுப்புகிறாள். கோவலன் அதை வாங்குகிறான். மாதவியும் அவனை நேசிக்கிறாள். அவனுக்குப் பரிசுப் பொருள் வாங்க கடைவீதிக்குச் செல்கிறாள். அவமானப்பட்ட தண்டநாய்கர் அவளை வாலிப வியாபாரம் செய்வதாகக் கூறி தண்டிக்க முயற்சிக்கிறார். இது கேட்ட கோவலன் மாதவியை அவரிடமிருந்து விடுவித்து தன் யானையின் மீது ஏற்றி அவளது இல்லம் செல்கிறான்.

தண்டநாய்கர் என்னும் புதிய பாத்திரத்தைப் படைத்து ஆடவர் தம் மனதில் உள்ள வக்கிரப் பண்பை வெளிப்படுத்துவதுடன் மாதவி

எச்சூழ்நிலையிலும் ஒழுக்கம் சிதையாதவள் என்பதையும் வெளிப்படுத்துகிறாள்.

அடுத்து இந்திர விழா கொண்டாடப்படுவதற்கு முன்பே மணிமேகலை பிறந்துவிட்டதாக சிலம்பில் உள்ளது. ஆனால் இந்நூலில் பாவைக் கூத்து ஆடியதால் மாதவியின் மீது கோபம் கொண்ட கோவலனின் கோபம் தீர்ந்த பின் அவர்தம் கூடலால் மணிமேகலை பிறந்ததாக உள்ளது. இது போன்று பல மாற்றங்களை ஆசிரியர் செய்து தன் எண்ணப் போக்கை அதன் மூலம் வெளிப்படுத்துகிறார்.

புதிய படைப்புகள்:

வேனிலாற்றங்கரைக்கு இளங்கோவடிகளைச் சந்திக்கச் சென்றான் சேரமன்னன். அவன் முகத்தில் சோகம் கவ்வியிருந்தது. அது கண்ட அடிகள் காரணத்தை வனவ, சேர நாட்டில் இரண்டு மாதங்களாக மழையில்லாததே தன் சோகத்திற்குக் காரணம் என்றாள். இது கேட்ட இளங்கோவடிகள்,

"இரண்டு மாதங்களாய்
இறந்த மழை
இன்று பெய்யும்" (பாகம் 1, ப.23)

என மன்னனிடம் கூறி, கள்ளிக் குச்சிகளைப் பரப்பி அதன் மீது திருக்குறளை வைத்துத் தீ மூட்டினர். அங்கிருந்த அனைவரும் அதிர்ச்சியுற்றிருந்த நிலையில் அடிகளின் யுத்தி சாத்தனாருக்குப் புரிந்தது உடனே அவர்,

"தமிழ் சாகாது
தமிழ் சாகாது" (பாகம் 1, ப.34)

என ஆவேசத்துடன் கூறிய போது கள்ளிகள் எரிந்து திருக்குறள் தீப்பற்றும் முன் மழை கொட்டியது. இச்செய்தி சிலம்பில் இல்லை. இது கவிஞர் பா.விஜய்யின் தமிழ்ப்பற்றிற்கு ஓர் உரைகல்லாகும்.

இளங்கோவடிகள் கண்ணகியின் நிறம், குணம் குறித்து எதுவும் கூறினார் இலர். ஆனால் பா.விஜய்,

"கண்ணகி
கறுப்பு நிறத்திலொரு
நெருப்பு" (பாகம் 1, ப.49)

எனக் கூறியுள்ளார்.

முடிவுரை

இவ்வாறு கவிஞர் வாசகர்களின் மனம் கவரும் வகையில் சிலம்பைச் சின்ன சின்ன வார்த்தைகளால் சிறைப்படுத்தியிருக்கிறார். இது கவிதைக்கே ஒரு தனியழகைக் கொடுக்கிறது.

# "கவிஞர் மு.மேத்தாவின் கவிதைகளில் பெண்ணியச் சித்திரிப்பு"

பீ.லிடியா பிரியதர்சினி
பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை, செந்தமிழ்க்கல்லூரி
மதுரை.

**முன்னுரை**

இந்த / பூமி உருண்டையைப் / புரட்டி விடக்கூடிய / நெம்புகோல் கவிதையை / உங்களில் / யார் பாடப் போகின்றீர்கள்? என்று புதுக்கவிதையில் வினாத் தொடுத்தக் கவிஞர் மேத்தா. தமிழக் கவிதையுலகில் முழு மதியாய் காட்சி தருபவர். கண்ணீர்ப் பூக்கள் என்ற தன் முதல் கவிதைத் தொகுப்பை தந்து புதுக்கவிதைத் துறையில் தனக்கான இடத்தைத் தக்க வைத்துக் கொண்டவனர். கல்லூரி விரிவுரையாளராகப் பணியை மேற்கொண்டு தொடர்ந்து புதுக்கவிதையையும் எழுதி வந்தவர். தனது கவிதைகளில் சமுதாயச் சிந்தனை நிரம்ப இடம் பெறச் செய்தவர். கவிஞர் மு.மேத்தா சமுதாயத்தைப் புனையும்போது பெண்களுக்கானப் பிரச்சனைகளையும் மிகத் தெளிவாக பதிந்து வைத்துள்ளார். இவரது கவிதைகளில் பெண்ணியச் சித்தரிப்புப் பற்றி ஆராய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

**பெண்ணியம் - வரையறை:**

பெண்ணியம் எனும் கோட்பாடு நிரந்தரமானதாக இல்லை. "பெண்ணியம் என்ற கருத்தமைவு தனிக்கோட்பாடாக உருவான கால கட்டத்தில் இருந்து இன்று வரை பல்வேறு பார்வைகளையும் நடைமுறைகளையும் உள்ளடக்கிக் கொண்டுள்ளது. இப்பார்வைகள் வெவ்வேறு நாட்டுக் கலாச்சாரம் வரலாற்றுப் பின்னணி, அவ்வந்நாட்டுச் சமுதாயத்தில் பெண்கள் பெற்றுள்ள இடம், கல்வி, இன வர்க்க வேறுபாடுகள் போன்ற பலவற்றால் மாற்றம் அடைந்தள்ளன"[1] என்பர் இரா. காஞ்சனா. இந்த அடிப்படையில் பெண்ணியம் நாட்டுக்கு நாடு மாறுபட்டதாக அமைகின்றது. ஒரு நாட்டின் பெண்ணியக் கோட்பாட்டை மற்றொரு நாட்டின் இலக்கியங்களில் தேடிப்பார்க்க முடியாது. எனவேதான் இப்போதைய பெண்ணிய வரையறையாக "சமூகத்திலும் வேலைத்தளத்திலும், குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்குமுறை மற்றும் சுரண்டல் பற்றிய பெண்களின் உணர்வு, நிலைகளும், இந்நிலை மாறுவதற்குப் பெண்களும் ஆண்களும் எடுக்கும் உணர்வு பூர்வமான நடவடிக்கைகளும் - பெண்ணியத்தின் பரந்துபட்ட வரையறையாக இப்போதைய நிலையில் கொள்ளலாம் என்பார் தேவதத்தா."[2] இது போன்ற தன்மைகள் புதுக்கவிதையில் பெண்ணியமாகக் கருதப்படுகின்றன.

**கவிதையில் பெண்கள்**

மேத்தா தனது கவிதையில் பெண்களின் பிரச்சனைகளைக்

கூறுவதற்கு சிலப்பதிகாரக் கதையை பாடுபொருளாக எடுத்துக் கொள்கிறார். காற்சிலம்பால் நடைபெற்ற சிலப்பதிகாரக் கதையின் வாயிலாக சமுதாயத்தில் பெண்கள் படுகின்ற துன்பங்களைக் கவிஞர் கவிதை வாயிலாக எடுத்தாண்டுள்ளார்.

"ஒவ்வொரு பெண்ணும் சிலம்பை
உடைத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்
காலிலிருந்து அல்ல - கண்ணிலிருந்து"

- ஊர்வலம் - ப.23

இக்கவிதை மு.மேத்தாவின் பெண்ணியப் பார்வையைத் தெளிவாக்குகிறது. புதுக்கவிதைகள் பழைய கதைகளைத் தொன்மமாகக் கவிதையில் பயன்படுத்தும் தன்மை வாய்ந்தவர்கள். கவிஞர் மேத்தா சிலப்பதிகாரக் கதையை தொன்மமாகக் கொண்டு நடப்புச் சமுதாயப் பெண்களின் துயர்மீது புனைந்துள்ளார். பொதுவாக தொன்மம் "மக்களின் எண்ணங்களில் வளர்ந்து கவிதைகளில் கதையாயும் விதையாயும் வாழ்வு பெற்றது"[3] என்பர் கதிர்மகாதேவன். இங்கு கவிஞர் மேத்தாவின் கவிதைகளில் பெண்களின் அவல நிலையை வெளிக்காட்ட விதையாகத் தொன்மம் பயன்படுகின்றது.

"வேக வேகமாய்
எதிரே வந்த பேகன்
அவசர அவசரமாய்
போர்வையை எடுத்துத்
தன்
முகத்தைப்
போர்த்திக் கொண்டான்"

இக்கவிதை பெண்கள் வரதட்சணைக் கொடுமையினால் ஆண்களால் பாதிக்கப்படும் சூழ்நிலையை எடுத்துக் காட்டுகிறது. கவிஞர் முதிர் கன்னியர்களின் நிலைமையை பல கவிதைகளில் பாடியுள்ளார். அதே சமயம் பெண்கள் முதிர் கன்னிகளாவதற்கானக் காரணத்தைக் குறிப்பிடும்போது ஆண்கள் மணம் புரிவதற்கு வரதட்சனையை எதிர்பார்க்கின்றனர் எனும் சிந்தனையை மையமிட்டுக் கவிதையைப் படைத்துள்ளார். பெண்கள் விடுதலையும், சுதந்திரமும் அடைய வேண்டும் என்றால், ஆணின் இரக்கமும், விட்டுக் கொடுக்கும் மனமும் தேவை. விட்டுக்கொடுக்காமல், இரக்கப்படாமல் இருக்கும் ஆண்கள் வரதட்சனையை எதிர்பார்க்கிறான் என்பதை கவிதை எடுத்தாளுகின்றது.

பெண்ணியம் பெண் விடுதலை:

பெண்ணியம் பெண்கள் சுதந்திரம், விடுதலை எனும் கருத்துக்கள் அணிடம் இருந்து மட்டும் வாங்கப் படுவதல்ல, மாறாகப் பெண்கள் மீதான கொடுமை மற்றொரு பெண்ணால் இருந்தும் வருவதையும் தடுத்து விடுதலை அடைய வேண்டும். கவிஞர் மேத்தா பெண்கள் பேரணி நடத்துவதைக் கவிதையாக்கும் போது பெண்கள் பெண்களிடம் இருந்து சுதந்திரத்தை அடைய வேண்டும் என்பதாகக் கூறியுள்ளார்.

"பெண்களை
விடுதலை செய்ய
பெண்களிடமிருந்து"

(கனவுக்குதிரை ப.90)

இக்கவிதை மாமியார் - மருமகள் இருவருக்கும் இடையே நடைபெறும் போராட்டத்தை நினைவுபடுத்துவதாக அமைகின்றது. சமுதாயத்தில் புதிதாகத் திருமணம் புரிந்துள்ள பெண்களில் சிலர் மாமியார் நாத்தனார் போன்றவர்களால் துன்பத்தை அனுபவிப்பர். இந்த சூழ்நிலை மாறவேண்டும். எனவே பெண்களிடம் இருந்த பெண்கள் விடுதலை அடைய வேண்டும் எனும் விதமாகக் கவிதையை அமைத்துள்ளார்.

புகுந்த வீட்டில் வாழாத பெண்கள்

பெண்கள் சமுதாயத்தில் பல்வேறு விதமாகப் பாதிக்கப்படுகின்றனர். கணவன் வீட்டில் வாழச் சென்ற பெண். சில நாட்களில் வரதட்சணை கொடுமையினால் பிறந்த வீட்டில் தங்க நேரிடுகிறது. சில நேரங்களில் கணவனால் நியாய வாழ்க்கையை நடத்துகிற போதும் பெண்கள் பிறந்த வீட்டை தஞ்சமடைய நேருகிறது. கவிஞர் மேத்தா இதுபோன்ற நிலையில் பெண்ணைப் பெற்ற பெற்றோர்கள் துன்பப் படுகின்றார்கள் என்பதைக் கவிதையில் கூறியுள்ளார்.

முடிவுரை:

கவிஞர் மேத்தா தனது கவிதைகளில் பெண்கள் எந்த மாதிரியானச் சூழலில் துன்பப்படுகின்றார்கள், யார் யாரினால் கொடுமைக்கு உள்ளாகின்றார்கள் போன்ற செய்திகளைக் கவிதையில் பதித்துள்ளார். மற்ற கவிஞர்களில் இருந்து கவிஞர் மேத்தா பெண்ணியத்தை மாற்றிப் படைத்துள்ளார். அதாவது குடும்பத்துக்குள் நடைபெறுகின்ற கொடுமைகளை மட்டும் தெளிவாகப் படைத்துள்ளார். ஒரு பெண் தனது குடும்பத்தில் சுதந்திரம் அடைந்துவிட்டால் சமுதாயத்தில் சுதந்திரம் அடைந்து விடுவாள் என்பதாகக் கவிதையில் பெண்ணியக் கருத்தை அமைத்துள்ளார்.

அடிக்குறிப்புகள்

1.முனைவர் இரா. காஞ்னா, பெண் உளப்பகுப்பாய்வும் பெண் மொழியும் - ப.1.
2. ,, ,, ப.1.
3.கதிர் மகாதேவன், தொன்மம் , ப.2.

# Coining Technical Terms

A.Munian
Department of Linguistics,
Madurai Kamaraj University, Madurai - 625 021.

## 1.0. Introduction

Technical term is a specialised type of term. It permits efficient and precise communication among specialists who know the concepts that such terms refer to. It is defined by the content it stands for and not by any peculiarities in its linguistic structure. In general, a term must lack ambiguity. That is there should be only one concept to one term. The term should also preferably be international and capable of forming derivations, when a term is used in common parlance, it acquires a whole range of meanings in addition to its scientific meaning.

Technical terms are efficient and useful bec ause they are shorter than the corresponding full description or definition. Further, a technical term is always more precise than a descriptive terms.

## 2.0. Strategies employed for coining Technical terms

In the present paper, teh terxts chosen for analysis are the prescribed science textbooks for the students at higher secondary school level. Especially the textbooks prescribed for the science subjects. Further the present paper attempts to find out the strategies employed by the translators or translating the technical terms from source language (SL) to target language(TL).

### 2.1. Word-for word

In word-for-word translation, the SL word order is preserved and the words are translated one by one by their most common meanings. Word-for-word translation is adopted to preserve the collocational meanings and at times it may not serve the purpose. It is considered to be one of the primary handicaps encountered during translational process. Nida (1963) opines that word-for-word translation takes to word as the unit of translation. On the assumption that there is a corresponding word in the TL for each SL word. The meanining of individual word is influenced by the context and the situation when the word 'eye-ba;;' is translated, the following variations are found in the student's translation.

**English to Tamil**
**(Eye Ball)**

Variations; 'karu vili', 'vilikooLam', 'kanvili', 'kanpantu'. In this example the SLI word 'Eye' is translated in TL as 'kan'. Similarly the

SL2 word 'Ball' is translated in TL as 'pantu'. Both the translated equivalents preserve SL word order and these are translates singly by their most common meanings which are in the every day word stock in TL. Even though the translated words convey the exact meaning in isolation, their collocational meaning is entirely different. The textbook equivalent for the SL word 'vilikkolam' in Tl. Even though the words 'kan' and 'vili' seem to be identical, the word 'vili' is quite out of usage and it has become more of poetic than prosaic. Therefore, the word 'pantu' resembles the objects like 'koolam', 'uruntai' by shape. most of the times, the translator habitually associates the SL words to that of 'football', handball' etc and correlates them in a similar way as 'kaal pantu, 'kai pantu', etc.

It is observed that the translators make an attempt to seek word-for-word translation or one-to-one correspondence either at word level or phrase level only which they are not familiar with the textbook equivalents.

**2.2. Loan Words**

This is a minimal translation method which the translator adopts the word in the TL along with the object or practice. The translator transcribes a SL word in graphological system of the TL. The loan words or transliterations are always free forms. Bound forms are borrowed as such only with extreme rarity. When no other term is consiered to be precise or appropriate, the translator uses an SL word for the TL word. When the word 'Armature' is translated, the following variations are found:

**English to Tamil**
**Armature**
**Variations:**

'kampicurl', 'aarmaccuur', 'culal curul' and 'teenirumpu curul'. It is observed that the translators equated with several variation in TL for the SL word 'armature'. Among the variations, it is noted that transliteration is one of the strategies adopted by the translators. Very few of the translator retains the textbook equivalent 'cural cural'. The translator makes an attempt for a letter-for-letter equivalents by using the alphabets of the TL. The translators seem to be out of ideas about the SL word 'armature' and hence they opted for a loan word in TL which in 'aarmaccur'. In this process of translation, either the translator attempts to correlate with any synonymous form or leaves it unanswered.

**2.3. Coinage:**

When confronted with a new object or practice for which words

are needed, the translator may or may not accept the SZ words along with the new cultural item. Instead, the translator may adopt material which is already in the target language. However, the precise adaptation may be in one way or another patterned on the verbal behaviour of the source language.

When translating the word 'Beats' the following variation are found.

**Variations:**

'Tutippukal, 'vimmalkal', 'atikal' and 'atirvukal'.

The textbook equivalents of the SL terms are treated as loan shift or coinage process. Generally, a word will have a lexical as well as contextual meaning. The meaning which is deciphered from the contextual clues will not have any variations. On the contrary, the lexical meaning will render more than one variation. The translators equated the SL word 'beats' with several variations in TL as this word does not carry any appropriate contextual clues. The textbook equilvalent is 'vimmalkal'. Among the other variables, the translators substitute words the 'tutippukal', 'atikal', etc., which are also synonymous in nature.

**2.4. Non-equivalents**

While the translators find it difficult to correlate or think of the linguistic sign or the concept of the SL word, they end up ultimately in improper coinage in the TL. The selection of non-equivalent word arises mainly out of misconception of the phonemic and morphological level.

The textbook equivalent for the SL word 'aggregate' TL in 'mottam'. Some of the translators do not seem to have understood the appropriate semantic notion of the SL word 'aggregate' and they have equated with several similar and dissimlar variations like 'caraacari', 'pattataari', and 'vivacaayam parriya patippu'. Further, they wrongly associate the SL word with words like 'graduate', 'agriculture', which is in a way appear to be homophonous in structure with the former. The translator encounters problem in corresponding the SL word 'agronomy'. The textbook equivalent for SL word 'agronomy' in TL is 'ulaviyal'. It is interesting to note that the translators have made attempt to associate the SL word 'agronomy' with 'agriculture', 'astroomy' and 'astrology' and thus resulted in semating deviance by substituting non-equivalent words like 'vivacaayam', 'aakaaya patippu', kuricol' respectively in the TL.

**3.0. Conclusion**

The strategies employed by the translators in coining technical term indicates that there are lot of variations against each technical term

in the process of translating a term from SL to TL and vice-versa. It is known fact that a technical term is always more precise than a descriptive term. Moreover, the general vocabulary employed in scientific text has a direct bearing on its referential meaning. That is the words used in their primary logical meaning, unlike the vocabulary items of literary prose which have necessarily intratextual meaning and have a tendency to be interpreted in more than one way.

The translation of words is considered to be the most difficult aspect of translation. The reason for the difficulties with the words mainly lies with the factor that the translators either do not understand them properly or find them hard to translate. By scanning the above five strategies, the following observations have been made.

3.1. Word-for word translation is a stratgegy in which the words are translated singly and the semantic variation of the collection is given least importance. In this process, the translators choose a clause equivalent for a SL word in the TL rather than an appropriate one when a precise equivalent is not available or they cannot recall an appropriate one or the text book equivalent at the time of translation.

3.2.Use of loan words is a process in which the translators make an attempt for letter-for-letter equivalent by using the alphabet of the target language. This adoption of transliteration in local scripts arises mainly due to the reason that the translators are neither familiar with the term nor do they understand the mechanics of the word concerned.

3.3.Coinage is a process in which the translators adapt loan shift mechanism to translate the SL word into TL. Here, the translators equate the SL word with a known vocabulary which is already in use in the TL. However, the appropriate adaptation in one way or another is patterned on the verbal system of the SL. The words supplied by the translators confine to the txtobook equivalents in the TL.

3.4.Non-equivalent is a process in which the translators supply words in Tl which are impertinent to the SL words. The reason for such improper or dissimilar variations, or semantic deviance might be due to the misconception of the SL word at the phonemic and morphological level.

**Reference:**

Nida, E.a. 1964. Towards a Science of Translating, E.J. Brill, London.

______, 1974. The Theory and Practice of Translation, E.J. Brill, London.

Thirumalai, M.S., 1979. Language in Science, Geetha Book House, Mysore.

# தமிழ் சைவமும் சாதியமும்

கி. முருகன்
முனைவர் பட்ட ஆய்வாளர்,
சைவ சித்தாந்த முறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 21.

## முன்னுரை

தமிழ்நாட்டில் சைவம், வைணவம் இந்து சமயத்தின் இரு பிரிவுகள் மக்கள் பின்பற்றிய கடவுள் முன் அனைவரும் சமம் என்று சமயம் கூறுகிறது. இதில் சிவனை முதல் கடவுளாகக் கொண்டது சைவ சமயம். இவற்றைப் பின்பற்றியவர்கள் சைவர், இறைவழிப்பட்ட சைவ அடியார்களும், சமயக் குரவர்களும் சமய ஆச்சாரியர்களும் தமிழ் இசைப் பாடல்கள் பாடி இவற்றிற்கு பெருமையும் மதிப்பும் சேர்த்துள்ளனர். இறைவன் முன் அனைவரும் சமம் என்ற கோட்பாடுகள் இருந்தாலும் அவற்றைப் பின்பற்றும் சமயவாதிகள் சிலரினால் அடியார்களிலும், மதத்திலும், தீக்கையிலும் சாதியம் நிலை கொண்டுள்ளது. இவற்றை முழுமையாகப் பார்ப்பதற்கு மிகப் பறந்து பட்ட தளமாக இருப்பதால் சில இடங்களில் உள்ள செய்திகளை மட்டும் கூறுவது இக்கட்டுரையின் நோக்கம்.

## தமிழ் சைவம்

பண்டைய தமிழர்கள் இயற்கையை வழிபட்டு வந்தனர். பின்னா எரிதலைச் சிவன் என்றும், வானை இந்திரன் என்றும், குன்றினையும், கடல் போன்றவற்றை வணங்கி பின்னர் அதற்கு ஒரு உருவம் கொடுத்தனர் என்றும் அவற்றை வணங்கி வந்தனர் என்றும் 'தொல்காப்பியம்' கூறுகிறது. பின்னர் தீயினை சிவனிற்கு ஒப்பிட்டு வந்து, முழுமுதல் கடவுளாகக் கொண்டு வணங்கி வந்த மக்கள் சமயம் சைவம் ஆகும். தமிழ் சைவ சமயத்தை ஆச்சாரியர்கள் வழி நடத்தி வந்தனர். பின்னர் வைச சமய சான்றோர்கள். பஞ்சபூதங்களான இயற்கை இறைவனுக்கு ஒப்பிட்டு உள்ளனர் என்பதை தேவாரங்களில் உள்ள பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன. ('வருபூதம் அவை ஐந்தாய்') சம்பந்தர் தேவாரம்.

## சைவ அடியார்கள்

காதலையும், வீரத்தையும் போற்றி வந்த தமிழ் நில மக்கள் அவர்கள் வழிபடும் தெய்வங்களின் பாலும் காதல் வீரம் மிகுந்த கதைகளைப் புனைந்தனர். அப்படிப் புனையப்பட்ட கதைகளில் ஒரு கடவுளுடன் மற்றொரு கடவுளை தொடர்புபடுத்தினர். பின்னர் படிப்படியாக மாறி பக்தி இயக்க காலத்தில் சைவக்குரவர்கள் தோன்றி தமிழ் இசைப் பாடல்கள் பாடி சைவத்திற்கு செல்வாக்கை அளித்தனர். சைவ அடியார்கள் 63 நாயன்மார்கள் அனைவரும் சேர்ந்து சமயத்தொண்டு செய்தனர். இருப்பினும் சாதிய ரீதியாகப் பார்த்தால் அந்தணர், வேளாளர்கள் அதிகமாகக் காணப்படுகின்றனர். தாழ்ந்த குல

அடியார்கள் சில பேர் மட்டும் உள்ளனர். இறை அடியார்கள் மக்கள் அனைவரும் இறைவன் சமம் என்றோ ஏற்றத்தாழ்வு கருதவில்லை என்றோ கூற முடியாது. அப்போது இருந்த சமணம், பௌத்தம் போன்ற சமயத்தை எதிர்கொள்வதற்கு கூட்டம் சேர்த்தனர் என்றுதான் கூற வேண்டும். ஏனென்றால் இறையடியாராகிய நந்தனாரை கோயிலுக்குள் செல்ல அனுமதிக்கவில்லை. அங்கு சாதியம் நிலை கொண்டுள்ளதைக் காணலாம்.

புலையர்

தேவாரம் பாடியவர்களில் இரண்டாவதாகக் கருதப்படும் திருநாவுக்கரசர்,

"அயுரித்துத் தின்று உழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க்கு அன்பர் ஆனால்
அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே"

ஆவுரித்து தங்கும் புலையர் சிவனடியார். ஆனால் அவரை வணங்குவேன் என்று கூறியவர். தன்னிலும் உயர்ந்த அந்தணர் குலத்தில் பிறந்த வயதில் சிரியவனாக இருந்து திருஞானசம்பந்தரின் பல்லக்கினை சுமந்தும் வணங்கியும் சென்றார். அவருடன் இருந்த திருநீலகண்ட யாழ்ப்பாணரை பல்லக்கில் வைத்து தூக்கிச் சென்றதாகத் தெரியவில்லை. மேலும் அந்தணரான அப்பூதியடிகள் வீட்டில் அழுது உண்டு இருக்கிறார். தாழ்ந்தவர் வீட்டில் விருந்து உண்டதாகத் தெரியவில்லை. ஆவினைத் தின்பவர் புலைவர் என்றால் தம்மை உயர்ந்த பிராமணர் என்று எண்ணிக் கொள்ளும் அந்தணர்களும் புலையர்தான, எப்படி என்றால் வேள்வியில் ஆடுமாடுகளை ஈவு இரக்கம் இல்லாமல் கொன்றும் அவற்றைத் தின்றும் உள்ளனர். (கௌசிக முனிவரின் புத்திரர்கள் பசு மாமிசம் தின்றதாக (மத்ஸ்யபுராணம்) கூறுகிறது.

வருணமுறை

மனுதர்மத்தில் கூறப்பட்டுள்ள சாதிய முறை, சைவத்திலும் பின்பற்றப்பட்டுள்ளது. தேவாரம் பாடியவர்களில் சமகாலத்தவராக திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் உள்ளனர். ஆனால் திருஞானசம்பந்தர் அந்தணராக இருந்த காரணத்தால் வயதில் சிறியவராக இருந்தும் அவருக்கு முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது. இரண்டாவதாக திருநாவுக்கரசருக்கு சேர்த்தனர். இதேபோல் பெரிய புராணத்திலும், சைவ அடியார்களில் காலத்தால் முந்தியவர்கள், காரைக்கால் அம்மையார், கண்ணப்பர். ஆனால் அந்தணரான சுந்தரருரை முதலில் வைத்து விட்டனர். ஆதலால் இங்கு வருண முறை பின்பற்றப் பட்டதைக் காணலாம்.

இறைவன் அருளுதலில் பாகுபாடு

"எங்கேனும் யாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்கு
இங்கே என்று அருள் புரியும் எம்பெருமான்" (சம்பந்தர் தேவாரம்)

என்று திருஞான சம்பந்தர் பாடியுள்ளார். இறைவன் அடியார்கள் யாராக இருந்தாலும் சமமாக அருள் வழங்குவான் என்றால் ஏன் தாழ்ந்த குலத்தில் பிறந்த கண்ணப்பருக்கும், நந்தனார்க்கும் அதிகமான சோதனை கொடுத்துள்ளார். உயர்ந்த குலத்தில் பிறந்த திருஞான சம்பந்தருக்கு ஞானப்பால் கொடுத்தும், சுந்தரருக்கு திருமணத்தின் போதும் தடுத்தாட் கொண்டும் அருள் வழங்கி

உள்ளார். இதன் மூலம் உயர்ந்தவருக்கு ஒரு நீதி, தாழ்ந்தவர்க்கு ஒரு நீதி என்று இறைவன் பாகுபாடு செய்துள்ளார் என்பதைக் காணலாம்.

மடங்களில் சாதியம்

சைவ சமயப் பெரியோர்களை, சமயக் குரவர் என்றும், சந்தானக் குரவர் இருவகையாகப் பிரிக்கலாம். சந்தானச்சாரியார் என்று சொல்லப்படுகின்ற மரவும் இடைக்காலத்தில் தே ன்றி வளர்ந்து வந்துள்ளது. இவர்களில் அகச்சந்தானச் சாரியார் எனப்படுபவர். நந்தியம் பெருமான், சனற்குமாரர் சத்திய ஞான தரிசனிகள், பரஞ்சோதி முனிவர் புறச்சந்தானச்சாரியர் எனப்படுபவர்கள். மெய்கண்டார், அருள்நந்தி சிவம், மறைஞான சிவம், உமாபதி சிவம் போன்றவர்கள் ஆவர். உமாபதி சிவம் மரபில் தோன்றியவை சைவ மடங்கள் ஆகும். இவை இன்று இருக்கின்ற சைவ மடங்கள். இம்மடங்கள் இலக்கியப் பணி,சைவப் பணி செய்து வந்தாலும், வழிவழியாக சாதியம் அங்கு நிலைகொண்டு உள்ளது. திருவாடுதுறை, திருப்பனந்தாள், தருமை போன்ற சில மடங்களில் குறிப்பிட்ட சில சாதியனைச் சேர்ந்தவர்களே மடாதிபதியாக வர முடிகிறது. பிற தாழ்ந்த சாதியனைச் சேர்ந்தவர்கள் மடாதிபதியாகவோ, உள்ளே பணிபுரிவதற்கோ அனுமதிக்கப்படுவதில்லை. மேலும் மடங்களில் அடிமை முறையினைப் பின்பற்றிய செய்தியும் காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக திருவாடுதுறை ஆதினத்திற்கு ஒரே சமயத்தில் 36 பேர் அடிமைகளாக விற்கப்பட்ட செய்தியினை ஹுச. இராஜமாணிக்கனார் தம்முடைய சைவ சமய வளர்ச்சி என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். (சைவ சமய வளர்ச்சி, ப-222)

தீக்கையில் சாதியம்

தாழ்ந்த குலத்தில் உள்ள அடியவர் ஒருவர் நல்ல அறிவும் ஆண்மீகப் பற்றும் உடையவராக இருந்தாலும் தனக்கு மேல் உள்ள சாதிக்காரர்களுக்கு குரவராகும் பண்பு அற்றவராகக் கருதப்படுகின்ற முறையைக் காணலாம். அதாவது அந்தணர் நான்கு வருணத்தார்க்கும் குரவராகலாம், அரசன் மூன்று வருணத்தார்க்கும், வணிகர் இரண்டு வருணத்தார்க்கும், குரவராகலாம். சூத்திரர் சூத்திரர்க்கு மட்டும் குரவராகலாம் என்றும் பின்னர் பிரமணர் முதலில் மூன்று வருணத்தினரும் நான்கு ஆக்கிரமத்தின் குரவூராகலாம். சூத்திரர் அங்கு குரவராக உரிமை இல்லை என்று கூறப்படுகிறது. மேலும் தீக்கை வழங்குவதில் மறையோர் முதலிய மூன்று வருணத்தார்க்கும், சற்சூத்திரர்க்கும் ஔத்திரி தீக்கை வழங்கப்படுகிறது. ஏனையோர் திருநோக்கு தீங்கைக்கு மட்டும் உரியவர் ஔத்திரி தீக்கைக்கு உரியவர் அல்லர் என்று தீக்கைப் பேறு வழங்குவதிலும் சாதியம் நிலை கொண்டுள்ளன. (சிவஞானபாடியம், ப-38)

முடிவுரை

பிறப்பளவில் உயர்வு தாழ்வு என்ற சாதிப்பிரிவன் தீமையைக் களைந்து மக்களுக்கும், பக்தர்களுக்கும் நன்னெறியை புகட்டுவததான் உண்மையான சமமாகும். இறைவன் முன் சாதி, மதம் இன்றி அனைவரும் சமம் என்று கூறிவிட்டு இருந்து விடாமல் அவற்றுக்கு தீர்வு கண்டு நடைமுறைப்படுத்துவதே உண்மையான தமிழ் சைவத்தின் ஆண்மீகம் ஆகும்.

# இன்றைய கிறித்தவம் எப்படி உள்ளது?

எப்.எஸ். ஜஸ்டின் - மதபோதகர்
முனைவர் பட்ட ஆய்வாளர்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

சமயங்கள் மனிதனை நல்வழிப்படுத்துவதற்காகவே உண்டாக்கப்பட்டவைகள் என்பதுதான் ஓர் பொதுவான உண்மை. நல்வழிப்படுத்துவதற்கு என உண்டாக்கப்பட்ட சமயங்களே, அநேக வேளைகளில் மனிதனை தீய வழியில் கொண்டு செல்கிறது அல்லது தீவிரவாதியாக மாற்றுகின்றது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். இந்திய சூழலில் தோன்றின சமயங்களைக் காட்டிலும், அல்லது அவைகளைப் பின்னுக்குத் தள்ளி தன்னை இன்றளவும் முன்னிலைப்படுத்திக்கொண்ட சமயங்களிலே, கிறிஸ்தவ சமயத்திலே காணப்படுகின்ற போதனைகளின்படி இன்றைய கிறிஸ்தவம் காணப்படுகின்றதா? என்பது தான் இக்கட்டுரையின் நோக்கம்.

பவுல் அடிகளின் போதனைகளில் ஒன்று, "ஒவ்வொருவனும் தன் சுயபிரயோஜனத்தைத் தேடாமல், பிறனுடைய பிரயோஜனத்தைத் தேடக்கடவன்" (1கொரி.10:24) புதிய மொழிப்பெயர்ப்பிலே இவ்வசனம் "எவரும் தன்னலம் நாடக்கூடாது : மாறாகப் பிறர் நலமே நாடவேண்டும் என எழுதப்பட்டுள்ளது. கிறிஸ்தவ வாழ்வின் ஓர் "மேல்நிலையாக்கத்தை" பவுல் அடிகளார் குறிப்பிடுகின்றார். பொதுவாக திருவிவிலியத்தில் எழுதப்பட்ட அல்லது கூறப்பட்ட வார்த்தை என்பது அந்தக் காலச் சூழலுக்கு மட்டும்தான் என எடுத்துக் கொள்ளாமல், எல்லாக் காலத்திற்கும் உள்ளது என்பதுதான் கிறிஸ்தவர்களின் மறுக்கமுடியாத உண்மையாகும்.

பவுல் அடிகளார் கூறின வார்த்தையானது உலகிற்கு எனப் பொதுவாகக் காணப்பட்டாலும், கிறிஸ்தவர்களுக்கும் குறிப்பாக கிறிஸ்தவத் தலைவர்களுக்கும் கூறப்பட்ட மிக முக்கியமான வார்த்தையாக உள்ளது.

"உங்களுக்காக வாழாமல், பிறருக்காக வாழுங்கள் என்பதுதான் இதன் சுருக்கக் குறியீடாகும்".

இன்றைய உலக மக்கள் தொகையில் சுமார் 200 கோடிக்கு மேல் உள்ள மக்கள் கூட்டம் கொண்ட கிறிஸ்தவர்களில், எத்தனை சதவீத மக்கள் பவுல் அடிகளார் கூறின வார்த்தையின்படி வாழ்கின்றார்கள்? எனக்குப் பிறன் யார் என இயேசுவிடம் கேள்வி எழுப்பின நியாய சாஸ்திரிபோல் இன்று கிறிஸ்தவர்கள் காணப்படுகின்றார்களே தவிர, பிறனுக்காக அல்லது பிறனின் பிரயோஜனத்திற்காக வாழ முடிகின்றதா?

எனக்குப் பிறன் யார் எனக் கேள்வி கேட்டவரிடம், தனக்கு உண்டானவைகளை தனக்கும், தன்னைச் சார்ந்தவர்களுக்கும் செலவு செய்யாமல், தனக்கு முன்பின் அறிமுகம் இல்லாத நபருக்கு செலவு செய்த சமாரியனே பிறன் என இயேசு குறிப்பிடுகின்றார் (லூர்க். 10:25-37).

ஐந்து அப்பம், இரண்டு மீன் கொண்டுவந்த ஓர் சிறுவன் தன் சுயபிரயோஜனத்திற்காகவே மட்டும் செயல்பட்டிருந்திருப்பான் என்றால், அன்று

சுமார் ஐந்தாயிரம் நபர்கள் திருப்தியாக புசித்திருக்கக் கூடுமோ? (யோவான் 6:1-11).

மேலே பார்த்த இந்த சமாரியன் மற்றும் சிறுவனை உந்தித் தள்ளின உந்துவிசை எது? கடவுளோ அல்லது கடவுளின் ஆவியோ உந்தித்தான் இதனைச் செய்தனரா? அல்லது மற்றவர்கள் அவர்களை செய்யும்படி வலுக்கட்டாயப்படுத்தினார்களா? அல்லது இவர்களின் ஜெப ஆலய (சினகாக்) போதகர்கள் இவர்களை இவ்விதம் செய்ய வேண்டுமென போதித்தனரா? என்றால் இம்மூன்றிற்கும் இல்லை என்ற ஓர் வார்த்தை பதிலே கூறமுடிகிறது.

நல்ல சமாரியன், இயேசுவின் உவமையில் உதித்த ஓர் மனிதன், சிறுவனோ, இயேசுவின் போதனையைக் கேட்க வந்தவன். இவர்களை உந்தித் தள்ளினது தங்களுக்கு மட்டுமே வாழாமல், பிறரின் பிரயோஜனத்திற்காக வாழ வேண்டுமென்கிற எண்ணம்தான்.

கடவுளின் ஏவுதல் சபைக் கொள்கையின் உந்துவிசை போன்ற இவைகளைச் சற்றும் பெறாமல் இவர்கள் இருவரும் நற்செயல்களை செய்திருப்பார்கள் என்றால், கடவுளின் ஏவுதல் திருவிவிலியத்தின் வெளிச்சம், சபைப் போதகரின் பிரசங்கம் போன்றவைகளை அனுதினமும், வாரந்தோறும் கேட்கிற இன்றைய நவீன காலத்திய கிறிஸ்தவர்களால் பிறரின் பிரயோஜனத்திற்கென்று வாழ முடிகின்றதா? லூக். 10:19-31 வரை உள்ள பகுதிகளில் இயேசு கூறின உவனையிலே சொல்லப்பட்ட பணக்காரன், ஏழையான லாசரு இவர்களில் பணக்காரன் நரகம் போனதற்குக் காரணம் என்ன என்று இயேசு குறிப்பிடும்பொழுது விலையுயர்ந்த மெல்லிய செந்நிற ஆடை அணிந்து நாள்தோறும் விருந்துண்டு இன்புற்றிருந்தான் என்று குறிப்பிடுகின்றார். இந்த பணக்காரன் தவறு செய்தோ, குறுக்கு வழியிலோ பணம் சம்பாதித்தோ இவ்விதம் வாழவில்லை. அவ்விதம் செய்திருப்பார் என்றால், இயேசு அதனை சுட்டிக்காட்டியிருப்பார். மாறாக இவர் கடின உழைப்பின் மூலம்தான் செல்வத்தையும், சம்பூரணமான வாழ்வையும் சம்பாதித்திருப்பார். செந்நி ஆடையும், நாள்தோறும் மிகவும் நேர்த்தியான உணவும் புசித்தது தவறில்லை. இவரின் இப்படிப்பட்ட வஸ்திரத்தையோ, அல்லது வாழ்வையோ இயேசு பாவம் எனவும் கூறவில்லை. பின் ஏன் இவர் நரகம் சென்றார் என்று இயேசு இப்பகுதியிலே கிறிஸ்தவர்களை சிந்திக்க வைக்கின்றார். தன் செல்வத்தை அவன் தனக்கு மட்டுமோ அல்லது தன்னைச் சார்ந்தவர்களுக்கோ மட்டுமோ செலவழித்தாரே தவிர, தன் வீட்டில் மிகவும் பசியாய் கிடந்த லாசரு என்கிற மனிதனுக்கு கொடுத்து உதவிசெய்யவில்லை. இந்த லாசரு இந்த செல்வந்தனின் சாப்பாட்டு மேஜையிலிருந்து விழுகிற துண்டுகளால் தம் பசியாற்ற விரும்பினார். லாசருவை இவர் விசாரிக்கத் தவறிவிட்டார். தனக்கானவைகளை மட்டுமே இந்த செல்வந்தர் யோசித்தாரே தவிர, பிறருக்கானவைகளை யோசிக்கத் தவறிவிட்டார். இந்தத் தவறினால், இவர் பெற்ற தண்டனை நரகம் என்று இயேசு கூறுகிறார்.

"நான் பசியாயிருந்தேன். நீங்கள் எனக்கு உணவு கொடுக்கவில்லை. நான் தாகமாயிருந்தேன். என் தாகத்தைத் தணிக்கவில்லை. நான்

அந்நியனாயிருந்தேன். என்னை ஏற்றுக்கொள்ளவில்லை. ஆடையின்றி இருந்தேன். நீங்கள் எனக்கு ஆடை அளிக்கவில்லை. நோயுற்றிருந்தேன். சிறையிலிருந்தேன். என்னைக் கவனித்துக்கொள்ளவில்லை என்கிறார்.

சபிக்கப்பட்டவர்கள் இயேசுவைப் பார்த்து ஆண்டவரே எப்பொழுது நாங்கள் இவ்விதமாய் கண்டோம் என்று கேட்டதற்கு மிகவும் சிறியவராகிய என் சகோதர சகோதரிகளுள் ஒருவருக்கு நீங்கள் எதையெல்லாம் செய்யவில்லையோ அதை எனக்கும் உறுதியாக செய்யவில்லை என உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன் என்கிறார் (மத் 25:44,45).

மொத்தத்தில் இந்த ஆய்வில் பார்வையிட்ட நான்கு நபர்களில் முதலில் பார்த்த இருவர்களாகிய நல்ல சமாரியன் மற்றும் சிறுபையன் தனக்கானவைகளை அல்ல, பிறருக்கானவைகளை நோக்கினார்கள். இரண்டாவதாக பார்வையிட்ட செல்வந்தனும் இடப்புறத்தில் உள்ளவர்களும் பிறருக்கானவைகளை அல்ல தனக்குரியவைகளுக்கு மட்டுமே வாழ்ந்தார்கள். ஒரு கூட்டம் கடவுளால் அங்கீகரிக்கப்பட்டது, மறு கூட்டமோ கடவுளால் சபிக்கப்பட்டது. இன்றைய கிறிஸ்தவர்கள் இவ்வரண்டு கூட்டத்திலே ஏதோ ஒரு கூட்டத்திலே தான் காணப்படமுடியும். எந்தக் கூட்டத்தில் காணப்படுகிறோம் என்பதுதான் மிக முக்கியம்.

முடிவுரை

இன்றைய நவீன கால கிறிஸ்தவம் கிறிஸ்துவின் போதனையின் படி நடக்கிறதா? பிறனையும் நேசித்தல், பிறர் நலம் நாட வேண்டும் என்கிற போதனை பல மொழிகளில் திருவிவிலியத்ததில் அச்சடிக்கப்பட்டிருந்தாலும், அச்சடிக்கப்பட்ட வார்த்தை அச்சடிக்கப்பட்டதாகவே உள்ளனவா? அல்லது எனது வாழ்விலே அது நடைமுறைப்படுத்த முடிகிறதா? பிறர் நலம் நாடவேண்டும் என்கிற போதனையை அடிமரிக்க அதிபர் படித்திருப்பார் என்றால், அவர் உலக மக்களின் நலனை நாட பிரயாசப்படுவாரே தவிர, உலக மக்களின் அழிவுக்காக முயற்சிப்பாரா? மேலை நாட்டு கிறிஸ்தவம் எப்பாதையில் பயணிகின்றதோ, அதே பாதையில் அச்சு விலகாமல் கீழை நாட்டு கிறிஸ்தவமும் பயணிக்கின்றது என்பது கண்கூட பார்க்க முடிகிறதல்லவா? ஏழைகளை சுரண்டுகிற கிறிஸ்தவ தலைவர்கள் ஏழைகளை மட்டுமல்ல, ஏழைகளை நேசிக்கச் சொன்ன இயேசுவையே ஏமாற்றுகின்றார்கள் என்பதுதான் ஒப்புக்கொள்ளக்கூடிய உண்மை.

இக்கட்டுரை உங்களைப் பாதித்தால் நீங்கள் பின்னால் உள்ள இரு கூட்டத்தாரின் வாரிசாகவும், இக்கட்டுரையின் முற்பகுதிபடி நீங்கள் காணப்பட்டால், முன் பகுதியில் சொல்லப்பட்டவர்களின் வாரிசாகவும் பயணிக்கமுடியும்.

கிறிஸ்தவர்களாகிய நாம் யாருடைய வாரிசாக செயல்படுகிறோம்? என்கிற கேள்வியோடு இக்கட்டுரை தொடர் ஆய்வாகவும் மேம்பாட்டிற்காகவும் விடப்படுகின்றது.

# ஔவை நாடகத்தில் மரபு மீறல் சிந்தனைகள்

போ. ராஜராஜஸ்வரி
இளநிலை ஆய்வாளர்,
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை

## முன்னுரை

ஔவை என்ற பெண்கவி மரபு பல்வேறு காலங்களில் தொடர்ந்திருப்பதை ஆய்வாளர்கள் சுட்டுகின்றனர். இலக்கிய உலகில் இன்குலாப் அவர்களை எல்லோரும் அறிவர். இவர் படைப்புகள் பல. அவற்றுள் ஒன்று "ஔவை" என்ற நாடகம் ஆகும். ஔவை, ஆடவரைச் சார்ந்து பெண் வளர வேண்டும் என்ற அடிமைத்தனத்தை முன்மொழியாதவள். ஔவை நாடகத்தில் அமைந்துள்ள மரபுமீறல் சிந்தனைகள் குறித்து இங்கு காண்போம்.

## மரபு

தொன்று தொட்டுத் தொடர்ந்து வருகின்ற ஒரு வரையறையே மரபாகும். இது முறையே பின்பற்றப்படுவது மரபாகும். இவ்வரையறையின் உள் எல்லையை விட்டு வெளிக்கோட்டில் இடம்பெறுவது மரபு மீறலாகும்.

## மரபு மீறல் சிந்தனைகள் இடம்பெறும் காட்சிகள்

இன்குலாப்பின் ஔவை நாடகத்தில் இடம்பெறும் காட்சிகள் பதினெட்டு. இவற்றுள் மரபுமீறல் சிந்தனைகள் முதல் காட்சி, இரண்டாவது காட்சி, நான்காவது காட்சி, எட்டாவது காட்சி, பத்தாவது காட்சி, பதினேழாவது காட்சி என இக்காட்சகளில் விரவிக்கிடக்கின்றன.

## மரபு உடைப்பு வெளிப்பாடு

ஔவை நாடகம் பல்வேறு ஔவைகளை முன் வைக்கிறது. முதல் காட்சியில் சிறுமி, சட்டாம்பிள்ளையிடையே ஏற்படும் உரையாடலில் சிறுமியின் வாயிலாக மரவு உடைப்பு வெளிப்படுகிறது. ஆண் பெண்ணை அடக்கியாள்கையில் பெண் அதனை எதிர்க்கிறாள். ஒரு மனிதனுக்கு இன்றியமையாத் தேவை உணவு, உடை, இருப்பிடம். இத்தேவைகளில் முதலிடம் பெறுவது உணவு ஆகும். இந்த உணவு ஆண், பெண் என்ற நிலையில் முரண்படுவதை,

"உண்டி மிகுதல் ஆண்களுக்கு அழகோ?"

என்ற வினாவின் வாயிலாக மரபினை எதிர்க்கின்ற தன்மை புலப்படுகிறது. மேலும் உணவு என்பது அனைத்து உயிர்களுக்கும் அடிப்படை. இதைச் சுருக்கிச் சுருக்கி உண்பதன் பெயரில் உணவைச் சுருக்குவதற்கு மாறாக உயிரைச் சுருக்க நேருமே என்ற விளைவினை முன் வைப்பதாக,

"பெண்களுக்கு ஏன் உண்டி சுருங்கணும்?"

சாப்பிடாம நெத்திலிக் கருவாடு மாதிரி காயவா சொல்றே?

என்ற வினாக்கள் மரபினை எதிர்க்கின்ற தன்மையை ஆணை எதிர்த்து வினாத் தொகுப்பதன் வாயிலாக அறியலாம்.

மரபு வழிப்பட்ட பெண்மை-மாறுபாடு

பெண் என்பவள் காலங்காலமாக சமூகம், குடும்பம் பெற்றோர், கணவன், குழந்தை என்பவர்களைச் சார்ந்தே வாழும் தன்மையள் என்ற கருத்து நிலவுகிறது. இவற்றைச் சாராது, பெண் சுயமாக, தற்சிந்தனையுள்ளவளாகத் திகழ்வதே மரபு எனப்படுவதாகும். ஔவை நாடகத்தில் உணவையே வயிற்றுக்கு ஒத்த தன்மையில் அளிக்க முன் வராத சமூகம் - ஆணினம் உரிமையை எங்ஙனம் அளித்திடும் என்ற மரபுக் கட்டுடைப்பு வெளிப்படுவதை,

"அப்போ சாப்பிடக் கூடாதுங்கறே. இப்ப
கேள்வியே கேட்கக் கூடாதுங்கறே ...
நாங்க என்ன தான் செய்யுறது?"

என்ற வரிகளில் சிறுமி என்ற பெண்குரல் ஆணை எதிர்க்கும் தன்மையினைப் புலப்படுத்துகிறது.

காதலைச் சொல்லத் தடையில்லை

ஒத்த அன்புணர்வால் தோன்றிய அன்பு நிலையே அகமாக அமைகிறது. இதில் களவு, கற்பு என இருவகை உண்டு. களவுக்காலத்தின் களவு கற்பாக மலரும் தன்மையுடையது. பெண் தன் காதலனைக் காணாது, கையற்ற நிலையினளாய் அன்பு நிலையை எவரிடமும் கூற முடியாதவளாய்த் திகழ்வாள். அகமரபுத் தன்மையும் ஔவை நாடகத்தில் மரபு மீறல் சிந்தனையாக அமைவதை,

"காதலைச் சொல்வதற்கும் தடையா?
காதலை வெளிப்படையாக ஒரு
பெண்ணால் பேசமுடியுமா?"

என்ற வினாக்களுக்கு, "ஆமாம்" என்ற ஔவையின் குரல்ஒலி பிண்ணனியாக விஞ்சி நின்று பதிலுரைப்பதால் அன்பு நிலையை இருவரும் பரிமாறிக் கொள்ளலாம் என்ற அகமரபுக் கொள்கை மீறிய தன்மை வெளிப்படுகிறது.

அகப்பாடல் மரபு உடைப்பு

ஒத்த அன்புநிலையின் விளைவு அன்பு. இந்த அன்பினை வெளிப்படுத்த ஒரு ஆடவன் கூக்குரலிடலாம். ஆனால் பெண் என்பவள் காதல் மொழி கூறுவது என்பது கூடாத ஒன்று. ஆடவன் தலைவியைப் பகற்குறி, இரவுக்குறி எனச் சந்திக்கலாம். ஆனால் பெண்ணுத்தடை உண்டு. மரபினைப் பெண் மீறக் கூடாது. தலைவி தன் தலைவனைத் தேடி வருவது என்பது ஏற்கொணாதது சாகுதற்குரிய ஒன்று என்பதை,

"காதலனைத் தேடி ஆவும் தனியாகவா?
காதலியும் காதலனைத் தேடி வருவாள்
அன்பு செலுத்துவதற்கு என்ன முறை
வேண்டிக் கிடக்கிடது? நல்லது"

என்ற ஔவை நாடக வரிகள் காதலைப் பெண் உரைக்கக் கூடாது என்பதற்குப் பாண்மகள் கூற்றும் மாறாக ஔவை கூற்றால் பெண் மரபுடைப்பு

உடைத்தெறியப்படுவதும் அறியலகிறது. இலக்கியம் அகம், புறம் என்பதை முறைப்படுத்தினாலும் அகம் இந்நிலையில், இது பாடுபொருள். இதைக் கூறுவன என்ற அகப்பாடல் மரபு என்பதை மீறிய செய்தியை மேற்கண்ட ஔவை நாடக வரிகள் புலப்படுத்துகின்றன.

ஔவை பாடிய அகப்பாடல் இயல்பு

ஔவை நாடகத்தில் இடம்பெறும் ஔவையின் அகப்பாடல். அவளது அகப்பாடல் தலைவியர் தன் உணர்வை வெளிக்காட்டிடும் வகையில் அமைந்துள்ளது. ஔவை படைப்பில் தலைவியர் முழுச் சுதந்திரம் பெற்று உலாவி வருகின்றனர். பெண் காதல் நிலையால் புலம்பிய புலம்பல்களைக் கண்டிப்பவையாகத் திகழ்கின்றமைக்கு ஔவை என்ற பாத்திரத்தின் வாயிலாக

"பெண் உணர்வற்றவளா?
ஆடவர் படைப்பில் பெண் கூண்டுக்குள் முடங்கலாம்
என் படைப்பில் அவள் சிறகுகள் விரிப்பாள்
என் பாட்டுத் தலைவியர் ஊமையும் அல்லர்
பேயாடுகிறவரும் அல்லர். உணர்வுகளைப் பேசுகிறவர்கள்"

என்ற வரிகள் பெண்ணும் தன் காதலை வெளிப்படுத்த நிற்கும் தன்மையள் என்பது வெளிப்படுகிறது. ஔவை தன் படைப்பில் பெண்ணுக்கு மரபு என்ற போர்வையைக் கிழித்து அவள் படைப்பின் தலைவியரை உணர்வோடு உரையாட விட்டு நிற்கிறாள் என்பதும் புலனாகிறது. ஔவை நாடகத்தில் பெண்ணுக்கு உணர்வுகளை, உரிமைகளை அளித்து வாழும் பொருட்டுச் செய்த இன்குலாப்பின் புது முயற்சி ஔவை நாடகம். இதில் ஔவை என்ற தொன்மையை மீட்டுருவாக்கம் செய்வதன் வாயிலாக மாரடைப்பு வெளிப்படுகிறது.

முடிவுரை

ஔவை நாடக ஆசிரியர் இன்குலாப், பல்வேறு ஔவைகளை நாடகத்தில் காட்சிப்படுத்துகிறார். இதன் வாயிலாகச் சங்ககால ஔவையின் அகப்பாடல்களில் பெண் உரிமை நாட முன்வந்தவள் ஔவை. எனவே அவள் படைப்பில் பெண்களுக்கு அளித்துள்ள வரையறையை அழுத்து மரபாகிய தன்மையை உடைத்துச் செயல்படும் மரபு மீறல் சிந்தனைகள் இன்குலாப் படைத்த ஔவை வாயிலாக வெளிப்படுகின்றன.

பார்வை நூல்கள்

1. ஔவை - இன்குலாப்
இரண்டாம் பதிப்பு : ஜூன் : 2000
அகரம் அச்சகம்.

# சமூகச் சிக்கல்களும் அதைக் களைய இஸ்லாம் காட்டும் வழிமுறைகளும்

ர. கோரி ஜான
முனைவர் பட்ட ஆய்வாளர்.
இஸ்லாம் மற்றும் இஸ்லாமியத் தமிழியல் துறை

சமயத் தத்துவம் என்பவை முழுமையான சமூக உருவாக்கத்திற்கான கருத்தியல்களையும் நடைமுறை நிகழ்ச்சி நிலைகளையும் வகுத்துச் செயல்படுபவை எனலாம். சகிப்புத் தன்மை, நடுநிலை, சமத்துவம், சமாதானம், அகிம்சை, அன்பு, கருணை, நீதி, ஒருமைப்பாடு போன்ற குறிக்கோள்களையே சமயங்கள் முதன்மைப்படுத்துகின்றன. அந்த முறையில் இஸ்லாம் மார்க்கமானது சமுதாய அமைப்புடன் தனி மனித வாழ்க்கையுடனும் எந்தளவிற்கு ஊடுருவியுள்ளது என்பதையும் சமூக உறவுகளில் சமய அமைப்புக்கள் எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளன என்பதை விளக்கும் விதமாகவும் இக்கட்டுரை அமைகிறது.

சமூகச் சிக்கல்கள் என்பவை எல்லாச் சமூகங்களுக்கும் பொதுவானவை தான் என்று ஏற்றுக் கொண்டாலும் ஒரு சமூகத்தால் சிக்கலாகக் கருதப்படுகின்ற செயலானது மற்றொரு சமூகத்தால் சிக்கலாகக் கருதப்படுவதில்லை என்பது உணர்ந்ததே. சமூகச் சிக்கல்கள் சமூக நிலையமைப்பைச் சிதைவுறச் செய்கின்றன.

சிக்கல்

ஒரு மனிதன் சிக்கலில் அகப்பட்டுத் தவிப்பது தனி மனிதச் சிக்கல் என்றும் பல மக்கள் நேரடியாகவோ மறைமுகமாகவோ சிக்கலினால் துன்பப்படுவது சமூகச் சிக்கல் என்றும் சொல்லப்படுகிறது.

சிக்கலை இரு வகையாக விபரித்தாலும் ஒன்றின் தொடர்பாக மற்றொரு சிக்கல் உருவாவதை அறியலாம். தனி மனிதனால் சமுதாயமும் சமுதாயத்தினால் தனி மனிதனும் ஆக்கவும் காக்கவும் படுவதால் சமூகதின் தனி அழகான மனிதனும் மனிதர்களின் கூட்டான சமூகமும் நேரடியாகவோ, மறைமுகமாகவோ சமூகச் சிக்கல்களினால் தூண்டப்படுவதோடு துன்பப்படுகிறார்கள், பாதிக்கப்படுகிறார்கள். குறிப்பாக தனி மனிதச் சிக்கல்கள் தனி மனிதனைபத் தாக்கும் சிக்கல்களாகின்றன. இதற்கு தனி மனிதனும் அவனது சூழ்நிலைகளுமே காரணமாகின்றன என்று கூற முடிகிறது.

சமூகச் சிக்கல் என்பது "எதிர்பாராத மற்றும் மறைமுகமாக ஏற்றுக் கொள்ளக் கூடிய நடத்தையின் மூலம் மதிப்பை ஏற்படுத்தக்கூடியது" என்று விளக்கமளித்துள்ளனர்.

தனி மனிதர்கள் அல்லது குழுக்கள் சமூகத்தில் வழக்கத்திற்கு ஒவ்வாத சமூகத்திற்கு ஊறு விளைவிக்கின்ற நடவடிக்கைகளில் ஈடுபடும் போது அவர்கள் சமூக எதிரிகளாகின்றனர். அச்செயல்கள் சமூகச் சிக்கல்களாகின்றன.

சமூகச் சிக்கல்களாகக் கருதப்படுபவை - புகைபிடித்தல், மது

அருந்துதல், போதைப் பொருட்கள் உட்கொள்ளுதல், விபச்சாரம், பாலியல் வன்முறை, நீதி தவறுதல், லஞ்சம், ஊழல், வறுமை, பசி, வேலையின்மை வரதட்சணைக் கொடுமை, வன்முறை தீண்டாமை, சாதிப் பிரிவினை, மற்றும் சமயத் தீவிரவாதம் போன்றவை.

மனித வாழ்வில் முதன்மையான இடம் வகிக்கின்ற சமயமானது பல்வேறு தொல்லைகள், சிக்கல்களுக்கு விடுபட காரணியாய் அமைகிறது. தனி மனித ஒழுக்கத்தையும், சமுதாய ஒழுக்கத்தையும் பேணி வளர்ப்பதற்கு சமயம் உதவி வருகின்றது.

பல்வேறு காரணங்களினால் மக்களிடையே சமயப்பற்று ஒழுக்கம், சமுதாய விழுமியங்கள் மாற்றமடைந்துள்ளதோடு சமுதாயச் சீரழிவுகளும் சிக்கல்களும் மேலோங்கி உள்ளதையும் உணர முடிகின்றது.

சமயங்களில் நோக்கமானது உலக நன்மையும் உலக சமாதானமுமே. ஆனால் இன்று பலர் சமாதானத்தை குழப்பும் ஒரே நோக்கத்தில் சமயத்தைப் பயன்படுத்துவது வருந்தத்தக்கதாகும்.

இன்றைய நிலையில் மிகவும் தேவையாய் இருப்பது தனிநபர் ஒழுங்கை கடைபிடிப்பதாகும். தனிநபர் ஒழுங்கின் மூலம் சமூகச் சீரழிவுகளையும் சிக்கல்களையும் தவிர்க்க முடியும். நன்னடத்தைக் கோட்பாட்டின் வாயிலாக சமுதாயத்தில் நடைமுறையிலிருக்கின்ற சம்பிரதாயங்களையும், மரபு வழி பழக்கவழக்கங்களையும் முறையான நன்னடத்தையையும் குறிப்பதாகும்.

இஸ்லாமும் சமூகச் சிக்கல்களும்

மக்கள் தங்கள் கரங்களால் எதைச் சம்பாதித்தார்களோ அதன் காரணமாக தரையிலும் கடலிலும் அராஜகமும் குழப்பமும் தோன்றிவிட்டிருக்கின்றன. அவர்கள் அவற்றிலிருந்து விலகிக்கொள்ளும் பொருட்டு அவர்கள் செய்த சில செயல்களின் விளைவை இம்மையிலும் ருசிக்கும்படி அவன் செய்கிறான். (குக் ஆன் 30:41) என்ற இவ்வசனம் முகப்பொருத்தமாக பிரதிபலிக்கின்றது.

ஒரு நாட்டில் குழப்பமும் சமூகச் சீரழிவுகளும் மலிந்திருப்பதற்கு அந்நாட்டு மக்கள் தான் பொறுப்பாளிகளாவர். சிக்கல்களும் குழப்பங்களும் தோன்றுவதற்கு உளவியல், சமூக பொருளாதார அரசியல், கல்வி நிலை குறித்த காரணங்களே காரணியாக ள்ளன. எனினும் மனிதனுக்கு நன்மை தீமைகளைப் பிரித்தறிந்து செயலாற்றும் சுயவிருப்பு தீர்மானம் இருப்பதனால் சமூகச் சிக்கல்களுக்கும் சீரழிவுகளுக்கும் தனி மனிதனும் அவனது கூட்டான சமூகத்திற்கும் முக்கிய பங்குண்டு என்ற கருத்தை இஸ்லாம் அடிப்படையாய்க் கொண்டுள்ளது.

இறையச்சம் இன்றி வாழ்ந்து மக்களின் உரிமைகளைப் பறிக்கும் போதும் மனிதன் இயற்கையாக எந்தச் செயல்களைத் தீமைகள் என்று மனித சமுதாயம் கருதி வந்ததோ, எந்தச் செயல்களை இறைவன் அளித்த எல்லா 'ரியத்துக்களும் மார்க்கங்களும் தீமைகள் என்று எடுத்துரைத்தனவோ அதனை வேரூன்றித் தழைக்கவிடும் போதும், நன்மைகள் எனக் கருதுவதை வளரவிடாமல் நசுக்கி அழிக்கும் போதுதான் சிக்கல்கள் தோன்றுகின்றன"

என்று சமூகச் சிக்கல்களின் தோற்றம் குறித்து புத்தமைப்பில் ஜமாத்தே இஸ்லாமி ஹிந்த் எனும் நூலின் அ.'.ப்ஸல் ஹுஸைன் விளக்கமளித்துள்ளார்.

சமூகச் சிக்கல்கள் தோற்றுவிக்கும் குழப்பங்களுக்கும் அழிவுகளுக்கும் சட்ட மீறல்களுக்கும் தனி மனிதனும் சமூகமும் எவ்வளவு தூரம் பொறுப்பாக இருக்கின்றன என்பதை தீர்மானிப்பது அவற்றைக் களைவதிலும் இஸ்லாம் முக்கிய கவனம் செலுத்துகிறது. குறிப்பாச் சமூகச் சிக்கல்களைத் தோற்றுவிக்கும் சூழ்நிலைகளை ஒழித்து சமுதாயத்தைத் தூய்மைப்படுத்துவதை கருத்தில் கொண்டுள்ளதை அதன் குற்றமும் தண்டனையும் பற்றிய கோட்பாட்டடிப்படையில் புரிய முடிகின்றது.

சமூகச் சிக்கல்களைத் தூண்டக்கூடிய சூழ்நிலைகளைக் களைவதற்குரிய வழிவகையாக 'ஜக்காத்' தையும் ஒழுக்கம் பேணப்படக் கூடிய முறையில் சமூக உறவு முறைகளையும் இஸ்லாம் வலியுறுத்துகின்றது. சமூகச் சிக்கல்களில் முதன்மையாகக் கருதப்படுவது பொருளாதார நிலைப்பாடே ஆகும்.

"இஸ்லாத்தில் சாதிகள், பேதங்கள், உயர்வு தாழ்வுகள் கிடையாது. பிறவியின் காரணமாய் சாதி பர்குபாடும் மேன்மையும், இழிவும் கிடையாது. சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் இஸ்லாம் ஒரு கடவுள் ஒரு சாதி அதாவது ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற அடிப்படையைக் கொண்டது" எனத் தந்தை பெரியார் இன இழிவு ஒழிய இஸ்லாமே நன்மருந்து எனனும் நூலில் விளக்குகின்றார்.

சமூக ஏற்றத்தாழ்வுகளையும் பேதங்களையும் இஸ்லாம் அனுமதிக்கவில்லை. சாதி, இனம், நிறம், மொழி, நாடு இவற்றால் பேதங்கள் பார்க்காமல் மனிதன் என்ற அளவில் பார்க்கச் சொல்கிறது இஸ்லாம். மனிதத் தன்மையுடன் வாழும் போது தேவையற்ற சிக்கல்களைக் களைய முடியும்.

முடிவாகக் கூறுவதானால், ஏற்றத்தாழ்வான வளப்பங்கீடு வன்முறை வெடிப்பதற்கான காரணங்களில் ஒன்றாக உள்ளது. இந்தியாவிலும் கூட சாதி, சமயச் சிக்கல்களுக்குப் பெரிதும் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளையே காரணமாகச் சொல்ல முடியும். எனவே சமூகத்தின் பலதரப்பட்ட மக்களுக்கும் உணவு, உடை, இருப்பிடம் உள்ளிட்ட அத்தியாவசியத் தேவைகளை ஈடுகட்டுவதற்கான வேலை வாய்ப்பு, இறைய தலைமுறையினருக்கு இலவச கல்வி மற்றும் சிறுபான்மையினர் வாழும் நாடுகளி அவர்களின் இனத்தை அல்லது சமயத்தை அடிப்படையாக கொண்ட வளர்பகிர்வு, இட ஒதுக்கீடு, வேலை வாய்ப்பு. சமூகப் பாதுகாப்பை உறுதி செய்தல் ஆகிய மக்கள் நலன்களை உடனடியாக அல்லது மறு கட்டுமானம் செய்வதன் வாயிலாக சமூக வன்முறைக்கும் தீவிரவாதச் செயல்களுக்கும் முற்றுப்புள்ளி வைக்கலாம்.

# குழந்தைகளின் ஆளுமை வளர்ச்சி

சு. சந்திரசேகர்,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
ஒப்பிலக்கியத் துறை, தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

மனிதன் பண்பினால் உயர்ந்து விளங்குவதற்கு அவனது ஆளுமையே அடிப்படையாக அமைகிறது. கால மாற்றங்களுக்கு இடையில் வளர்ந்து வரும் நாகரீக வாழ்வில் ஆளுமை மிக முக்கியமான ஓர் இடத்தைப் பெற்றுள்ளது. மனிதன் பிறப்பு முதல் சமூகச் சூழ்நிலைகளினால் அவனது ஆளுமை உருவாக்கப்படுகிறது. மனிதனின் பிற்கால வாழ்விற்கு அடித்தளமாக, ஆதாரமாக அமைவது அவனது குழந்தைப் பருவ வாழ்வே காரணமாக அமைகிறது. குழந்தைப் பருவத்தில் தோன்றும் ஆளுமையின் முக்கியத்துவத்தை அறிவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

Personality என்னும் ஆங்கிலச் சொல் முகமூடி என்று பொருள் படும். Persona| என்னும் சொல்லினின்று பிறந்தது. ஆளமை என்பது ஒருவர் பூணும் 'வேடம்' அவர் வகிக்கும் 'அங்கம்' பிறர் அவரைப் பற்றி என்ன நினைக்கின்றார்கள் என்பதேயாகும். இதன்படிப் பார்த்தால் "ஒருவர் எப்படித் தோன்றுகிறார் எப்படிப் பிறரைப் பாதிக்கிறார். பிறரை எப்படித் தூண்டுகிறார் என்னும் சமூகத் தூண்டல் மதிப்பே ஆளுமையாகும்" என்கிறார் அகோல்கர். (சமூக உளவியல், ப. 186). ஒரு மனிதன் வாழ்ந்து வருகின்ற பண்பாட்டுடன் அவனுடைய ஆளுமை நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. ஆளுமை என்பது ஒருவனை ஆற்றல் வாய்ந்தவனாக மாற்றுகிறது. மற்றவர்களின் மீது செல்வாக்குடையவனாகத் திகழச் செய்கிறது. சமூக சட்டதிட்டங்களுக்கு ஏற்றபடியாக மனிதன் தன்மை மாற்றியும் அடக்கியும் கொள்கிறான். இதற்கு அவன் வாழும் சூழ்நிலை பெரிதும் உதவும். அவன் பிறந்து வளரும் குடும்பம், பழகும் தோழர்கள், கல்வி பயிலும் பள்ளிகள், வாழும் ஊர் முதலயிவற்றின் நிலைமைக்கு ஏற்றபடி அவனது ஆளுமை வளர்ச்சியடைகிறது.

மனிதன் தன்னுடைய நடத்தை மாற்றங்களுக்காக மட்டும் சமூகத்தோடு தொடர்பு கொள்ளவில்லை. ஆளமை வளர்ச்சிக்காகவும் சமூக மயமாகின்றான். இதன் விளைவாகப் பண்பு நலன்கள், பழக்க வழக்கங்கள், உளப்போக்கு போன்ற ஆளுமைத் தன்மைகள் உருவாகின்றன. "பிறப்பில் தோன்றும் ஆளுமையின் நிலைகள் மூன்றாகும், ஒன்று கருத்தரித்தல், இரண்டு பிறத்தல், மூன்று 'நான்' அல்லது 'தான்' என்ற தன் மயத்தின் வளர்ச்சி" என்கிறது குழந்தை உளவியல் (டி. ஜெர்சீல்ட், குழந்தை உளவியல் தொகுதி ஒன்று, ப.3)

பிறந்து சில வாரங்கள் ஆவதற்குள் குழவியிடத்து இயங்காற்றலிலும், மனப்பாங்கிலும் சில தனிப்பண்புகளைக் காண இயலும். இப்பண்புகளின் அடிப்படையாக நாம் அக்குழந்தையின் எதிர்கால வாழ்க்கையைப் பற்றிச் சிலவற்றை முற்கூற முடியும். ஆகையால் இப்பண்புகளை ஆளுமையின் அறிகுறிகளாகக் கொள்ளலாம்.

குழந்தைகள் தம்மைச் சுற்றி இருப்பவர்களிடமிருந்து தான் எல்லாவற்றையும் கற்றுக் கொள்கிறது. பச்சிளங் குழவிப் பருவத்தில் இருந்தே தோன்றத் தொடங்கி விடும் இந்தத் 'தான்' அவன் உயிரோடிருக்கும் காலம் முழுவதும் ஆக்கம் பெற்றுக் கொண்டே செல்கின்றது. இந்நிலையினை ஃப்ராய்டு விளக்கும்போது, "பொதுவாகக் குழந்தைப் பருவத்து அனுபவங்கள் அடிமனத்தில் தங்கிப்பின் பெரியவனாகும் பொழுது அவனது ஆளுமைத் தன்மை உருவாகக் காரணம் ஆகின்றன" என்கிறார். (மேற்கோள் : இரா. காஞ்சனா, இலக்கியமும் உளவியலும், வி'ஜுப்ரியா பதிப்பகம், மதுரை-19, ப.100)

குழந்தைகளின் பிற்கால ஆளுமை வளர்ச்சி சிறப்பா அமைவதற்கு இளம் பிராயத்திலிருந்தே அவர்களது உடல், உள்ளம், அறிவு, சமூகம், சார்ந்த வளர்ச்சிக்கான தேவையினைப் பூர்த்தி செய்தல் அவசியமாகும். இளஞ்செடி போன்று குழந்தை இயற்கையாக வளர முடிவதில்லை. வளர்ப்பவர்களின் உணர்ச்சிகளும் விருப்பு, வெறுப்புகளும், அறியாமையும், அறிவும், குழந்தைகளின் வாழ்வை பலவாறு மாற்றியமைக்கும் சூழல்களே காணப்படுகின்றன.

குழந்தைகள் சிறந்த முறையில் ஆளுமை வளர்ச்சியடைவதற்குத் தாயின் பொறுப்பு (ழேசஅயட "நசளழயெடவைல னுநஎநடழிஅநவெ) இன்றியமையாதது. தாயோ அல்லது தகப்பனோ அல்லது இருவருமோ இல்லாத நிலையிலுள்ள குடும்பத்தில் வாழும் குழந்தைகளின் ஆளுமை வளர்ச்சி சிறந்த முறையில் அமையும் வாய்ப்பு குறைவாகவே காணப்படுகிறது. ஒரு குழந்தைக்கு வளர்ச்சியானது ஓர் இடத்தில் மட்டும் நடைபெறுவதில்லை. அவ்வளர்ச்சிக்கு உதவுபவரும் ஒருவராக இருப்பதில்லை. அவர்களின் வளர்ச்சியானது பல்வேறு இடங்களில், வெவ்வேறு சூழ்நிலைகளில், பலதரப்பட்ட மனிதர்களால் ஏற்படுகிறது. குழந்தைகளின் வளர்ச்சியில் பெரும்பங்கு வகிக்கும் இடங்கள் வீடும், பள்ளிக்கூடமே ஆகும். அதுபோல பெரும் பங்கு வகிப்பவர்களும் பெற்றோரும் ஆசிரியருமே ஆவர்.

ஒரு குழந்தையின் ஆளுமையிலும் வளர்ச்சியிலும் அதன் குடும்ப உறுப்பினர்கள், அண்டையிலுள்ள அயலார், விளையாடுமிடம், படிக்கும் கல்வி நிலையங்கள் ஆகிய அனைத்தும் பெரும் பங்கு கொள்ளக் கூடியனவாகும். சின்னஞ்சிறு குழந்தைகளின் உள்ளம் மலரினும் மென்மையானது. அழகு, உண்மை, நேர்மை இவற்றை வளர்க்கவே நாம் தொடர்ந்து முயற்சி மேற்கொள்ள வேண்டும்.

குழந்தைகள் பிற குழந்தைகளையும், பெரியோரையும் பின்பற்றுகிறார்கள். பிறருடைய செய்கை, உடை, இயக்கம், பேச்சு முதலியவற்றைப் பார்த்து அப்படியே பின்பற்றவும் ஆரம்பிக்கின்றனர். ஆளுமையின் பல தன்மைகளின் அடிப்படைகள் ஆரம்பப் பள்ளி வயதில் தான் உருவாகி வளருகின்றன. "குழந்தைப் பருவத்திலேயே (சுமார் 6-8 வயதிற்குள்) ஆளுமைக் கட்டமைந்து விடுகின்றது. அதன் பிறகு ஏற்படுகின்ற உளச் செயல்கள் குழந்தைப் பருவ அனுபவங்களின் அடிப்படையிலானவை.

பிறந்த உடல் வளர்ச்சியடைந்து ஒரு கூட்டத்தில் முழு வடிவம் பெற்று நின்று விடுவது போல் உள்ளமும் வளர்ச்சியடைந்து (சுமார் ஏழு வயதில்) நின்று விடுகிறது. குழந்தைப் பருவத்தில் கட்டமைந்த எண்ணங்கள், உணர்வுகள் தான் ஆளுமையாகின்றன" என்கிறார். பிராய்டு. (தி.கு. இரவிச்சந்திரன் (மொ.பெ), சிக்மண்ட் ஃபிராய்ட், உளப்பகுப்பாய்வு அறிவியல், அலைகள் வெளியீட்டகம், சென்னை, பக் 396, 397)

பெற்றோர்களின் தன்மையும், நடத்தையும் குழந்தைகளை வளர்க்கும் முறையும் ஆளுமையே உருவாக்குவதில் பெரும்பங்கு கொள்கின்றன. அடிக்கடி இடித்துக் கூறுவதும், பழிப்பதும், கடுமையான கட்டுப்பாட்டிற்குள் நடத்துவதுமாயுள்ள தாய், தந்தையர்களால் வளர்க்கப்பட்ட குழந்தைகள் பள்ளியிலும் மற்ற பொது இடங்களிலும் தொல்லை கொடுக்கக் கூடியவர்களாகவே விளங்குகின்றனர். "சிறுவயதில் மனத்தில் பதியும் எண்ணங்களும், உணர்ச்சிகளும் மாற்றியமைவது சிரமம்" என்கிறார் க. அருணாசலம். (குழந்தையின் சுதந்திரம், ப.2)

குடும்ப உறவுகளில் விரிசல் ஏற்படும்போது, அக்குடும்பத்தில் அடிக்கடி குழந்தைகளின் முன்னிலையில் சண்டையிட்டாலே, அக்குழந்தை தன்னை யாரும் விரும்பவில்லை. தனக்குச் சரியான பாதுகாப்பு இல்லை. தன்னைப் பெற்றோர் ஒதுக்குகின்றனர், புறக்கணிக்கின்றனர், வெறுக்கின்றனர் என்றெல்லாம் எண்ணி உள்ளம் மடிவடைகின்றனர்.

தந்தையின் அறிவுரையைத் தட்டிவிட்டு வெளியில் சென்று, வெகு நேரத்ததை வீணாக்கி விட்டு, மனத்தில் குற்றச்சாட்டோடு வீடு திரும்புகின்ற குழந்தை, தந்தை கோபத்தோடு வீட்டினுள்ளிருப்பதை அறிந்ததும் வெளியிலிருந்தவாறே நடுக்கம் கொள்ளுகின்றான். தொடர்ந்து இது போன்ற நிகழ்ச்சி குழந்தையின் வாழ்க்கையில் நடைபெறுமானால், அதுவே ஆளமையின் ஒரு பழக்கமாக மாறி விடுகின்றது. நாள்பட்டதான நடுக்க உணர்வைக் கொண்டுள்ள குழந்தை அடிக்கடி தன்னச் சுற்றியுள்ள போராட்டத்திற்கான தூண்டல்களைக் கூடவே கொண்டு செல்லுகின்றான். இந்நிலையானது அவன் தனக்குரிய பாதுகாப்பைப் பெற்றிருக்கவில்லை என்பதைக் காட்டுகின்றது.

குழந்தைகளின் அறிவு முறையாக வளர்வதற்கு வசதியாக அவர்கள் விரும்புவதைத் தேர்ந்தெடுக்க சுதந்திரமாக அனுமதிக்க வேண்டும். அதில் தவறு செய்தால் கூடப் பரவாயில்லை என அனுமதிக்க வேண்டும். குழந்தைகள் செய்யும் தவறுகளை அவர்களே உணரும் வண்ணம் அவர்களுக்குப் போதிக்க வேண்டும். பொறுமையான முறையில் கையாண்டு அவர்களை நல்வழிக்குக் கொண்டு வர வேண்டும். புதிய சமுதாயம், புதிய மானிடம் அமைக்க விரும்புபவர்கள், கனவு காண்பவர்கள் அதைக் குழந்தையிடம் தொடங்க வேண்டும்.

# வேடசந்தூர் வட்டார நாட்டுப்புறப் பாடல்கள்

யு. கார்த்திகேயன
முனைவர் பட்ட ஆய்வாளர்
செந்தமிழ் கல்லூரி, மதுரை தமிழச் சங்கம்

முன்னுரை

தமிழகத்தின் உள்ள பல்கலைக்கழகங்கள் தற்காலத்தில் நாட்டுப்புறவியல் ஆய்விற்கு முக்கியத்துவம் அளித்து வருகின்றன. நாட்டுப்புற மக்களின் அனைத்து வாழ்க்கைக் கூறுகளின் வெளிப்பாடாக நாட்டுப்புறப் பாடல்கள் அமைகின்றன. நாட்டுப்புறப் பாடல்கள் தாமாக மலர்ந்து மணம் வீசும் காட்டு மலருக்கு ஒப்பானவை. செயற்கை அரண் இன்றி பெருகித் தழைத்தவை. இயற்கையோடு இயைந்த வாழ்க்கை நடத்தும் மக்களின் உள்ளக்கிளர்ச்சிகளை வெளியிடும் தன்மை வாய்ந்தவை. நாட்டுப்புறத்து மக்களின் ஆசை, நம்பிக்கை, கனவு, வழிபாடு, காதல் ஆகிய எல்லாவற்றையும் அவை பொன்னொளி வீசி போற்றுகின்றன. இவ்வடிப்படையில் வேடசந்தூர் வட்டார நாட்டுப்புறப் பாடல்கள் என்னும் தலைப்பை ஆய்வுக் களமாக கொண்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

வேடசந்தூர் அறிமுகம்

கன்னியாகுமரியிலிருந்து பெங்களூர் செல்லும் தேசிய நெடுஞ்சாலையில், திண்டுக்கல்லிலிருந்து வடக்கே சுமார் பத்தொன்பது கிலோ மீட்டர் தொலைவில் 'வேடசந்தூர்' அமைந்துள்ளது. வேடசந்தூர் ஊராட்சி ஒன்றியம், வடமதுரை ஊராட்சி ஒன்றியம், குஜிலியம்பாறை ஊராட்சி ஒன்றியம் என்று மூன்று ஊராட்சிகளை வேடசந்தூர் உள்ளடக்கியதாகும். வேடசந்தூரின் பெயர்க் காரணம் பற்றி சோமலே, இங்கு வாழ்ந்த வேடர்களின் சந்தை இங்கு கூடியதால் 'வேடசந்தையூர்' எனப் பெயர் ஏற்பட்டு அச்சொல் 'வேடசந்தூர்' எனத் திரிந்தது, என்று குறிப்பிடுகின்றனர். இவ்விளக்கம் பொருத்தமானது எனலாம். இவ்வூர் நகரப் பேருந்துகள், விரைவுப் பேருந்துகள், தனியார் பேருந்துகள் என்ற அளவில் சிறப்பான போக்குவரத்து வசதிகளைக் கொண்டு விளங்குகிறது. விவசாயம் தான் இவ்வட்டாரத்தின் முக்கியத் தொழிலாகும், வேடசந்தூரில் மத்திய அரசால் நிறுவப்பட்ட புகையிலை ஆராய்ச்சிப் பண்ணை என்ற நிறுவனம் உள்ளது. இவ்வட்டாரத்தில் இந்துக்கள் மிகுதியாக வாழ்ந்து வருகின்றனர். இஸ்லாமிய மதத்தினரும், கிறிஸ்துவ மதத்தினரும் சிறுபான்மையினராக வாழ்ந்து வருகின்றனர்.

தாலாட்டுப் பாடல்கள்

தாய், ஆழம் காண முடியாத ஓர் அன்புக் கடல். அந்த அன்புக் கடலில் விளைந்த வலம்புரி முத்தே தாலாட்டு. உலகை விழிப்புறச் செய்யத் திருப்பள்ளியெழுச்சி பாடக் கேட்டிருக்கிறோம். விழிகளை மூடித் தூங்குவதற்குத் தாய் தாலாட்டு இசைக்கக் காண்கிறோம்.

'அழும் குழந்தைக்குத்தான் பால்' என்பது நாட்டுப்புற பழமொழியாகும். தாலாட்டு அப்படித்தான் குழந்தையை தொட்டியிலிட்டவுடன் உறங்கி விட்டால்

தாலாட்டுவதற்கு வேளையே இல்லை. அக்குழந்தை தூங்காமல் அழுவதால் தான் தாலாட்டுப் பாட வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அழுது கொண்டிருக்கும் குழந்தையைச் செல்லமாகக் கோப்பிக்கின்றாள் தாய். எனினும் அழுவதிலும் ஓர் இன்பம் அடைகிறாள். இதனை

"யாரும் அடிக்கவில்லை - என் கண்ணே
ஐ விரல் தீண்டவில்லை - ஏன்
ஊரார் அடிக்கவில்லை - என் கண்ணே
ஒருவரும் தீண்டவில்லை - ஏன்
வம்புக்கு நீ யழுதா - என் கண்ணே
வாயெல்லாம் தேனொழுக" - மீனாட்சி, குட்டம்

என்னும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

கும்மிப் பாடல்கள்

'கும்மி' என்பது நாட்டுப்புற ஆட்டக் கலைகளுள் ஒன்றாகும். இன்று கும்மியடித்தல் மக்களிடையே மிகவும் செல்வாக்குப் பெற்ற கலையாக வளர்ந்துள்ளது. 'கும்மி' என்பது மகளிர் கைகொட்டிப் பாடி ஆடுங் கூத்து என்று செந்தமிழ் அகராதி குறிப்பிடுகிறது. தமிழ்நாட்டில் இன்றும் பல ஊர்களில் மாரியம்மன், முத்தாலம்மன், பகவதியம்மன் போன்ற தெய்வக் கொடை விழாக்களில் பத்து நாட்கள் தொடர்ந்து கும்மிப் பாடல்கள் பெண்களால் பாடப் பெறுகின்றன. மேலும் பொங்கல் பண்டிகை, பெண்கள் பருவமுற்ற சடங்கு நிகழ்ச்சி, மாவிளக்கு ஏற்றல், பெண்கள் விரதமிருத்தல், முளைப்பாரியிடல், மழைவேண்டல் முதலிய நிகழ்ச்சிகளில் கும்மியடித்துப் பாடுவது வழக்கமாக உள்ளது.

"புத்துக்குள்ளே புத்துத் தோப்புக்குள்ளே - நல்ல
பூத்ததொரு கூடை மல்லிகைப்பூ
பூத்ததொரு கூடை மல்லிகைப்பூ
ஆயிரங்கண்ணுள் காளித்தாயிக்கு
அள்ளி முடிவதும் மல்லிகைப்பூவாம்" - மல்லிகா, கரட்டுப்பட்டி

என்ற பாடல் மல்லிகை மலரால் அம்மனை அலங்கரித்தது பற்றிக் குறிப்பிடுகின்றது. கள ஆய்வின் போது கிடைத்த கும்மிப் பாடலில் கார், மோட்டார், போன்ற வாகனங்களில் காளியம்மன் உலா வருவதாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன.

"மோட்டார் வருதைப் பாருங்கம்மா - மோட்டார்
முழங்கி வருவதைப் பாருங்கம்மா
முழங்கி வருவதைப் பாருங்கம்மா
மோட்டாருக்குள்ளே இருக்கும் நம்ம காளியாயி
மூக்கத்தி மின்னலைப் பாருங்கம்மா" - கருத்தம்மா, சித்தூர்

என்ற பாடல் வரிகள் நவீன வாகனங்களிலும் தெய்வம் உலா வருவது பற்றி குறிப்பிடுகின்றது.

"ஒண்ணாங் கரகமம்மா
ஒசந்தாடும் பூங்கரகம்
பூங்கரகம் மேலேயல்லோ

செவ்வரளி பூத்திருக்கும்" - தாயம்மாள், குடப்பம்

என்று காளியம்மன் கரகம் அலங்கரித்து வரும் நிகழ்ச்சியைக் கற்பனையழகுடன் மக்கள் பாடுகின்றனர்.

### தொழிற் பாடல்கள்

தொழிற்பாடல்கள் கிராமப்புற மக்கள், தொழில் செய்யும் போது பாடப்படும் பாடல்களாகும். தொழில் செய்யும் போது தங்கள் வேலைகளுக்கு இடையில் களைப்புத் தோன்றாதிருக்க நாட்டுப்புறத்து மக்கள் பாடுகின்றனர். இசையால் வேலைப்பளு குறைகிறது. வேதனை மறைகிறது என்பர். கள ஆய்வின் போது நடவுப் பாடல்கள், கதிரறுப்புப் பாடல்கள், தொழில் பாடல்களாக கிடைத்தன. நடவுத் தொழிலுக்குப் புதிதாக வந்த ஒரு பெண் இவ்வேலை தனக்கு செய்யத் தெரியாது என்றும், மீறிச் செய்யும் போது தனக்கு துன்பங்கள் உண்டாகும் என்பதை

"நாத்து நட்டு நானறியேன்
நடவு நட்டு நானறியேன்
சேத்துக்குள்ளே இறங்கச் சொன்ன
செல்லமாக வாடுறேனே" - ராணி, வேடசந்தூர்

என்று உருக்கமாக பாடுகின்றார்.

### சடங்கு முறைப் பாடல்கள்

நாட்டுப்புறப் பாடல்களில் சடங்குப் பாடல்கள் என்பன ஒரு வகையாகும். 'சடங்கு' நிகழ்ச்சிகள் நடைபெறும் போது பாடும் பாடல்கள் 'சடங்கு பாடல்கள்' என்லாம். தமிழ் மக்களைப் பொறுத்தவரை குடும்பங்கள், கிராமங்கள், கோயில்கள் தொடர்பான பல்வேறு பழக்க வழக்கங்கள் உள்ளன. பிறப்பு, பெயர் வைத்தல், காது குத்தல், பருவத்திற்கு வருதல், திருமணம், நோய், இறப்பு தொடர்பான பழக்க வழக்கங்கள் பல்வேறு சாதியினரிடம் பல விதமாகக் காணப்படுகின்றன.

### முடிவுரை

நாட்டுப்புறப் பாடல்கள் கிராமப்புற வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்புள்ளவை, வாழ்க்கையில் அன்றாடச் சம்பவங்களையே பொருளாகக் கொண்டவை. இதனால் தான் வாழ்க்கையின் சாதாரண சம்பவங்களான பிறப்பு, குழந்தைப் பருவ நிகழ்ச்சிகள், விளையாட்டுக்கள், காதல், பொருந்தாமனம், குடும்ப விவகாரங்கள், கிராமத் தொழில்கள், பஞ்சம், கிராமத் தேவைகள் முதலியவை நாட்டுப்புறப் பாடல்களின் பொருளாக அமைகின்றன. இவ்வகையில் தாலாட்டு, கும்மி, தொழில், சடங்கு, ஒப்பாரி என்று ஒவ்வொரு நிலைப் பாடல்களும் இப்பகுதி மக்களின் பண்பாட்டு நிலையை எடுத்தியம்புகின்றன.

### பார்வை நூல்கள்

1. முனைவர் ஆறு. அழகப்பன், நாட்டுப்புறப்பாடல்கள் திறனாய்வு -
2. இராமநாதன், ஆறு, நாட்டுப்புறப்பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல்
3. ஏ.என். பெருமாள் - கும்மிப்பாடல்கள்
4. சு. சக்திவேல் நாட்டுப்புற இயல் ஆய்வு
5. வேடசந்தூர் வட்டாரம் (கள ஆய்வு பகுதிகள்)

# மேடைத் தமிழும் அழகும்

பா.ராஜா. ஆய்வாளர்.
மொழியியல் துறை,
தமிழியற்புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம

முன்னுரை

முனிதன் பேசக் கற்றுகொண்ட பொழுதுதான் நாகரிகத்தின் உலக்குள் நுழைந்தான் என்கிறது சமுகவியல் ஆய்வு கூடுதலாக சொல்ல வேண்டும் என்றால் தனித்த காட்டு வாழ்க்கையிலிருந்து மனிதன் கூட்டு வாழ்க்கைக்குள்ளும் ஆற்றோரத்தில் குடிகொண்டு சமூக வாழ்க்கைக்குள்ளும் நுழைவதற்கு காரணமாக இருந்ததே பேசகற்றுக்கொண்டதன் விளைவுதான். பேசிப் பேசி பழகிதான் பேச்சு பக்குவமடைந்த சூழலிஅதை பதிவு செய்யும் விதமாக இலக்கியங்களை கூட படைக்க கற்கிறான். இந்நிலையில் பேச்சுத் தமிழைப் பற்றி குறிப்பாக மேடை பேச்சுப் பற்றி இக்கட்டுரை ஆராய்கிறது.

எந்த ஒரு இலக்கியத்தின் கதைக்கருவும், அது படைக்கப்படுகின்ற காலத்தில் உருவாக்கம் பெற்றது அல்ல. கிரேக்க இலக்கியத்தின் இடம்பெற்ற காப்பியங்களான "இலியட்" "ஒடுசி" என்ற இரு காப்பியங்களையும் படைத்தவரான ஊேறாமரை பற்றி குறிப்பிடும் பொழுது வரலாற்றுயியலின் தந்தை என்று அழைக்கப்படுகின்ற ஹெறரோ டெட்ஸ் (காலம் கி.மு 6ம் நூற்றாண்டு) ஊேறாமர் தன் தாத்தா சிறு குழைந்தையாக இருக்கின்ற காலத்தில் கிரேக்க நாடு முழுவதும் மேற்குறித்த இரண்டு காப்பியங்களின் கதைகளையும் ஊரு, ஊராக சென்று பேச்சு வழக்கில் பேசிவந்தார் என்ற குறிப்பினை தந்ததாக குறிப்பிடுகின்றார் இது ஒரு சான்று.

ஒரு இலக்கியம் வருவதற்கு முன்பு பல தலைமுறையாக அது பேச்சுத் மொழியிலேயே வளர்கிறது. தமிழ் இலக்கியத்தில் தலை சிறந்த காப்பியமான சிலப்பதிகாரம் அது இயற்றப்படுவதற்கு முன்பு பல நூறு ஆண்டுகளாக மக்கள் கூட்டமாக கூடி இருக்கின்ற பொது இடங்களில் வழங்கபட்டு வந்த பல்வேறு கதைகளின் தொகுப்பாகவே விளங்கியது என தொ.மு.சி.ரகுநாதன் குறிப்பிடுவார். இவ்வாறு மொழி வளர்வதற்கு பேச்சுமொழியே அடிப்படையாக விளங்கியது. தற்காலத்தில் இலக்கியங்கள் தம் பரப்பினை விரித்துக்கொண்ட சூழலில் பேச்சு என்பதும் பல்வேறு வகைகளாக பரிணாமம் பெற்றந்து.

மேடைப் பேச்சு

மொழியின் வெற்றி என்பது கருத்துக்களைப் புலப்படுத்துவதில் குறிப்படப்படுகிறது பொதுவாக எந்த ஒரு படைப்புக்கும் அது வாசகனை சென்று சேருவதில் தான் வெற்றி அடைகிறது. இலக்கியம், ஓவியம், சிற்பம், பிற கலைகள் என்று அனைத்தும் இதில் அடங்கும். மேடைப் பேச்சுக்கும் இந்த மாதிரி விதி பொருந்தும். பொதுவாக நிறைங கருத்துக்களை படித்து வைத்திருக்கும் மனிதர்கள் தயக்கத்தை காட்டுவதும் கற்றதற்கான அறிவை இழக்கச் செய்துவிடும். பேச்சு பலவாறாக குறிப்பிடப்படுகிறது.

வழக்காடுதல், பட்டிமண்டபம் பேச்சு, தனித்து உரையாடுதல் போன்று

வகைப்பட்டாலும் மேடைப்பேச்சு என்பது சமூக, அரசியல் இது போன்ற சூழலில் சிறப்பாக வளர்ச்சி பெற்றது. மேடைப்பேச்சுக்கு முதலில் பேச்சுக்குரிய மொழியை தெளிவாக கற்றிருத்தல் வேண்டும். எழுத்து வல்லமையைவிட மொழிப்பயன்பாட்டில் பேச்சு வல்லமையே சிறப்பென கருதப்படுகிறது. □மேடைப்பேச்சுக்கு நாவன்மை என்பது வெறும் பேச்சு மட்டும் அல்ல குற்றமில்லாத தூமைபயக்காத, நல்லெண்ணம் சுரக்குமாறு பேசுதல் போன்றவை உரியனவாக குறிப்பிடப்படுகிறது.

பேச்சாளரின் மொழித்திறன்

இலக்கியத்திற்கு இலக்கண மரபு போன்று மேடைப் பேச்சுக்கும் மரபுண்டு. பேச்சாளரின் இயல்புகள் தான் பேச எடுத்துக்கொண்ட பொருளை நிறைபெற செய்தல், தொடக்கம், பேச்சு இடை, முடிவு இவற்றிடையே கேட்போரின் கவனத்தை ஈர்க்கும் விதமாக பல மொழிகள், நகைச்சுவைகள், சான்றோர்களின் அறிவுத்தொடர்கள் போன்றவற்றை பயன்படுத்தவேண்டும்

குறிப்பாக பேச்சில் ஆர்வத்தை கூட்டும் விதத்தில் உண்மைக்கு புறம்பான செய்திகளை கூறுதல் கூடாது. துல்லியமான சான்றுகளைக் குறிப்பிடலாம். பேச்சாளன் இவ்வாறான திறன்களை கொண்டிருந்தால் அது மேடைப் பேச்சுக்கு தகுதியுள்ளதாக அமையும்.

மேடைப் பேச்சும் கேட்போரும்

மேடைப் பேச்சின் முதல் வெற்றி கேட்போரின் கவனத்தை சிதரவிடமால் நிறுத்தி தன் பக்கம் ஈர்ப்பது. இலக்கண பிழையற்ற எழுத்துக்கள் மற்றும் வார்த்தைகளின் உச்சரிப்பு தெளிந்த புரிதலை ஏற்படுத்தும். பேசத் தொடங்கியவுடன் தொடங்கியவுடன் தொடர்ந்து பேச்சை நிகழ்த்தி கொண்டிருப்பது மட்டும் பேச்சாகிவிடமுடியாது. எதிரில் அமர்ந்து கேட்போரின் தகுதி, சூழ்நிலை இவைகளையும் கவனத்தில் கொள்ளவேண்டும்.

மொழி சார்ந்த பண்பாடு மற்றும் சூழல் அறிவு

மேடைப்பேச்சில் இரண்டாவது வெற்றி சூழலுக்கு ஏற்ப பேச்சு நிகழ்த்துவது. கேட்பவர்கள் கிராமத்துவாசிகள், நகரவாசிகள், அரசியல் ஆர்வாளர்கள் இலக்கிய அண்ணா, எம்.ஜி.ஆர், கலைஞர், நெடுசெழியன், ஈ.வி.கே.ஏ.சம்பத் இன்னும் தமிழ் சான்றோர்கள் பலருடைய மேடைப் பேச்சுக்களை கேட்டுத் தான் தமிழகம் சுதந்திர காலத்திற்கு பிந்தய கட்டத்தில் பெரும் மாற்றத்தை சந்தித்தது. எளிமையான, உண்மையான துணிந்த மேடைப்பேச்சு மக்களிடையே மிகப்பெரிய மாற்றத்தை உருவாக்கும் என்பதற்கு பெரியாரின் மேடைப்பேச்சும், அறிஞர் அண்ணாவின் மேடைப் பேச்சும், காமராசரின் மேடைப்பபேச்சும் தக்கச் சான்றுகள்.

முடிவுரை

மேடைப் பேச்சுக்களால் தான் உலகில் பல்வேறு நாடுகள் அரசியல் மாற்றத்தையும், சமூக மாற்றத்தையும் கண்டன. ஆனால் இன்று மேடைப் பேச்சுக்கள் உயிர்நிலையில் இருந்து தாழ்ந்தே காணப்படுகின்றது. பொழுதுபோக்கு, பணம், புகழ், அரசியல் இவைகளுக்காக கேட்பவர்களின் சூழ்நிலைகளை புரிந்துகொள்ளாத மேடைப் பேச்சுக்களாலும் பேச்சாளர்களாலும் அக்கலை தாழ்ந்தே நிலையிலேயே உள்ளது.

# தமிழ்மொழி

தியாகராஜன்
தபெ. முத்துப்பிள்ளை,
36யு, ஆசிரியர் காலனி, முத்துப்பட்டி, மதுரை - 3.

முன்னுரை

தாய்மொழியான எனது தமிழ்மொழியின் பால் அதிக பற்றின் காரணமாக இறையருளால் தமிழ்மொழி வளர்ச்சிக்கு உதவக்கூடிய தமிழ்மொழி வளர்ச்சிக்கு உதவக் கூடிய தமிழ்மொழி எழுத்துக்களுக்கான எண் மதிப்பு அபூர்வமாக கிடைக்கப் பெற்று கடந்த 38 ஆண்டுகளாக எண்ணெழுத்து சாஸ்திர ஆராய்ச்சி செய்து வருகிறேன்.

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழுமுயிர்க்கு என்று திருவள்ளுவரும் எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும் என்று ஔவையாரும் அருளிய பொய்யாமொழிக்கொப்ப ஏற்கனவே ஆங்கில எழுத்தக்களுக்கு உள்ள எண் மதிப்பை ஆய்வு செய்து வந்ததில் பல புதியவைகளை கண்டுபிடிக்கும் வாய்ப்பு கிடைத்தது.

ஆங்கில பிறந்த தேதி அதிர்'ட எண் என்றம், பிறந்த தேதி மாதம் வருடம் கூட்டி வரும் மொத்தத்தின் ஓரிலக்க எண், விதி எண் என்றும் இதற்கு தகுந்தால் பொல் பெயருக்கான ஆங்கில எழுத்துக்களை எண் மதிப்பின் படி பயன்படுத்தி வருகிறார்கள்.

இந்த முறையில் பயன்படுத்தி எல்லோரும் வெற்றி கண்டுள்ளார்களா என்றால் சந்தேகம்தான்.

இதற்கு காரணம் ஜோதிட சாஸ்திரப்படி பிறந்த ஒவ்வொருவருக்கும் ஒரு சில கிரகங்கள் நல்ல பலனைத் தருபவர்களாகவும் ஒரு சில கிரகங்கள் எதிரான பலனைத் தருபவர்களாகவும் இருக்கிறது.

எந்த கிரகம் நல்ல பலனைத் தருமோ அந்தக் கிரகத்திற்குரிய எண் எது என ஜோதிட சாஸ்திரப்படி கண்டறிந்து அந்த எண் அதிர்'ட எண்ணாக கருதி ஆங்கில எழுத்துக்களை பயன்படுத்தி எழுதி வந்தால் நல்ல பலனைத் தரும்.

ஆனால் பிறந்த தேதி பலருக்கு ஜோதிட சாஸ்திரப்படி நல்ல எண்ணாக அமையாமல் பாதகமாக கிரக எண்ணாக அமைகிறது.

ஆகவே ஆங்கில பிறந்த தேதியின் படி பெயர் எண்ணை அமைத்துக் கொண்டவர்கள் பலர் வெற்றி அடையாததற்குக் காரணம், ஜோதிட சாஸ்திரப்படி சாகமான கிரக எண் தெரிந்து அதன்படி ஆங்கில எழுத்துக்களை பயன்படுத்தி தொடர்ந்து எழுதி வந்தால் அல்லது கையெழுத்து போட்டு வந்தால் நல்ல பலன் கிடைக்க வாய்ப்புள்ளது.

இதுவும் முழுமையான வெற்றி தருமா என்பது சந்தேகமே! ஏனென்றால் அந்தப் பெயர்களுக்கு பயன்படுத்திய பிறகு எந்த ராசிக்குரிய பெயர் என்பது தெரியுமா? அந்தப் பெயர் ராசிக்கு எட்டாமடப் பெயராக அமைந்தால் எழுத எழுத பயன்படுத்த நன்மையானதாக வெற்றி பாதையில் நடப்பதாகத் தெரியும். ஆனால் ஆபத்துடன் கூடிய வெற்றி நடையாக இருக்கும். பிரச்சினை மிகுந்த

நல்ல பலனைத் தரும்.

ஒரு எழுத்தை கூட்டினாலும் குறைத்தாலும் 'ராசி' மாறிவிடும். அந்த பெயர் எந்த ராசி என்பதை கண்டறிய வழிமுறை பலருக்கு தெரிய வாய்ப்பில்லை. இறையருளால் மட்டுமே அந்த வழிமுறை கிடைக்கும்.

உதாரணமாக என்னுடைய பிறந்த தேதி 12. அதன்படி 1,2ஸ்ரீ3 என்ற எண் எனக்கு அதிர்'ட எண் என்று கருதி என் பெயரை 3 எண் வரும்படி அமைத்து எழுதி எழுதி வெற்றிக்கு மாறாக தோல்விக்கு மேல் தோல்வி அடைந்தேன். பிறகு 3 எண் உள்ளவர்கள் 5 எண் வரும்படி பெயர் அமைத்தால்தான் வெற்றி கிடைக்கும் என்று படித்து 5 எண்ணில் பெயர் அமைத்து எழுதி வந்தேன். மேலும் க்'டம்.

5 எண் புதன் கிரகத்திற்குரியது. எனக்கு நல்ல பலனை கொடுக்கக் கூடிய கிரகம். ஆனால் நல்ல பலனை கொடுக்கவில்லையே. காரணம் ஏதோ பாதகமான ராசியில் அந்த 5-ம் எண் பெயர் அமைந்ததுதான்.

என்னுடைய பிறந்த ஜாதகப்படி குரு எனக்கு பாதகமானவர் என்று குறிப்பிட்டுள்ளது. பிறந்த தேதி 3. அதாவது குரு கிரகத்திற்கான எண் ஆக 3 எண் வரும்படி ஆரம்ப காலத்தில் பெயர் வைத்து எழுதி வந்தது மிகவும் க்'ட ந்'டத்தை கொடுத்ததை அனுபவித்தேன்.

இதுவரை ஒரு பெயரின் எழுத்துக்கக்கு 26 ஆங்கில எழுத்துக்களுக்கு உள்ள எண் மதிப்பை பயன்படுத்தி பெயரை சரிசெய்து எழுதி வெற்றி அடைவது பற்றி ஓரளவு விளக்கப்பட்டது.

அந்தப் பெயரை தினமும் பல முறை கூப்பிடுகிறோமே, அழைக்கிறோமே அந்த உச்சரிப்பு சப்த அவைக்கு, ஒலி அவைக்கு பலன் ஒன்றும் இல்லையா? அந்த ஒலி அலை எந்த எண்? எந்த ராசியை அந்தப் பெயர் சார்ந்துள்ளது?

இதைப்பற்றி யாரும் சிந்தித்தார்களா? தெரியவில்லை. உதாரணமாக : 'முழெற' என்ற வார்த்தைக்கு ஆங்கில எண் மதிப்பு 2576ஸ்ரீ20ஸ்ரீ2 மற்றும் மேூ என்ற வார்த்தைப்படி ஆங்கில எண் மதிப்பு 57ஸ்ரீ12ஸ்ரீ3. இருவேறு 2 மற்றும் 3 எண் கூட்டுத் தொகையா சந்திரன் மற்றும் குரு கிரகங்களுக்குரிய எண்ணாக வருகிறது.

ஆனால் அதன் உச்சரிப்பு சப்த ஒலி நோ என்ற ஒரே ஒலிதான். இந்த ஒலியின் எண் மதிப்பை அறிய ஆங்கில எண் மதிப்பு மூலம் வழியில்லை.

ஆனால் தமிழ்மொழி எழுத்துக்களின் எண் மதிப்புகள் மேற்கண்ட ஒலி அவைகளைின் எண்களை அறிய உதவியாக இருக்கிறது.

ஆனால் இந்தப் பெயர் ஒலிதான் மிகவும் முக்கியம். ஏனென்றால் குழந்தை பிறந்தவுடன் ஒரு பெயர் சூட்டப்பட்டு தினமும் அந்த பெயரால் அழைக்கப்படுகிறது.

ஒவ்வொரு மனிதனும் ஏதாவது ஒரு பெயர் மூலம் அழைக்கப்படுகிறான். அடிக்கடி தினமும் அழைக்கப்படுவதால் அந்த சப்த ஒலி அவையிலன் படி அவன் வாழ்க்கையில் பல நன்மை தீமைகள் உண்டாக அதிக வாய்ப்புள்ளது.

ஏனென்றால் அந்தப் பெயர் ஒலிக்கு ஒரு கிரக எண் உண்டு. அந்தப் பெயர் ஒலிக்கு ஒரு ராசியும் உண்டு.

மேலும் பல ஆண்டுகளின் ஆய்வின் படி இந்தப் பெயர் ஒலியின் காரணமாகவே அதிகமான நிகழ்வுகள் உலகில் நடக்கிறது.

பிறந்த ஜாதகப்படி ஒரு பல பலனும் இந்தப் பெயர் ராசிப்படி ஒரு பலனும் நடப்பதால் சிலர் பிறந்த ஜாதகப்படி நடக்காத போது ஜாதகம் பொய் அல்லது ஜோதிடம் பொய் என்று சொல்கிறார்கள்.

பிறந்த ஜாதகம் மாற்ற முடியாத விதியின் பலனை கண்ணாடி போல் காட்டும். விதியை மதியால் வெல்ல கொடுக்கப்பட்ட கலைகள் பல. அதில் ஒன்று எண்ணெழுத்து சாஸ்திரம்.

பெயர் ஒலியால் வெற்றி கண்டவர்கள் பலர். இறையருளால் வெற்றிப் பெயர் கிடைக்கப் பெற்றவர்கள் பலர். அரசர்களில் சிலர் சிவாஜி கணேசன், ரஜினிகாந்த், தேங்காய் சீனிவாசன், டெல்லி கணேஷ், கோவை சரளா போன்றவர்கள்.

வெற்றி பெயரால் பாதிக்கப்பட்டோரும் உண்டு. இங்கிலாந்து இளவரசி டயானா, தன் பெயரின் காரணமாக உயர்நிலை மற்றும் உலகப் புகழ் பெற்றார். ஆனால் அந்தப் பெயர் ராசிக்கு சனி கிரகத்தால் பாதிப்பு வரும்போது நிதானமாக கவனமாக எச்சரிக்கையாக இருக்க விடாமல் அவருடைய உலகப்புகழ் அவரை விரட்டியதாக தெரிகிறது, பத்திரிகை நிருபர்கள் ஏதாவது செய்தி கிடைக்காதா என்று பின் தொடர்ந்ததின் காரணமாக வேகமாக காரில் சென்றதால் விபத்து ஏற்பட்டது என்று செய்தி.

இன்று பத்திரிகைகளில் வரும் ஒவ்வொரு விபத்துக்களும் பின்னணியில் அவர்களுடைய பெயர் அல்லது மனைவி பெயர் அல்லது டிரைவர் பெயர் காரணமாக தெரிகிறது.

கங்குலி மற்றும் சச்சின் இந்திய கிரிக்கெட் ஜாம்பவான்கள். மேற்கண்ட பெயர் காரணமாக உயர்ந்துள்ளதை ஆய்வு வெளிப்படுத்துகிறது.

அந்தப் பெயர்களுக்கு சனி கிரகத்தால் பாதிப்பு ஏற்பட்ட போது சச்சின் காயம் பட்டு விளையாடாமல் இருந்து பிறகு விளையாடினார். ஆனால் 'கங்குலி' மிகவும் மோசமாக அவமானப்படுத்தப்பட்டு வெளியேற்றப்பட்டார்.

இத குறித்து கிரிக்கெட் போர்டுக்கு, இவரை திறமையும், யோகத்துடன் விளையாடினார்கள். சிறிது காலம் அவர்கள் திறமையை மட்டும் நம்பி கவனமாக விளையாட வேண்டும். ஆகவே மீண்டும் கங்குலியை இந்திய அணியில் சேர்க்க எழுதினேன். என் கடிதத்திற்கு மதிப்பு அளித்தார்களோ இல்லையோ அவர் திறமையை வெளிநாட்டில் விளையாடி காட்டினார், மீண்டும் அணியில் சேர்க்கப்பட்டு சிறப்பாகவே விளையாடுகிறார்.

எண்ணையும் எழுத்தையும் கண்ணாக கருதி எதிர்கால உலக மக்கள் இத்தெய்வீகக் கலைக்கு முக்கியத்துவம் கொடுத்து பயனடைய இறைவனை உளமார பிரார்த்திக்கிறேன்.

# இலக்கிய உரையாசிரியர்களின் உரைகளின் வழி விகாரம்

ஆ. சோமசுந்தரம்
தமிழுயற்புல ஆய்வாளர்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை 625 021.

உரையாசிரியர்கள் மூலநூலுக்கு உரையெழுதுகின்ற போது தத்தமது உரைக்குறிப்புகளில் மூலநூலில் ஏற்பட்டுள்ள விகாரங்களை எழுதிச் செல்கின்றனர். இவ்வாறு உரைகளில் விகாரம் என்று எழுதிச்செல்வதினால் உரைக்கு என்ன பயன்? என்பதைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

ஈவார்கள் என்னுண்டாம் தோற்றம் இரந்துகோள்
மேவார் இலாஅக் கடை (1059)

என்ற குறளுக்கு, அவர்பால் சென்று ஒன்றனை இரந்து கோடலை விரும்புவார் இவ்வழி; கொடுப்பார் மாட்டு என்ன புகழுண்டாம்? யாதும் இல்லை என்று உரையெழுதிய பரிமேலழகர், மேவுவார் என்பது விகாரமாயிற்று என்ற குறிப்பினையும் எழுதிச் செல்கின்றார்.

'மேவார்' என்ற சொல்லுக்குப் பகைவர் என்ற பொருளுண்டு 'இரந்துகோள் மேவார் இலாக் கடை' என்ற அடியிலுள்ள மேவார் என்பதற்குப் பகைவர் என்ற பொருள் கொண்டால் பொருத்தமின்மை ஏற்படும். ஆதலால் இவ்விடத்துப் பொருள் விளக்கத்திற்கர்க மேவுவார் என்பதே மேவார் என வந்தது என்ற குறிப்பினைத் தருகின்றார் பரிமேலழகர்.

இங்கு மேவார் என்ற சொல்லானது 'ஈவார்' என்ற சொல்லிற்கு ஏற்பத் தொடைநயத்திற்காகப் பயன்படுத்தப்பட்ட ஒன்றாகும். மேலும் 'மேவார்' என்ற சொல்லிற்குப் பதிலாக மேவுவார் என்ற சொல்லானது மூலநூலில் பயன்படுத்தப்பட்டிருந்தால் வெண்பாவிற்குரிய வெண்டளை வாரா. மூலநூலான்து 'வெண்பா' என்ற யாப்பினால் ஆனது. 'மேவுவார் இலா' என்பது (விள முன் நிரை வந்து நிரையொன்றாசிரியத்தளை உண்டாகி விடும்) ஆதலால் இவ்விடத்து மேவுவார் என்பது மேவார் என வந்துள்ளது. இவ்வாறு தொடைநயத்திற்காகவும், யாப்புவடிவத்தில் கொண்டு விகாரச்சொல்லானது உண்டாகி விடுகின்றது. இத்தகை சூழலில் உரையாசிரியர்கள் குறிப்பு கொடுக்கின்ற போது அதன் பொருளை எளிமையாக அறிந்து கொள்ள முடிகின்றது.

ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர் (653)

என்ற குறளுக்கு "மேலாகக் கடவேம் என்று கருதுவார் தம்ஒளி கெடுவதற்குக் காரணமாய வினையைச் செய்தலைத் தவிர்க்க" என்று உரையெழுதிய பரிமேலழகர், "ஓவுதல் என்பது குறைந்து நின்றது" என்ற குறிப்பினைத் தருகின்றார்.

'ஓதல்' என்றால் கற்றுக்கொடுத்தல் என்று பொருள். 'ஓவுதல்' என்று இருந்தாலும் வெண்பாவிற்குரிய தளை மாறாது. இவ்விடத்து 'ஆஅதும்' என்ற சொல்லிற்கு ஏற்ப ஓஒதல் என்று இசையை நிறைக்க வேண்டும் என்பதற்காக

விகாரமாக வந்தது எனலாம்.

உள்ளு ரூரலும் புள்ளும் புதாவும்
வெல்போர் வேந்தர் முனையிடம் போல (சிலம்பு 10 : 117-18)

பறவைகளின் செயல்களைப் பற்றிக் குறிப்பிடும் இவ்வடிகளுக்கு "கம்புட்கோழி முதலியன வெல்லும் போரை சல்ல அரசரிவேர் பொடுமிடம் போலப் பல்வேறு வகைப்பட்ட திறத்தையும் ஒலியையுடையனவாய் ஒலிக்கும் மிக்க ஓசையுமென்க" என்று உரையெழுதிய நல்லார் "போதா-பெருநாரை, மரக்கானாரை : புதா - விகாரம்" என்ற குறிப்பினைத் தருகின்றார்.

"இன்பப் புதா திறக்கும் தாளுடைய மூர்த்தி"1 என்ற அடியில் உள்ள புதா என்ற சொல்லானது கதவு என்ற பொருளைப் பெறுகின்றது. 'புள்ளும் புதாவும்' என்பதிலுள்ள 'புதா' என்பதற்குக் கதவு என்று பொருள் கொண்டால் பொருள் பொருத்தமின்மை ஏற்படும். ஆதலால் பொருள் விளக்கத்திற்காக நல்லார் இக்குறிப்பினைக் கொடுத்துள்ளார். இங்கு சொல் இன்பத்திற்காக போதா என்பதைப் புதா என்று கொண்டதாகக் கொள்ளலாம்.

தலையங்கை கொண்டுநீ காபால மாடுங்கால்
முலையணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ (கலித் - 1 : 12-13)

'என்ற இவ்வடிகட்கு "அயன்தலையை அங்கையிலே கூத்தை நீ ஆடுங்கையிலே ஏந்துகையினாலே கபாலமென்று பெயர்பெற்ற கூத்தை நீ ஆடுங்கையிலே ஏந்துகையினாலே யொத்த எயிற்றினையுடையாளோ ஒரு தாளத்தின் முதல் எடுக்குங் காலத்தினையுடைய பாணியைத் தருவாள்" என்று உரையெழுதிய நச்சினார்க்கினியர், "முல்லை முலையென விகாராமாயிற்று" என்ற குறிப்பினையுந் தருகின்றார்.

'முலை' என்ற சொல்லானது பெண்ணின் மார்பைக் குறிக்கும். 'முலையணிந்த முறுவலாள்' என்பதிலுள்ள முலை என்பதற்கு பெண்ணின் மார்பு என்று பொருள் கொண்டால் பொருள் பொருத்தமின்மை ஏற்படும். ஆதலால்தான் "முல்லை என்பது முலையென விகாரமாயிற்று" என்ற குறிப்பினைத் தருகின்றார்.

'முலையணிந்த' என்ற சொல்லிற்குப் பதிலாக 'முல்லையணிந்த' என்றிருந்தால் நாற்சீராகிவிடும். கலிப்பாவிற்குரிய கலித்தளை வாரா. ஆதலால் மூலநூலின் யாப்பு வடிவத்தைக் கொண்டு வரவேண்டும் என்பதற்காகவும் தொடைநயம் காணவேண்டும் என்பதற்காகவும் முலை என்ற விகாரச் சொல் பயன்படத்தப்பட்டுள்ளது.

ஈண்டுநீ யிருந்தரு ளேழொ டேழனாப்
பூண்டபே ருலகங்கள் வலியிற் புக்கிடைத்
தேண்டியவ் வர்க்கனைத் திருகித் தேவியைக்
கா ண் டி யா ணிவ் வ ழிக் கொ ண ரு ங் கை ப் ப ணி
(கம்ப.கிட்கிந்தா.கலன்காண்.13)

சுக்ரீவன் கூற்றாக வரும் இப்பாடலுக்கு, "இங்கேயே நீ இருந்தருள்வாய் யான் பதினான்கென்று தொகை கொண்ட பெரிய உலகங்களிலெல்லாம்

வலிமையோடு சென்று அவ்விடங்களில் பிராட்டியைத் தேடி அவளை எடுத்துச் சென்ற அந்த அரக்கானை தலைமுறித்து உன் மனைவியான ஜானகியை கொண்டு வந்து சேர்க்கும் சிறிய ஏவல் தொழிலைப் பார்ப்பாயாக" என்று உரையெழுதிய வை.மு.கோ., "தேண்டி-விரித்தல்" என்ற குறிப்பினையும் எழுதிச் சென்றுள்ளார்.

இங்கு தேண்டி என்ற சொல்லானது எதனைக் குறிப்பிடுகிறது என்று அறியமுடியவில்லை. ஆதலால் தேண்டி என்பதை பொருள்விளக்கத்திற்காக விரித்தல் விகாரம் எனறு குறிப்பிட்டுள்ளார். 'தேடி' என்ற சொல்லே 'தேண்டி' என்று விரிந்து வந்துள்ளது.

தேண்டி என்ற சொல்லானது ஈண்ட, பூண்ட, காண்டி என்ற சொற்களுக்கு இணையாக எதுகை இன்பத்திற்காகப் பயன்படுத்தப்பட்ட ஒன்றாகும். இவ்வாறு,

இவ்வாறு, 1) தொடை நயத்திற்காகவும் 2) யாப்பு வடிவத்தைக் காக்க வேண்டும் என்பதற்காகவும் 3) இசையை நிறைப்பதற்காகவும் சொற்களைப் பயன்படுத்தும் போது செய்யுளில் விகாரம் உண்டாகின்றது. இவ்வாறு விகாரம் ஏற்பட்ட இடங்களில் உரையாசிரியர்கள் குறிப்புக் கொடுத்துச் செல்கின்ற போது அதன் மூலநூற்கருத்தை எளிமையாக அறிந்து கொள்ள முடிகின்றது. எனவே பொருள் விளக்கத்திற்காகவே உரையாசிரியர்கள் விவகாரத்தினை எழுதிச் செல்கின்றனர்.

குறிப்பு

1. சீவகசிந்தாமணி, 1549.

# உவமை ஓர் ஆய்வு

வெ. செயக்குமார்
கூடல் நூலகம்,134, முத்து பவனம்,
லால் பகதூர் சாஸ்திரி தெரு,
கூடல் நகர், மதுரை.

**அறிமுகம்**

உவமை என்ற தமிழ்ச் சொல் உவமம் என்றும் உவமானம் என்றும் வழங்கப்படும். ஆங்கில மொழியில் இதனை "ஞஅடைந" என்று கூறுவர். வடமொழியில் 'உபமா' என்பர். உவமை என்னும் சொல் 'உபமா' என்ற வடசொல்லின் திரிபு என்பர். தனித்தமழ்ப் பற்றுடையார் இதனைத் தமிழ்ச் சொல்லாகவே காண்பர். 'ஒத்தல்' என்பதன் அடி 'ஒவ்' என்பதாகும். இந்த ஒவ் என்னும் அடியானது 'அகர'ச் சாரியையும் 'மை' விகுதியும் பெற்று 'ஒவனை' என ஆகும். பின்னர் இது ஒரு அம் சாரியையும் அம் விகுதியும் பெற்று ஒவமம் எனத் திரிந்து அதன்பின் ஒகர, உகரத் தடுமாற்றத்தால் உவமம், உவமை என வழங்கப் பெறும். எனவே, உவமை, உவமம், உவமானம் என்பவைத் தமிழ்ச் சொற்களே. மூன்றும் ஒரே பொருளைத் தரும் சொற்களே எனினும் அவற்றிற்கிடையே நுட்பமான வேறுபாடு உண்டு. இக்கட்டுரை உவமையின் சிறப்பியல்புகளைப்பற்றி அமைகின்றது.

**உவமை - இலக்கணம்**

உவமை என்பது ஒரு பொருளைத் தக்கஒப்புமை கொண்டு உணர்த்துவதாகும். தொல்காப்பியர் தம் பொருளதிகாரத்தில் 'உவமவியல்' என்னும் பகுதியில் உவமையின் இலக்கணத்தைத் தெளிவுபடுத்துகின்றார். அவர் கருத்தின்படி உவமை என்பது 'பொருளின் தன்மையைப் புலப்படுத்துவது' என்பதாகும். வினை, பயன், மெய், உரு ஆகிய பொருள்களின் தன்மைகளை உவமைகள் சிறப்பிக்கின்றன என்பது அவர் தரும் விளக்கமாகும்.

'வினைபயன் மெய் உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம்' (தொ.கா.உவம. 272)

எனத் தொல்காப்பியர் வகைப்படுத்திக் காட்டுகின்றார்.

'புலன் அல்லாதன புலனாதலும் அலங்காரமாகிக் கேட்டார்க்கின்பம் பயத்தலும்' என உவமைக்கு இளம்பூரணம் விளக்கம் தருகிறார்.

'தெரிவிக்க விரும்பும் பொருளைத் தெரிந்த பழைய பொருளோ: போல, புரைய என்பன போன்ற இணைப்புச் சொற்களால் ஒப்பிட்டு விளக்குவதே உவமைஙயாகும்' என்று டாக்டர் சிங்கார வடிவேலன் கூறுகின்றார்.

வினை, பயன், மெய், உரு ஆகிய நான்கினைப் பண்பு, தொழில், பயன் என மூன்றாக அடக்கிக்காட்டுவர் தண்டியலங்கார நூலாசிரியர்.

'பண்பும் தொழிலும் பயனுமென் றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்த்து
ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை' (தண்டி, சூ-30)

**உவமை - இலக்கியங்களில் பயின்றுவரும் பாங்கு**

உவமை என்னும் சொல் ஒப்புமை என்ற பொருளில் இலக்கியங்களில் பயின்று வருகின்றது. அதுவே,

'உவமை ஆவது ஒப்புமை அளவை' என்று மணிமேகலையில் (27:41-42) கூறப்படுகின்றது.

மதுரைக்காஞ்சியில் (516-518)

'எவ்வகைச் செய்தியும் உவமம் காட்டி
நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கில்
கண்ணுள் வினைஞர்'

என்று வருகின்றது. மேலும் புறநானூற்றுப் பாடலில் (377:10-11)

'பிறர்க்கு வாயின் அல்லது நினைக்குப்
பிறர்உவமம் ஆகா ஒருபெரு வேந்தே'

எனப் பதிற்றுப்பத்தில் (73:2-3) வருகின்றது.

இவ்வாறு உவமை என்ற சொல்லை ஒப்பு என்ற பொருளில் இலக்கியத்தில் பயன்படுத்தி உள்ளனர். இதனால் உவமை என்பதன் பொருள் ஒப்பு எனத் தெளியலாம். எனவே, உவமை என்ற சொல் ஒப்பு என்ற தமிழ்ச் சொல்லின் திரிபு எனலாம்.

உவமை பற்றிய அறிஞர்களின் கருத்து

உவமையின் சிறப்பினைப் பல்வேறு வகையில் அறிஞர்கள் எடுத்தியம்புகின்றனர். அவையாவன,

1. வடமொழி அறிஞர் அப்பைய தீட்சிதர் உவமை பற்றிக் கூறும்பொழுது உவமை என்ற சிறந்த நாட்டியக்காரி பலவகை வேடங்களை அணிந்து இலக்கியம் என்னும் அரங்கில் தோன்றிப் பலவகைக் கலைகளால் நாட்டியங்களாடி புலவருள்ளத்தை மகிழ்விப்பாள். இதனை,

'உவமை என்னும் தவலருங் கூத்தி
பலவகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவர் இதயம்
நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே' என்று தனது சித்திரை மீமாம்சை என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

2. எஸ். வையாபுரிப்பிள்ளை தமது காப்பிய உவமை என்ற நூலில், 'உவமை கவிதையின் அந்தரமாய் இயங்கும் அழகிய சோலை, எனவும் கவிதைகளைத் தகுதியாக்குவதும் அழகுபடுத்துவதும் உவமைகளே'என்று சிறப்பிக்கின்றார்.

3. அ.ச. ஞானசம்பந்தன் தனது மகளிர் வளர்த்த தமிழ் என்ற நூலில், 'தமிழ் கவிதையின் கருவூலமே உவமை' என்று கூறுகின்றார்.

உவமையின் - தொன்மம்

வடமொழியில் வேத இலக்கியத்தில் குறிப்பாக இருக்கு வேதத்தில் உபமம், அதிசயோத்தி ருபகம் என்ற அணிகள் காணப்படுகின்றன என்பர். பரதமுனிவர் உபமம், ருபகம், தீபகம், யமகம் என்ற நான்கு அணிகளைக் குறித்துள்ளார். எனவே, எம்மொழி இலக்கியத்திலும் 'உவமை' தொன்மை மிக்க அணி என்பதில் ஐயமில்லை.

### உவமைக்குரிய நிலைக்களன்கள்

வினை, பயன், மெய், உரு என்பன பற்றி உவமை கூறும்போது சிறப்பு, நலன், காதல், வலி என்னும் நான்கையும் நிலைக்களமாகக் கொண்டு உவமை பிறக்கும் இதைத் தொல்காப்பியர்,

'சிறப்பே நலனே காதல் வலியோடு
அந்நாற் பண்பும் நிலைக்கள் மென்ப' (தொ.கா.உவம. 275)

என்ற நூற்பாவில் கூறுகின்றார். இதைத் தவிர 'கிழக்கிடும் பொருள்' என்ற நிலைக்களன் பற்றியும் உவமை பிறக்கும் என்பதையே,

'கிழக்கிடும் பொருளோ டைந்து மாகும்' (தொ.கா.உவம. 276)

என்ற நூற்பாவால் அறியலாம். கிழக்கிடும் பொருள் என்பதற்கு பேராசிரியர் கீழ்படுக்கப்படும் பொருள் - தாழ்ந்த பொருள் என்று விளக்கம் தருகின்றார்.

### உவமைக்குரிய மரபுகள்

உவமை கூறும்போது முதல், சினை என்ற இருவகைப் பொருளுக்கும் ஏற்ற முறையில் கூறவேண்டும். அதாவது முதலொடு முதல் சினையொடு சினை, முதலொடு சினை, சினையோடு முதல் என விரும்புகிறவாறு உவமை கூறலாம். அவ்வாறு கூறும் போது மரபுநிலை மாறாமல் கூறவேண்டும். இதைத் தொல்காப்பியர்,

'முதலும் சினையுமென் றாயிரு பொருட்கு
நுதலிய மரபி னுரியவை யுரிய' (தொ.கா.உவம. 277)

என்ற நூற்பாவில் விளக்குகின்றார்.

### முடிவுகள்

புலவர்கள் தம் கரத்துக்களை எளிமையாகவும் தெளிவாகவும் வெளிப்படுத்தப் பயன்படுத்தும் உத்திகளுள் ஒன்று உவமை ஆகும். உவமை எளிதாக எல்லாக் கவிஞரும் கையாளக் கூடியதாயினும், அனைவன் வன்மைக் கேற்பப் பற்பல இயல்புகளை உள்ளடக்கிக் கூறுவதால், தனிப்பட்ட கவிஞனின் கவிதை சிறப்படைகிறது. கவிஞர் விளக்கவந்த ஒன்றை இன்னும் விளக்கமாகத் தெரிந்துகொள்ள உவமை பயன்படுகிறது.

# ஆனந்தப்பையுள் துறைப்பாடல்களில் அடிக்கருத்தும், தலைமைப் புனைவுக் கூறுகளும்

தி. இராமசாமி
முனைவர் பட்ட ஆய்வாளர்,
ஒப்பிலக்கியத் துறை, தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை - 21.

மொழி என்பது மனித இனத்தில் தவிர்க் இயலாத தன்மைக் கொண்டது. அம்மொழி மனிதனின் சிந்தனையையும், கருத்தையும் வெளிப்படுத்தும் கருவியாக பயன்படுகின்றது. அவ்வாறு பேசப்படும் மொழியில் இலக்கியங்கள் பல இயற்றப்பட்டுள்ளன. அவ்விலக்கியங்களில் தொன்மையானது எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் ஆகும். அவற்றுள், எட்டுத்தொகை நூலான புறநானூற்றின் 'ஆனந்தப்பையுள்' துறைப் பாடல்களில் வெளிப்படும் அடிக்கருத்து யாது? தலைமைப் புனைவுக் கூறுகள் யாவை? இந்த தலைமைப் புனைவுக்கூறுகள் ஆனந்தப்பையுள் துரைப்பாடல்களில் வெளிப்படும் அடிக்கருத்து உருவாக்கத்திற்கு எங்ஙனம் இடம்கொடுக்கின்றன என்பதை ஆய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**அடிக்கருத்து விளக்கம்**

தீம் என்ற ஆங்கிலச் சொல் 'தீமா' (Theme) என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து உருவானது. இக்கிரேக்கச் சொல்லுக்குரிய வேர்ச்சொல் 'தெமா' (Theme) எனவும் வழங்கப்படுகிறது. 'தீம்' என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையாகத் தமிழில் அடிக்கருத்து என்ற சொல் எடுத்தாளப்படுகின்றது.

ஒரு இலக்கியப் படைப்பு எவ்வடிப்படையில் ஒரு கருத்தையோ, நோக்கத்தையோ அல்லது கோட்பாட்டையோ வலியுறுத்த படைக்கப்படுகிறதோ அக்கருத்தை, அந்நோக்கமே, அக்கோட்பாடே, அப்படைப்பின் அடிக்கருத்து எனலாம்.

இவ்வாறு ஒரு கலைப்படைப்பில் அர்த்தம் பெறக் கூறப்படும் கருத்தே அடிக்கருத்து என்பர். ஒரு கவிதை எதனைச் சொல்ல வருகிறதோ, அதன் தலைமைப் பண்பு எதுவோ அதுவே, கவிதைக்கரு அல்லது தலைமைக் கருத்து அல்லது அடிக்கருத்து1 ஆகும்.

**தலைமைப் புனைவுக் கூறுகள்**

ஓரிலக்கியத்தைப் படைக்கும்பொழுது, படைப்பாளன் திரும்பத் திரும்பச் சில கூறுகளைத் தவிர்க் முடியாது பயன்படுத்துவான், அங்ஙனம் இலக்கியப் பாடு பொருளுக்கு நெருக்க உறவுடையதாகத் திரும்பத் திரும்ப வரும் புனைவுக் கூறுகள் தலைமைப் புனைவுக் கூறுகள் எனப்படும். இத்தலைமைப் புனைவுக் கூறுகளைத் தான் ஆங்கிலத்தில் மோட்படிப்வ் (அழவகை) என்று அழைக்கின்றனர். இரைதத் தமிழில் தலைமைப் புனைவுக் கூறு, குறிப்பொருள், முனைப்புக் கருத்து, கலைப்பண்புக் கூறு என்று பல சொற்பொருள் விளக்கங்கள்

காணப்படுகின்றன. இப்புனைவுக் கூறுகளுள் சில ஒரே தன்மையுடைய பல பாடல்களில் திரும்பத் திரும்ப வரும்ஆ அங்ஙனம் வரும் பொழுது அவை பாடுபொருளுக்கு நெருக்க உறவுடையதாகத் திரும்ப வருவதால் இதைத் தலைமைப் புனைவுக் கூறு2 அல்லது தலைமை முனைப்புக் கருத்து எனலாம். தொல்காப்பியத்தில் ஆனந்தப்பையுள்

ஒருகுல மகள் தன் கணவன் இறக்கத் துன்பம் அடைந்து வருந்துவதைக் கூறுவது ஆனந்தப்பையுள் என்னும் துறையாகும். இதை,

'தாமே ஏங்கிய தாங்கரும் பையுள்' என்கிறார். புறப்பொருள் வெண்பாமாலையார்,

"விழுமம் கூரவேய்த் தோளிவை
கொழுநன் வீயக் குழைந்து யங்கின்று"

என்பர். மூங்கில் போன்ற தோளையுடை மனைவி, தன் கணவன் இறக்க மெலிந்து வருந்தியதாகும். தலைவன் இறக்கச் சுற்றத்தார் இரங்கிக் கூறுவது ஆனந்தப் பையுள் எனவும் கூறுவர்.

ஆனந்தப்பையுள் துறைப்பாடல்களின் அடிக்கருத்தும், தலைமைப் புனைவுக் கூறுகளும்

புறநானூற்றில் ஆனந்தப்பையுள் துறையில் நான்கு பாடல்கள் உள்ளன. இத்துறையில் தலைவி தலைவன் மேல் கொண்ட அன்பின் ஆழமும், ஆழத்தின் மிகுதியால் கழிகல மகளிர் போல நினைத்திருத்தல் அரிதே என்று கணவனுடன் தானும் தீப்பாய்ந்து உயிர்விட துணியும் கற்புநிலையைக் காணமுடிகின்றது. மேலும் இப்பாடல்களில் கைம்மை நோம்பு, தீப்பாய்தல், தாழி வனைதல் ஆகியவை அடிக்கருத்துக்களாக அமைகின்றன.

முதலில் ஒரு பாடலில் அடிக்கருத்து, கருத்தலகுகள், தலைமைப் புனைவுக் கூறுகள் அமைந்துள்ள நிலை பகுத்துரைக்கப்படுகின்றன.

பல்சான்றீரே பல்சான்றீரே.
செல்னெச் செல்லாது ஒழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே
அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந்திட்ட
காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது
அடை இடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்எண் சாந்தொடு புளிப்பெய்து அட்ட
வேளை வெந்தை வல்சி ஆகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்
உயவற் பெண்டிரேம் அல்லேம் மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்
நுமக்குஅரிது ஆகுக தில்ல எமக்குஎம்
பெருந்தோள் கணவன் மாய்ந்தென அரும்புஅற
வள்இதழ் அவிழ்ந்த தாமரை
நள்இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே (புறம். 246)

என்ற பாடலில் முதல் பத்து வரிகளில் கைம்மை நோம்பு கொள்ள விரும்பாதவள்

என்ற செய்தி இருக்கின்றன. அடுத்து வரும் ஐந்து வரிகளில் தாமரைப் பொய்கையும், தீயும் ஒரே தன்மையாக கருதும் செய்தி இடம்பெறுகின்றன. இக்கருத்தையே மணிமேகலை காப்பியம் சுட்டுகிறது.

இப்பாடலில் உள்ள அடிக்கருத்து தலைவன் இறந்த பின் உயிர்விட துணியும் மனைவியின் நோக்கத்தை 'ஆனந்தப்பையுள்' என்னும் துறை நிறைவேற்றுவதாகவே உள்ளது. அதுவும் வெளிப்படையாகவே அமைந்துள்ளது. மேலும், விலங்குகளின் இயல்பினை வர்ணிக்கும் கருத்தலகுகளும் இடம்பெற்று அடிக்கருத்தை மேலும் வலுப்படுத்துகின்றன.

மன்னனின் புகழைப் போற்றுதல்
த்தாளி வனைதல் இயலாததால் வருந்தத்தக்கவன் (புறம். 288)

காளி கோயிலின் முன் தீ மூட்டுமதல்
சுடுகாட்டைப் பார்த்து மனம் வருந்துதல்' (புறம். 247)

தீய நிமித்தங்கள் வெளிப்படுதல்
உயிர் வாழ்வது அரிதாகும் (புறம். 280)

முடிவுரை

தலைவன் இறந்த பிறகு அவன் மேல் தள்ள தீராக்காதலால் உயிர்விடத் துணியும் மனைவியின் துன்பத்தை உணர்த்தும் 'ஆனந்தப்பையுள்' என்ற துறைக்கேற்ப,

1. கைம்மை நோன்பு
2. தீப்பாய்தல்
3. தாளி வனைதல்

ஆகியவை நான்கு பாடல்களில் திரும்பத் திரும்ப வருகின்றன.

மேலே உள்ள இந்த மூன்றையும் இங்கு தலைமைப் புனைவுக் கூறுகளாக எடுத்துக் கொள்ளலாம். இம்மூன்றும் பாடல்களில் திரும்பத் திரும்ப பயின்று வந்துது ஆனந்தப்பையுள் என்ற பாடல் பொருளை ஆழமாக உணர்த்துவதை அறியமுடிகின்றது.

அடிக்குறிப்புகள்

1. செ. சாரதாம்பாள், அடிக்கருத்தியல், பக். 1-2
2. மேலது, பக். 15-16
3. தொல்.பொருள், நூற்பா. 77
4. பு.வெ. சிறப்பிற்பொதுவியல் நூற்பா - 13

# அணியிலக்கணங்களில் கூந்தலும் உவமை மரபும்

செ. ரவிசங்கர்,
முனைவர் பட்ட ஆய்வாளர், ஒப்பிலக்கியத்துறை,
தமிழியற்புலம், மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,

## முன்னுரை

உலகம் ஒரு பொருளுக்கு மற்றொரு பொருளை ஒப்பிட்டுப் பார்த்து இன்பத்தை அனுபவிக்கிறது. இந்த மனப்பான்மையின் அடிப்படையில் உவமை எனும் அணியிலக்கணம் பல ஆண்டுகளுக்கு முன்னரே தோன்றிவிட்டது. தமிழில் நமக்கு கிடைத்துள்ள முழுமையான பழமையான இலக்கண நூல் தொல்காப்பியம். தொல்காப்பியத்தில் உவமவியலில் தொல்காப்பியரே விரவியும் வருஉம் மரபின் என்ப, சிறப்பே நலனே காதல் வலியோடு அந்நாற் பண்பும் நிலைகளம் என்ப, உவமப் போலி ஐந்தென மொழிய (தொல். உவமவியல், 2,4,24) என்ற முந்தையோர் கொள்கையை தம் நூற்பாவில் விளக்குகிறார். இதனால் உவமை அணி பற்றிய காலம் தொல்காப்பியருக்கும் முந்தியதாகும் என்று தெளியலாம். இக்கட்டுரை அணியிலக்கணத்தில் மக்களின் கூந்தலுக்கான உவமைகள் பற்றி ஆராய்கிறது.

## அணியிலக்கணத்தின் வளர்ச்சி

தமிழில் அணியிலக்ககணத்திற்கென்று தனி நூல் தொல்காப்பிய காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. உவமை ஒன்றையே அணியாகக் கடைப்பிடிக்கப்பட்டது போலும், காலப்போக்கில் உவமையொன்றே மக்களின் கலை வளர்ச்சிக்கு ஏற்ப பல கிளையாக விரிந்தது. உரையாசிரியராகிய பேராசிரியர் உவமை மட்டுமே அணியாகக் கருதுகிறார். "இனி இவ்வோத்தினிற் கூறுகின்ற உவமங்களுட் சிலவற்றையும் பொருளதிகாரத்தினுள்ளும் செய்யுளியறுள்ளுஞ் சொல்லுகின்ற சில பொருட்களையும் வாங்கிக் கொண்டு மற்றவை செய்யும் கண்ணே அணியாமென இக்காலத்தாசிரியர் நூல் செய்தாருமுளர்" என்பர் (பேரா உரை-தொல்-பொருள்-உவம.37). ஆனால் "அணியிலக்கணம் வடமொழியறிவினால் தனி இலக்கணமாகத் தழைத்திருத்தல் வேண்டும்" (இ. சுந்தரமூர்த்தி, உவமான சங்கீரகம், ப.17) என்பர். தமிழில் அணயிலக்கண்ம் மட்டும் கூறுகின்ற நூல்கள் தண்டியலங்காரம், மாறனலங்காரம், சந்திரலோகம், குவலயாநந்தம் போன்றவை.

## உவமையே அணிக்கு அடிப்படை

தொல்காப்பியர் காலத்தில் உவமை ஒன்று மட்டுமே இருந்தது. எனவேதான் தொல்காப்பயீர் உவமை ஒன்றை மட்டும் கூறி மற்றவை அவற்றின் திரிபு என்று உணர வைத்தார். இக்கருத்தை வடமொழி நூல்களிலும் அறியமுடிகிறது. அப்பை தீட்சிதர் தற்பொழுதிய சித்திரமீமாம்சை எனும் நூலில் இக்கருத்தை கூறியுள்ளது கைவனிக்கத் தக்கது.

"உவமை என்னும் தவலருங் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி

யாப்பறி புலவர் இதயம்
நீரப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்கும்மே"

உவமைத்தொகுப்பு

அணிகளைத் தொகுத்ததைப் போல உவமையையும் தொகுத்துள்ளார்கள். அவ்வாறாகத் தொகுத்த நூல்கள் உவமான சங்கிரநூல்கள் எனப்படுகின்றன. இந்நூல் எந்தெந்தப் பொருள்களை எவ்வெவ்வற்றிற்கு உவமையாகக் கூறவேண்டும் என்பதனைத் தொகுத்து தருகின்றன. தமிழில் மூன்று உவமான சங்கிரக நூல்கள் உள்ளன. இதனைப் போல அறுவகை இலக்கணம், பிரபந்தத்திரட்டு, இரத்தினச்சுருக்கம் போன்ற நூல்களும் உவமையைத் தொகுத்துத் தருகின்றன.

மகளிர் கூந்தல்

உவமை அமைக்கும்போது பெண்களின் உறுப்புகளுக்கு வருணனையாக இடம் பெற்றுள்ள பொருள்களே அதிகமாகக் காணமுடிகின்றன. "முக்கியமாக இன்ப வாழ்வுக்குத் துணைநிற்கும் மகளிரின் உறுப்புகளை உவமைகளால் வருணித்தலையே எல்லாவகை நூல்களிலும் பார்க்க முடிகிறது" என்பர் இ. சுந்தரமூர்த்தி (உவமான சங்கிரகம், ப. 36). இவ்வாறாக பெண்களின் உறுப்புகளுக்கு வருணனையாகக் கூறும் உவமைத் தொகுப்பு நூல்களில், நூட்பாக்களைப் பாதாதிகேசமாகவும், கேசாதிபாதமாகவும் அமைத்துப் பாடியுள்ளனர்.

கேசாதிபாத அமைப்பில் கூந்தல் முதலாவதாக அமையும். அதாவது, கூந்தல், நுதல், புருவம், கண், முகம் என்ற வரிசையில் கால், நடை, சாயல், மேனி என முடியும், கேசாதிபாத அமைப்பில்,

1. உவமான சங்கிரகம் (வெண்பா)
2. இரத்தின சுருக்கம்
3. பிரபந்தத் திரட்டு

இந்த மூன்று நூல்களும் பெண்ணைத் தலையில் இருந்து கால்வயில் உவமையமைத்து பாடியுள்ளன. மனிதர்களை இம்முறையில் பாடுவது வழக்கம் எனும் கருத்தும் நிலவுகிறது.

பாதாதிகேசம் அமைப்பில் அடி, கால்விரல், உகிர், புறவடி கரடு, குதிங்கால். . . . காது, புருவம், நுதல், கூந்தல் என்று இந்நூற்பாக்கள் அமைந்துள்ளன. இங்கு கூந்தல் இறுதியாக அமைந்துள்ளது. இறைவனை இம்முறையில் பாடுவது சிறப்புடையது எனும் கருத்தும் உண்டு.

கேசாதிபாதத்தில் கூந்தல் உவமை

கேசாதி பாதத்தில் அமைந்துள்ள மூன்று நூல்களில் கூந்தலுக்கான உவமைப் பொருள்கள் ஒன்றோடு ஒன்று மாறுபட்டுள்ளன.

கொண்டலுங்கூந் தற்பனையுங் கொன்றைக் காயுமிருளுந்
தண்டலையுங் கார்மணலுஞ் சைவலமும் - வண்டினமுந்
தன்குழலை யொப்பாந் தனிவா ணுதற்கு நிகர்
வெண்பிறையுஞ் செஞ்சிலையுமே (உவமான சங்கிரகம், நூ.1)

வெண்பாவில் அமைந்துள்ள உவமான சங்கிரகம் பெண்களின்

கூந்தலுக்கு, கொண்டல், கூந்தற்பனை, கொன்றைக்காய், இருள், தண்டலை, கார், மணல், சைவலம், வண்டினம் போன்றவற்றை குறிப்பிடுகிறது.

இவற்றில் உள்ள பல பொருள்கள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. மணல் சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ளன.

குறைஅறல் அன்ன இரும்பல் கூந்தல் (அகம். 142 18)

அகநானூற்றில் இச்சொல் பயின்று மணல்-கூந்தல் ஒப்பிடப்பட்டுள்ளது. உவமான சங்கிரகத்தைப் (வெண்பா) போலவே புகழேந்திப் புலவரால் செய்யப்பெற்றதாகக் கருதப்படும் இரத்தினச் சுருக்கம் எனும் நூலும் வெண்பாவால் அமைந்து உவமைப் பொருளைத் தொகுத்துத் தந்துள்ளது.

பேசுங் குழலைப் பிறங்குமுகி லென்று
மாசிலா நீலமணி யென்றும் - வீசுமற
லென்று மிருளென்று மெழிற்கவரி பாசிக்கொத்
தென்று முவமை யியம்பு (இத்தினச் சுருக்கம் - 20)

உவமான சங்கிரகம் (வெண்பா) கூறியுள்ள பொருள்கள் இந்நூலில் சுட்டப்பெறவில்லை. மாறாக முகில், நீலமணி, இருள், பாசிக்கொத்து போன்ற பொருள்கள் புதிதாக இடம் பெற்றுள்ளன. இருள், அறல் மட்டுமே பழைய பொருளாக இடம்பெற்றுள்ளன.

இந்த வரிசையில் 'பிரபந்தத் திரட்டு' என்னும் நூலில் அமைந்துள்ள 'உவமாரூட வியப்பு சார்பியல்' என்னும் பகுதியிலும் இத்தகைய உவமைத் தொகுப்புகளைக் காண முடிகிறது. இந்நூல் கூந்தலுக்கு மட்டுமேயன்றிக் கூந்தலில் அமையும். கூந்தல், வகிர், கொண்டை, மயிர்முடி, பின்னிய குழல் போன்றவற்றிற்கும் உவமைகளைத் தொகுத்துத் தந்துள்ளது.

கார் கூந்தற் கமுகு கொன்றைக் காயிருள் பூஞ்சோலை
கருமணல் சைவலம் வண்டினங் கவரி நீன்மணியே
சாரரம்பை தாழைமலர் கூந்தலுக்காம் வகிரே
தாரைவனம் பகரிலைக் காம்பாங் கொண்டை பந்துஞ்
சேர்மலர்ச் செண்டுங் கூமடந்தானுமா முடித்தல்
சீறரவின் படமடைக்கால் வீணைநுனி விசிறி
யார்சடை பாம்பே பிடிக்கைச் சங்கிலி வாழைச்சீப்
பணிசீப்புத் தைத்தகுழல் புலியுருவமாமே
(பிரபந்தத்திரட்டு பா.164)

மேலே கண்ட இரண்டு நூல்களைப் போல் கேசாதிபாதமாக பிரபந்தத்திரட்டு அமைந்திருந்தாலும், சற்று மாறுபட்ட நிலைகளுக்கு கூந்தலுக்கான உவமைப் பொருளைத் தொகுத்துள்ளது.

கூந்தல் : மேகம், கூந்தற்கமுகு, கொன்றைக்காய், இருள், பூ, நிறைந்த சோலை கரியமணல், பாசி, வண்டின் கூட்டம், கவரி, நீலமணி, வாழை, தழை
வகிர் : கிளிக்கழுத்தின் கோடு, மலைநெல், இலைக்காம்பு
கொண்டை : பந்து, மலர்ச்செண்டு, ஆமை
'முடித்த கூந்தல் : பாம்பின்படம், மழைக்கால், வீணையின் முனை, விசிறி
பின்னிய குழல் : பாம்பு, பிடியின்கை, சங்கிலி, வாழைக்குலையின் சீப்பு,

கதவின் தாள்

தைத்த குழல் : புலியுருவம்

கேசாதிபார அமைப்பில் பிரபந்தத்திரட்டு மட்டும் கூந்தலை அதன் தன்மைக்கேற்பப் பிரித்து பல்வேறான பொருள்களைத் தொகுத்துள்ளன. உவமான சங்கிரகம் (வெண்பா), இரத்தினச்சுருக்கம், பிரபந்தத்திரட்டு மூன்று நூல்களிலும் சில பொருள்கள் மட்டுமே ஒன்றுமையாக உள்ளன. மிகுதியான பொருள்கள் வெவ்வேறான பொருள்களாகவே உள்ளன.

பாதாதி கேசத்தின் கூந்தலுக்கு உவமை

பாதாதிகேசத்தில் அமைந்துள்ள நூல் உவமான சங்கிரகம் (நூற்பா) மற்றும் விருத்தம் இரண்டும் ஆகும்.

கருமணல் சைவலம் கல்லார் மனது வண்டு
இருளார் பொதுமகள் இதயம் மஞ்சணி பூச்
சோலை கொன்றைக்காய சூல்முகில் இந்திர
நீலம் மைச்சுழுகு பொன் னெய்த்த கூந்தலுக்கே
(உவமான சங்கிரம், நூ.29)

இதேபோல மற்றொரு 'உவமான சங்கிரகம்' விருத்தத்தால் அமைந்துள்ள நூலும் கூந்தலுக்கான உவமைப்பொருளைக் கூறியுள்ளது.

கொன்றைக் கனிகல் லார்மனமுங் கூந்தற் கழுகும் பொது மாது
தன்ற நநிதையஞ் சூன்மேகஞ் சவரி கருமை யடர்கங்குன்
மன்றல் கமழு மஞ்சனிப்பூ வயங்குஞ் சிறைவன் டினஞ்சோலை
துன்றல் வரும் பைம் புனல் கொழிக்குந் தூய வறலிந் தீர நீலம் (நூ. 25)
இருள் வலமா மூவைந்து மணிங்கு மிளைஞ ராஞயிரு
முருகின் பலமெ னறும் பூவு மொக்கச் சொருகிக் கடை சுழன்று
வருமைச் சுழிவு போலுநெய்த்து வண்டு சூழ்ந்து சூழை வளர்ந்து
தருதேன் றுளிப்ப வழிந்தொழுகுந் தகரக் குழலுக் கிணையாமே (நூ. 26)

பின்னிவிட்ட கூந்தல்

கன்னிக் கமுகி னரும்பாளை கரிய பிடியா னைத்துதிக்கை
யென்னக்கூறு மதிப்பகையு மேய்க்கும் பிச்சி மருக்கொழுந்து
புன்னை பூச்செண் பகமுல்லைப் பூச்செவ் வந்தி பொலிந்திலங்கப்
பின்னுக் கழகாய் வகுப்பெடுத்துப் பின்னி விடும்பூங் குழந்திணையே (நூ. 27)

முடிவுரை

உவமைப் பொருள்களைத் தொகுத்துத் தந்துள்ள நூல்கள் உவமை அகராதியாக விளங்குகின்றன. இங்கு ஒவ்வொரு நூல்களுக்கும் இடையே சில புதிய பொருள்கள் இடம்பெற்றுள்ளன. இது கால மாற்றத்தினால் புலவர்கள் கூந்தலுக்கு தாமே சேர்த்துக் கொண்டு நமது நுண்பான் நுழையுலகத்தைக் காட்டியுள்ளனர். ஆனாலும் அனைவரும் கூந்தலுக்கு கருமணலை பெரும்பாலும் உவமையாக கூறியுள்ளன. சைவலமும் இருளும் எல்லா நூல்களிலும் இடம்பெற்றுள்ளன. பெண்கள் ஒவ்வொருவருக்கும் விதவிதமான கூந்தல் இருப்பதால் அதற்கு அமைந்துள்ள உவமைப்பொருள்களும் விதவிதமாக அமைந்துள்ளன. இதுவே புலவனின் பார்வைப் பொருத்து அமைந்துள்ளன.

# மொழியும் கல்வி முன்னேற்றமும்

C.G. சங்கர்
முனைவர் பட்ட ஆய்வாளர்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை - 21.

மொழி வேறு கல்வி வேறு. மொழி மட்டுமே கல்வியாகாது. ஆனால் மொழியின்றிக் கல்வியில் மொழியென்பதே கல்விப் பயிற்சியை செம்மையாக அளிக்கும் கருவியாகும். ஒரு சிறந்த தேசியம் உருவாக வேண்டுமானால், அது தாய்மொழியை வெற்றிகரமாகக் கல்வித் துறையில் பயன்படுத்துவதில்தான் உள்ளது என்பார் மேனாட்டு அறிஞர் 'மேகன்'.

உலகில் வாழும் பெரும்பான்மையான மக்கள் தம் தாய்மொழி ஒன்றினையே நன்கு அறிந்தவராகவும் மற்ற மொழிகளைச் சிறிதளவு கற்றவராகவுமே உள்ளனர். இதற்கு விதி விலக்கானவர் சிறுபான்மையினரே. தெரிந்த மொழியில் கற்பிப்பதே தேவையும் பொருத்துமும் ஆகிறது.

மொழியின் வாயிலாகக் கல்வி கற்கும் மக்கள் அந்த மொழியையே புரிந்து கொள்ள முடியாத போது கல்வி ஒரு சுமையாகிறது. இதனாலேயே தாய் மொழியின் மூலம் கல்வி என்பதையே அறிஞர்கள் சிறந்தது என்று கூறினர். இந்தியாவில் டாக்டர். என். இராதா கிருஷ்ணன், கோத்தாரி போன்ற கல்வியாளர்களும் இந்தக் கருத்தையே ஆதரித்தனர்.

ஜெர்மன், ஜப்பான். ரஷ்யா போன்ற நாடுகளில் உயர் கல்வி, ஆராய்ச்சிக் கல்வி மட்டத்திற்கும் கூடத் தாய்மொழியே பயன்படுத்தப்படுகிறது.

## தமிழும் கல்வியும் பிற மொழி அறிவும்

பல ஆண்டுகள் ஆங்கிலேயர் ஆட்சியில் உயர்நிலைப் பள்ளிக் கல்வியும், கல்லூரிக் கல்வியும் ஆங்கிலத்திலேயே கற்பிக்கப்பட்டன. தமிழ் புதிய துறைகளில் வளர்ச்சி பெருமல் முடங்கிக் கிடந்தது. இன்று மேல் நிலைகளில் தமிழை அறிமுகப்படுத்தக் கல்வியுலகம் தயங்குகிறது. விடுதலை பெற்ற பிறகு, பள்ளிக் கல்வி தாய் மொழியிலும் கல்லூரிக் கல்வி ஆங்கிலத்திலும் என மாற்றப்பட்டன. 1960க்கும் பின் கல்லூரிகளில் புகுமுக வகுப்பிலும் தமிழைப் பயிற்று மொழியாகக் கொண்ட ஒரு பிரிவு துவங்கப்பட்டது. ஆனால் இதற்குப் பெரும் எதிர்ப்பு எழுந்தது.

## சுய சிந்தனை

மனம் ஒன்றை நினைக்கும் போது அது தமக்குத் தானே பேசிக் கொள்கிறது என்பார் சாக்ரடீஸ். நினைவுகள் என்பவை கண்ணால் காண முடியாதவையும் நுண்மையானவையும் ஆகும். அவை பருப்பொருளன்று. (யடி- எவசயஉவ ழெவ உழஉெசநஉவ) எனவே அவை நம்மை விட்டு நழுவி விடுவதற்கு முன் சொற்களால் அவற்றைச் சிறைப்படுத்தி மொழிக்குள்ளே அடைத்து விட வேண்டும் என்பார் 'காலின் செர்ரி'.1

## பள்ளிகளின் வகைகள்

இந்தியாவில் அரசு நடத்தும் பள்ளிகளும், மாநகராட்சி நடத்தும் பள்ளிகளும் மாநில மொழியையே பயிற்று மொழியாகக் கொண்டு செயல்படுகின்றன. தனியார் நடத்தும் பள்ளிகளில் சில ஆங்கிலத்தையும் சில மாநில மொழியையும் பயிற்று

மொழியாகவும் கொண்டவை. நடுவண அரசு நடத்தும் பள்ளிகள் ஊநவெசயட ளுஉாழழட என அழைக்கப்படுபவை. இவை முக்கிய நகரங்களிலும் மாவட்டங்களிலும் உள்ளன. இவற்றில் பல பாடங்களுக்கு ஆங்கிலம் பயிற்று மொழியாகவும் அமைந்துள்ளன. இவ்வாறு நடுவண அரசின் பள்ளிகள் இரு மொழிகளைப் பயிற்று மொழிகளாகக் கொண்டு அமைவதற்குக் காரணங்கள் உண்டு. நடுவண அரசு அலுவல் காரணமாகவும்,

தமிழகத்தில் பள்ளிகள்

விடுதலைக்குப்பின் இந்தியாவில் மாநில மொழிகளுக்கே முதலிடம் தர விரும்பும் இந்திய அரசின் கொள்கையினால் எல்லா மாநிலங்களிலும், அரசு பள்ளிகளில் மாநில மொழியே பயிற்று மொழியாக அமைகிறது. இவை கல்வித் துறையினரால் இந்திய பள்ளிகள; (Indian School) என்று அழைக்கப்படுகின்றன.

தமிழ்கத்தில் உள்ள பள்ளிகளின் புள்ளி விவரத்தைக் கண்டால், தமிழ்நாட்டுக் கல்விப் போக்கையும் வளர்ச்சியையும் ஆராய்வதற்கு எளிதாகும். 01-08-1977ம் முதல் 01-08-2006ம் ஆண்டு வரை எடுக்கப்பட்ட கணக்கின் படி தமிழ்நாட்டில் உள்ள பள்ளிகளின் எண்ணிக்கைப் பின்வருமாறு :-

மொத்த எண்ணிக்கை - 1,36,162
முன் துவக்கப் பள்ளிகள் - 1,029
துவக்கப் பள்ளிகள் - 27,395
நடுத்தரப் பள்ளிகள் - 15,709
உயர்நிலைப் பள்ளிகள் - 13,058

உயர்நிலைப் பள்ளிகள்

இந்தியப் பள்ளிகள் - 72,913
நடவண அரசின் செகண்டரி பள்ளிகள் - 146
ஆங்கிலோ இந்திய பள்ளிகள் - 1,132
நடுவண அரசு பள்ளிகள் - 71
இந்திய ஸ்கூல் சர்டிபிகேட் பள்ளிகள் - 45

1978-1979ம் ஆண்டுகளில்

CBSE பள்ளிகள் 54 ஆக உயர்ந்துள்ளன. ப்ளஸ்டு ஆரம்பிக்கப்பட்ட ஹையர் செகண்டரி இந்திய பள்ளிகள் - 912.. மற்ற பள்ளிகள் - 89.

1980-2006 - புள்ளி விபரம்

மாநகராட்சி பள்ளிகள்

உயர்நிலைப் பள்ளிகள் - 2,123
நடுத்தரப் பள்ளிகள் - 3,390
துவக்கப் பள்ளிகள் - 11,063
மொத்த எண்ணிக்கை - 16,976
பஞ்சாயத்து யூனியன்
நடத்தும் பள்ளிகள் - 63,036

மேற்கண்ட புள்ளி விவரங்கள் அனைத்தும் தமிழக அரசு கல்வித்துறையால் அங்கீகரிக்கப்பட்ட பள்ளிகளின் எண்ணிக்கை- யை அடிப்படையாகக்

கொண்டவையாகும். இவற்றில் இந்தியப் பள்ளிகள் எனக் குறிக்கப்பட்ட உயர்நிலைப்பள்ளிகளைத் தவிர மற்றவற்றில் ஆங்கிலமே பயிற்று மொழியாகும். இத்தகைய ஆங்கிலப் பள்ளிகள் மொத்த உயர்நிலைப்பள்ளிகளின் எண்ணிக்கையில் 5 விழுக்காட்டிற்கும் குறைவாகவே உள்ளன. பெரிய நகரத்தை பொறுத்த வரையில் ஆங்கிலப் பள்ளிகளின் விழுக்காடு அதிகரிப்பதைக் காணலாம் அதாவது தமிழகத்தில் உள்ள ஆங்கிலப் பள்ளிகளின் பெரும்பாலனவை நகரங்களிலேயே உள்ளன.

சென்னையில் மட்டும்

உயர்நிலைப் பள்ளிகள் - 227

இந்தியப் பள்ளிகள் - 154

ஆங்கிலப் பள்ளிகள் - 72

ஆங்கிலப் பள்ளிகள் இங்கு மொத்த தொகையில் முப்பது விழுக்காட்டிற்கும் மிகுதியாகவே இருப்பதைக் காணலாம் மூன்றில் இரண்டு பங்கு இந்தியப் பள்ளிகளும் ஒரு பங்கு ஆங்கிலப் பள்ளிகளும் உள்ளன. இந்த ஆங்கிலப் பள்ளிகள் சமுதாயத்தில் ஏற்படுத்தும் பாதிப்பை ஆராய்தல் இன்றியமையாததாகும்.

மாணவர் உள்ளம் - நாகரிகச் சின்னம்

தமிழ்ப் பள்ளி மாணவரும் ஆங்கிலப்பள்ளி மாணவரும் முதன் முதலில் ஒன்று சேர்வது கல்லூரி அளவிலேயே ஆகும் அப்போது இரு சார்பு மாணவரும், மாணவியரும் தமக்குள் ஆங்கிலத்தில் பேசுவதை நாகரிக சின்னமாக கருதுகிறார்கள். முன்னவர்கள் ஆங்கில மொழியை சரளமாகப் பேசக் கற்பதற்காக இந்த கறையை கையாளுகிறார்கள். இந்த முயற்சி கடினமாக உள்போது தாழ்வு மனப்பான்மையும் கொள்ளுகிறார்கள்.

The best way to learn a language is to speak the language

என்றான் ஒரு அறிஞன்.

ஆங்கிலத்தில் இடம் - இந்தியாவில்

மொழி என்று சொல்லும்போது, அந்த மொழி, மொழியாகக் கற்கப்படுகின்றதா அல்லது பாடமொழியாகச் செயல்படுகின்றதா என்று தெளிவாக அறிதல் தேவை. ஆங்கிலத்தை இரண்டாவது மொழியாக கற்பது வேறு. ஆங்கிலத்தைப் பாட மொழியாகச் கொள்வது வேறு(1).

ஆங்கிலத்தை ஒரு பாடமாக அதாவது இரண்டாவது மொழியாகக் கீழ்மட்டத்திலிருந்து ஆழமாகவும், அழுத்தமாகவும் கற்பிக்க வேண்டும். ஆனால் பயிற்று மொழியாகத் தமிழே இருக்க வேண்டும் அதனால் தாய் மொழி அழியும் அபாயமும், சுயசிந்தனை முடங்கும் தீமையும் ஏற்படாது. உலகத்தோடு தொடர்பு கொள்ளவும் முடியும்.(2)

துணை நூற்பட்டியல்

1) பேராசிரியர் கா. பட்டாபிராமன் - மொழி பயன்பாடு
2) Dr. rp. பாலசுப்பிரமணியன் மொழியும், அதன் வாழ்வும்
3) முனைவர் இரா. விஜயராணி - விளம்பர மொழி,
4) டாக்டர். ச. அகத்தியலிங்கம் - திராவிட மொழிகள்,
5) முனைவர். ச. அகத்தியலிங்கம் - தமிழ்மொழி அமைப்பியல்
மெய்யப்பன் தமிழாய் வதம்

# மருத நிலமும் - மள்ளர் மரபும்

உ. சண்முகநாதன்
ஆய்வியல் நிறைஞர், தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 21.

**நுழைவுவாயில்**

தமிழ் மன்னர்களாகிய சேர, சோழ, பாண்டியர்களின் ஆட்சி வீழ்ச்சிக்குப் பிறகு, 16,17-ஆம் நூற்றாண்டுகளில் தமிழகம் புகுந்த வேற்று மொழிக்காரர்களான நாயக்கர்களாலும், பின் வந்தவர்களாலும் தமிழ் மக்களாகிய மள்ளர்களின் (பள்ளர்களின்) அடையாளம் மறைக்கப்பட்டன. இதன் விளைவாக இன்றைய காலகட்டத்தில் மள்ளரின மக்கள் கூலிகளாய்; அடிமைகளாய்; நிலமற்றவர்களாய் தங்களது அடையாளத்தையும் மரபுகளையும் இழந்து வாழ்ந்து வருகின்றனர். “மருத நிலமும் மள்ளர் மரபும்” எனும் தலைப்பிலான இக்கட்டுரை மள்ளரினத்தின் மரபுகளை அடையாளப்படுத்தும் நோக்கில் அமைகின்றது.

**மருத நிலத்தின் மாண்பு**

அன்பின் ஐந்திணைகளுள் ஒன்று மருதத்திணை. வயலும் வயல் சார்ந்த நிலப்பகுதியைக் குறிக்கும். இந்நிலத்திற்குரிய கடவுளான இந்திரனை,

“வேந்தன் மேய தீம்புனல் உலகமும்” (தொல். 951)

என்கிறது தொல்காப்பியம். மேலும், இந்நிலத்திற்குரிய பொழுதுகளை தொல்காப்பியமும், அகப்பொருள் விளக்கமும் கூறுகிறது.

“வைகறை விடியல் மருதம்” (தொல். 954)

நீர்ப்பாசனம் அதிகம் செழிப்பான பகுதியாக மருதம் விளங்கிற்று. வேளாண்மைத் தொழில் நடைபெறும் பொய்கைப் பகுதியாகும். வேளாண்மைத் தொழில் ஈடுபடும் மக்கள் மள்ளர்கள் (உழவர்கள்) எனப்பட்டனர். இவர்கள் வேளாண்மைக்குரிய மழை பொழிய இந்திரனை வழிபட்டதாக பள்ளு நூல்கள், நாட்டார் வழக்காற்றுப் பாடல்கள், தொன்மைக் கதைகள் போன்றவை மூலம் அறியமுடிகிறது. பொய்கையூரன், வயலூரன், ஊரன், புனலூரன், கழனியூரன், நல்லூரன், மருதநிலத்தான், நெல்லூரன் போன்ற சங்க இலக்கியச் சொற்கள் மருத நிலத்தில் வாழும் உழவர்களாகிய மள்ளர்களைக் குறித்து நிற்கின்றன.

“மருதம், மாந்தனை நாகரிகப்படுத்திய பகுதி; ஓடித்திரிந்து கொண்டிருந்தவனை ஓரிடத்தில் இருத்திய பகுதி. நாள் உணவுக்குத் தேடி அலைந்தவனுக்கு வாழ்நாள் அளவும் உணவு அளித்த பகுதி என மருதத்தின் சிறப்பை உணர்த்துவார்1 க.ப. அறிவாணன். மேலும் மள்ளர் குடி, உழவர் குடி எனறு திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி போன்ற நிகண்டுகள் மிகத்தெளிவாகக் கூறுகின்றன.

**மள்ளாரின் வீழ்ச்சி நிலை**

நானிலத்தில் செழிப்பான பகுதியாகிய மருத நிலத்தில் உழவுத்தொழில் புரிந்திட்ட மள்ளரின மக்கள், நாயக்கர்களின் பாளையப்பட்டு முறையால் நிலங்களை இழந்து கூலிகளாக (பள்ளர்களாக) மாறிவிட்டனர். இந்நிலையில்தான் பார்ப்பணர்களால் ‘தீண்டத்தகாதவர்கள்’ என வீழ்த்தப்பட்டனர்2 எனும் மள்ளரிய

அறிஞர் தே. ஞானசேகரனின் கருத்து மள்ளர் இன மரபு என்பது வேளாண்மை வாழ்வை மையமாகக் கொண்டது எனப் புலப்படுத்துகிறது. மேலும் நாயக்கர் ஆட்சியில் இம்மக்களை இழிவுபடுத்துவதுடன் அவரது பண்டைய வரலாற்றைத் திரையிட்டு மறைக்குமுகத்தான் ஏராளமான பள்ளு நூற்களை தோற்றுவித்து இவர்களது மரபு பெயராகிய மள்ளர் என்பதைப் பள்ளர் என மாற்றினர்3 எனும் மள்ளரியத் தந்தை இரா. தேவ ஆசிர்வாதத்தின் கூற்று மள்ளர் மரபினை வெளிக்கொணர்கிறது. நாயக்கர் காலத்தில் தமிழகத்தில் உள்ள அனைத்து கோவில்களின் நிர்வாகம் மள்ளர்களிடம் இருந்து பறிக்கப்பட்டது. இந்தக் கொடுமை வெள்ளையர்கள் ஆட்சயிலும் தொடர்ந்தன என்பார்4 பேராசிரியர் குருசாமி சித்தர். வேளாளர், வணிகர் போன்ற உழவுத்தொழிலுக்கு தொடர்பற்ற சமூகத்தலைவர் கலப்பை, மேழி போன்றவற்றை பறித்துச் சென்றதை (நிலங்களைப் பறித்துச் சென்றதை) முக்கூடற்பள்ளு, பொய்கைப் பள்ளு, செங்கோட்டுப் பள்ளு போன்ற பள்ளு நூல்கள் பறைசாற்றுகின்றன என்பார்5 பேராசிரியர் சு. வேங்கட்ராமன். இவ்வாறு மள்ளர் இன மக்கள் நிலங்களை இழந்து கூலிகளாகவும் அடிமைகளாகவும் வீழ்த்தப்பட்டுள்ளனர்.

**மள்ளர் மரபும் இலக்கியச் சான்றும்**

"அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வருந்தசைத்தாகும் மள்ளர் எனும் பெயர்" (திவாகர நிகண்டு)
"செருமலை வீரரும் திண்ணியோரும்
மருதநில மக்களும் மள்ளர் என்ப" (பிங்கல நிகண்டு)

திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு போன்றவை மூலம் மள்ளர்கள் யார் என்பதைத் தெளிவாக அறிய முடிகிறது. சங்க இலக்கியத்தில் காணலாகும் 'மள்ளர்' எனும் சொல்லாட்சி பள்ளர்களை (தற்காலத்தில்) குறித்தது எனலாம். ஏனெனில் சங்க இலக்கியத்தில் பள்ளர் எனும் சொல்லாட்சி இடம் பெறாதது இதற்குச் சான்றாக அமைகிறது. மேலும்,

"மள்ளர்கள் எல்லோரும் ஏர்பூட்டி" (வையாபுரிப் பள்ளு, பா.172)
"மள்ளர் பள்ளியருடனே கூடி வந்து" (செங்கோட்டுப் பள்ளு, பா.197)
"பண்ணை மள்ளச்சாதிக் குடும்பன்" (பொய்கைப் பள்ளு, பா.25)
"மள்ளர் குலத்துக்குப் புத்திகள் வந்தது ஆண்டே"
(செங்கோட்டுப் பள்ளு, பா.693)

"மள்ளர் குலததில் வரினுமிரு பள்ளியர்கோர்"
(முக்கூடற் பள்ளு, குடிப்பெருமை, பா. 5)

மேற்கண்ட பள்ளு நூல்களின் வாயிலாக மள்ளர்கள் இனங்காட்டப்படுவதை அறிய முடிகிறது. மேலும் கம்பராமாயணம், தேம்பாவணி, பேரூர் புராணம் போன்றவை உழவர்களான மள்ளர்களைப் பற்றிக் குறிப்பிடுவதை அறிய முடிகிறது.

**மள்ளர்கள்தான் பள்ளர்கள்**

வரலாற்று அறிஞர்களும் திறனாய்வாளர்களும் பல்வேறு ஆதாரங்களுடன் 'மள்ளர்கள்'தான் இன்றைய நிலையில் பட்டியல் இனத்தில் சேர்க்கப்பட்ட பள்ளர்கள் என்றுக் குறிப்பிடுவதை மள்ளரிய அறிஞர் தே.

ஞானசேகரன், பள்ளு இலக்கியம் மறுவாசிப்புப் பிரதிக்கு வெளியே ... எனும் நூலில் கூறியுள்ளார். சான்றாக (அ) சங்க இலக்கியத்தில் வரும் மள்ளர் பள்ளரின் மூதாதையர் ஆவார் என்பார் வரலாற்று அறிஞர் கே.ஆர். அனுமந்தன். (ஆ) மள்ளர் பள்ளர் ஆனது உச்சரிப்பு வேறுபாடே என்பார் டாக்டர். ஜீ. ஒப்பர்ட். (இ) பழந்தமிழ் இலக்கியத்தில் வரும் மள்ளர் பிற்காலதில் பள்ளர் என வழங்கலாயினர் என்பார் அறிஞர். கே. வேலுப்பிள்ளை. (ஈ) பள்ளர் அல்லது மள்ளர் பாண்டிய படை மறவர் ஆவார் என்று குறிப்பிடப்படும் இவர் மேலும் பண்டையத் தமிழகத்தில் பள்ளர் என்ற வகுப்பை இல்லை. அவருக்குப் பதில் மள்ளர் என்ற வகுப்பு இருந்தது. இவர்கள் விவசாயத் தொழிலாளர்களாகவும் படை மறவர்களாகவும் இருந்தனர் என்பார் அறிஞர் எம். சீனிவாச அய்யங்கார். (உ) பள்ளர் என்பது மள்ளர். மருதநிலத்தில் வாழும் உழவர். பாலை நிலத்து மறவர் படைஞராகுமுன் மருத நிலத்து உழவரே போர்தொழில் செய்து வந்தனர். அதன் பின்பும் உழவர் போர் தொழிலை விட்டு விடவில்லை என்பார் மொழிஞாயிறு தே. பாவாணர். (ஊ) சங்க இலக்கியத்தில் மள்ளர் என்னும் சொல் மன்னனையும் மக்களையும் குறித்தது. ஏர்களத்தில் உழவர்களாகவும் போர்களத்தில் வீரராகவும் வந்தவர்கள் மள்ளர்கள் என்பர் ஒப்பியல் அறிஞர் கதிர் மகாதேவன். (எ) தமிழ் இலக்கியத்தில் குறிக்கப்படும் மள்ளர்கள் தேவேந்திர குல வேளாளர்களாகிய பள்ளர்கள் என்பார் பேராசிரியர் குருசாமி சித்தர். மேலும் இலக்கியம், வரலாறு; கல்வெட்டு, குடிக்கணக்கெடுப்பு இன்றைய மள்ளர் இன மக்களின் பண்பாடுகளை ஆதாரமாகக் கொண்டு மள்ளர்கள் தான் பள்ளர்கள் என முடிவு செய்கின்றார்

முடிவுரை

வேற்று நாட்டவரின் வருகை உழவர்களான மள்ளர் இனத்தின் மரபை, அடையாளத்தை மறைத்து வைத்துள்ளது எனலாம். மேலும் அவர்களை அடிமைகளாகவும் கூலிகளாகவும் தீட்டுடையவர்களாகவும் எண்ணி நாடாத்தி வந்திருப்பதை அறியமுடிகிறது. மள்ளர் இனம் ஏரையும் போரையும் மரபாகக் கொண்டது என்றும். நெல் நாகரிகத்தைக் கற்றுக் கொடுத்தது என்றும், குடும்ப அமைப்பைத் தோற்றுவித்தது என்றும் அறியமுடிகிறது. இதுவே மள்ளர் இனத்தின் மரபாக போற்றப்படுகிறது எனவும் அறியலாம்.

குறிப்புகள்

1. க.ப. அறவாணன், அற்றை நாட் காதலும் வீரமும், ப.118.
2. தே. ஞானசேகரன், பள்ளுப்பிரதிகள் மறுவாசிப்பிற்கு வெளியே, ப.87.
3. இரா. தேவ ஆசிர்வாதம், தமிழ் மூவேந்தர் மரபினரான தேவேந்தர் வீழ்ச்சி, ப.111.
4. தே. ஞானசேகரன், மேலது, ப.88.
5. தே. ஞானசேகரன், மேலது, ப.89.
6. ந. முத்து மோகன், மள்ளர் மலர் (பிப்ரவரி 2001), 'ஏரும் வாளும்', ப.17.

# ஆடன் கூறிய தமிழ் வேற்றுமை உருபுகள் - ஒரு பார்வை

எஸ். ப்ராங்கிளின் தம்பி ஜோஸ்
எஸ்.ஆர்.எல்.சி,
மைசூர்.

முன்னுரை

திராவிட மொழிகளுள் பழமை வாய்ந்த மொழி, தமிழ் மொழி. இம்மொழி இந்தியாவில் மட்டுமல்லாமல் மேலை நாடுகளான மலேசியா, சிங்கப்பூர், பிஜி, மொரீசியஸ் மற்றும் இலங்கை போன்ற நாடுகளிலும் பேசப்பட்டு வருகின்றது. தமிழ் மொழி இரண்டாயிரம் ஆண்டுகள் பழமை வாய்ந்த மொழியாகும். மேலை நாட்டு மொழி அறிஞர்கள் தமிழ் மொழியில் பல ஆய்வுகள் மேற்கொண்டுள்ளனர். அவர்களுள் ஆடன், ஆண்டர்னொவ், சிப்மென், நுக்மென், கால்டுவெல், ஜோசப் பிஸ்ஸி, யமனோ, பரோ போன்றோர் குறிப்பிடத்தக்கவர்களாவர். மேலும் தமிழ் அறிஞர்களான சுப்பிரமணிய சாஸ்திரி, பரமசிவம், மீனாட்சிசுந்தரனார் போன்றோர் தமிழுக்காக பெரும் பங்காற்றி இருந்தாலும் தமிழ் மொழிக்கு மேலை நாட்டு மொழி அறிஞர்களின் பங்களிப்பு மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

மேல்நாட்டு அறிஞர்கள் கிறிஸ்தவ மதத்தை பரப்புவதற்காக வந்தார்களே தவிர தமிழ் மொழியை ஆர்வமாகப் படிக்க வர- வில்லை. இருப்பினும் தங்கள் மதத்தைப் பரப்ப தமிழ் மொழியை நன்றாகப் பயில வேண்டிய நிலை ஏற்பட்டது. இதனால் தமிழ் மொழியை நன்கு ஆராய்ந்தும் மற்ற மொழிகளோடு ஒப்பீடு செய்தும் தமிழ் மொழிக்கு இலக்கணம் எழுதினார்கள். இந்த இலக்கணமானது தமிழ் மொழியை தாய்மொழி அல்லாதவர்கள் (Non Native Speakers) தமிழ் மொழியைப் பயில்வதற்கு எழுதப்பட்டது. ஆனால் தற்போது தமிழை தாய்மொழியாகக் கொண்டவர்களும் இலக்கணத்தைப் பின்பற்றி ஆராய்ச்சியை மேற்கொள்கின்றனர்.

இவ்வாய்வுக் கட்டுரை மேலை நாட்டு மொழி அறிஞர்களுள் ஒருவரான ஏ.எச்.ஆடன் Progressive Grammar of Common Tamil" என்னும் நூலில் வேற்றுமைகளைப் பற்றி கூறியுள்ளார். இது தொல்காப்பியரின் வேற்றுமைகளையும் தற்காலத் தமிழின் வேற்றுமைகளையும் ஒப்பிட்டு எவ்வகையான மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன என்பதனை இக்கட்டுரையில் சுருக்கமாக கூறப்பட்டுள்ளது.

வேற்றுமை விளக்கம்

பெயர்ச்சொல்லின் பொருளில் வேறுபாடு தோன்றச் செய்வது வேற்றுமை எனப்படும்.

எ.கா. நான் கவிதாவைப் பார்த்தேன்.

மேலே கூறப்பட்டுள்ள வாக்கியத்தில் கவிதா என்ற பெயரச்சொல்லின் ஈற்றில் 'ஐ' என்னும் உருபு சேர்ந்து செய்யப்படு பொருளாய் வேறுபட்டுள்ளது.

ஒரு வாக்கியத்தில் பெயர்ச்சொல்லையும் வினைச்- சொல்லையும்

தொடர்புபடுத்திக் காட்டக்கூடிய உருபு வேற்றுமை உருபு எனப்படும்.

ஆடனின் பார்வையில் வேற்றுமைகள்

1. முதலாம் வேற்றுமை (ழேஅiயெவiஎந ஊயளந)க்கு குறியீடுகள் இல்லை எனக் கூறப்பட்டுள்ளது.

(எ.கா.) மரம்

Nominative Casef குறியீடு கிடையாது. மேலும் இவ்வேற்றுமை எப்பொழுதும் எழுவாயைக் கொண்டு அமையும். (ஆடன் 1942 ஐந்தாம் பதிப்பு)

2. இரண்டாம் வேற்றுமை (Accusative Case)

இரண்டாம் வேற்றுமையின் குறியீடு 'ஐ'. இது ழுடிதநஉவ முடிதநஉவ்'ஐ' குறிக்கும்.

(எ.கா.) மரம் ஐ மரத்தை

அவன் மரத்தை வெட்டினான்.

மேலே கூறப்பட்ட எடுத்துக்காட்டில் மரம் ஒரு ழுடிதநஉவ முடிதநஉவ ஆக வந்துள்ளது. ஆகவே ழுடிதநஉவ முடிதநஉவ ஆள மரம் 'ஐ' என்ற இரண்டாம் வேற்றுமையை எடுத்துள்ளது.

3. கருவிப் பொருள் வேற்றுமை (Instrumental Case)

மூன்றாம் வேற்றுமையான கருவிப் பொருள் வேற்றுமைக்கு இரண்டு படிவங்கள் (குழசஅள) இருக்கின்றன. ஒன்று கருவிப் பொருள் (ஐளெவசர-அநவெயட). இரண்டாவது உடனிகழ்ச்சி (யுளளழஉயைவiஎந) கருவிப் பொருளின் குறியீடு 'ஆல்' என்பதாகும்.

(எ.கா.)

மரம் ஆல் மரத்தால்

மரத்தால் செய்யப்பட்டது.

மூன்றாவது வேற்றுமையின் இரண்டாவது படிவமான (Forms) உடனிகழ்ச்சி வேற்றுமையின் குறியீடு 'ஒடு' ஆகும்.

(எ.கா.)

மரம் ஒடு மரத்தோடு

அவன் மரத்தோடு ஒட்டி நின்றான்.

பெயர்ச்சொல்லோடு 'ஒடு' என்னும் வேற்றுமை வந்தால் அந்தச் செயலோடு பெயர்ச்சொல் உடனிகழ்ச்சியாக வரும்.

4. கொடைப் பொருள் வேற்றுமை (Dative Case)

'க்கு' 'உக்கு' ஆகிய இரண்டும் Dative Case marker-ராக வருகிறது.

# பெண்ணியம் மற்றும் தலித்தியத்தின் நிலை

S.தனலெட்சுமி
K.பாறைபட்டி

## முன்னுரை

பெண்ணியம் என்பது பெண்களைச் சமூக ரீதியாக முன்னேற்ற எழுந்த இயக்கமாகும். தலித்தியம் என்பது தீண்டத்தகாதவர்கள் என்று ஒதுக்கப்பட்ட மக்களைச் சமூக அளவில் முன்னேற்றுவதாகும். இவ்விரு இயக்கங்களும் முறையே பெண்களுக்கான, தாழ்த்தப்பட்டவர்களுக்கான சமூக உரிமைகளைப் பெற்றுத் தர போராடி வருகின்றன.

## பெண்ணியம்

பெண்ணியம் என்பது உலகளாவியது. இவ்வியக்கம் நீண்ட வரலாறுடையது. பெண் விடுதலையின் வித்து 15ஆம் நூற்றாண்டில் இடப்பட்டது என்றாலும் 19ஆம் நூற்றாண்டில் இருந்து தான், இ்.து இயக்க அளவில் செயலாற்றத் தொடங்கியது. அமெரிக்காவில் முதன் முதலாகத் தோற்றம் பெற்ற பெண்ணியம், இங்கிலாந்து மற்றும் பிரான்சில் கால் ஊன்றி, இன்று உலக அளவில் பரவி, மாபெரும் இயக்கமாக வளர்ந்து மக்களிடையே பெரிய பண்பாட்டுப் பாதிப்பை ஏற்படுத்தியுள்ளது.

## தலித்தியம்

தலித்தியம் என்பது ஓர் இந்திய இயக்கமாகும். உலக அளவில் அடிமைப்பட்டோர் ஆங்காங்கே போராடிய வரலாறு உண்டு. இந்தியாவைப் பொறுத்தவரை, தீண்டத்தகாதவர்களின் விடுதலைப் போராட்டம் ஒரு நூற்றாண்டு கால வரலாறு உடையதாகும். டாக்டர். அம்பேத்கார் அவர்கள் முயற்சியால் தீண்டாதார் ஷெ'ட்யூல்டு வகுப்பாரின் சம்மேளனம்' என்ற அமைப்பின் கீழ் முதல் முதலாக ஓரணியாகத் திரண்டு தங்கள் நலனுக்காகப் போராடத் தொடங்கினர்.

தலித்துகள், தங்கள் இன முன்னேற்றத்திற்காகப் போராடுவதை இலக்காகக் கொண்டிருந்தாலும், தங்களை அடிமைப்படுத்திய அழமைப்படுத்தி வருகின்ற சாதி இந்துக்களை எதிரிகளாகக் கருதி அவர்களுக்கு எதிராகவும் போராடி வருகின்றனர். -

## பெண்ணடிமை

பெண்ணடிமை என்பது பாலின் அடிப்படையில் பிறப்பு தொட்டு தோற்றம் பெற்றது. ஆண், பெண் இருவருக்கும் உடல் கூற்றில் அமைந்த வேறுபாடும், சமூகம் கற்பிக்கும் ஆண்மை, பெண்மை என்ற வேறுபாடும் பெண்ணடிமைத் தனத்திற்கு அதி தீவிர வித்திட்டன. பெண் தன்மை என்பது ஆண் தன்மையை விட ஒரு படி கீழானது என்று கருதி ஆடவர்களும் பெண்களை அடக்கி ஆண்டு வருகின்றனர். சுலாமித்்பயர் ஸ்டோன் என்ற பெண்ணியவாதி, பெண்கள் தங்களின் உடற்கூற்றின் அடிப்படையிலேயே ஒரு விதத்தில் ஊனப்பட்டவர்கள் என்று கூறியுள்ளார்.

தீண்டாமை

தீண்டாமை என்பது மதம், சாதி இவற்றின் பெயரால் பிறப்பின் அடிப்படையில் தோன்றியதாகும் பெரும்பான்மை இனத்தாரின் அதிகார பலமும் செல்வாக்கும் தீண்டாமை சமூக அளவில் ஆழ வேருன்றத் துணை போயின, இந்துக்களில் குறிப்பாகப் பார்ப்பனர்கள் பூசை, சடங்கு மற்றும் சம்பிரதாயங்கள் மூலம் ஷதீட்டு' என்பதைக் கடுமையாகப் போற்றி வருவதால், அவர்களை எதிர்ப்பதில் தீண்டப்படாதோர் தீவிரம் காட்டி வருகின்றனர். அதனால் தான் இவ்வியக்கம் பொது நிலையில் ஷபார்ப்பனர் எதிர்ப்பு' இயக்கமாகவும் சிறப்பு நிலையில் ஷதலித் இயக்கமாகவும்' தன்னை இனம் காட்டிக் கொண்டுள்ளது.

பெண்கள் நிலை மற்றும் தலித்தின் நிலை இவற்றின் ஒற்றுமை

பெண் விடுதலைப் போராட்டத்திற்கும் தலித் விடுதலைப் போராட்டத்திற்கும் பலவித ஒற்றுமைகள் உண்டு. இவ்விரு இயக்கங்களின் எதிர்பார்ப்பும், ஏமாற்றமும், எழுச்சியும், வீழ்ச்சியும், தொய்வும், தேக்கமும், தளர்ச்சியும், மீட்சியும் ஏறக்குறைய ஒன்றுபட்டுக் காணப்படுகின்றன. பெண்களும், தலித்துக்களும் சரித்திரத்தில் புறக்கணிக்கப்பட்டுச் சமூகம் வகுத்த எல்லைக்குள் வாழ்ந்து வதைப்பட்டவர்கள். காலம் காலமாகப் போராட்டமே வாழ்வாகிப் போனவர்கள். பொருளாதாரம், பண்பாடு, அரசியல் என்ற பல அடிப்படையில் ஒதுக்கப்பட்ட இவ்விரு சாராரும் தங்கள் உரிமைகளைப் பெறுவதற்காகத் தாங்களே வருந்திப் போராட வேண்டிய நிலையில், அதற்காக ஒன்று திரண்டனர்.

எனவே, பெண்களும், தீண்டப்படாதாரும் சமத்துவம் என்ற கொள்கையை முன் வைத்துப் போராட்டத்தை நடத்தினர். விடுதலை என்ற உணர்வை அடிப்படையாக வைத்து ஷசமத்துவம்' என்ற இலக்கை நோக்கிச் செல்வது பெண்ணியம் என்றால் ஷஎழுச்சி' என்ற உணர்வை அடிப்படையாகவைத்து ஷசமத்துவம்' என்ற இலக்கை நோக்கிச் செல்வது தலித்தியம் எனலாம்.

பெண்ணியம், தலித்தியம் என்ற இரண்டும், அடக்கி ஒடுக்கப்பட்டவர்களின் உரத்த எழுச்சியாகும் காலம் காலமாக தாம் அடிமைபட்டுக் கிடக்கிறோம் என்பதையும், தாம் அடிமைப் படுத்தப்பட்டிருக்கிறோம் என்பதையும் உணர்ந்த போது பிறந்தவைகளே இவ்விரு இயக்கங்களும்.

முடிவுரை

பெண், தலித் இரு தரப்பினரும் தமக்கு எதிராக எழுந்துள்ள ஒடுக்குமுறையை எதிர்க்க வேண்டியவர்களாயிருக்கிறார்கள். அப்பொழுதுதான் பெண்ணடிமை நிலையும் தலித்தின் சமூகத் தாழ்நிலையும் முழுவேகத்தோடு சமூகத் தாழ்நிலையும் முழு வேகத்தோடு சமூகப் புரட்சியாக வளர அடிப்படை சிந்தனைகள் வேர் கொள்ளும் மக்களின் இரக்கத்தோடு இரத்தமாக கலந்திருந்த அடிமைக் கலாச்சாரத்தை வேரறுக்க ஏற்பட்ட இவ்விரு இயக்கங்கள் பற்றி அன்று தொட்டு இன்று வரை விவாதங்களும் சர்ச்சைகளும் நிலவி வருகின்றன. இன்று, இவ்விரு இயக்கங்களின் கடும் போராட்டங்களினாலும் இடைவிடாத முயற்சிகளாலும் ஏற்பட்ட சமூக விளைவுகளை சீர் தூக்கிப் பார்க்கும் போது, பெண் விடுதலையும், பெண்களின் சமூக இலக்கை எட்டியுள்ளதைக் காண முடிகிறது. தலித்தியம் அந்த அளவு வெற்றிப்படிகளை எட்டவில்லை, என்றாலும் அதுவும் இலக்கை நோக்கி முன்னேறி வருவதை மறுக்க இயலாது.

# தொல்காப்பியத்தில் இலக்கியப் போக்கு

நா. சுப்புலட்சுமி

"எள்ளினின்று எண்ணெய் எடுபடு வதுபோல்
இலக்கி யத்தினின் றெடுபடும் இலக்கணம்"

ஆதலான், தொல்காப்பியருக்கு முன்னர், பல இலக்கியங்கள் நிலவியிருக்க வேண்டும்ளு அவற்றிற்கே தொல்காப்பியனார் தம் நூலின் பலவிடங்களிலும் 'என்ப' 'என்மனார் பலவர்', 'மொழிப', 'யாப்பறி புலவர்', 'நூல் நவில் புலவர்', என இருநூற்று ஐம்பதுக்கு மேற்பட்ட இடங்களில் எடுத்து மொழிவதால் இவற்றுக்கெல்லாம் அடிப்படையாகத் தொல்காப்பியருக்கு முன்பே எண்ணற்ற இலக்கிய இலக்கணங்கள் இருந்திருக்க வேண்டும்ளு அவற்றை நன்கு ஆராய்ந்தே தம் நூலை அமைத்திருக்க வேண்டும் என்பதை அறியலாம்.

'முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி'
எனப் பாயிரம் பகர்வதும்,.

மேலும்,

'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான் புலனெறி வழக்கம்'

என்று தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் தமக்கு முற்பட்ட இலக்கிய மரபினைக் குறிக்கிறார்.

மேலும் புறநானூற்றின் 2-ஆம் பாட்டும், மற்றும் சில பாட்டுகள், தொல்காப்பியத்திற்கு முன்னரே தோன்றியிருக்க வேண்டும் என்பர்.

"இலக்கண உலகின் ஏகச்சக்கரவர்த்தி" என்று கூறப்படும் பாணினி என்ற வடமொழி ஆசிரியரும் இவ்வளவு விரிவாக ஆராய்ந்ததில்லை என்பதிலிருந்து தொல்காப்பியத்தின் பெருமை தெள்ளத் தெளிவு.

## இலக்கியத்தின் போக்கு

எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி இருந்ததையும், முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து முடிந்ததையும், அவர் சிந்தையில் ஆயிரம் எண்ணங்கள் வளர்ந்து சிறந்ததையும், உரைக்கிறது இலக்கியம்.

அன்னையர் தோன்றி மழலைகள் கூறி அறிவுற்றதையும், அவர் கன்னியராகி நிலவினில் ஆடிக் களித்ததையும், மங்கையராய் அவர் இல்லறம் நன்கு வளர்த்ததையும், விழுமிய முறையில் விளக்குவது இலக்கியம்.

இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தமிழ் மக்கள் வாழ்ந்த வாழ்க்கையைக் கற்பனைக் கலப்பின்றிப் படம் பிடிக்கும் அற்புதக் கண்ணாடியே இலக்கியம்.

## இலக்கியத்தின் உருவம்

இலக்கியம் என்பது ஒரு முழுமைப்பொருள். அதற்கு பல்வேறு உறுப்புகள் உள்ளன. அவை இணைந்தும் இழைந்தும் செயற்பட்டால்தான் அந்த முழுமைப்பொருளின் வடிவையும் அழகையும் நாம் கண்டும் உணர்ந்தும் போற்ற முடியும் எனபது இ.லக்கிக் கொள்கையாகும். இதை தொல்காப்பியர்

செய்யுளியலில் பதிவு செய்துள்ளமைக் குறிப்பிடத்தக்கது. இலக்கிக் கொள்கையில் பொருள் வேறு, வடிவம் வேறு எனும் பாகுபாடு கிடையாது.

இவ்விரண்டும் இணைந்து இயங்குகிற பொழுது இலக்கியம் எனும் உயிர்த்துடிப்பு வாய்ந்த கலைப்படைப்பு தோன்றுகிறது என்று அ.ச. ஞானசம்பந்தன் கூறுகிறார்.

தொல்காப்பியர் பொருளதிகாரத்தில்,

அகத்திணயியல், புறத்திணையியல், ஆகிய ஐந்து இடங்களில் இலக்கியத்திற்குரிய களவியல் பாடு பொருளையும் கற்பியல், பொருளியல், செய்யுளியல், உவமவியல், ஆகிய நான்கு இயல்களில் இலக்கியத்திற்குரிய பொருளியல், உருவத்தினையும் அமைக்கிறார்.

மெய்ப்பாட்டியல்

குறிக்கோள் இலக்கியம்

பழந்தமிழ் இலக்கியத்தினை அகம், புறம் என இரு பிரிவுகளாகப் பகுத்தனர். ஒத்த தலைமகனும் தலைமகளும் உள்ளம் ஒன்று கூடி வாழும் வாழ்க்கையைக் கூறும் பாடல்கள் அகமெனப்பட்டன.

போர், கொடை, வெற்றிச்சிறப்பு முதலியவற்றைக் கூறும் பகுதிகள் புறமெனப்பட்டன. அகவாழ்வு வீட்டு இன்பத்திற்கும், புறவாழ்வு நாட்டுச் சிறப்புக்கும் உரமூட்டின. காதல் பற்றிப் பாடப்பபடுகின்ற பாடல்களிலே நுண்மையான ஒரு வரையறை, கட்டுப்பாடு கையாளப்பட்டது.

காதல் பாட்டுகளில் காதலர் பெயரைக் கூறும் வழக்கம் இல்லை இதனை,

“மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்”,

என்று தொல்காப்பியம் கூறுகிறது. எனவே காதலைப்பற்றிப் பிறந்த கவிதைகள் எல்லாம் சமுதாயம் முழுவதற்குமே பொதுவாய் எழுந்தன�ளு அனைத்தும் குற்றமற்ற குறிக்கோள் இலக்கியங்களாய் முகிழ்ந்தன.

தொகுப்புரை

வளர்தமிழின் பழமைகாட்டும் வரலாற்றுச் சுவடியாக, வருங்காலத் தமிழுக்கும் வகையூட்டும் வழிகாட்டியாக விளங்குகிறது. எண்ணற்ற இலக்கணங்கள் தமிழில் இருப்பினும், முந்தைய நூல்களையெல்லாம் வென்று தன்னகத்தே கொண்டும்ளு பின்வரும் நூல்களைத் தன் ஆணைக்கு இயங்கச்செய்தும், சங்கம் தொடங்கி இன்றளவும் எல்லோராலும் போற்றப்பெறும் பெருமைக்கு உரியதாகிறது.

செய்யுள் வாழ்க்கை வைத்து எழுதப்பட்டு, அதனால் வழக்கிழந்த இலக்கண நூல்கள் பேல்லாமல், இது உலக வழக்கையும், செய்யுள் நெறியையும் அடிப்படையாகக் கொண்ட உண்மை நூல்.

# ஏறிய மடற்றிறம் – துறையிலிருந்து இலக்கிய வகையான வளர்ச்சி நிலை

**சி.சண்முகப்பிரியா,**
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழியற்புலம்,
மதுரைகாமராசர் பல்கலைக்கழகம், மதுரை–21.

அகத்திணையைத் தொல்காப்பியம் கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என ஏழு கருத்தாக்கங்களாக முன்மொழிந்துள்ளது. இவற்றுள், கைக்கிளை ஒருதலைக் காமம் எனவும், ஐந்திணை ஒத்த காமம் எனவும், பெருந்திணை ஒவ்வாக் காமம் எனவும் கூறப்படுகிறது. இத்திணைகள் வரிசைப்படுத்தப்பட்டதற்கு நிலமே அடிப்படை, காதல் ஒழுக்கங்களே அடிப்படை போன்ற பலவகையான காரணங்கள் உரையாசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளன. இவற்றுள், ஒவ்வாக் காமம் என்று அழைக்கப்பட்டு ஏழு நிலைகளுள் இறுதியாகக் கூறப்பட்டுள்ள பெருந்திணை நான்கு கூறுகளைக் கொண்டுள்ளது. அவற்றுள் ஒன்றான ஏறிய மடற்றிறம் பின்னாட்களில் துறை என்னும் நிலையிலிருந்து இலக்கிய வகையாகப் பரிணமித்த வளர்ச்சி நிலை இக்கட்டுரையில் ஆராயப்படுகிறது.

**தொல்காப்பியத்தில் மடல்**

தொல்காப்பியத்தில் இரு திணைகளில் மடல் பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன. அகத்திணையியலில் திணைகளை விளக்க முற்படும் போது, ஒரு திணைகளுள் ஐந்திணைக்கு முதலாவதாகவும், கைக்கிளைப் பெருந்திணைகளுகு்கு இறுதியாகவும் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. அவற்றுள் பெருந்திணைக்கு இலக்கணம் கூறும்போது,

ஏறியமடற் றிறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழித்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே (தொல்.பொருள்.51)

என்று விளக்கம் தருகிறது.

மேலும், அன்பின் ஐந்திணைக் களவியலில் தலைவனுக்குக் கூற்று நிகழும் இடங்களைக் கூறும்போது,

மடன்மாக் கூறும் இடனுமா ருண்டே

என்று கூறுகிறது.

இவ்வாறு தொல்காப்பியத்தில் பெருந்திணையிலும், அன்பின் ஐந்திணையிலும் மடல் பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன.

இவ்வாறு சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளப்படாத, தாழ்ந்தோருக்குரியதாகக் கூறப்பட்ட பெருந்திணைக் கூறான மடலேறுதல் பற்றிய கூற்று உயர்ந்தோருக்குரியதாகக் கூறப்பட்ட அன்பின் ஐந்திணையில் இடம்பெற்று ஏன் என்பது சிந்தித்திற்குரியது. மேலும், மடலேறுதல் யாருக்குரியது என்பதை வரையறை செய்யும்போது, பெண்ணுக்கு மறுத்து ஆணுக்குரியதாகக் கட்டமைத்துள்ளது.

**பிற இலக்கண நூல்களில் மடல்**

புறப்பொருள் வெண்பாமாலை மடலூர்தல் என்னும் துறையை இருபாற் பெருந்திணையுள் அமைத்துவிட்டு எடுத்துக்காட்டுச் செய்யுளை தலைவன் மடலூர்தல் குறித்து அமைத்துள்ளது. அதாவது, மடலூர்தலை ஆண்பாலுக்குரியதாகவே காட்டியுள்ளது. மேலும், வெண்பாப் பாட்டியல், பிரபந்த மரபியல், சிதம்பரப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், இலக்கண விளக்கம், முத்துவீரியம் போன்ற இலக்கண நூல்களும் மடலுக்கு இலக்கணம் கூறியுள்ளன.

**மடலேறுதல்**

ஒருவரிடமிருந்து மற்றொருவருக்குத் தகவல் தெரிவிக்கப் பயன்படும் தகவல் வாயில்கள் பல. அதனடிப்படையில் காதலில் இடையூறு ஏற்பட்டபோது, தலைவியை அடைய எண்ணி, நாணத்தை விடுத்து, அவள் யாரென்று சமுதாயத்திற்குப் பகிரங்கமாக அறிவித்து, அவளை அடையும் பொருட்டு மடலேறுதல் நிகழ்த்தப்படும். இங்கு மடலேறுதல் என்பது, தலைவனுக்குத் தன் எண்ணத்தைச் சமுதாயத்திற்குத் தெரிவிக்கும் ஒரு தகவல் வாயிலாக அமையப் பெற்றுள்ளது எனலாம். இன்றளவும், மடல் என்பது தகவலைப் பரிமாறிக்கொள்ள உதவும் கடிதம் என்னும் பொருளில் வழக்கில் உள்ளது.

**மடல் – மரபு மாற்றம்**

சங்க அக இலக்கியங்களில் பாடப்பெற்ற மானிடக் காதல், பக்தியிலக்கியக் காலகட்டத்தில் ஆன்மீகக் காதல் என்னும் தளத்திற்கு மாற்றப்பட்டது. அதனடிப்படையில் பக்தியிலக்கியங்களை வார்த்த புலவர்கள், தங்களின் சமயக் கருத்துக்களை வலியுறுத்த, அகத்திணை மரபுகிளல் பல மாற்றங்களைப் புகுத்தி, மாற்றிய அமைத்தனர். அதனடிப்படையில் மடலேறுதல் என்னும் துறையைக் கூறலாம்.

தொல்காப்பியம் முதலான இலக்கணநூல்கள், பெண்களுக்கு அச்சம், மடம், நாணம் போன்ற குணங்களை வரையறுத்து, அவர்கள் மடலேறுதல் கூடாது என்று இலக்கணப் படுத்தியுள்ளன. ஆனால், கி.பி.9ஆம் நூற்றாண்டில் தோன்றிய பக்தியிலக்கியங்களில் திருமங்கயைாழ்வார் இயற்றிய சிறிய திருமடல், பெரிய திருமடல் என்னும் இரு பிரபந்தங்களிலும் ஆழ்வாராகிய நாயகி, தான் மடலூரித் தன் தலைவனை அடையப்போவதாகப் படைக்கப் பட்டிருப்பது குறிப்பிடத்தகுந்த மரபு மாற்றம் ஆகும்.

**மடல் என்னும் இலக்கிய வகை**

இலக்கியப் படைப்பு ஒவ்வொன்றும் ஏதேனும் ஓர் இலக்கிய வகையாக அமைகின்றது. தமிழின் தொன்மை இலக்கணமான தொல்காப்பியத்தில் தமிழ் இலக்கிய வகைகளுக்கான மூலங்கள் காணக்கிடைக்கின்றன. துறைகள் எனப்படும் இவற்றிலிருந்து பிற்காலத்தில் பல்வேறு இலக்கிய வகைகள் வளர்ச்சியுற்றன. அவற்றுள், ஒன்று மடல் என்னும் பெருந்திணைக் கூறு, பெருந்திணையின் நான்கு கூறுகளில் மற்ற மூன்றும் இலக்கிய வகை என்னும் வளர்ச்சி நிலையை அடையவில்லை. ஆனால், மடல் சங்க அக இலக்கியங்களில் ஒரு சில பாடல்களில் இடம்பெற்று, பிற்காலத்தில் தனி அகம் பொருள் துறையாகவே குறிக்கப்பெற்றது. பின்னர் கலம்பக இலக்கியங்களில் தழை என்னும் உறுப்பின் பகுதியாக விளங்கி, கோவை இலக்கியங்களில் முழு துறையாக வளர்ச்சியடைந்தது. அதன்பின்,

கி.பி.9ஆம் நூற்றாண்டில் பக்தியிலக்கியத் தோற்றக் காலத்தில் திருமங்கையாழ்வாரின் சிறிய திருமடல் மற்றும் பெரிய திருமடலின் மூலம் மடல் ஒரு தனி இலக்கிய வகையாக மலர்ந்தது. இத்தகு வளர்ச்சி நிலையை அடைந்த காரணம் ஆராய்தற்குரியதாகும்.

**வளர்ச்சி நிலைக்கான காரணம்**

பக்தியிலக்கியங்களில் சங்க இலக்கியத்து அகத்திணை மரபுகள் பின்பற்றப்பட்டதாகக் கூறமுடியாது. அவற்றில் இறைவன் பெயர் சுட்டப்பட்டு அவனது தோற்றப்பொலிவும், பெருமைகளும் விரித்துக் கூறப்பட்டும், ஒத்த பண்புகளைப் பெற்ற தலைவனும் தலைவியும் எதிர்பட்டுக் கூடும் கூட்டமின்மையும் ஆகிய மாற்றங்கள் நிகழ்த்துள்ளன. கடவுளின் புகழைப் பெயர் சுட்டிக் கூறுவதும், அவனது சிறப்புக்களைப் பறைசாற்றிக் கூறுவதுமே பக்தியிலக்கியங்களின் நோக்கம் ஆகும். இந்த நோக்கத்திற்காகவே மடல் என்ற வடிவம் பயன்படுத்தப்பட்டு ஒரு தனி இலக்கிய வகையாகப் பரிணமித்தது. மடல் இலக்கியங்களான சிறிய திருமடல், பெரிய திருமடல் மற்றும் நம்மாழ்வாரின் திருவாய்மொழியிலும் கடவுள் மேல் கொண்ட காதலால் தலைவி மடலேறப்போவதாகக் கூறப்பட்டுள்ளது. இவற்றுள் பெரிய திருமடலில்,

. . . . . . . காமத்தின்
மன்னும் வழிமுறையே நிற்றும்நாம் – மான்நோக்கின்
அன்ன நடையார் அலரேச ஆடவர்மேல்
மன்னும் மடலூரார் என்பதோர் வாசகமும்
தொன்னுரையில் கேட்டறிவதுண்டு அதனையாம் தெளியோம்
மன்னும் வடதெறியே வேண்டினோம் (பெரி.திரு.37–39)

என்று திருமங்கையாழ்வார் கூறுகிறார். அதாவது, தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்கள் பெண்கள் மடலேறக் கூடாது என்று கூற, அதனை மீறி, மடலேறி இறைவனாகிய தலைவனை அடைய வடநெறியைத் துணைக்கழைத்துள்ளார். இங்கு திருமங்கையாழ்வாரின் நோக்கம், பெண்கள் மடலேறுதல் தகுமா. தகாதா என்பதைவிட அதன்மூலம் கடவுளின் சிறப்புக்களைக் கூறவேண்டும் என்பதை உச்சநிலையில் உள்ளது. கடவுள் மேற் பெண்கள் கொண்ட காதல் மிகுதியைக் காட்டும் இவ்விலக்கியங்களை மரபுக்குப் புறம்பானவை என்று ஒதுக்க விரும்பாதவர்கள், அதே நேரத்தில் இலக்கியத்தின் அடிப்படை நோக்கையும், பண்பையும் செவ்வனே உணராது இலக்கிய விதிகளும், விதி விலக்குகளும் வரைய முற்பட்டவர்கள் கடவுளர் தலைவராய் வருமிடத்து பெண்டிர் மடலேறலாம் என்று பின்னர் விதிவிலக்கமைத்தனர்.

இவ்வாறாக, புலவர்கள் தம் அனுபவங்களைத் தாங்கி நிற்கத் தகுந்த பல வடிவங்களைப் புனைந்துள்ளனர். அவ்வக்காலத்து அனுபவ வெளியிட்டுத் தேவைகளைப் பொறுத்து வடிவங்கள் தோன்றியும், வளர்ந்தும் மாறியும் மறைந்தும் வந்திருக்கின்றன. அதனடிப்படையில் அருட்சிறப்பில் ஈடுபட்ட புலவர் தம் பக்தி மிகுதியை வெளியிட மடல் என்ற வடிவத்தை சிறப்பாகக் கையாண்டு இலக்கிய வகையாக மாற்றினர். பக்தி வேட்கை மிகுதியை இறைவனை அடையாதிருக்க முடியாத, அவன் மேற்கொண்ட காதலின் முன் எதனையும் பொருட்படுத்தாத நிலையினைக் காட்ட மடல் ஏற்றதொரு வாகனமாக அமைந்துள்ளது.

# மனித உரிமைகளும் உரிமை மீறல்களும்

**த.தனலெட்சுமி,** ஆய்வாளர்
திண்டுக்கல்

**முன்னுரை**

மனித உரிமைகள் என்பவை ஒரு சார்பானவை அடிமைப்படுத்தப்பட்ட சுரண்டப்படுகின்ற நசுக்கப்படுகின்ற மக்கள் விடுதலை பெற எதிர்நோக்கும் உரிமைகளே மனித உரிமைகள் ஆகும். உரிமை என்பனவற்றை யாரும் யாருக்கும் தரவேண்டியவை அல்ல. அதேபோல யாரும் யாரிடமிருந்தும் பெறவேண்டியவையும் அல்ல. பறிப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்று தமிழ்ப்பனுவல் கூறுவதுபோல் பிறக்கும் அனைத்து உயிர்களுக்கும் உரிமைகள் இயல்பானவை, பொதுவானவை. மனித உரிமைகள் பற்றிய சிந்தனை இல்லாதவர்களாய் அதை அறிந்துகொள்ள வேண்டியதின் பின்பற்றிய வேண்டியதின் அவசியத்தை உணராதவர்காய், பொறுப்பற்றவர்களாய் நம் மக்கள் இருப்பதினாலேயே உரிமை மீறும் செயல்கள் அவர்களை அறியாமலேயே நடைபெற்று நம்மக்களையும் நாட்டையும் சீரழித்து விடுகிறது. மனித உரிமைகள் என்பது அண்மைக்காலங்களில் நமது நாட்டில் மட்டுமல்ல. உலகெங்கும் மிக அதிகமாகப் பேசப்படுகின்ற பொருள்களில் ஒன்று எனும் நிலையடைந்துள்ளது.

**அடிப்படை உரிமைகள்**

அடிப்படை உரிமைகள் மனிதனின் ஆளுமையை வளர்ப்பதற்கு மிகவும் தேவையான உரிமைகளாகும். இந்த உரிமைகளின்றி எந்த மனிதனும் தன்னுடைய ஆளுமையை வளர்க்க முடியாது. இந்த உரிமைகளை அரசியல் அமைப்பு உரிமைகள் என்றும் கூறலாம். பொதுவாக நாட்டின் அடிப்படைச் சட்டமாக விளங்கும் அரசியல் அமைப்பின் மூலமாகவே அளிக்கப்படுவதால் அரசாங்கம அடிப்படை உரிமைகளைப் புறக்கணிக்க முடியாதநிலை ஏற்பட்டு விடுகிறது. மக்கள் நலத்திற்காக ஒரு சில அடிப்படை உரிமைகளை மாற்றி அமைத்தாலும் அவைகளை முற்றிலுமாக நிராகரிக்க எந்த அரசுக்கும் உரிமையில்லை. ஏதேச்சதிகாரம் செய்ய விரும்பும் அரசுக்கு அடிப்படை உரிமைகள் தடையாகவே உள்ளன. அடிப்படை உரிமைகளை மீறிய அரசாங்கம் எதுவும் நீண்டகாலம் நிலைத்து நிற்பதில்லை. டிப்படை உரிமைகளை நிராகரிக்கும் எந்த அரசாங்கமும் முடிவில் புரட்சியே சந்திக்கிறது.

**சட்ட உரிமைகள்**

சட்ட உரிமைகள் அரசின் சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்ட மனிதனின் உரிமைகளாகும். இந்த உரிமைகளை மீறியவர்கள் அரசின் சட்டத்தின் மூலம் விதிக்கப்பட்டுள்ள தண்டனையைப் பெறவேண்டும். கொடுங்கோன்மைக்கும் அடக்குமுறைக்கும் எதிராக மனிதன் கடைசி வழியாக புரடசிக் கலகம் செய்யும்படி கட்டாயப்படுத்தப்படாமல் இருக்கவேண்டுமானால், மனித உரிமைகள் சட்டமுறையால் பாதுகாக்கப்பட வேண்டியது இன்றியமையாததாகும். (க.பொ.அகத்தியலிங்கம், மனித உரிமைகள், ப.36).

**சொத்துரிமை**

அரசு தோன்றுவதற்கு முன்பே சொத்துரிமை முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. அரசு தோன்றுவதற்கான பல்வேறு காரணங்களில் இதுவும் ஒன்று. ஆரம்ப காலத்தில் மக்களிடையே சமத்தவம் காணப்பட்டது. ஆனால்

நாளடைவில் மக்கள்தொகை பெருகவே உனக்கு எனக்கு என்னும் பாகுபாடு தோன்றி தனியார் சொத்து உரிமையை பாதுகாக்க நிலவரம்புகள் ஏற்படுத்தப்பட்டனர். தனியார் சொத்துரிமை மனிதனின் உழைக்கும் ஆவத்தைப் பெருக்குவதோடு மட்டுமல்லாமல் அவனுடைய வாழ்வில் தைரியத்தையும், திருப்தியையும் ஏற்படுத்துகிறது.

**வாக்குரிமை**

வாக்குரிமை அரசியல் உரிமைகளிலெல்லாம் மிக முக்கியமான உரிமையாகும். இந்த உரிமை ஜனநாயகத்துடன் பிறந்த உரிமையாகும். இந்த உரிமையைப் பெற்ற மக்கள் அரசாங்க நிருவாகத்தில் அதிக செல்வாக்கு பெற்றிருப்பார்கள். இந்த உரிமையின் மூலமாகத்தான் மக்கள் தாங்களே விரும்பும் அல்லது தங்களுக்கு நன்மை பயக்கும் அரசாங்கத்தை தேர்ந்தெடுக்க முடிகிறது. அயல்நாட்டவர், குற்றவாளிகள், புத்தி சுவாதீனமற்றவர்கள் ஆகியவர்களுக்கு இந்த உரிமை அளிக்கப்படுவதில்லை. மேலும் பொதுவாக ஒரு நாட்டில் வயது வந்தோர்க்கு மட்டும் தான் இந்த உரிமை அளிக்கப்டுகிறது. இந்தியாவில் இப்போது 18 வயதை எய்தியவர்களுக்கு மட்டும் தான் வாக்குரிமை அளிக்கப்படுகிறது.

**சமத்துவ உரிமை**

இனம், நிறம், பால் மொழி, மதம், அரசியல் அல்லது பிற கருத்துக்கள் தேசிய பூர்வோத்தரம் அல்லது சமூகப் பூர்வோத்தரம், சொத்து அல்லது பிறப்பு அல்லது பிற அந்தஸ்துக்கள் ஆகியவை எவ்வாறு இருந்த போதிலும் எல்லா நபர் களுக்கும் பூரண சமத்துவ உரிமை உண்டு என அறிவிக்கிறது. இந்த உரிமைகள் உண்மையாகவும், முழுமையாகவும் உறுதி செய்யபடாவிட்டால் மனித உரிமை களையும் அடிப்படைச் சுதந்திரங்களையும் அனுபவிக்கவோ அமல்நடத்தவோ முடியாது.

பெண்கள் எந்த அளவுக்கு விடுதலை பெற்றிருக்கிறார்களோ, அந்த அளவுதான் வேறு எந்தவொரு விதலைக்குமான உரைகல்லாகும் என்ற பிரெஞ்ச் நாட்டின் கற்பனாவாத சோசலிஸ்டான சார்லஸ் ஃபோரியர் ஒருமுறை கூறினார். (ரகுநாதன், மனித உரிமைகளை மதிப்பவர் யார்? ப.54) ஒரு சமுதாயத்தில் மாதர் வகித்து வரும் ஸ்தானம் எந்தவொரு நாட்டிலும் நிலவும் மனித சுதந்திரத்திற்கும் ஓர் அளவு கோலாகும் என்பதும், அவர்களது விடுதலையே பொதுவான விடுதலைக்கான இயல்பான உரைகல்லாகும் என்பதும் உண்மைதான் என்றாலும் சுதந்திர உலகம் என்று தம்மைத் தானே குறிப்பிட்டுக் கொள்ளும் மேலை நாடுகளில் பெண்கள் அவர்களுக்கு எதிராக பரம்பரை பரம்பரையாகக் காட்டப்பட்டுவரும் பாரபட்சத்திலிருந்து இன்னும் விடுபடவில்லை. மேலை நாடுகளில் பெண்கள் பல்வேறு விதமான பொருளாதார பாரபட்ச போக்குகளுக்கும் ஆளாகியுள்ளனர். ஆண்களோடு சமமான வேலையைப் புரியும் பெண்களுக்கும் சமமான ஊதியமே வழங்கப்படவேண்டும் என்ற கோட்பாடு பல மேலைநாடுகளில் அரசியல் சட்டங்களில் அறிவிக்கப்பட்டுள்ள போதிலும் அது சர்வதேசச் சட்டங்களில் அங்கீகரிக்கப்பட்டுள்ள போதிலும் நடைமுறையில் இந்தக் கோட்பாடு எப்போதும் மீறப்பட்டே வருகிறது.

**பொருளாதார உரிமை**

எட்டளவில் நின்று இன்றும் ஏழை மக்களின் கைக்கு எட்டாத மனித உரிமைகளைப் போராடித்தான் பெறமுடியும் என்ற உண்மையைப் பல நூல்கள் எடுத்தியம்பத் தொடங்கியுள்ளது.

இன்றைய நிலையில் பொருளியல் உரிமைகளில் ஏற்றத்தாழ்வுகள் அமைந்துவிட்டதற்கான காரணங்கள் நிலவுடைமை, ஆட்சியுரிமை, தொழிலுரிமை,

வாரிசு (அல்லது) வழிவழி உரிமை ஆகிய உரிமைகள் ஒரு குறிப்பிட்ட மக்களிடையே அமைந்துவிட்டதே ஆகும்.

இதற்கு மறுதலையாக அடிமைநிலை தோன்றியதற்கான காரணங்கள், சாதிப்பாகுபாடு, சாதி வழியில் தொழில் அமைப்பு, தீண்டாமை, மதம் பற்றியெழுந்த மூடநம்பிக்கை இவை சமுதாயத்தில் புரையோடிக் கிடப்பதேயாகும்.

**ஐ.நா.சாசனத்தில் மனித உரிமைகள்**

மனித உரிமைகள் பற்றிய ஐ.நா. அறிக்கைகள் மனித உரிமைகளை நேரடியாக அமல்படுத்துவதும் அவற்றைப் பாதுகாப்பதும் முற்றிலும் அந்தந்த நாடுகளின் உள்நாட்டு அதிகாரத்துக்கு உட்பட்டவையே என்றும், மனித உரிமைகளின் சர்வதேச பாதுகாப்பு சம்பந்தப்பட்ட பிரச்சனைகளில் அவை தலையிடவில்லை என்றும் கூறியுள்ள போதிலும் சட்ட மனித உரிமை பற்றிய சர்வதேச உடன்பாடுகள் எதையும் அங்கீகரிக்காத அமெரிக்கா மனித உரிமைகளைப் பாதுகாப்பது என்ற பெயரால் ஐ.நா.சாசனம் மற்றும் பிற அறிக்கைகளின் உணர்வையும் கோட்பாடுகளையும் புறக்கணித்துவிட்டு, அரசுரிமை பெற்ற பிற நாடுகளின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடவும் துணிகிறது.

**மனித உரிமை மீறல்கள்**

மனித உரிமை மீறல்களைக் கண்காணிக்கவும் தொகுக்கவும் மேலும் ஓரமைப்பு உருவாகியுள்ளது. மனித உரிமைகள் இவ்வுரிமை மீறல்களைக் கொண்டே வரையறுக்கப்பெறுகிறது. உத்தரவாதப்படுத்தப்பட்ட ஒவ்வொரு உரிமையும், ஒழுங்கு ரீதியான சட்ட ரீதியான வரைமுறைகளும் நாளும் மீறுப்பெறும் அவலங்களைச் சந்தித்துக் கொண்டிருக்கிறோம்.

மக்களின் உடல் தினமும் தாக்கப்பட்டு வருகையில் நாம் வாழும் இந்த அநீதியான சமூக அமைப்பு ஏழை மக்களின் வாழ்வுரிமைகளைப் பல்வேறு வகைகளில் பறித்துக் கொண்டிருக்கிறது.

இந்நாட்டின் சாதிமுறை, சமூகப் பொருளாதார நிலையில் ஒடுக்கப்பெற்றோரின் உரிமைகளைக் கொடூரமாக மீறி வருகிறது. சமூக நீதி கரக்க அரசே இயற்றும் சட்டங்கள் அரசே நடைமுறைப்படுத்தத் தயங்குகிறது.

நாம் வாழும் சமூகத்தில் எழை, எளிய மக்களின் வாழ்விடமும், உறைவிடமும் மட்டுமன்றி நீர்நில வளங்களும் பறிக்கப்படுவதால் அவர்களின் வாழ்வாதாரங்களே கேள்விக்குள்ளாக்கப்படுகின்றன.

**முடிவுரை**

மனித உரிமைகள் பற்றிய சிந்தனை இல்லாதவர்களாய் அதை அறிந்துகொள்ள வேண்டியதன், பின்பற்ற வேண்டியதன் அவசியத்தை உணராதவர்களாய் பொறுப்பற்றவர்களாய் நம் மக்கள் இருப்பதனாலேயே உரிமை மீறும் செயல்கள் அவர்களை அறியாமலேயே நடைபெற்று அது நம்மக்களையும் நாட்டையும் சீரழித்து வருகின்றன. இந்நிலைமாற வேண்டுமானால் மனித உரிமைகள் பற்றிய விழிப்புணர்வுச் சிந்தனை நம்மக்களுக்கு ஏற்படவேண்டும். அப்பொழுதுதான் நாட்டில் குற்றங்கள் குறையும். நம்மக்களுக்கு விழிப்புணர்வு வரை நாட்டின் குற்றங்கள் குறைய ஜவஹர்லால் நேருவின் முன் முயற்சியால் அகில இந்திய மனித உரிமைக்கழகம் 1936ல் ஜூலையில் உருவாக்கப்பட்டது. (க.பொ. அகத்தியலிங்கம், மனித உரிமைகள், ப. 37) இதன் மூலம் நம் நாடும் நம் மக்களும் ஒரு ஒழுங்கு கட்டுப்பாட்டிற்குள் செயல்படும். இவ்வாறு செயல்படும்பொழுது நம்நாடு குன்றிலிட்ட விளக்குபோல உலக நாடுகளிடையே சிறப்புற்றுத் திகழும்.

# தென்தமிழக மீனவர் சமூகம் – ஓர் ஆய்வு

**பு.மதிக்குமார்**
முனைவர் பட்ட ஆய்வாளர்
நாட்டுப்புற நிகழத்துக்கலைபுலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

**முன்னுரை**

மனிதனின் வாழ்க்கை நிகழ்வுகள் அனைத்துமே சமூக அமைப்பினுள் அடங்குவன. ஒவ்வொரு நிகழ்வுப் போக்குகளுக்கேற்ப அதன் சமூக நிலையை ஆராயவேண்டியுள்ளது. குடும்ப உறவு, சாதிய உறவு, சமய உறவு, பண்பாட்டு உறவு, தொழில்முறை உறவு என்ற சமூக நிலைகளை ஒவ்வொரு காலந்தோறும் மனித இனம் சமூகம் தெரிந்து வருகின்றது. இத்தகைய மனித இனச் சமூகப் பண்புகளை, பழைய மரபுகள், புதிய உருவாக்கங்கள் ஆராய்ந்து வெளிக்கொணர்ந்து இவ்வினத்தின் அல்லது அச்சமூகத்தின் எதிர்கால வளர்ச்சிக்குத் துணையாக அமையும். எனவே தென் தமிழக மீனவர்களின் சமூகக் கூறுகளை வெளிக்கொணர்வதாக இக்கட்டுரை முற்படுகின்றது.

**சமூகம்**

ஒரு சமூகப்பிரிவின் வாழ்க்கைச் சடங்குகள், வழக்காறுகள், தொழில்முறை, பொருள்சார் பண்பாடு, சமயநிலை, அரசியல் நடைமுறை ஆகியன அனைத்தும் சமூகம் என்பதனுள் அடங்கும். சாதி வேறுபாடுகளை ஆழமாகக் கொண்டத் தமிழ் சமூகத்தில் சாதிக்குச் சாதி வேறுபடும் தன்மையது. எனவே வாழ்க்கைக்கு உரிய முறைநெறிகளை செயல்படுத்தும் கூட்டமைப்பே சமூகம் இயக்கம் என்றாகிறது. குடும்ப உறவு, நாட்டுறவு என்ற உறவுகளுக்குள் இணைத்து ஒரு முழுமைபெற்ற வாழ்க்கையை உருவாக்கும் வழிமுறையாக சமூக அமைப்பு இயங்கி வருகின்றது. குறிப்பிட்ட பொது நோக்கங்களை அடைவதற்காக ஒரு சில நிலையான உறவு முறைகளினால் விளைவிக்கப்பட்டுள்ள மனிதக் கூட்டமே சமூகம் என்ற கருத்தும் ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களுடன் கொண்டிருக்கின்ற சிக்கலான சமூக உறவுமுறை தொடர்புகளைத்தான் சமூகம் என்கிறோம்.

**சமூகப் பிரிவுகள்**

சமூகப் பிரிவுகளை, தொழில்முறையிலான சாதிப்பிரிவு சமயவழி சார்ந்த சமூகப் பிரிவுகள், கல்வி நிலையிலான சமூகப்பிரிவுகள், பொருளாதார நிலையில் அமையும் சமூகப் பிரிவுகள், அரசியல் நிலையிலான சமூகப் பிரிவுகள் என இன்றைய மீனவச் சமுதாயத்தின் அடிப்படை சமூகப்பிரிவுகளாக உள்ளன. இதனுள் ஒரே சமூகப் பிரிவில் பல நிலையிலான சாதிய சமய மக்களும் இருப்பர். என்றாலும் பெரும்பான்மை மக்களைக் கருத்திற்கொண்டு இன்றைய மீனவச் சமூகத்தின் பிரிவுகளை பகுக்கமுடிகின்றது.

தென் தமிழகத்தில் பறையர், மீனவச் செட்டியார், தேவர், நாடார், வலையர், கடையர் என்ற சாதியினர் மீன்பிடித் தொழில், வலை பின்னுதல், முத்தெடுத்தல்,

மொத்த வியாபாரி, சில்லை வியாபாரி, படகு உரிமையாளர் என்ற நிலையில் வாழ்கின்றனர். இச்சாதியினருக்குள்ளும் கிறித்துவம், இஸ்லாமியம், இந்து என்ற மத அடிப்படையில் தனித்தனி சமூகச் சடங்குமுறைகளோடு மீனவர் என்ற சமூக நிலையில் ஒன்றுபட்டு வாழ்கின்றனர்.

**வாழ்க்கைமுறை**

தென் தமிழக மீனவர்களின் வாழ்க்கைநிலை கடினமான உடல் உழைப்பையே அடிப்படையாகக் கொண்டு அமைகின்றது. இவர்கள் தினமும் இயற்கையோடு போராடியே தங்கள் வாழ்க்கையை நிகழ்த்த வேண்டியுள்ளது. இவர்களுக்குள் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் இருக்கின்றன. இருப்பினும், சாதி சமய முறைகளிலும், பண்பாட்டு பழக்க வழக்கங்களிலும் சீரான நிலையே காணப்படுகிறது.

**குடும்ப அமைப்பு முறை**

குடும்ப அமைப்பில் கூட்டுக்குடும்பம், குடும்பம் என்ற இருநிலைகளுண்டு, திருமணத்திற்குப் பின் பெற்றோர்களுடன் இணைந்து ஒரே குடும்ப நிலையில் வாழும் முறையைக் கூட்டுக்குடும்பம் என்றும் திருமணத்திற்குப் பிறகு பெற்றோரைப் பிரிந்து தன் வாழ்க்கை துணையுடன் வாழும் நிலை தனிக்குடும்பம் என்னும் வழங்குவர். இச்செய்தி இலக்கியத்தில் இளந்தம்பதியரை மணையறம்படுத்திய செய்தி தெரியவருகிறது. பண்டைய காலத்தில் வாழ்வியல் நிலையில் அமைந்த இப்பிரிவு இன்று பொருளாதார நிலையில் அமைகிறது என்பதை காணமுடிகிறது. மேலும் தனித்து இயங்கும் குடும்பங்கள் பலவும் சமூக–சமய நிகழ்ச்சிகளில் ஏனைய மக்களைப் போன்று ஒன்றாக இணைந்து இயங்கும் நிலையை மீனவர் சமூகத்தில் காணமுடிகின்றது.

**கல்வி நிலை**

மீனவரின் தொழில்நிலை அவர்களின் கல்வி ஆர்வத்தையும், ஈடுபாட்டையும் பெரிதும் பாதிக்கின்றது. தென் தமிழக மீனவச் சமூகத்தில் உயர்கல்வி பயின்றவர்கள் குறைவாகவே உள்ளனர். பெரும்பாலும் ஆரம்பப்பள்ளி உயர்நிலைப்பள்ளி அளவிலேயே குழந்தைகளை மீன்பிடித்தொழிலில் ஈடுபடுத்தி விடுகின்றனர். ஒரு சில மீனவர்களே பொருளாதார நிலையில் உயர்ந்தவர்களாக இருக்கின்றனர். அவர்களே கல்வி, அரசியல் என்ற நிலையில் தன்னை தனிமைபடுத்திக்கொண்டு மீன்பிடிதொழிலில் மொத்த வியாபாரியாகவும், பலருக்கு சொந்தக்காரர்களாகவும் இருக்கின்றனர்.

**பொருளாதார நிலை**

மீனவர்கள் பொருளாதார நிலையில் பிற இன மக்களின் பொருளாதார நிலையைவிட மிகவும் பின் தங்கியே உள்ளனர். இதற்கு தொழிலில் கிடைக்கும் குறைந்த வருமானமே காரணம். என்றாலும், இவர்கள் பிற சமூக மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பற்றி முழுமையாக தெரிந்துகொள்ளாத அறியாமையும், அறியாமையை வளர்க்கும் கல்வியையும், பிற தொழில் ஈடுபாட்டின்னையும், இவற்றோடு தொழிலில் நிரந்தர வருமான மின்மையுமே பொருளாதார

தாழ்வுநிலைக்கு காரணங்களாக உள்ளன. என்னும் பொருளாதார விழிப்புணர்வு ஏற்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

### முடிவுரை

மீனவச் சமூகம் என்ற நிலையில் ஒன்றுபட்டாலும் இவர்களுக்கிடையே உள்ள சாதிய சடங்கு முறைகள், மரவழிபாடுகள் கொள்கைகள், பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், அரசியல் வேலைபாடுகள் என்ற நிலையில் தன்னை தனித்தே தனிமைபடுத்திக் கொள்கின்றனர். குறிப்பாக இவர்களுக்குள்ளே சாதிய கட்டுப்பாடுகள் மிகவும் உறுதியாக பின்பற்றப்படுகின்றன என்பதை காணமுடிகின்றது. ஆனால் சாதிய பகைமை பெரும்பாலும் காணப்படுவதில்லை. ஆனால் தனித்தியங்கும் நிலையிலும் சமூக-சமய நிகழ்ச்சிகளில் ஏனைய மக்களைப் போன்று ஒன்றாக இணைந்து இயங்கும் பாங்கையும் மீனவர் சமூகத்தில் காணமுடிகின்றது.

# வேற்றுமைப்புணர்ச்சி ஒரு மொழியியல் பார்வை

தே.பாக்கியம்
முனைவர் பட்ட ஆய்வாளர்
மொழியியல்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை – 21.

## முன்னுரை

ஒரு மொழியின் கண் வந்து வழங்கக்கூடிய பெயர்ச்சொல்லின் பொருள் வேறுபாட்டிற்கு காரணமாக அமைவது வேற்றுமையாகும். ஒரு அடிச்சொல்லில் ஏற்படக்கூடிய மாற்றத்திணை புணர்ச்சி என்கிறோம். இதனை இருச்சொற்களின் இணைவு என்றும் அழைக்கின்றனர். அவற்றினை மொழியியலார் உருபொலியனியல் என்கின்றனர். தொல்காப்பியம் வேற்றுமைபுணர்ச்சி, அல்வழிப்புணர்ச்சி பற்றி பேசுகிறது. ஆனால் வீரசோழியம் போன்ற இலக்கணநூற்கள் இவை குறித்து பேசுவதில்லை. இறுதியில் தோன்றிய நன்னூல் வேற்றுமை அல்வழி குறித்து பேசுகிறது. இவ்வேற்றுமையைப் புணர்ச்சி பற்றிய செய்திகளை மொழியியல் என்ற அறிவியல் உன்மைகளை இணைத்துப் பார்ப்பது போல் இக்கட்டுரை அமைந்துள்ளது.

## புணர்ச்சியின் விளக்கம்

மொழி சொற்களால்லாகியது, சொல் ஒலிகளால் ஆகியது, சொல்லோடு சொல் பேசும்போது, தான் ஒலி மாற்றங்கள் மிகுதியாக உண்டாகின்றன. இவை குறித்து தொல்காப்பியம் ஆறு இயல்களில் கூறுகிறது. தமிழில் இரு சொற்களின் சேர்க்கையினைப் புணர்ச்சி என்று அழைக்கிறோம். அந்த இலக்கணம் கூறும் பகுதியை புணரியல் என்று அழைக்கிறோம். இதனை மொழியியலார் உரபொலியனியல் என்று குறிப்பர். நிலைமொழி ஈற்றெழுத்தும் வருமொழி முதலெழுத்தும் சந்தித்துப் புணர்வதைச் சந்தி என்று வடமொழியும் புணர்ச்சி என்று தமிழ் இலக்கணங்களம் வரையறை செய்யும்.

உயிரீறு சொல்முன் உயிர் உருவாகியும் (தொ.எ.107) நன்னூலார் மெய் உயிர் முதல் ஈறு ஆம் இரு பதங்களும் (நன்.எ.151) எனத் தொடங்கும் நூற்பாவின் வாயிலாக அமைகின்றது. பெயரோடு பெயரைப் புணர்க்குங்காலும் (தொ.எ.108) என்ற நூற்பா வழியாக நிலைமொழி, வருமொழி பெயர்ச்சொல் புணர்ச்சி மாற்றத்தைக் கட்டுப்படுத்துகின்றது என்பதனையும் தொல்காப்பியனார் தெளிவுபடுத்தியுள்ளனார். இவ்வாறாக பெயர்ச்சொற்கள் ஒன்றுடன் ஒன்று இணையும் பொழுது வேற்றுமை உறுப்புகள் மறைந்தோ, வெளிப்பட்டோ அமைகின்றதனை வேற்றுமைப் புணர்ச்சி என்ற அழைக்கின்றனர். இலக்கணநூற்கள் சொற்களின் புணர்ச்சியால் ஏற்படும் மாற்றம் என்று கொள்ள மொழியியல் தனிச்சொற்களின் எழுத்து மாற்றமே உருபொலியன் அல்லது சந்தி என்று கூறுகிறது.

## வேற்றுமைப் புணர்ச்சி–இலக்கணம்

வேற்றுமைப்புணர்ச்சி என்பது நிலைமொழியும் வருமொழியும் இணையும்பொழுது வேற்றுமை உருபுகள் மஙைந்தோ, வெளிப்பட்டோ நின்று பொருள்தரின் வேற்றுமைப்புணர்ச்சி எனப்படும். உருபு மறைந்து வரும் தொடர் வேற்றுமைத்தொகை நிலைத்தொடர் எனவும், உர்பு வெளிப்பட்டு வரும் தொடர்

வேற்றுமைத்தொகை நிலைத்தொடர் எனவும் பெயர்பெறும். இவை குறித்து நன்னூல் விரிவாக பேசுகிறது.

எடுத்துக்காட்டாக

| | | | | |
|---|---|---|---|---|
| நிலம்+கடந்தான் | – | நிலங்கடந்தான் | – | நிலத்தைக் கடந்தான் |
| கல்+எறிந்தான் | – | கல்லெறிந்தான் | – | கல்லாலெறிந்தான் |
| செல்வன்+மகன் | – | செல்வன்மகன் | – | செல்வனிக்குமகன் |
| மலை+வீழருவி | – | மலைவீழருவி | – | மழையின்வீழருவி |
| முருகன்+வேல் | – | முருகன்வேல் | – | முருகனதுவேல் |
| பெட்டி+பணம் | – | பெட்டிமணம் | – | பெட்டியின்கண்பணம் |

இரு சொற்களின் இணைவின்பொழுது தொகைநிலை, தொகாநிலை என்ற இருபாகுபாட்டினை உணரமுடிகிறது. இது பொருள் வெளிபாட்டிற்கு காரணமாக அமைகின்றன. இவ்வாறாக வேற்றுமைப் புணர்ச்சி பற்றி விவரிக்கின்ற நன்னூல் மொழி வளர்ச்சிக்கு இப்பொருள் மாற்றம் தேவை என்கிறார். இவ்வாறாக வேற்றுமைப் புணர்ச்சிக்கு இலக்கணம் அமைகிறது.

பொருள்களை வேறுபடுத்தும் நிலையில் புணர்ச்சி மாற்றத்தினை இருநிலையில் அடக்குவர். அவை முறையே,

1. வேற்றுமை புணர்ச்சி
2. அல்வழிப்புணர்ச்சி

நாம் இந்த வேற்றுமைப்புணர்ச்சியை ஆய்வோம்.

**வேற்றுமைப்புணர்ச்சி**

வேற்றுமைப் புணர்ச்சி எனப்படுவது, நிலைமொழியும் வருமொழியும் இணையும்பொழுத வேற்றுமை உருபுகள் மறைந்தோ, வெளிப்பட்டோ நின்று பொருள்தரின் அது வேற்றுமைப் புணர்ச்சி எனப்படும்.

எ.கா. மரம்+செதில் > மரச்செதில் வேற்றுமைப் புணர்ச்சியில் மூக்கின ஒலியான மகரம் வருமொழியில் அடைப்பொலிக்கேற்ப அடைப்பொலிவாக மாறும். (ம > ச) இவ்வேற்றுமைப் புணர்ச்சி,

1. இயல்பு புணர்ச்சி
2. விகாரப் புணர்ச்சி
3. உறழ்தல் புணர்ச்சி
4. சாரியைப் புணர்ச்சி

என்னும் நான்கு நிலைகளில் பல்வேறு உட்பிரிவுகளின் மூலம் புணர்தலின் இன்றியமையாமையைக் குறிப்பிடுகின்றன.

**இயல்பு புணர்ச்சி**

தனித்தனிச் சொற்கள் இணைதலே புணர்ச்சி என்பர். இப்புணர்ச்சியின் வகைப்பாட்டில் இயல்பு ஒரு வகையாகும். தனிச்சொற்கள் இணையும்பொழுது நிலைமொழியும், வருமொழியும் எவ்வித வேறுபாடமின்றி இயல்பாகப் புணர்வது இயல்பு எனப்படும்.

எ.கா. விள+நீட்சி > விளாநீட்சி
விள+வன்மை > விளவன்மை

வேற்றுமையின்கண் நிலைமொழி ஈற்றில் அகர ஈற்றுச்சொற்கள் நிற்க வருமொழி முதலில் ஞ,ந,ம,ய,வ என்னும் மெய்கள் வரும்போது இயல்பாகும். (தொ.145, நன்.158, மு.வீ.185, இ.வி.69).

**விகாரப்புணர்ச்சி**

நிலைமொழியும் வருமொழியும் இணையும்பொழுது இயல்பாகவன்றி புதிதாக ஓர் எழுத்தேனும் சாரியையேனும் தோன்றுதலும், ஓர் எழுத்து மற்றொரு எழுத்தாகத் திரிதலும் இருக்கும் எழுத்துக் கெடுதலும் (நன்.154) என்று மூவகையில் புணர்வது விகாரப் புணர்ச்சியாகும்.

எ.கா. வேத+ஆகமம் > வேதாகமம்

வேத+அங்கம் > வேதாங்கம்

இவ்விகாரப் புணர்ச்சியின்,

1. மெய்பிறிதாதல்
2. மிகுதல்
3. குன்றல்

என்னும் முப்பிரிவின்கீழ் நிலைமொழி ஈறும் வருமொழி முதலும் புணர்தலின் மூலம் பெறும் மாற்றங்களைக் காண்போம்.

**மெய்பிறிதாதல்**

ஒரு மொழியில் வந்து வழங்கக்கூடிய இருசொற்கள் இணையும்போது, ஓர் எழுத்து பிறிதோர் எழுத்தாக மாற்றமடையும் நிலையில் அது மெய்பிறிதல் எனப்படும்.

எ.கா. பொன்+சிலை > பொற்சிலை

இங்கு மூக்கினஒலி அடைப்பொலியாக மாற்றம் அடைகின்றன.

**மிகுதல்**

இரண்டு சொற்கள் இணையும்பொழுது ஓர் எழுத்தோடு சாரியையேனும் அவ்விரு சொற்களின் இணைவிற்குத் திணைபுரியும் வகையில் அமையுமாயின் அவ்விகாரம் மிகுதலாகும்.

எ.கா. வாழை+மரம் > வாழைமரம்

**குன்றல்**

இரண்டு சொற்கள் இணையும்பொழுது நிலைமொழி ஈற்றில் அல்லது வருமொழி முதலில் இருக்கின்ற எழுத்து மறைந்து வருமாயின் அவ்விகாரம் குன்றல்லாகும்.

எ.கா. மரம்+வேர் > மரவேர்

மரம்+நார் > மரநார்

வேற்றுமையின்கண் மகர ஈற்றுப் பெயர்கள் கெட்டு இணையும்.

**உறதழ்புணர்ச்சி**

உறழ்ச்சி என்பது ஒரே ஆதாலில் இரண்டு எழுத்துக்களோ, இரண்டு சொற்களோ அல்லது ஓர் இன்மை வடிவமும் ஓர் எழுத்தோ இவற்றில் ஒன்று வருமிடத்தில் பிறிதொன்று வந்து எவ்விதப் பொருள் மாற்றம் அடையாது இருக்கும் நிலையினை உறழ்ச்சி என்று குறிப்பிடலாம்.

| | | | |
|---|---|---|---|
| எ.கா. | பூ+கொடி > | பூக்கொடி | பூங்கொடி |
| | குளம்+கரை > | குளக்கரை | குளங்கரை |

**துணைநூற்பட்டியல்**

1. இளவரசு, சோ., (உ.ஆ.) நன்னூல் எழுத்ததிகாரம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1995.

2. தொல்காப்பியம் தொல்காப்பிய எழுத்ததிகாரம் (இளம்பூரணர் உரை),

# சமூகநீதி – இஸ்லாம் நோக்கில்

**ச.ரேணுகா,**
முனைவர் பட்ட ஆய்வாளர்
இஸ்லாம் மற்றும்
இஸ்லாமியத் தமிழியல்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை–21.

---

ஒரு குறிப்பிட்ட வாழ்க்கை நெறியையும் பண்பாட்டையும் வளர்ப்பதில் பங்குபெறும் த்னிமனிதர் பலரின் கூட்டமைப்பே சமூகம் எனலாம். மனித்னைச் சமூகத்திலிருந்து பிரித்துப் பார்க்க முடியாது. தனிமனிதன் பிறரோடு பேசியும், பழகியும், கண்டும், கேட்டும் உடனுறைந்தும் உறவுகொண்டும், பகைத்தும் இன்னும் பலவற்றைக் கற்றுக்கொள்ள சமூகப் பழக்கவழக்கம் தேவையாக உள்ளது. தனிமனித சமுதாயப் போராட்டம் மனிதலே வளர்ச்சியைப் பாதிக்கிறது. அத்தகைய பாதிப்பின்றி தனிமனிதனும், சமுதாயமும் போராட்டமின்றி இணைந்து வாழ்கின்ற ஒரு சமுதாய அமைப்பினை உருவாக்க இஸ்லாமிய சமூகநீதி பெரிதும் சிறப்பாக அமைந்துள்ளது.

மனித ஒற்றுமையை சமூகநீதியை சீரழிக்கும் காரணிகள் மனித மனங்களை சாதியாலும், இனத்தாலும், நிறத்தாலும், மொழியாலும் துண்டுதுண்டுகளாக்கி சிதறடித்துக் கொண்டிருக்கின்றன. மனிதனுடைய பகுத்தறிவு மேம்பாட்டைவிட அவனிடமுள்ள சாதி இன மொழி இடம் சார்ந்த வேறுபாட்டுணர்வுகள் மேலோங்கி நின்று ஒருவரை பிறிதொருவரிடமிருந்து பிரித்து மனித சமூகத்தில் நல்லுறவையும், சமூக நீதியையும் இழக்கச் செய்வதுடன் வேறுபாட்டுணர்வுகளை விசுவரூபமாக வளர்த்து விடுகின்றது.

**சமூகநீதி**

மனிதன் தான் விரும்பிய வழியில் தனது தகுதியையும் திறமையையும் பயன்படுத்திக் கொள்ளும் சுதந்திரமுண்டு எனினும் அச்செயல்கள் பிறரைப் பாதிக்காது இருத்தல் வேண்டும். இதுவே தனி மனித நீதி, ஒவ்வொரு தனிமனித நீதியுமே சமூகநீதிக்கு அடிப்படையாக அமைகின்றது. சமூக நீதி என்றால் என்ன? அனைவருக்கும் நீதி கிடைக்கவேண்டும் என்பதே. இத்தகைய சமூகநீதிகள் கிடைக்கவேண்டம் என்பதையும், மனிதர்கள் அனைவரும் எல்லா உரிமைகளும் பெற்று வாழவேண்டும் என்பதையும் எல்லாச் சமயங்களும், கவிஞர்களும் எடுத்துக் கூறினாலும் மனிதன் தன்மீது கொண்ட பற்றினாலும் ஆசையினாலும் தனக்கு மட்டுமே எல்லாம் கிடைக்கவேண்டும் எனவும் தானே அனைத்தையும் அனுபவிக்கவேண்டும் என்கின்ற இந்த நோக்கு பின் குடும்பம், அதன்பின் சமூகம் என்ற நிலைக்கு வந்து விடுகிறது.

ஆயிரமாயிரம் ஆண்டுகளாய் மதத்தினன் பெயரால், தர்மத்தின் பெயரால், இனத்தின் பெயரால், சாதியின் பெயரால் அடக்கி ஒடுக்கப்பட்டு வந்தவர்கள் இன்று உரிமைக்காக குரல் எழுப்புவது இன்றைய காலத்தின் கட்டாயத்தேவை எனலாம். இவ்வகையில் சமூகநீதி பற்றிய கருத்துக்களை இஸ்லாம் நோக்கில் விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாக அமைகிறது. இக்கட்டுரையின்

கருத்துக்கள் இதன் நோக்கத்திற்கு ஏற்ப பின்வரும் துணைத்தலைப்புக்களில் விளக்கப்பட்டுள்ளது.

1. சாதி அமைப்பில் சமூகநீதி
2. பொருளாதார அடிப்படையில் சமூகநீதி

**சாதி அமைப்பில் சமூகநீதி**

இந்தியச் சூழலில் சாதி அமைப்புமுறை என்பது சமூகத்தில் ஊடுருவி வேரூன்றியிருக்கும் முக்கியக் கூறுகளில் ஒன்றாகும். பல்சமயச் சூழல் நிறைந்த இந்திய நாட்டில் சாதி அமைப்பின் காரணமாக உண்டாகும் சமூக வேறுபாடுகளை களைந்தெறிவது மிகக் கடினமாகும். சில அரசியல், பொருளாதாரக் கோட்பாடுகளை உருவாக்கத்திலும் கூட சாதிய அமைப்பு வேறுபாடுகள் முக்கிய அங்கம் பெறுவதைக் கண்கூடாகக் கண்டு கொண்டிருக்கிறோம். இத்தகு சூழலில் சாதிய வேறுபாடுகளின் காரணமாக சமூகத்தில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகள், சமூகநீதிக்கு முற்றிலும் முரணான போக்குகளாக வளர்ச்சிப்பெற்று நிலை பெற்றிருப்பதை அறிய முடிகிறது. சாதி அமைப்பு வேறுபாடுகளால் ஒரு குறிப்பிட்ட சமூகத்தினருக்கு உரிமைகள் மறுக்கப்படுகின்றன. இது சாதியின் அடிப்படையில் நடைபெறுகிறது. இந்தச் சாதியம் நச்சுத்தன்மை உடையதால் சமூகத்தை சிதைக்கிறது. எனவே சாதி அமைப்பு வேறுபாட்டிற்கு சமயங்களின் பங்களிப்பு எந்த அளவிற்கு உள்ளன என்ற உண்மையைக் கண்டறிந்து கூறுவது இன்றைய இந்தியச் சமூகச் சூழலுக்கு மிக மிக இன்றியமையாதது என்று கூறலாம். இவ்வகையில் சாதி அமைப்பு வேறுபாட்டின் காரணமாக சமூகநீதி மறுக்கப்படுவதை இஸ்லாம் சமயம் கண்டனம் செய்கிறது.

சமூகம் மற்றும் அரசியல் நோக்கில் சாதி என்பது பிளவு, வெறுப்பு, பொறாமை, நம்பிக்கையின்மை ஆகியவற்றை உருவாக்குவதாகும். நெஸ்பீல்டு என்ற அறிஞர் சாதி அமைப்பு ஏற்படுத்தும் சமூக ஒற்றுமையின்மைக்கு இணையாக மனித வரலாற்றில் வேறெதையும் கூறமுடியாது என்று கூறுகிறார். சாதியமைப்பின் உள்ளீடான அம்சங்களாக சமத்துவமின்மையும், ஏற்றத்தாழ்வும், வெறுப்பும், ஒற்றுமையின்மையும் அமைந்திருக்கின்றன. இத்தகைய பின்புலத்தைக் கொண்டு நோக்கும் பொழுது இஸ்லாம் சமயத்தினரது சமூகத்தில் சமத்துவம், சகோதரத்துவத்தின் அளவு கணிசமானது தாழ்ந்த சாதியினராயினும் இஸ்லாம் சமயம் சாரும் போது அம்மக்களுக்கு எல்லாவிதமான வாய்ப்புக்களும், அனைத்து உரிமைகளும் பெறுகின்றனர்.

மனிதர்களே உங்களை ஒரு ஆணிடத்திலும் ஒரு பெண்ணிடத்திலும் இருந்து படைத்துள்ளேன். ஒரு சீப்பின் பல்வரிசையைப் போன்று நீங்கன் அனைவரும் சமமானவர்கள் நீங்கள் எல்லாவற்றைத் தவிர யாருக்கும் தலை வணங்காதீர்கள் என்கிற திருவசனம் ஒருவருக்கொருவர் உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற சாதிபாகுபாடு இல்லை, இறைவன் முன் அனைவரும் சமம் என்ற சமத்துவ சுயமரியாதைக் கொள்கையை இறைவனின் மூலம் கற்பிக்கிறது இஸ்லாம்.

சமத்துவமும், சகோதரத்துவமும் கொண்ட ஒரு மாபெரும் கூட்டமாக விளங்குகின்ற இஸ்லாம் சமயம் தீண்டாமைக்கு ஒரு தீர்வாக அமைகிறது. ஒரு தாழ்த்தப்பட்ட சகோதரன் இஸ்லாத்தினை ஏற்று அதன் வழியில் செயல்படும்போது அவனுக்குரிய சமூக அந்தஸ்து அனைத்தும் அளிக்கப்படுகிறது.

கொள்வன, கொடுப்பன அவனுடன் நடைபெறுகிறது. தான் விரும்பகின்ற எந்தவொரு தொழிலையும் மேற்கொள்ள முடிகிறது. அடிமைத்தொழில் புரிந்த ஒருவன் உணவுப்பொருள் தயாரிக்கும் தொழிலில் ஈடுபட்டு பொருளீட்ட முனைகின்ற போது அவன் பொருளாதார விடுதலையும் பெறுகின்றான். பிறப்பினால் உண்டான சாதி என்கின்ற அடையாளம் மறைந்து அவனும் சமூக அந்தஸ்து பெறுகின்றான். இதற்கான வழிமுறையை இஸ்லாம் நன்கு போதித்துள்ளது.

**பொருளாதார அடிப்படையில் சமூகநீதி**

மனிதர்கள் எல்லாம் பொருளாதாரப் போக்கிற்கேற்ப தம் செயல்பாடுகளை அமைத்துச் செயல்படுவதை இன்றைய சமூக அமைப்பு நன்கு தெளிவுபடுத்துகிறது. தேவைகளை நேர்மையான முறையில் நிறைவேற்றிக் கொள்ள இயலாதபோது அவற்றிற்கான வழிமுறைகளைப் பற்றிக் கவலைப்படாமல் எப்படியும் வாழலாம் என்ற நிலைக்கு மனிதன் தள்ளப்படுகிறான்.

பணப் பொருளாதாரத்தில் இலாப நோக்கம் மேலோங்கியிருக்கிறது. பணம் பத்தும் செய்யும், பணம் பாதாளம் மட்டும் பாயும் என்ற நடைமுறைகளைத் தெரிந்துகொண்டே மனிதன் எப்படியும் பணம் சேர்க்கலாம் என்ற முடிவிற்கு வருகின்றான். இலாப நோக்கையே குறிக்கோளாகக் கொண்ட முதலாளிகள் தாங்கள் கொடுக்கும் கூலி, தொழிலாளிகளின் வாழ்க்கைக்குப் போதுமானதாக இருக்கின்றதா என எண்ணிப் பார்ப்பதில்லை. ஒரே சமூகத்தில் வாழும் மனிதர்களிடையே சமமான நிலை இல்லாத காரணத்தினால் தான் கொடுமைகளும், அநீதிகளும் தோன்றுகின்றன.

இதற்கு நேர்மாறான இஸ்லாம் மனிதனுடைய ஒவ்வொரு செயலும் இறைவனுடன் தொடர்புடையது. இறைவனோ வலிமையாளர்கள் அனைவரையும் விட அதிக வல்லமையும் சக்தியும் உடையவன். இந்த உலகத்தையும், அதிலுள்ள யாவற்றையும் இறைவன் மனிதகுல மேம்பாட்டிற்காகவே படைத்துள்ளான் என்பது இஸ்லாமியக் கோட்பாடு. ஆதலால் உலகில் தனக்குரிய பங்கைப் பெறுவதும் பெற முயல்வதும் ஒவ்வொரு மனிதனுக்குமுள்ள பிறப்புரிமையாகும். எல்லோருக்கும் இந்த உரிமை சமமாக உண்டு எவரிடத்தும் இந்த உரிமையைப் பறிக்கமுடியாது. இதில் ஒருவர் மீது மற்றவருக்கு முன்னுரிமை என்பது கிடையாது.

ஒரு குறிப்பிட்ட தொழிலை குறிப்பிட்ட நபரோ, இனமோ, வர்க்கமோ தான் செய்யவேண்டும் என் முறைக்கு இஸ்லாத்தில் இடமில்லை. மனிதனிடம் இஸ்லாம் செயற்கையான பொருளாதார சமத்துவத்தை திணிக்க முற்படவில்லை. ஏனெனில் ஒவ்வொரு தனிமனிதனின் திறமை, ஆர்வம், முயற்சி ஆகியவற்றிற்கு மதிப்பளிக்கிறது. முறையான வழிகளில் அவரவரின் பொருளாதார அமைப்பு உருவாவதை ஏற்றுக் கொள்கிறது.

அதே நேரத்தில் செல்வம் ஒரு சாரார் மத்தியிலேயே சேர்ந்து கொண்டிருப்பதையும், பிறிதொரு சாரர் வறுமையிலேயே துவண்டு கொண்டிருப்பதை இஸ்லாம் ஏற்றுக்கொள்ளவில்லை. செல்வந்தர்ளிடம் தேங்கியுள்ள பொருட்களை வசதியற்ற ஏழைகளுக்கு கொடுத்து உதவிடும் வகையில் மாற்றிக் காட்டுவதற்கான வழிமுறையாக சமய விதியாக, ஜக்காத் என்னும் கடமை விதிக்கப்பட்டுள்ளது.

# சாகிபுவின் ஆநந்த பத்து

முனைவர். ஜலஜாகோபிநாத்
தலைவர், திருக்குறள் ஆய்வகம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

---

**முன்னுரை**

உலகப் பெருஞ் சமயங்களில் ஒன்று இஸ்லாம். இது காலத்தால் பிற்பட்டது. இது ஒரே இறைவன் ஒரே வழிபாட்டு முறையைக் கொண்டது. இச்சமயத்தின் வேதம் திருக்குர்ஆன். திருக்குர்ஆன் கூறும் சட்டங்கள் காலங்காலமாக வழங்கி வருகின்றன. இஸ்லாமிய சமய ஒப்புதல் என்பனவற்றின் செல்வாக்கும் அதிகாரமும் புதிய எண்ணங்கள் எழத் தடைகளாயிருந்தன. ஆயினும் சில சிந்தனையாளர்கள் புதிய எண்ணங்களை எழுப்பிச் சமயப் புரட்சிக்கு வித்திட்டனர். இஸ்லாமியச் சமயத்தில் தோன்றிய இப்புரட்சியாளர்களைச் சூபிகள் என்றும் அவர்கள் தோற்றுவித்த இயக்கம் சூபியம் என்றும் குறிப்பிடப்பட்டது. இந்தச் சூபிகளில் ஒருவர் குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள், அவர்தம் பாடல்களில் ஆநந்தபத்து என்னும் பகுதி இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.

குணங்குடி மஸ்தான சாகிபு பாடலில் முதன்மையானது ஆநந்தப் பத்து, இப்பத்தில் முகியீத்தின் ஆண்டகையை ஒரு பரனாக்க கொண்டு துதித்துப் பாடுகிறார். அதாவது இறைவனே குருவாயிலாகத் தன்னை உணர்த்துகிறான். இது திருமறையில் அல்லாஷ் தான நாடியவர்களைத் தன் ஒளியின்பால் செலுத்துகிறான். (குர்ஆன் 24 : 35) என்று கூறப்படுகிறது.

இறைவனே சூஃபிக்கு வழிகாட்டி குரு ஆவார். குருவுக்கு கௌரவம், அளிப்பது அல்லாஹ்வுக்கு கௌரவம் அளிப்பதாகும். இந்தக் கோட்பாட்டின் அடிப்படையில் தான் தம் முன்னிலை குருவாடிய முகியீத்தின் அவர்களை நோக்கிப் பாடுகிறார்.

**ஆன்மாவின் இயல்பு**

உலகில் காணப்படும் பெரும்பாலான சமயங்கள் உயிர்க்கோட்பாட்டை விளக்குகின்றன. உயிர் உண்டு என்பதைப் பெரும்பாலான தத்துவங்கள் ஒப்புக்கொள்கின்றன.

உலகப் பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் உடலாகிய கருவி மூலம் உயிரானது இன்ப துன்பங்களை நுகர்கிறது. உலகப் பொருள்களைச் சுவைக்கவும் உலகில் செயல்படவும் உடல் பொருள்கள் இயங்கவும் உயிர் தேவை. இநத உயிர்க்கும் உடலுக்கும் உள்ள தொடர்பு யாது? உயிர் எங்கிருந்து பிறப்பின்போது வருகிறது? இறக்கும்போது அக எங்கே செல்கிறது? – இவை தத்துவ உலகில் உருவான ஒன்றாகும்.

இந்தியத் தத்துவப் பின்னணியில், சிக்கலான சித்தர்களின் தத்துவம் ஆன்ம விடுதலைக்கான வழிகளில் வேறுபட்டாலும் ஆன்மா உண்டு என்பதை ஒப்புக்கொள்கின்றனர். எப்படியாயினும் ஆன்ம விடுதலைக்கான முயற்சிகளில் மானுடப்பிறவி ஈடுபடவேண்டும் என்கிறது சித்தர் தம் நெறி.

மஸ்தான சாகிபு கல்லைவிட வன்மையான தன் மனம் அடையும்

கவலைகள் எண்ணில என்றும் அல்லும் பகலும் தான் எய்தும் அவகீர்த்தி அளவில்லை என்றும் இத்தகைய இறைவன் அடிமையாகக் கொண்டார் என்றும் கூறுகிறார்.

இறைவன் அழியாப் பேரழகு மிக்கவன். தன் பேரழகை வெளிப்படுத்தவே இறைவன் இப்பிரபஞ்சத்தைப் படைத்துள்ளான். அப்பேரழகு அன்பும் காதலும் ஏற்பட வழியாக அமைகிறது. அவ்வழிகின்பால் கொள்ளும் ஈடுபாடு ஆன்மாவை இறைவனுடன் ஐக்கியப்படுத்துகிறது.

மேலும் இறைவன் தலையீட்டால் தான் உலகியலைத் துறந்து மனிதன் ஆன்மப் பயணம் மேற்கொள்ள முயன்றாலும் இறை அழைப்பின்றி வெற்றி காண முடியாது என்று தொடக்க்கால சூபிகள் கருதினர்.

**குருவாக இறைவனைப் போற்றுதல்**

ஆன்ம பயணத்திற்கான பயிற்சிகளை குருவின் துணைகொண்டால் தான் பெறமுடியும். ஏன்எனில் கரு என்பவர் அறிவு முதிர்ச்சியும் ஆழ்ந்த பயிற்சியும் உடையவர். அத்தகையவர் தான் தன் மாணவனை நெறிப்படுத்தி ஞானத்தெளிவுரைகளைப் போதித்து பயிற்சி அளிக்கமுடியும். இயல்பாகவே ஒவ்வொரு மனிதனிடமும் அறியாமையை விளைவிக்கும் ஆணவச்செருக்கு அமைந்துள்ளது. இது ஆன்மப் பயணத்திற்குத் தடையாகும். இத்தடைகளைத் தகர்த்தெறிய குருவின் பயிற்சி அவசியம்.

குருவின் அருமை, பெருமை, எளிமையை விளக்கும் மஸ்தான் சாகிபு ஞானாசிரியராகிய குருவின் அருளின்றி ஆன்மாக்களுக்கு மெய்ஞ்ஞானம் விளையாது என்று கருதுகிறார். குருவின் மேன்மையைச் சிரமேற்கொண்டு போற்றி,

நற்குணங் குடிகொண்ட பாத்துசா வானகுரு
நாதன் முகியித் தீனே

என்று ஒவ்வொரு பாடலின் ஈற்றடியாக அமைத்துப் பாடுகிறார்.

**நிலையாமை**

ஆன்மா அறியாமை இருளில் மயங்கி, நில்லாத பொருள்களை நிலையாகக் கருதி, திரிபுணர்வுகொண்டு இவ்வுலகியல் வாழ்வை மேற்கொண்டு அல்லல்படுகின்றன.

நரை, திரை, மூப்பு, பிணி என்பனவற்றால் உடல் கெடும். இதனால் அவ்வுடலில் இருந்த ஆன்மா வெளியேறி மீண்டும் வேறோர் உடலில் புகுந்து உலக வாழ்வைத் தொடரும். நிலையாமையை உணர்ந்து ஞானத் தெளிவுற்றுப் பற்றுக்களை நீக்கி வெளியேறி இறைவனை அடைந்து ஐக்கியமாகும். மஸ்தான் சாகிபுவும்,

நித்திரை தனில் செத்த பொய்யான மெய்யுடலை
நிலையம் என் றிடுவ தல்லால்
நிலையாத காயம் என்று எண்ணவோர் கணவினும்
நிசமாக யான றிகிலேன் (ஆநந்தப்பத்து 9 : 1–2)

என்று பாடுகின்றார். தூக்கத்தில் இவ்வுடல் செத்திருக்கிறது. அத்தகைய உடலையே உண்மையானது என்று நம்பி இருந்தமையும் கனவிலும் கூட இந்த உடல் நிலையற்றது என்று அறியவில்லை என்று தன் அறிவீனத்தை உணர்த்துகின்றார்.

### முக்திநிலை

மனிதன் பிறவிச் சூழலில் இருந்து விடுபட்டு மேன்மை எய்தி முத்திநிலை அடைவதற்குச் சமயங்கள் பல்வேறு வழிகளை வகுத்துள்ளன. அவ்வழிகள் யாவும் பொருளாழும் மிக்கவையாகும்.

அதாவது உலகியலின் நிலையாமையையும் நிறைவின்மையையும் உணர்ந்து நிலையான பேரின்பநிலை அடைவதே முத்திநிலையாகும்.

இத்தகைய ஆன்மீக அனுபவம் இரண்டு வகைப்படும். 1. புற உலகையும், அதிலுள்ள பொருள்களையும் இவ்வுலக நிகழ்வுகளையும் இறைச் செயல்களாக எண்ணுவதோடு எங்கும் எதிலும் தான் பார்க்கும் ஒவ்வொரு பொருளிலும் இறைவனைக் கண்டு இன்புறுபவர். புறமுக நோக்கர் எனப்படும் "பரமே பார்த்திருப்பார், பதார்த்தங்கள் பாரார்" என்று இந்நிலையைச் சிவஞானசித்தியார் கூறும். 2. தன்னுள்ளேயே இறைவனைக் கண்டு இன்புறும் நிலை இரண்டாவது வகையாகும். இத்தகையவர்கள் அகமுநநோக்கர் ஆவர்.

உடலும் உடல்சார்ந்த உலகமும் உலகியல் வாழ்வும் துன்பமானது என்னும் கருத்துடையோர் அகமுகநோக்கர், உலகியல் வாழ்விலிருந்து உடலையும் உடலிலிருந்து ஆன்மாவையும் பிரித்தால்தான் துன்பம் கலவாத இன்பம் அடையமுடியும். உலகியல் வாழ்விலிருந்து விடுபட்டு ஆன்மீக வாழ்வின் நிறைவாகிய முத்திநிலை அடைய முயற்சி செய்யவேண்டும்.

இந்த முத்திநிலை அடைய பக்தி, கரமம், யோகம், ஞானம் என்னும் நான்கு வழிகளை இந்தியத் தத்துவங்கள் கோடிட்டுக் காட்டுகின்றன. யோகம்– ஒன்றுதல் எனப் பொருள்படும். இவ்வுலகில் பிறப்பெடுத்த ஆன்மா மீண்டும் இறைவனோடு ஒன்றுபடுதல் யோகம் எனப்படும். உலகியல் அறிவால் நிலையாமையை அறிந்து உணர்ந்து ஆன்ம அறிவைப் பெற முற்படவேண்டும். ஆன்ம அறிவால் பக்குவப்பட்ட பின்னர் இறையறிவை நாடவேண்டும். இறையறிவே ஆன்மப் பயணத்தின் இறுதிப்படி அறிவோனும் அறியப்படும் பொருளும் ஒன்றாகி விட்டபின் அறிதற்கு ஏதுமில்லை. இந்த ஞானநெறி அறிவு முதிர்ச்சியும் தேர்ச்சியும் உடையோர்க்கு மட்டுமே மேற்கொள்ளமுடியும்.

### முடிவுரை

ஆநந்தபத்து என்னும் பகுதியின்வழி உள்ளத்தில் உறைகின்ற இறைவனை ஞானத்தால் வழிபடுவதால் நிலையான இன்பம் பெறமுடியும் என்றும் அவ்வின்பம் பெற குருவின் துணை அவசியம் என்கிறார்.

இஸ்லாம் என்றால் இறைவனுக்கு அடிமை என்று பொருள் ஆயின் இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையே காதலன்பு மலரக்கூடும் என்றும், அதை இவ்வுலக வாழ்வில் அனுபவிக்க முடியும் என்றும் சூபியக் கருத்தை இவர்தம் பாடல்கள் உணர்த்துகின்றன.

### துணைநின்ற நூல்கள்


1. குணங்குடியார் பாடற்கோவை, கவிக்கோ அப்துல்ரகுமான் (பதிப்பும் குறிப்பும்), மணிவாசகர் பதிப்பகம், சென்னை.
2. சித்தர் தத்துவம், நாராயணன், க.
3. இந்தியச் சிந்தனைமரபு, சுப்பிரமணியன், கலாநிதி, நா., சவுத் ஏசியன்

# ஆறுமுக நாவலர் கூறும் சைவ சமய சின்னங்கள்

**M.R. சரவணக்குமார்**
முனைவர் பட்ட ஆய்வாளர்
சைவ சித்தாந்த தத்துவத்துறை
மதுரைகாமராசர் பல்கலைக்கழகம், மதுரை – 21.

**முன்னுரை**

சைவ சமயமானது, மிகத் தொன்மையான சமயமாக வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்டு விளங்குகின்றது என ஜீ.யு.போப்பையர் கூறுகின்றார். கால ஒட்டத்தின் இடையே இந்தியாவில் புறச்சமய நுழைவால் சைவம் வளர்ச்சி குன்றிலும் அக்காலங்களில் சைவ சமயச் சான்றரோர்கள் தோன்றி அச்சமயத்தினை தழைக்கச் செய்தனர். அத்தரு சான்றோர்களின் குறிப்பிட தகுந்தவர் ஆறுமுக நாவலர் ஆவார். இவரின் சமயப்பணி பொன்னெழுத்துக்களால் பொறிக்க தக்கன ஆகும். சைவ சமயத்தின் அடையாள சின்னங்கள் பற்றி ஆறுமுக நாவலரின் விளக்கத்தின் வாயிலாக அறிவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**ஆறுமுக நாவலரின் வாழ்க்கை வரலாறு**

நாவலர் அவர்கள் யாழ்ப்பாணத்தில் உள்ள நல்லூரில் 18.12.1822–இல் கந்தர்–சிவகாமியம்மை தம்பதியர்க்கு மகனாகப் பிறந்தார். அவ்வூரில் கல்விக்கூடம் வைத்து நடத்தி வந்த சுப்பிரமணிய பிள்ளை என்பவரிடம் கல்வி பயில அனுப்பி வைக்கப்பட்டார். அங்கு அவர் நீதிநூல்கள் கருவி நூல்கள் போன்றவற்றினை நன்கு கற்று உணர்ந்தார். சிறுவயதிலேயே கல்வித்திறனும், புத்திக்கூர்மையும் உள்ளவராகத் திகழ்ந்தார். நாவலர் தமிழ்–ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளில் வல்லுனராக விளங்கினார். சைவ சித்தாந்த சாத்திரங்களையும் வேதாரம், திருவாசகங்களையும் தாமே கற்று உணர்ந்தார். வடமொழி நூல்களை வாசிக்கவும் அதனைப் பொறபட விளக்கவும் கற்றுக்கொண்டார்.

**சைவ சமய சின்னங்கள்**

சைவ சமய சின்னங்களாக கூறப்படுவது விபூதி, உருத்திராக்கம், திருவைந்தெழுத்து – மந்திரம் ஆகியவை ஆகும்.

**விபூது**

திருநீறு சைவ சமயத்தின் தலையாய சின்னமாகப் போற்றப்படுகின்றது. திருநிறுக்கு இன்னொறு பெயர் விபூதி எனப்படும். நிலையாமை தத்துவத்தையும் இறைவனின் திருவளைப் பெற ஒர் ஆன்மா தகுதியுடையதாக இருக்கிறது என்பதையும் உணர்த்துவது.

விபூதி – என்றால் மேலான செல்வம் என்று பொருள். வி – மேலான, பூதி–செல்வம் என்று விளக்கம் தருபவர் ஆறுமுகநாவலர். திருநீறு எடுத்து இறைவனை நினைத்து பூசினால் உடல்நோய் நீங்கும் என்பது திண்ணம். அத்தகைய திருநீற்றினை ஆச்சரியார்கள் கையிலோ, சிவனடியார் கையிலோ, மூன்று தரமாயினும், கந்துதரமாயினும் நமஸ்கரித்து, எழுந்து கும்பிட்டு இரண்டு கைகளை நீட்டி வாங்கவேண்டும் என்று நாவலர் கூறுகின்றார். திருநிறு எக்காலங்களின் தரிக்கவேண்டும் என்பதை குறித்து நாவலர்.

திரை செய்ய புகும்போது, நித்திரை
விட்டெழுந்தவுடன், தந்தசுத்தி செய்தவுடன்
சூரியன் உதிக்கும் போதும், அத்தமாக்கும்
போதும், ஸ்நானஞ் செய்தவுடனும்
போசனத்துக்குப் போகும்போது, போசனம்
செய்த பின்னும் விபூதி அவசியம் தரித்தல்
வேண்டும்

என விளக்குகின்றார். விபூதி இடும் இடங்களாக நாவலர் கீழ்வருமாறு சுட்டுகின்றார்.

சிரம், நெற்றி, மார்பு, முழந்தாள்கள், இரண்டு, புயங்கள் இரண்டு முழங்கை இரண்ட மணிக்கட்டுகள், இரண்டு விலாப்புறம், இரண்டு முதுகு, கழுத்து என்னும் இடங்கள் ஆகும்.

**உருத்திராக்கம்**

உருத்திராக்கம் என்பது சிறந்த சைவ சமய சின்னம் ஆகும். திரிபுர அசுரர்களால் தேவர்கள் தங்களுக்கு நேர்ந்த துன்பத்தைச் சிவபெருமானிடமத்து முறையிட அதனை கேட்ட சிவபெருமான் அவர்கள் மேல் வைத்த கருணையினால் சிவபெருமானின் கண்களில் இருந்து தோன்றிய கண்ணீர் துளிகளே உருத்திராக்கமாக கருதப்படுகின்றன. இது இறைவனின் கருணையின் வெளிப்பாடு ஆகும். உருத்திராக்கம் அணிபவர்கள் எந்த தீய பழக்கம் இல்லாதவராகவும் மாமிசம் உண்ணாதவராகவும் மதுபான அருந்தாதவராகவும் இருத்தல்வேண்டும். முறையான சைவ சமய ஒழுங்குகளை கடைப்பிடிப்பவராக இருத்தல்வேண்டும்.

**உருத்திராக்கம் அணியும் காலம்**

சந்தியா வந்தனம், சிவமந்திர ஜெயம், சிவபூஜை, சிவதியானம், சிவாலய தரிசனம், சிவபுராணம் படித்தல், சிவபுராணம் கேட்டல் இக்காலங்களில் உருத்திராக்கம் தரித்தல் வேண்டும். இவ்உருத்திராக்கம் முத்திலோ, பவளத்திலோ, பளிங்கிலோ இடையே இடையே விட்டு முகத்தோடு முகம் பார்ச்சு வைக்கவேண்டும்.

**உருத்திராக்கம அணியும் இடம்**

குடுமி, காதுகள், கழுத்து, மார்பு, புயம், கைகள் போன்ற இடங்களில் உருத்திராக்கம் அணியலாம். உருத்திராக்கம் அணிவது இறைவனின் திருவருளைப் பெற என்று நாவலர் கூறுவதைக் கீழ்வரும் அடிகளால் அறியலாம்.

சிவபெரமானுடையே திருக்கண்ணிற் நோன்றும்
திருவருட் போற்றிக்கு அறிகுறி

**திருகந்தெழுத்து மந்திரம்**

மந்திரங்கள் இறைவனுக்கு அருவமாக விளங்குபவை. மந்த்+த்ரா=மந்திரா என்றால் தம்மை உச்சரிப்பவரைக் காப்பது என்பது பொருள். சைவ சமயத்தில் பேசப்படும் மந்திரமாக இருப்பத திருஐந்தெழுத்து மந்திரம் ஆகம். இந்த ஐந்தெழுத்துக்கள் ஐந்து பொருளைக் குறிப்பனவாகும்.

ந – மறைப்பு ஆற்றல் சக்தி
ம – ஆணவ மலம்

சி – சிவன்

வ – திருவள்

ய – உயிர்

நமசிவய என்று மும்மலங்களை முன்நிறுத்தி ஓதினால் உலகியல் வாழ்வு கிடைக்கும். ந, ம இவற்றைப் பின் நிறுத்தி சிவ முன்நிறுத்தி ஓதினால் இறைவனின் திருவடி பேறும் கிடைக்கும்.

நினைப்பவனைக் காப்பது என்பது பொருள்
ஆகவே மந்திரம் என்னும் பெயர்
நினைப்பவனைக் காக்கும் இயல்புடைய வாச்சியமாகிய
சிவத்துக்குஞ் சிவசக்திக்குமே செல்லும்
ஆயினும் வாச்சியத்துக்கும் பேதமில்லாமை
பற்றி, உபசாரத்தால் வாசகத்துக்குஞ்
செல்லும், எனவே, மந்திரம் வாச்சியம்
மந்திரம் வாசகமந்திரம் என இரு திறப்படும்
என்ற படியாயிற்று

இவ்வாறு ஆறுமுகநாவலர் சைவ சமயங்கள் சிந்தனைப் பற்றி கூறியதை அறியமுடிகிறது.

# திணை மயக்கத்தில் - வாழ்வியல் சிந்தனைகள்

**த. முனிப்பாண்டியம்மாள்**, எம்.ஏ., எம்.ஃபில்
முனைவர் பட்ட ஆய்வாளர்
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி
சிவகாசி.

**முன்னுரை**

மனித உணர்வுகளுக்கு முதன்மை கொடுத்து எழுதப்படும் இலக்கியங்களில் புதுக்கவிதையும் ஒன்றாகும். மக்களின் வாழ்க்கை நிலையினை 'திணை மயக்கம்' என்ற புதுக்கவிதை நூலின் வாயிலாக ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாக அமைகின்றது.

**வாழ்வியல்**

வாழ்வியல் என்பது மக்களின் வாழ்வில் ஏற்படும் பிரச்சனைகளை எடுத்துரைப்பதாகும். வாழ்க்கை என்பது இப்படித்தான் இருக்க வேண்டும் என்றும், அதற்கு மாறாக அமையும் ஒவ்வொரு தனிமனிதனின் செயலும் இச்சமூகத்தின் பாதிப்பிற்கு உள்ளாக்குகின்றது. தனிமனிதனின் வாழ்வியலே சமூகத்தின் வாழ்வியலாகவும் அமைகின்றது. வாழ்க்கையில் காணப்படும் பிரச்சனைகளை எடுத்துக்கூறி சிந்தனைகளை தூண்டுவதாக 'திணைமயக்கம்' அமைந்துள்ளது.

**மதம்**

ஒவ்வொரு தனிமனிதனின் வாழ்க்கையும் சாதி, மதத்தால் பெரிதும் பாதிக்கப்படுகின்றது. இந்த தனிமனித பிரச்சனையே சமூக பிரச்சனையாகவும் மாறிவிடுகின்றது. நிறத்தாலும், மதத்தாலும் சாதியாலும் வேறுபடுகின்ற நிலையானது சமுதாய பிரச்சனைக்கு வித்தாகி விடுகின்றது. ஆறறிவு கொண்ட மனிதன், மதத்தால் தாழ்ந்திருக்கும் நிலையினை,

<u>திணை மயக்கம்</u>
"அந்தப் புறாக்கள்
அஃறிணை
..........................
தெரிந்தால் சொல்
திணைமாறும் வழி" (ப-19)

என்ற கவிதை வரிகளினால் அறியலாம். அஃறிணை உயிரான பறவைகள் கூட மதம் பார்க்காமல் எல்லா ஆலயங்களிலும் அமர, மனிதனோ மதத்தின் பெயரால் மனித இரத்தத்தினைக் கண்டு மகிழ்ச்சியடைகின்றான். "வேற்றுமையிலும் - ஒற்றுமை காண்பது" என்ற நிலைமாறி எவ்வாறு வேறுபடுவது என்பதில் மதமே முதன்மை இடம் பெறுகிறது.

**கல்வி**

இன்றைய மக்களின் வாழ்க்கையில் கல்வி இன்றியமையாத ஒன்றாகத் திகழ்கின்றது. அறிவைக் கற்றுத்தர வேண்டிய கல்வி சுமையைக் கற்றுத்தருகின்றது என்பதனை,

ஜனாதிக்கம்
பள்ளிகள்
உயிர்தெழும்!
..............................
சிலுவை சுமப்பார்கள் (ப-48)

என்ற வரிகளினால் அறியலாம். கல்வி குழந்தைகளுக்கு சுகமாக இருக்க வேண்டுமே அன்றி சுமையாக இருத்தல் கூடாது. அறிவை வளர்க்கும் சிறந்த சாதனமாக இருப்பதைக் காட்டிலும் உடலை வருத்தும் நிலையிலேயே கல்வி அமைகின்றது. இன்றைய காலத்தில் கல்வி அறிவைச் சாராமல் பணத்தினை சார்ந்து பெற்றோர்களை வறுமைக்கு உள்ளாக்குகின்ற நிலையினை ஆசிரியர் மனவேதனையுடன் சுட்டிக்காட்டியுள்ளார்.

குழந்தைகளின் நிலை:

அன்பு, அரவணைப்பு கிடைக்கும் போதுதான் குழந்தைகள் எதிர்காலத்தில் நல்லவர்களாக வளர, வாழ முடியும். ஆனால் இன்றைய உலகில் பெற்றோர்கள் அலுவலகங்களில் ஈடுபாடு கொண்டு இயந்திரமாக செயல்படுகின்றனர். முதியவர்களோ முதியோர் இல்லங்களில் சேர்க்கப்படுகின்றனர். பெற்றோர் மற்றும் உறவினர்களின் அன்பு கிடைக்காமல் ஏங்கும் குழந்தைகளின் மனநிலையினை,

விபத்துப்பகுதி
“அலுவலகத்திலிருந்து
அம்மாவோடு வரும்
அலுப்பு
..........................................
..........................................
அநாதைக் குழந்தைகள்” (ப-47)

என்ற வரிகளினால் அறியலாம். தான் பெற்ற பிள்ளைகள் இருந்தும் அநாதைகளாய் முதியோர் இல்லங்களில் பெற்றவர்கள், தன் உறவினர்கள், பெற்றோர்கள் இருந்தும் அநாதையாய் இல்லங்களில் குழந்தைகள்.

முதியோர் நிலை

இன்றைய நிலையில் முதியோர் இல்லம் பெருகிக் கொண்டே வருகின்றது. அன்பு என்ற நிலைமாறி பெற்றோர்கள் சுமையாகவே தங்கள் பிள்ளைகளுக்கு தெரிகின்றனர். பிள்ளைகளின் இழிவான செயலினை,

‘வாழ்க்கை மன்றத்திலுமா
வழக்குகள் தாமதம்?
..............................................
பார்த்து விட்டுப்போகும்’ (ப-28)

என்ற வரிகளினால் அறியலாம்.

**தகவல் தொடர்பு சாதனங்கள்**

திரைப்படம், தொலைக்காட்சி, வானொலி, செய்தித்தாள், விளம்பரம் போன்றன மக்களுக்கு தகவல் தொடர்பு சாதனங்களாக இருக்கின்றன. தகவல் தொடர்பின் மூலம் மக்கள் நல்ல செய்திகளை அறிவதைக் காட்டிலும், தீயவற்றையே அறிந்து கொள்கின்ற நிலையினை,

“தெருச்சந்தி
திண்ணை வாசிகளை
அழைத்துப் போய்
வீட்டிற்குள்
அடக்கம் செய்துவிட்டன
தொலைக்காட்சி இணைப்புகள்” (ப-58)

என்ற கவிதை வரிகளினால் அறியலாம். உறவுகள் வந்தாலும் கண்டுகொள்ளாத நிலை மற்றும் உயிரற்ற சடலமாக்கி வாழுகின்ற நிலையினை தொலைக்காட்சி மக்களிடையே ஏற்படுத்தி வருகின்றது. தகவலை அறிந்து கொள்ளும் சாதனமாகவே தொலைக்காட்சி திகழ வேண்டும்.

**முடிவுரை**

வாழ்க்கை ஓர் பூந்தோட்டம் என்றாலும் பல பிரச்சனைகளை சந்தித்த பின்புதான் பூந்தோட்டமாக அமையக்கூடும். வாழ்க்கையில் ஏற்படுகின்ற ஒவ்வொரு பிரச்சனையும் மனம் பக்குவம் அடைவதோடு மனிதனை சிந்திக்கவும் வைக்கின்றது.

************************

# Racism In Toni Morrison's Novel Sula

C.Nagalakshmi, M.Phil Schalor
Department Of English
Madurai Kamarajar University.

Introduction :-

In the 1970's and 80's there was a burst of creative activity in Afro - American fiction. Emest Gainer Dawid Bradley, Toni Morrison, Allice walker and gloria Naylor are some of the important figures They focussed on women's exeriences rather than man's experiences. Although Toni Morrison is a prolific writer with a wide variety of thematic concerns I have chosen to focus on Racisn in Toni Morrison's novel sula.

Major Thems in Toni Morrisons novel SULA

Toni Morrison's SULA a contemporary novel about female friendship, offers a view of female psychological development that defies traditional male - centrd interpretations of female development and calls out for an expansion of the women centered paradigm, Both the novel's subject (minority experiences) and its treatment implicity certique the psychoiogy's usual focus on the experiences of middle class white women, who are of ten bound by conventional social relationships. Her novels of this period convey " a protest message" and they confirm to the "over riding theme" of this period. Toni morrison devoted her writing to deal with either loves or its absence.

Theme of SULA

Sula deals with themes of race, woman hood the effencts of history, the contingencies of love, good veusus evil and life and death , ecaming. how al these interwine to affevct the beliefs and actions of individuals. My final care in point is racism.

Racism is seen as a " man - made, man-enforced phenomenon. It may be defired as a groupp - behaviour and group - emotion of a race of people against another. Both groups seem to have dissimiar physical characteristics. This dissimilarity compels one group to treat another group as if it did not belong to human race. In the

modern times of collective living this treatment leads to social upheavals. Toni Morrison in her writings high,light the facts of racism and gender

discrimintation sula has with in its ambit of scenes of racial and gender discrimination

Morrison's Depiction of SULA :-

Morrison depicts friendship between sule and nel as "special, different and the major focus of the novel sula. This friendship while falling short of a physical bonding,"involved a spiritual bonding transcended the flesh " and was mungh superior to a portrayal of actual physical bonding would have been any way.

Morrison

explores in this novel what this loss means to each woman and how it affects the complex personality of sula who attracints and rpels at the same time. sula and Nel how integrally it is related to the survival of teir community, the author focuses her vision on a confromtation betweem the old values of the community and the new urban values which sula represents.

In sula the gender discrimination is more dominatnt where slavery is one of the reasons of distionctions between the two realities of the whites and Blacks, the possibility of the psychological apathy in regard to gender and sescuality, in a slave atmosphere has always been larger, ultimately however Morrison portrays how material prosperity and licentiousness are confused by the characters. This leads to the destruction of te protogonist sula and also to the destruction of the community of African-Americans at Botton. Bottom in sula has two clear perspectives namely a histroical perspective and an economic perspective.

The impact of Racism :-

Morrison in her novels through her conscions use of the impact of racism and sexism on the psyche of the African American's rouses as out of our complacency not only is she conscious of the many ways of portraying the issue of race. Her novels become

stercotyped. but more importantly the problem of class and gender. It is this characteristic of her work that makes for its rich complexity and its compelling and continued interest.

Racism and sexism seem to be mahor themes in Toni morrisons and these are given an elaborate descrition community dynamics is another theme and the back. Ameicans are presented in the bank drop of their our community man- woman relation ship and flowering of friendship do not exape the canvas of Toni morrison. The problem of race and gender in Toni morrison's fiction is partly the nostalgic out come of foreign settlement and partly. the aceptance of the dictates set by the supermacy of the white society. The problem of racism and gender discrimination is presented clothed in the perceprion of slavery s practised in the American society . This is a distinct clubbing done by Toni Morrison Sula realizes that she suffers because she is a woman in a male - dominated society. she suffers not only in the hands of whites but also in the hands of blacks . A blac could be seen as a general trend in the white dominted society. discrimination as a woman coulld be seen both from the white - dominated and male - dominated society.

Conslusion :-

Toni Morrison's character's experience themselves as wounded or imprisoned, not only by virtue of their gender. but additionaly by racial and economic division with in American cuture. Thus in sula the emphasis is on race and gender,Any stand of morality is for from symmetry, developing along very unpredictable lines of space and time.

# துணுக்குகள் ஓர் அறிமுகம்

**தே. ரோசி ஆய்வாளர்**
தமிழ்த்துறை, அமெரிக்கன் கல்லூரி,
மதுரை

தமிழில் நாள், வார, மாத இதழ்களில், மிகக்குறைந்த அளவே இலக்கிய வகைகள் உள்ளடங்கியுள்ளன. விரைவுலகிலே நடைபோட்டுக் கொண்டிருக்கும் வாசகர்களின் எண்ண ஓட்டத்திற்கு ஈடு கொடுக்கும் வகையில் அதே சமயத்தில் எண்ணத்தைச் சீர்படுத்தும் இடையிட்டுக் கருவியாகவும் விளங்கும் துணுக்குகள் இதழ்களில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய துணுக்குகளின் தோற்றம், வளர்ச்சி, வகைகள், இதழ்களில் துணுக்குகள் பெறுமிடம், அவை கருத்துக்களை வெளிப்படுத்தும் இலக்கியப் பாங்கு ஆகியவை குறித்து இக்கட்டுரையில் ஆராயலாம்.

துணுக்கு - விளக்கம்

அனைவரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் கருத்து அல்லது செய்தியை மிகச்சுருக்கமாக எளிய நடையில் கூறும் சிறிய உரைநடை வடிவமே துணுக்கு. இட நிரப்பிகளாகத் தோன்றிய துணுக்குகள் உலக நடப்புச் செய்திகளைத் தாங்கி இம்பெறத்தொடங்கின. கருத்துகளை அறிவிக்கும் முறையில் சுவையூட்டுவனவாகவும் மகிழ்வூட்டுவனவாகவும் அறிவூட்டு- வனவாகவும் அமையும் வகையில் துணுக்குகள் இதழ்களில் இடம்பெறலாயின.

துணுக்கின் மூலவடிவம்

ஆங்கிலத்தில் 'டிட்-பிட்' என்னும் சொல்லே துணுக்கு என்பதைக் குறிக்கிறது. இச்சொல் எவ்வாறு தோன்றியது, திரிந்தது என்பதை சர்.எர்னஸ்ட்., என்பவர் குறிப்பிடுகிறார். 'ஆங்கிலத்தில் டிட்-பிட் (வவை-டிவை) என்னும் சொல் துணுக்கு என்பதைக் குறிக்கிறது. டிட் (வவை) என்பதே இதன் மூலவடிவமாக பிரிட்டனில் வழங்கியது என்றும் ஒலிநயம் குறித்து' டிட்-பிட் (வவை-டிவை) என மாறியதாகவும் ..1 இதற்கு விளக்கம் கூறப்படுகிறது.

தமிழில் துணுக்குகள்

துணுக்கு என்ற சொல்லுக்கு "துண்டு" என்னும் பொருளைத் தருகின்றது தமிழ் ஆங்கில அகராதி. துண்டு என்னும் பொருளே துணுக்கின் மிகச் சிறிய வடிவைக் குறிப்பதாக உள்ளது.

துணுக்கு வகைகள்

பொதுவாகத் துணுக்குகளை நகைச்சுவைத் துணுக்குகள், செய்தித் துணுக்குகள், தகவல் துணுக்குகள், அறியவல் துணுக்குகள் எனப் பலவகையாகப் பாகுபடுத்திக் கொள்ளலாம். ஆயினும் இவற்றுள் எத்தரப்பினராலும் எக்காலத்திலும் விரும்பப்படுபவை நகைச்சுவைத் துணுக்குகளே எனில் அது மிகையன்று.

நகைச்சுவைத் துணுக்குகள்

மக்களை மகிழ்ச்சியூட்டும் பணியில் துணுக்குகள் ஈடுபடுவதால், நகைச்சுவைத் துணுக்குகள் அதிகம் இடம்பெறும் இதழ்கள், மக்கள் மத்தியில் மிகுதியான செல்வாக்குப் பெறுகின்றன. "இருபதாம் நூற்றாண்டு இலக்கிய வளர்ச்சியில் நகைச்சுவைத் துணுக்கு முதலிடம் பெறுகின்றது. இதை முதன் முதலில் தொடங்கி வைத்தது தமிழில் ஆனந்த விகடனும் பிரசண்ட விகடனும் எனலாம்.2 நகைச்சுவைத் துணுக்குகள் நம்மை சிரிக்கச் செய்வதோடு சிந்தனைக்கும் விருந்தாக அமைகின்றன. பலநேரங்களில் நம் கவலைக்கு மருந்தாகவும் திகழ்கின்றன.

உலகில் நகைச்சுவையுணர்வு இல்லாத மனிதன் இல்லை. எல்லாச் சுவைகளிலும் நகைச்சுவையே முதன்மையானது என்பதை உணர்ந்துதான் தொல்காப்பியரும்.

"நகையே யழுகை இளிவரன் மருட்கை"3 என்ற எண்வகை மெய்ப்பாடுகளுள் நகைச்சுவையே முதற்கண் வைத்துப் பாடியுள்ளார். அன்றியும் எள்ளல், இளமை, பேதமை, மடன் என்ற நான்கினையும் நிலைக்களன்களாகக் கொண்டு நகைச்சுவை தோன்றும் என்று நகைச்சுவையின் வகைகளையும் நுட்பமாக உணர்ந்து கூறியுள்ளார்.

இந்நகைச்சுவைத் துணுக்குகள் எழுத்துவடிவிலும், ஓவிய வடிவிலும் இதழ்களில் இடம்பெறுகின்றன. "ஆங்கிலத்தில் இதனை "ர்ரஅழரச" என்ற சொல்லால் குறிப்பிடுவர். இது மகிழ்ச்சியையும் பொழுதுபோக்கையும் தரவல்லது"4 நகைச்சுவை மனநிலையோடு தொடர்புடையது.

நகைச்சுவைத் துணுக்குகளின் தோற்றமும் வளர்ச்சியும்

"இங்கிலாந்து நாட்டின் நடப்புச் செய்திகளைக் கிண்டல் மொழியில் எழுதிவந்த "பஞ்ச்" என்ற ஆங்கில இதழின் போக்கினைப் பின்பற்றியே ஆனந்தவிகடன் செய்திகளும் காணப்பட்டன. எனவே ஆனந்த விகடன் என்றழைக்கப்பட்டது"5.

நாளிதழ்களான தினமணியில் "சார் ஒரு நிமிடம்" என்னும் தலைப்பிலும் தினத்தந்தியில் "சிரிப்பு", ஆண்டிப் பண்டாரம், "சாணக்யன சொல்" ஆகிய தலைப்புகளிலும், தினமலரில் "பொன்னம்மா பொன்னையா" என்னும் தலைப்பிலும் நகைச்சுவைத் துணுக்குகள் இடம்பெற்றுள்ளன.

வார இதழ்களான முத்தாரம், கல்கண்டு ஆகியவை துணுக்குச் செய்திகளை மையமாகக் கொண்டே வெளிவருகின்றன. இவை தவிர குமுதம், சாவி, தாய், இதயம் பேசுகிறது. தினமலர் - வாரமலர், ஜூனியர் விகடன், தினமணிக்கதிர் போன்ற வார இதழ்களும் நகைச்சுவைத் துணுக்குகளுக்கென அதிக இடம் ஒதுக்கியுள்ளன.

நகைச்சுவைத் துணுக்குகள் இடம்பெறக் காரணம்

-செய்திக் கட்டுரைகள், தொடர்கதைகள் போன்றவற்றைப் படித்துச் சோர்ந்துவிடும் வாசகர்களின் சோர்வு நீக்கி மகிழ்விப்பதற்காகவே நகைச்சுவைத் துணுக்குகள் இடம்பெறுகின்றன. நகைச்சுவைத் துணுக்குகளில் உண்மையும், கற்பனையும் கலந்து காணப்படுகிறது. ஆனால் இவை மக்களை நிரந்தரமாக மகிழ்விப்பவை அல்ல. எனினும்

தற்காலிகமாக வாசகர்களை மகிழ்விக்கும் நோக்கத்துடனேயே இதழ்கள் நகைச்சுவைத் துணுக்குகளை வெளியிடுகின்றன.

நகைச்சுவைத் துணுக்குகளில் இடம்பெறுவோர்

நாம் அன்றாடம் வாழ்க்கையில் சந்திக்கும் மக்களே நகைச்சுவைத் துணுக்குகளில் இடம் பெறுகின்றனர். உதாரணமாக அரசியல்வாதிகள், மருத்துவர்கள், தொழிலாளர்கள், நடிகர்-நடிகைகள், அரசு அலுவலர்கள் போன்றோர்களைக் கூறலாம்.

அரசியல், மருத்துவம் போன்ற துறை சார்ந்த துணுக்குகள் அத்துறையினர் செய்யும் ஊழலை மக்களுக்கு எடுத்துக்காட்டி அவர்களைச் சீர்திருத்தும் நோக்குடன் செயல்படுகின்றன.

இன்றைய சூழலில் பெண்களைப் பற்றிய நகைச்சுவைத் துணுக்குகள் மிகுதியாக இடம் பெறுகின்றன. பெண்கள் எதிர்கொள்ளும் சிக்கல்கள், அவற்றிற்கான காரணங்கள் ஆகியவற்றை எடுத்துக்காட்டுவதோடு, பெண்களைக் கேலிப் பொருளாக்கி விற்பனையைக் கூட்டும் நோக்கமும் வளர்ந்து வருகின்றது. துணுக்கு சார்ந்த படங்களிலும் பெண்கள் அரைகுறை ஆடையுடன் ஆபாசமாகத் தீட்டப்படுவதைக் காணமுடிகின்றது.

"அடிப்படையில் பெண்களைப் பற்றிய ஒரு இழிந்த பார்வையை இந்த நகைச்சுவைத் துணுக்குகள் கொண்டிருக்கின்றன என்பதே உண்மையாகும். இந்த இழிந்த பார்வைக்குக் காரணம், தனிப்பட்ட ஜோக் எழுத்தாளர்களோ அதற்கு சித்திரம் வரைபவர்களோ அல்ல. மாறாக ஒட்டுமொத்த சமுதாயம் முழுவதும் பரவிக்கிடக்கும் ஆணாதிக்க மனோபாவம் தான்"6 என்று சுரேஷ்பால் கூறும் கருத்து இங்கு கருதத்தக்கது.

பெண் குறித்த சமூகப் பார்வைகள் இன்றைய சூழலில் மாறி வருவதால் துணுக்குகள் காட்டும் பெண் குறித்த பார்வை எவ்வாறானது என்பதைக் காண்பது இன்றியமையாததாகிறது.

முடிவுரை

இன்றைய சமுதாயத்தில் துணுக்குகள் தலைமையிடம் பெறுகின்றன. சுழன்றோடும் இயந்திர உலகத்தில் எதையும் சுருக்கமாகச் சொல்ல வேண்டும் என்ற எண்ணத்தால் அனைவருக்கும் புரியும் வகையில் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதில் துணுக்குகள் சிறப்பிடம் பெறுகின்றன. சமுதாயத்தின் பலதரப்பட்ட பிரிவினரையும் நையாண்டியாகச் சித்திரிப்பதில் துணுக்குகளுக்குத் தனிப்பங்கு உண்டு. ஆயின் இச்சித்திரிப்பு பெண் குறித்த முற்போக்கான பார்வைக்குத் தடையாக உள்ளதா என்பது சிந்திக்க வேண்டிய ஒன்றாகும்.

அடிக்குறிப்புகள்

1) Sir Ernest Gowers, Flower's Modern English Usage, P.1087
2) பேராசிரியர் தொல்காப்பியம் (பொருளதிகார்ம்), நூற்பா 485
3) ரா. சீனிவாசன், சிரித்து மகிழுங்கள் நகைச்சுவைத் துணுக்குகள் (ஓர் இரசனை), ப.14
4) பேராசிரியர், தொல்காப்பியம் (பொருளதிகாரம்) நூற்பா - 25